# பெண்களுக்கு




மகாத்மா காந்தி

(எழுதியதும் பேசியதும்)





மொழிபெயர்த்தோர் :

அ. லெ. நடராஜன்

வெ. ராமசாமி



புதுமைப் பதிப்பகம் லிமிட்டெட்

காரைக்குடி

# பொருளடக்கம்

# ஹிந்து மனைவி

**ஹிந்து சமுதாயம் ஒரு பெரிய தவறிழைத்துவிட்டது: கணவனுக்கு மனைவியை அளவுக்கு மிஞ்சி அடிமைப்படுத்தி விட்டது. மனைவி என்றால் தனக்கென்று ஒன்று மில்லாமல் கணவனுக்குள்ளேயே ஐக்கியமாகிவிட வேண்டியவள் என்ற நிலைமையை ஏற்படுத்திவிட்டது. இதன் பலனாக, கணவன், சில சமயங்களில், இல்லாத அதிகாரத்தை எல்லாம் செலுத்த ஆரம்பிக்கிறான்; கடைசியில் மிருகமாகவே ஆகி விடுகிறான். "**

*கணவனிடம் தம் சகோதரி பட்ட பாட்டை விளக்கி சகோதரர் ஒருவர், நீண்டதொரு கடிதம் எழுதி யிருக்கிறார்; அதன் சாராம்சம் இதுதான்:*

*"சிறிது காலத்துக்கு முன், என் சகோதரியை ஒருவருக்கு மணஞ் செய்துவைத்தார்கள். ஆசாமி எப்படிப்பட்டவர் என்பதை எங்களிடம் சொல்லாமல் மறைத்துவிட்டார்கள். குடியிலும் விபசாரத்திலும் மூழ்கிப்போய்க் கிடப்பவர் என்பது பிற்பாடு தெரியவந்தது. அவருடைய லீலைகளுக்கு ஒரு எல்லையே கிடையா தென்று தோன்றுகிறது. மான ஈனம் இல்லாத மனுஷர் அவர். விவாகமான சிறிது காலத்துக்கெல்லாம், தன்னுடைய 'பிராணபதி' மேலும் மேலும் போக சாகரத்திலே ஆழ்ந்து வருகிறா ரென்பதை அந்த அபலை கண்டுகொண்டு விட்டாள். இதெல்லாம் கூடா தென்று கண்டிக்கலானாள். தன் மனைவி தன்னைக் கண்டிப்பதா? அவளுக்குப் பாடங் கற்பித்துத்தானாக வேண்டுமென்று, அவள் கண்ணெதிரிலேயே ஆட்ட மெல்லாம் ஆட அவர் ஆரம்பித்தார். அவளைச் சவுக்கால் அடிப்பார்; கால்கடுக்க நிறுத்திவைப்பார்; பட்டினி போடுவார்; இன்னும் என்னென்னவோ செய்வார். தமது காம லீலைகளைக் கண் கூசாமல் அவள் காண வேண்டுமென்பதற்காக, அவளைத் தூணில் கட்டிவைக்கவும் செய்தார். என் சகோதரி மனம் முறிந்து கிடக்கிறாள். அவளுடைய கண்ணீரையும் கம்பலையையும் எங்களால் சகிக்க முடியவில்லை. என்ன செய்வ தென்றே எங்களுக்குத் தோன்றவில்லை. அவளும் நாங்களும் என்ன செய்ய வேண்டுமென்று சொல்லுகிறீர்கள்? ஒருவித உரிமையும், ஒருவித சுதந்திரமு மில்லாமல் பெண்கள் இப்படி ஆணே கதி யென்று நம்பிக்கிடக்க வேண்டி யிருப்பது,*

ஹிந்து மதத்திலுள்ள மிகக் கேவலமான ஊழல்களில் ஒன்றாகும். ஆண்கள் ஈவிரக்க மின்றிக் கொடுமைப்படுத்தத் துணிந்துவிட்டார்களானால், அப்புறம் இந்தப் பாழும் பெண்களுக்கு ஒரு விமோசனமுங் கிடையாது. ஆண் மட்டும் மனம் போனபடி கைமாறிக்கொண்டே போகலாம்; அவனைத் தட்டிக் கேட்க ஆள் கிடையாது. பெண் கலியாணம் செய்து கொண்டுவிட்டாளோ, அப்புறம் தன்னுடைய நாயகன் தயவுக்காக நாயாய்க் காத்துக் கிடக்க வேண்டியதுதான். இப்படி ஆயிரக்கணக்கான பெண்கள் அழுத கண்ணும் சிந்தையுமாய் அல்லற்பட்டுக்கொண்டு கிடக்கிறார்கள். இவை போன்ற ஊழல்களைத் தொலைத்து ஹிந்து மதத்தைத் தூய்மைப்படுத்தாவிட்டால் முன்னேற்றத்தைப்பற்றிக் கனவு தான் காண முடியுமா?"

மேலே குறிப்பிட்டிருக்கும் கடிதத்தை எழுதிய நிருபர் கல்வி யறிவுடையவர். அவருடைய சகோதரி பட்ட கஷ்டங்களை நாம் சுருக்கமாகவே சொல்லி இருக்கிறோம். அவர் எழுதியிருக்கும் கடிதத்தைப் படித்துப் பார்த்தால், படம் பிடித்துக் காட்டியதுபோல, அவ்வளவு தெளிவாக இருக்கும். தனது விலாசத்தையும் முழுப் பெயரையும் அவர் எனக்குத் தெரிவித்துள்ளார். ரொம்பவும் எரிச்சலுக்கு உள்ளானபோது எதையும் ஒரேயடியாய்க் கண்டிக்கத் தோன்றும். நம்முடைய நிருபருக்கு, ஒரு தனித்த நிகழ்ச்சி காரணமாக, கோப வெறியே உண்டாய்விட்டது. அதனால் ஹிந்து மதத்தை ஒரேயடியாய் அவர் தூஷித்துவிட்டார். உண்மை நிலை அப்படியல்லை. லட்சக்கணக்கான மனைவிமார்கள் ஹிந்துக் குடும்பங்களில் அரசிகளைப்போல மிகுந்த அமைதியுடன் வாழ்க்கை நடத்தத்தான் செய்கிறார்கள். அவர்கள் கணவன்மாரிடம் செலுத்துகிற அதிகாரம் எந்தப் பெண்ணையும் பொறாமை கொள்ளச் செய்யும். இது அன்பினால் வந்த அதிகாரம். நமது நிருபர் எடுத்துக்காட்டி யிருக்கும் கொடிய செயல் ஹிந்து மதத்தினால் ஏற்பட்ட விளைவு அன்று; மனிதப் பிறவியில் காணப்படும் குறைபாட்டினால் ஏற்பட்டதாகும். உலகத்திலே எல்லா நாட்டாரிடையும் எல்லா மதஸ்தரிடையும் இந்தக் குறைபாடு இருக்கவே செய்கிறது. கொடுமையாய் நடத்தும் கணவனை விட்டுப் பிரிந்து விவாகரத்து செய்துகொண்டால் போகிறது என்று சொல்லலாம். எதிர்த்து நின்று காரியங்களைச் சாதித்துக்கொள்ளத் தெரியாத, அல்லது எதிர்த்து நிற்க விரும்பாத, பெண்களுக்கு விவாகரத்தால் யாதொரு நலனும் வந்துவிடப் போவதில்லை. ஆகவே, சீர்திருத்தம் செய்ய விரும்புகிறவர்கள் சீர்திருத்தம் பலிக்க வேண்டுமானால், விஷயத்தை மிகைப்

படுத்துவதோ அல்லது தலைகால் தெரியாமல் பேசுவதோ கூடாது.

சரி, அது எப்படியாவது இருக்கட்டும். மேலே குறிப்பிட்டதைப் போன்ற நிகழ்ச்சிகள் ஹிந்து சமூகத்தில் சர்வ சாதாரணமாய் நடைபெறத்தான் செய்கின்றன. ஹிந்து சமூதாயம் ஒரு பெரிய தவறிழைத்துவிட்டது: கணவனுக்கு மனைவியை அளவுக்கு மிஞ்சி அடிமைப்படுத்தி விட்டது. மனைவி என்றால் தனக்கென்று ஒன்றுமில்லாமல் கணவனுக்குள்ளேயே ஐக்கியமாகிவிட வேண்டியவள் என்ற நிலைமையை ஏற்படுத்திவிட்டது. இதன் பலனாக, கணவன், சில சமயங்களில், இல்லாத அதிகாரத்தை எல்லாம் செலுத்த ஆரம்பிக்கிறான்; கடைசியில் மிருகமாகவே ஆகிவிடுகிறான். இந்த விதமான மிதமிஞ்சிய நடத்தைகளைச் சரிப்படுத்துவதற்கு நாம் சட்டத்தின் தயவை நாடிநிற்றல் கூடாது. கலியாணமாகாத சிறுமிகளுக்குப் போதிப்பதைப்போலன்றி வேறு விதமான முறையில், இந்தப் பெண்களுக்குக் கல்வியறிவைப் புகட்ட வேண்டும்; கொடுமையாய் நடந்துகொள்ளும் கணவன்மாருக்கு விரோதமாகப் பொதுஜன உணர்ச்சியை வளர்த்துவிட வேண்டும். இவைதான் இதற்குப் பரிகாரங்கள். நாம் இப்போது கவனித்த சகோதரியின் விவகாரத்தை மிக எளிதாய்த் தீர்த்துவிடலாம். துயரப்பட்டுக்கொண்டிருக்கும் பெண்ணோடு தாங்களும் சேர்ந்து துயரப்படாது, சகோதரரும் மற்ற உறவினரும் வேண்டிய சௌகரியங்களை அவளுக்குச் செய்து கொடுத்து, அவளைப் பாதுகாக்க வேண்டும். அது மட்டுமல்ல; பாபச் செயல்கள் புரிந்துகொண்டிருக்கும் கணவனோடு வாழ விரும்புவதோ அவனைத் திருப்திப்படுத்துவதோ தன் கடமை அல்ல என்பதை அவள் நம்பும்படி செய்ய வேண்டும். மனைவியைப்பற்றிய கவலை கணவனுக்கு இல்லாது இருக்கிறபடியால் தனக்கு மனைமே ஆகவில்லை என்று அந்தப் பெண் எண்ணிக்கொள்ள வேண்டும். ஒரே வீட்டிலிருந்து கணவனுடன் வாழ்க்கை நடத்திக்கொண்டிராமல் தனியாகவே இருந்து வாழ்க்கை நடத்தலாம். அதற்காக, சட்ட பூர்வமான பந்தத்தை அறுத்துக்கொள்ள வேண்டுமென்பதில்லை.

விவாகரத்து செய்துகொள்ளும் உரிமை

பினும், ஹிந்து மதத்தைப் பின்பற்றும் சட்டபூர்வமாய்ப் பரிகாரம் தேடிக்கொள்ள இரண்டு வழிகள் இருக்கின்றன: தன்னை அடித்துத் துன்புறுத்தியதற்காகக் கணவனைத் தண்டிப்பது ஒன்று; தனக்கு உண்டி உடை முதலி

யன தந்து தன்னை ஆதரிக்கக் கணவன் கடமைப்பட்டவன் என்று வழக்காடுவது மற்றொன்று. சட்ட ரீதியான முறையில் பரிகாரம் தேட முயல்வது பெரும்பாலும் நன்மை பயக்காது; அதனுல் தீமையே அதிகரிக்கும் என்று நான் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். நல்லொழுக்கமுள்ள பெண்கள் இதனுல் மனச்சாந்தி அடைவதில்லை. சமூகத்தின் முக்கிய நோக்கமாய் இருக்க வேண்டிய காரியம்—முக்கியமாக ஒவ்வொரு மனைவி யும் செய்ய வேண்டிய காரியம்—கணவனைச் சீர்படுத்துவ தாகும். சட்டரீதியாகப் பரிகாரம் தேட முயன்ருல் இந்தக் காரியம் மிகவும் கஷ்டமாய்ப் போய்விடுகிறது. பிரஸ்தாப விவ காரத்திலோ, பெற்ருேர், பெண்ணை ஆதரித்துப் போஷிக்கக் கூடிய நிலையில் இருக்கிருர்கள். அப்படி யில்லாது பரித விக்கும் பெண்களுக்கு ஆதரவு கொடுக்கும் ஸ்தாபனங்கள் நம் நாட்டில் பெருகிவருகின்றன.

சட்ட ரீதியான முறையில் விவாகரத்து செய்துகொள்ள முடியாமல் இருக்கிறபடியால் இளம் மனைவியரைக் கைவிட்டுக் கணவன்மார் ஓடிப்போய் விடுகிருர்கள். கொடுமையாய் நடத்துகிற கணவன் வீட்டைவிட்டு இளம் மனைவியர் வெளியே வந்துவிடுகிருர்கள். இவ்வாறு கைவிடப்பட்ட அல்லது தாங்களே பிரிந்துவந்த இளம் பெண்களுக்கு, புருஷ சுகத்தில் இச்சை இருக்காதா என்ற கேள்வி எழலாம். விவாகரத்தே கூடாது என்ற வழக்கம் நீண்ட காலமாக இருந்து வருகிற சமூகத்தில், தங்கள் மணவாழ்க்கை திருப்தி கரமாய் இராவிட்டாலும், வேறு மணம் செய்துகொள்ளப் பெண்கள் துணிந்து முன்வர மாட்டார்கள். அப்படி வந்தாலும் அவர்கள் எண்ணிக்கை மிகவும் சொற்பமாகவே இருக்குமாத லால், இது அவ்வளவு பெரிய குறையல்ல. இதற்கு ஒரு குறிப் பிட்ட முறையில் பரிகாரம் தேடியே ஆக வேண்டும் என்று பொதுஜன அபிப்பிராயம் இருக்குமேயாளுல், நிச்சயமாய் அந்தச் சீர்திருத்தம் வந்தே தீரும். நமது நிருபர் எழுதியுள்ள கடிதத்தில் மனைவிக்கு இச்சை தணியவில்லை என்று குறை யிருப்பதாகத் தோன்றவில்லை. அவர் எழுதியிருப்ப தெல் லாம், கணவன் சீர்கேடான ஒழுக்கமுடையவன், முரட்டு ஆசாமி என்பதுதான். இதற்குப் பரிகாரம், இப்போது நான் சொல்லியிருக்கிறபடி மனப்போக்கை மாற்றி அமைத்துக் கொள்வதுதான். பெரும்பாலான கேடுகளை நாமே கற்பித்துக் கொண்டு அல்லற்படுகிறோம். நமக்கு ஒரு கதியுங் காணேமே என்று எண்ணிக்கொள்ளுவதும் அப்படித்தான். புதிய மனப் பாங்குடன் சிறிது சுயமாகச் சிந்திக்க ஆரம்பித்தோமே

யாலும் கற்பனையால் வரும் துயரத்தை எல்லாம் நாம் ஒரு நொடியில் போக்கிவிடலாம். கொடுமையாக நடத்தப்படுகிற பெண்ணை அவள் கொடுமைப்படுகிற இடத்திலிருந்து கொண்டு வந்துவிடுவதோடு உறவினர்கள் திருப்தி யடைந்துவிடக் கூடாது. பொதுஜனத் தொண்டிற்குத் தகுதியுடையவளாகும்படி அவளைத் தூண்டிக்கொண்டே யிருக்க வேண்டும். கணவனை அணைவது ஏதோ ஒரு பெரிய சுகமென்று எண்ணிக் கொள்ளுகிறார்கள். அதைக் காட்டிலும் இந்தப் பொதுஜனத் தொண்டினால் கிடைக்கும் இன்பம் எவ்வளவோ மேலென்று சொல்ல வேண்டும்.

# பெண்குலத்தைச் சேர்ந்த நண்பர் ஒருவரது கேள்விகள்

**"கணவனுக்கு எடுத்துக்காட்டாக ராமனையும் மனைவிக்கு எடுத்துக்காட்டாகச் சீதையையும் நான் கொண்டிருக்கிறேன். சீதை ராமனுக்கு அடிமையாகவோ, ராமன் சீதைக்கு அடிமையாகவோ இருந்து வாழ்க்கை நடத்தவில்லை......தான் செய்வதே சரி யென்றும் தன்னுடைய முயற்சிகள் யாவும் மிகவும் உயர்ந்த இலட்சியத்தை நாடி நிற்பவை யென்றும் மனைவி கருதினால், அதன்படியே அவள் நடந்துகொள்ளலாம். அப்படி நடந்துகொள்ள அவளுக்குப் பூரணமான உரிமையுண்டு."**

எனது அனுபவ அறிவிலும் அகத் தூய்மையிலும் கொஞ்சம் நம்பிக்கை வைத்துள்ள பெண்மணி ஒருவர் சிக்கலான சில கேள்விகளைக் கேட்டிருக்கிறார். அவற்றைப் போன்ற கேள்விகளுக்குப் பதில் சொல்லாமலே தப்பித்துக்கொள்ளத்தான் எனக்கு ஆசை; காரணம் வேறு ஒன்றுமில்லை; தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்ளுவதில் கண்ணுங் கருத்துமாய் இருக்கும் சில கணவன்மார்கள் நான் சொல்லுவதைக் கேட்டு ஆத்திரங்கொண்டு வாதப்பிரதிவாதங்களில் இறங்கக்கூடும். கணவன் ஸ்தானத்தில் நானும் இருந்திருக்கிறேன். இடையிடையே எனக்கும் என் மனைவிக்கும் மனக் கசப்புகள் ஏற்பட்டிருக்கின்றன. இருந்தபோதிலும், சென்ற நாற்பது வருஷ காலமாக, சந்தோஷமான முறையில் நாங்கள் இல்லற வாழ்க்கை நடத்தி வந்திருக்கிறோம். இதை அந்தக் கணவன்மார்கள் நன்றாய் அறிவர்; ஆகையால் அவர்கள் என்மேல் கோபப்பட மாட்டார்கள்.

அந்தப் பெண்மணி கேட்டிருக்கும் முதல் கேள்வி மிகவும் சரியான கேள்வி; இந்தச் சமயத்துக்கு மிகவும் பொருத்தமுடைய கேள்வி. கேள்விகள் மராத்திய பாஷையில் இருக்கிறபடியால் மொழிபெயர்த்துத் தந்திருக்கிறேன் :

"தேசியத் தொண்டில் கலந்துகொள்ளாது, ராம நாமத்தை மட்டும் ஜெபித்துக்கொண்டிருந்தால் ஆணுக்கோ பெண்ணுக்கோ ஜென்ம சாபல்யம் கிட்டிவிடுமா? குடும்பத்திலுள்ள வேலைகளைக் கவனிப்பதும், இடையிடையே ஏழை எளியவர்களுக்கு உதவுவதுமே நம்முடைய தர்மம்; அதற்கு மேல் நாம் செய்ய வேண்டியது ஒன்றுமே யில்லை என்று சகோதரிகளில் சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். அதனாலேதான் இந்தக் கேள்வியைத் தங்களிடம் கேட்கும்படி நேர்ந்தது."

பெண்களை மட்டு மல்ல, அநேக ஆடவர்களையுமே இந்தக் கேள்வி திகைக்க வைத்திருக்கிறது. இதைப்பற்றி நான் மண்டையை உடைத்துக்கொண்டது கொஞ்சநஞ்ச மல்ல. செயலற்றிருக்கும் நிலையே யோகநிலை; நம்முடைய செயல் எதுவும் வீணான காரியம்தான் என்று சொல்லும் சமயவாதம் ஒன்று இருக்கிறது. இது எனக்குத் தெரிந்த விஷயமே; இந்த வாதத்துக்கு நான் சொந்தமாக வியாக்கியானம் செய்துகொண்டாலொழிய அதை நான் ஒப்புக்கொண்டதாகச் சொல்ல முடியாது. ஒருவனுடைய ஆன்ம வளர்ச்சிக்கு முயற்சி அவசியமான • தென்றும், அதுவும் பலனை எதிர்பாராது செய்வதாய் இருத்தல் வேண்டும் என்றும் நான் அபிப்பிராயப்படுகிறேன். ராம நாமமும் அதைப்போன்ற மந்திரங்களும் வெறுமனே முணுமுணுத்துக்கொண் டிருப்பதற்காக மட்டும் ஏற்பட்டவை அல்ல. நமது முயற்சிக்கு உறுதுணையாக நின்று நம்மைப் புனிதப்படுத்தவும், நமது உள்ளொளியைப் பெருக்கவுமே அவை வேண்டியிருக்கின்றன. முயற்சிக்குப் பதிலாக மந்திர ஜெபத்தில் ஈடுபடுவது சரியல்ல. மந்திர ஜெபங்கள், நாம் செய்யும் முயற்சியைத் தீவிரப்படுத்தவும் அதைச் சரியான பாதையில் செலுத்தவுமே ஏற்பட்டவை. நாம் செய்யும் முயற்சிகள் யாவும் வீணான காரியங்கள்தான் என்று கருதுவோமாயின், குடும்ப வேலைகளைச் செய்வது ஏன்? ஏழை எளியவர்களுக்கு உதவி செய்வதுதான் ஏன்? தேச சேவைக்கு உரிய வித்து முயற்சிக்குள்ளேதான் கிடக்கிறது. தேச சேவையை நான் மனித சமுதாயத்தின் சேவை யென்றே கருதுகிறேன். பற்றற்ற நிலையில் குடும்பத்திலிருந்து செய்துவரும் தொண்டையும் மனித சமுதாயத்தின் தொண்டு என்று சொல்லிவிடலாம். அப்படிக் குடும்பத்திலிருந்து செய்கிற தொண்டு, ஒருவனை, நிச்சயமாய், தேசியத் தொண்டில் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும். ராம நாமத்தை ஜெபிப்பதால் பற்றற்ற நிலையும், சங்கடமான நேரங்களில் கலங்காத சித்தமும் சித்திக்கும். ஏழை எளியவர்களுக்குத் தொண்டு செய்து, அவர்களோடு நம்மை ஐக்கியப்படுத்திக்கொள்ளாவிட்டால், தன்னைத் தானறிவது துர்லபமாகிவிடு மென்று எனக்குத் தோன்றுகிறது.

இரண்டாவது கேள்வி :

“கணவன் அன்பின் வடிவாய் இருந்தாலும் சரி, கொடுமையின் வடிவாய் இருந்தாலும் சரி, அதைக் கவனியாது, கணவனிடம் பக்தி செலுத்தி, தன்னை யிழந்து அவனிடத்திலேயே ஈடுபட்டு விடுவதுதான் மனைவியின் உயர்ந்த இலட்சியம் என்று ஹிந்து

மதம் சொல்லுகிறது. மனைவி நடந்துகொள்ள வேண்டிய முறை இதுதான் என்று நாம் ஒப்புக்கொண்டால், கணவன் எதிர்ப்பைக் கவனியாது மனைவி தேசத் தொண்டில் ஈடு படலாமா? இல்லை, கணவன் எந்த அளவுக்கு அனுமதி கொடுக்கிறாரோ அந்த அளவுக்குத்தான் மனைவி தேசத் தொண்டில் ஈடுபட வேண்டுமா?''

கணவனுக்கு எடுத்துக்காட்டாக ராமனையும் மனைவிக்கு எடுத்துக்காட்டாகச் சீதையையும் நான் கொண்டிருக்கிறேன். சீதை ராமனுக்கு அடிமையாகவோ, ராமன் சீதைக்கு அடிமையாகவோ இருந்து வாழ்க்கை நடத்தவில்லை. ராமன் எப்போதும் சீதையை மதித்தே நடந்து வந்தான். உண்மைக் காதலிருக்கிற இடத்தில் மேலே கேட்டிருக்கும் கேள்வி எழுவதற்கு இடமேயில்லை. உண்மைக் காதல் இல்லாத இடத்திலோ இதய ஒற்றுமையே ஏற்பட மாட்டாது. தற்கால ஹிந்துக் குடும்பங்களின் நிலை, விளங்காத ஒரு புதிராகவே இருக்கிறது. கணவன் எப்படிப்பட்டவன் என்று மனைவிக்குத் தெரியாது; மனைவி எப்படிப்பட்டவள் என்று கணவனுக்குத் தெரியாது. சமயக் கட்டுப்பாடு, பழக்க வழக்கங்கள், சம்பிரதாயத்தை ஒட்டி வாழும் வாழ்க்கை முறை இவற்றால் தான் பெரும்பாலான ஹிந்துக் குடும்பங்கள் இன்று காலங் கழித்து வருகின்றன. கணவன் மனைவி இருவரில் யாருக்காவது சம்பிரதாயத்துக்கு மாறான அபிப்பிராயங்கள் ஏற்பட்டு விட்டால், தொலைந்தது காரியம். தான் செய்யும் எந்தக் காரியத்திற்கும் தன் வாழ்க்கைத் துணைவியைக் கலந்துகொள்ள வேண்டுமென்று கணவன் எண்ணுவது இல்லை. மனைவி என்றால் ஏதோ ஒரு சொத்து என்று நினைத்துவிடுகிறான். கணவன் அப்படி எண்ணுவதில் என்ன குற்றம் இருக்கிறது என்று கருதுகிற மனைவி தன்னுடைய சுயதர்மத்தையே அடக்கிக் கொண்டுவிடுகிறாள். இந்த மாதிரியாய் இருக்கும் அநீதிகளைப் போக்குவதற்கு, மீராபாய் நடந்துகொண்ட முறை நமக்கு வழிகாட்டியாய் நின்று உதவுகிறது. தான் செய்வதே சரியென்றும் தன்னுடைய முயற்சிகள் யாவும் உயர்ந்த இலட்சியத்தை நாடி நிற்பவை யென்றும் மனைவி கருதினால் அதன் படியே அவள் நடந்துகொள்ளலாம். அப்படி நடந்துகொள்ள அவளுக்குப் பூரணமான உரிமையுண்டு.

மூன்றாவது கேள்வி :

"குடும்பத்தில் கணவன் மாமிசம் சாப்பிடுபவராயும் மனைவி சாப்பிடாதவளாயும் இருந்தால் மனைவி தன் இஷ்டம்போல் நடந்துகொள்ளலாமா? அன்பான வார்த்தைகள் சொல்லி

*மாமிசம் சாப்பிடுவதினின்று கணவனை மீட்பது அவளுடைய கடமையா? கணவனுக்கு மாமிசத்தைச் சமைத்துப்போட மனைவி கடமைப்பட்டவளா? மாமிசம் சாப்பிடும்படி கணவன் வற்புறுத்தினால் அதற்கு மனைவி உடன்பட வேண்டுமா? இஷ்டம்போல் அவள் நடந்துகொள்ளட்டும் என்று தாங்கள் சொல்லுவீர்களானால், பொதுக் குடும்பத்தில் நிர்வாகம் எப்படிச் சரிவர நடைபெறும்?"*

இரண்டாவது கேள்வியிலேயே இந்தக் கேள்விக்கு ஓரளவு பதில் சொல்லி யிருக்கிறேன். கணவன் செய்கிற தவறுகளுக்கு மனைவி உடந்தையா யிருக்க வேண்டு மென்பதில்லை. கணவன் செய்வது தவறுதான் என்று கருதினால், தனக்குச் சரி என்று தோன்றுவதைச் செய்ய மனைவி துணிய வேண்டும். ஆனால், பொருள் தேடிக் குடும்பத்தைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு எப்படிக் கணவனுடையதோ, அப்படியே குடும்பத்தை நிர்வகிப்பதும் அதற்காகச் சமைப்பதும் மனைவியினுடைய பொறுப்பாகும். ஆகவே, கணவனும் மனைவியும் முன்னமே மாமிசம் சாப்பிடும் பழக்கமுடையவர்களாய் இருந்தால் மனைவி மாமிச உணவு தயாரிக்கலாம். அப்படியின்றி, இடையில் மாமிசம் சாப்பிடும் பழக்கத்துக்கு ஆளாகி, மாமிச உணவு தயார்செய்ய வேண்டுமென்று மனைவியைக் கணவன் வற்புறுத்தினால் அதற்கு மனைவி உடன்பட வேண்டிய அவசியமில்லை. மனத்துக்கு ஒவ்வாத செயலைச் செய்வதற்கு அவள் இணங்குதல் கூடாது. குடும்பத்தில் அமைதி நிலவ வேண்டுவது அவசியந்தான். ஆயினும் அமைதியே குடும்பத்தின் இலட்சிய மன்று. நாம் கட்டுப்பாட்டில் நின்று ஒழுகும் பொருட்டே இல்லற வாழ்க்கை ஏற்பட்டிருக்கிற தென்று கருதுகிறேன். வாழ்க்கை என்பது ஒரு கடமை; உயர்ந்த இலட்சியத்துக்காக அமைந்த தொரு சாதனம். இகத்திலும் பரத்திலும் கணவன் மனைவி இருவருக்கும் நன்மை பயப்பதற்காகவே, மணவாழ்க்கை ஏற்பட்டிருக்கிறது. அது மட்டு மன்றி, மனித சமுதாயத்துக்குத் தொண்டு செய்யும் பொருட்டும் மணவாழ்க்கை ஏற்பட்டதெனலாம். அப்படி யிருக்கும்போது, கட்டுப்பாட்டை மீறி யாராவது ஒருவர் நடந்தால், மற்றவர் அவருடன் தொடர்பு வைத்துக்கொண் டிருக்க வேண்டிய அவசியமில்லை. தொடர்பு விடுவ தென்றால், மணத் தொடர்பைக் குறிக்காது. விவாகரத்துக்கு இங்கே இடமில்லை. எந்த இலட்சியத்தை நாடிக் கணவன் மனைவியாக இருவரும் ஒன்றுபட்டார்களோ அந்த இலட்சியத்தை நிறைவேற்றவே இப்போது அவர்கள் இரு

வரும் பிரிந்துகொள்ளுகிறார்கள். மணத் தொடர்புவிடுவது என்பதற்குப் பொருள் இதுதான். ஹிந்து மதத்தின்படி கணவன் மனைவி இருவரும் ஒரே அந்தஸ்து உடையவர்கள்; ஏற்றத் தாழ்வே கிடையாது. ஆனாலும், என்ன காரணத்தைக் கொண்டோ அனுஷ்டானத்தில் வேறு விதமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. எப்போது இந்த மாறுதல் ஏற்பட்ட தென்று யாரும் சொல்ல இயலாது. இதைப்போல வேறு எத்தனையோ கேடுகள் நமது ஹிந்து மதத்துக்குள் நுழைந்து கிடக்கின்றன; ஜென்ம சாபல்யம் அடைவதற்காகவே ஆணும் பெண்ணும் இந்த உலகத்தில் பிறக்கிறார்கள். அதை அடைய, தங்கள் இஷ்டம்போல் ஆணும் பெண்ணும் எதையும் செய்யலாம். இதுதான் ஹிந்து மதத்தின் கோட்பாடு யென்று என்னால் உறுதி சொல்ல முடியாது.

# ஸ்மிருதிகளும் பெண்களும்

**"பெண்களது உரிமைகளே தங்கள் உரிமைகளெனக் கொண்டு, பெண்ணை மக்கள் இனத்துக்கே தாயாகக் கருதிப் போற்றும் ஆடவர்களின் மனதிற்கு ஒவ்வாத ஸ்லோகங்கள் சில, ஸ்மிருதிகளில் இருப்பது ரொம்பவும் விசனிக்கத்தக்க காரியமாகும்."**

பெஜவாடாவிலிருந்து வெளிவரும் **இந்திய சுயராஜ்யம்** என்னும் பத்திரிகையின் இதழ் ஒன்றை ஒரு நிருபர் எனக்கு அனுப்பி யிருக்கிறார். ஸ்மிருதிகளில் பெண்களின் நிலை என்னும் விஷயமாக அதில் ஒரு கட்டுரை இருக்கிறது. சில முக்கியமான குறிப்புகளை மட்டும் யாதொரு மாறுதலும் செய்யாமல் கீழே கொடுத்திருக்கிறேன் :

"கணவன் காமுகனாகவும், ஒழுக்கம் கெட்டவனாகவும், நல்ல குணங்கள் அற்றவனாகவும் இருந்தாலுங்கூட, மனைவி அவனைத் தெய்வமாகவே மதித்து நடந்துகொள்ள வேண்டும்." **(மனு 5-154)**

"கணவனுடைய சொல்லைத் தட்டாது நடத்தலே மனைவியின் உயர்ந்த தர்மம்." **(யாக்ஞவல்கியா 1-18)**

"யாகம், சடங்கு, நோன்பு முதலியன பெண்களுக்கு உரியன அல்ல. கணவனுக்குத் தொண்டு செய்வதனாலேயே வானுலகத்தில் அவளுக்கு உயர்ந்த பதவி கிட்டும்." **(மனு 5-145)**

"கணவன் உயிருடன் இருக்கும்போது சடங்கு, நோன்பு முதலியவற்றை அனுஷ்டிக்கும் மனைவி, கணவனுடைய வாழ் நாளையே குறைத்துவிடுகிறாள். அதனால் அவளுக்கு நரகந்தான் கிடைக்கும். பெண்கள் புண்ணிய ஸ்தலங்களுக்குப் போய்த் தீர்த்தமாட விரும்புவது வீணான காரியம். அதற்குப் பதிலாக, கணவனது பாதத்தையோ உடம்பையோ கழுவி, அந்தத் தண்ணீரைக் குடித்தல் மேலான காரியம். அப்படிக் குடிப்பதால், அந்தப் பெண்களுக்கு மேலான பதவி கிட்டும்." **(அத்ரி 136-137)**

"கணவனுடையதைக் காட்டிலும் மேலான உலகம் மனைவிக்கு வேறு கிடையாது. கணவனுக்கு மாறாய் நடக்கிற பெண்ணுக்கு இறந்த பின், கணவன் போகும் உலகம் கிட்டாது. எனவே, எந்தக் காரணத்தைக்கொண்டும் மனைவி அவனுக்கு அதிருப்தியாக நடக்கக் கூடாது." **(வசிஷ்டர் 12-14)**

"கணவனை மதியாது பிறந்த வீட்டையே பெருமைப்படுத்திப் பேசிக்கொண் டிருக்கும் பெண்ணை, பெரிய கூட்டத்தின் மத்தியில் நிறுத்தி அரசன், நாய்க்கு இரையாக்க வேண்டும்." **(மனு 18-371)**

"கணவன் சொல்லைத் தட்டி நடக்கும் பெண் பரிமாறுகிற உணவை ஒருவரும் சாப்பிடக் கூடாது. அவளை விபசாரியா கவே கருத வேண்டும்." (அங்கீராஸ்-69)

"நோயாளியாகவோ, குடிகாரனாகவோ கெட்ட பழக்கங்கள் உடையவனாகவோ கணவன் இருந்தபோதிலும் அவனுக்கு மனைவி கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். அப்படிக் கீழ்ப்படிந்து நடக்காதவளை, ஆடையாபரணங்களைப் பறித்துக்கொண்டு, சமூகத்திலிருந்து மூன்று மாத காலம்வரை விலக்கி வைக்க வேண்டும்.'' (மனு 10-8)

பெண்களது உரிமைகளே தங்கள் உரிமைகளெனக் கொண்டு பெண்ணை மக்கள் இனத்துக்கே தாயாகக் கருதிப் போற்றும் ஆடவர்களின் மனதிற்கு ஒவ்வாத ஸ்லோகங்கள் சில, ஸ்மிருதிகளில் இருப்பது ரொம்பவும் விசனிக்கத்தக்க காரியமாகும். வைதிகர்கள் சார்பாக வெளிவரும் ஒரு செய்திப் பத்திரிகையில் மேலே குறிப்பிட்டிருக்கும் ஸ்லோகங்கள் மத போதனையாகப் பிரசுரிக்கப்பட் டிருப்பது அதைவிட அதிக மாய் வருந்தத்தக்க விஷயமாகும். ஸ்மிருதிகளில் வேறு எத்தனையோ ஸ்லோகங்கள் பெண்களைப் பெரிதும் மதித்து அவர்களுக்கு உயரிய ஸ்தானத்தை அளித்திருக்கின்றன. நீதிக்கு மாறுபட்டவையாயும் முன்னுக்குப் பின் முரண்பா டானவையாயும் பல ஸ்லோகங்கள் ஒரே ஸ்மிருதியில் இருக் கின்றனவே, அந்த ஸ்மிருதிகளை நாம் என்ன செய்வது என்ற கேள்வி எழலாம். ஸ்மிருதிகளின் பெயரினால் அச்சடிக்கப் பட்டிருப்பவைகள் எல்லாவற்றையுமே நாம் தெய்வவாக்காகக் கொள்ள வேண்டிய அவசியமில்லை என்று அடிக்கடி சொல்லி வந்திருக்கிறேன். எது உண்மையானது, எது இடைச் செருகல், எது நல்லது, எது கெட்டது என்பதை ஒவ்வொரு வரும் முடிவுகட்டிவிட முடியாது. ஸ்மிருதிகளின் பெயரால் வந்திருக்கும் எல்லாப் புத்தகங்களையும் ஒன்று திரட்டி, மதம், நீதி, ஒழுக்கம் ஆகியவற்றிற்கு எவை புறம்பாக இருக்கின் றனவோ அவற்றை யெல்லாம் களைந்து எறிய நிபுணர்கள் கமிட்டி ஒன்றை நிறுவ வேண்டும். அக் கமிட்டியாரால் வெளியிடப்படும் பதிப்பு ஹிந்துக்களுக்கு மிகவும் பயனுடைய தாக இருக்கும். இந்தப் புனிதமான காரியத்தை ஹிந்து மதத் தலைவர்களும் பொது ஜனங்களும் ஆதரிப்பார்களா என்ற சந்தேகம் வேண்டாம். தொண்டு செய்யும் ஆர்வத் தோடு செய்யப்படும் எந்தக் காரியமும் நாளா வட்டத்தில் நல்ல பலனைக் கொடுக்கும். ஹிந்து மதத்தைத் தெரிந்து கொள்ள ஆவலுள்ளவர்களுக்கு இந்தப் பதிப்பு நிச்சயமாய் உதவியாக

# வருணமும் வனிதையும்

**" உரிமைகளேயும் சலுகைகளேயும் கொண்டாடுவதற்காகச் சாதிப் பாகுபாடுகள் ஏற்படவில்லே. சில கடமைகளேச் செய்வதற்கு என்றே அவை ஏற்பட்டிருக்கின்றன......இதை உணர்ந்து தனது கடமைகளேச் சரிவரச் செய்கின்ற பெண் உயர்ந்த அந்தஸ்தை அடைகிருள். தான் தலேவியாயிருந்து நடத்தும் குடும்பத்தில் அவள் அடிமையாய்க் கிடப்பதில்லே; அரசியாய் ஆளுகிருள்."**

*மதிப்புக்குரிய நண்பர் ஒருவர் எழுதுகிருர் :*

*" சாதிப் பாகுபாடு சம்பந்தமாகத் தாங்கள் சமீபத்தில் ஒரு கட்டுரை எழுதியிருந்தீர்கள் அல்லவா? தாங்கள் எழுதியிருக்கும் தோரணேயைப் பார்த்தால் ஆண்களேக் குறித்தே சாதியை நிர்ணயிக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அப்படியாயின் பெண்களின் நிலேமை என்ன? அவர்கள் சாதியை நிர்ணயிப்பது எப்படி? கலியாணம் ஆவதற்கு முன் தகப்பனுருடைய சாதியையும் கலியாணம் ஆன பின் கணவனுடைய சாதியையும் பெண்கள் பின்பற்ற வேண்டுமென்று தாங்கள் சொன்னுலும் சொல்லக் கூடும். கலியாணம் ஆவதற்கு முன் தகப்பனுருக்கும் கலியாணம் ஆன பின் கணவனுக்கும், கணவன் இறந்து போனுல் பிள்ளேகளுக்கும் கட்டுப்பட்டுப் பெண்கள் நடக்க வேண்டும் என்று மனு ஊர் சிரிக்கக் கட்டளே யிட்டிருக்கிருரே அதைத்தான் தாங்களும் ஆதரிக்கிறீர்கள் போலிருக்கிறது?*

*" அது எப்படியாவது போகட்டும். நம்முடைய காலத்தை, பெண்கள் வாக்குரிமை பெற்ற காலம் என்று சொல்லுவது பொருந்தும். ஆண்களேப் போலவே பெண்களும் பல தொழில்களில் ஈடுபட்டு வருகிருர்கள். கணவன் லேவாதேவித் தொழில் செய்வதையும் மனேவி ஆசிரியை வேலே பார்த்து வருவதையும் நாம் இன்று கண்கூடாகப் பார்க்கிருேம். இவ்விதம் வேலே செய்யும் பெண்களே நாம் எந்தச் சாதியில் சேர்த்துக்கொள்ள வேண்டும்? வர்ணுச்ரம தர்மம் என்ன கட்டளேயிடுகிறது? மகன் தந்தையின் தொழிலேக் கைக்கொள்ளுகிருன். அது காரணமாக அவன் பெற்றேருடைய சாதியைச் சேர்ந்தவனுகிருன். அப்படியே பெண்ணும் பெற்றேருடைய சாதியையும் தொழிலேயும் ஏற்றுக்கொள்ளுகிருள். அந்த அந்தச் சாதிக்குரிய தொழிலேக் கலியாணம் ஆனபிறகும் விட்டுவிட மாட்டார்கள் தானே? சரி. அவர்களுக்குக் குழந்தைகள் பிறக்கின்றன. அந்தக் குழந்தைகளே எந்தச் சாதியில் சேர்ப்பது? பிள்ளேகளே சாதி விஷயத்தைத் தங்கள் இஷ்டப்படி நிர்ணயித்துக்கொள்ளட்டும் என்று சொல்லுவீர்களா? அப்படி*

யானால், தங்கள் வியாக்கியானப்படி, வம்சத்தை யொட்டி சாதி வருவதாக வர்ணாச்ரம தர்மம் செல்லுகிறதே அது என்ன

இந்தக் கேள்விக்கும் இன்றைய நிலைமைகளுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. சாதிப் பாகுபாடு சம்பந்தமாக நான் எழுதியிருப்பதாகச் சொல்லும் கட்டுரையில் சாதி என்பது பெயரளவில்தான் இருக்கிறதே ஒழிய நடைமுறையில் உண்மையான சாதிப் பாகுபாடு இல்லை யென்று எழுதியிருக்கிறேன். இப்போதுள்ள ஹிந்து சமுதாயத்தில் கலக்கமும் குழப்பமும் மலிந்திருக்கின்றன. நான்கு வருணத்தார் என்பது பெயரளவில்தான் இருக்கிறது. இப்போது இருக்கும் சாதியை, வர்ணாச்ரம தர்மப் பாகுபாட்டின்படி சொல்ல வேண்டுமானால், சூத்திர சாதி என்றே சொல்ல வேண்டும். இப்போதுள்ள ஆண் பெண் அனைவருமே சூத்திரர்கள்தான்.

என் கருத்துப்படி புதுப்பிக்கப்பட்ட வர்ணாச்ரம தர்மம் பின்வருமாறு இருக்கும் என்று நினைக்கிறேன்: கலியாணம் செய்துகொடுக்கு முன், தன் சகோதரனைப்போலவே, பெண்ணும் தகப்பனுடைய சாதியைச் சேர்ந்தவளாய் இருப்பாள்; கலப்பு மணங்கள் மிக மிகக் குறைவாகவே நடைபெறும். இதன் காரணமாக, கலியாணம் செய்துகொண்ட பிறகும், முன்னைப்போலவே பெண், தான் பிறந்துள்ள சாதியில் இருந்துகொள்ள முடியும். கலப்பு மணம் செய்துகொண்டால், பிறந்த சாதியை ஒதுக்கிவிட்டு, புருஷனது சாதியைப் பெண் ஏற்றுக்கொள்வாள். ஏற்றத் தாழ்வான உணர்ச்சி இதனால் இல்லாது போய்விடுமா என்று சிலர் நினைக்கலாம். வர்ணாச்ரம தர்மம் புதுப்பிக்கப்படும்போது நான்கு சாதிகளுக்கு இடையில் ஏற்றத்தாழ்வே இல்லாது மறைந்து ஒழிந்துவிடும்.

பொருள் தேடுவதற்காகக் கணவன் ஏதாவது ஒரு தொழிலில் ஈடுபட்டிருப்பதைப்போல் மனைவியும் ஏதாவது ஒரு தொழிலில் ஈடுபட வேண்டும் என்று நான் கருதவில்லை. பெண்களின் திறன் அனைத்தும் குழந்தைகளைப் பாதுகாப்பதற்கும் குடும்பத்தை நிர்வகித்து நடத்துவதற்கும் சரியாய்ப் போய்விடும். நன்கு ஒழுங்குபடுத்தப்பட்ட சமூக அமைப்பில் வருவாய் தேடிக் குடும்பத்தைப் போஷிக்க வேண்டிய பொறுப்பு, பெண்களைச் சார்ந்திருத்தல் கூடாது. கணவன் பொருள் தேடியும் மனைவி நிர்வகித்தும் குடும்பத்தை நடத்த வேண்டும். இதனால் இருவருக்குமே நன்மை யுண்டு.

இப்படி நடத்தப்படும் வாழ்க்கை முறையால் பெண்களின் உரிமைகளுக்கு ஆபத்து ஏற்பட்டுவிடும் என்றோ அவர்களுடைய சுதந்திரம் அழிந்துபடும் என்றோ நான் கருதவில்லை. பெண்களுக்கு உரிமை கிடையாது என்று மனு சொன்னதாகச் சொல்லப்படும் வாக்கியத்தை நான் வேத வாக்கியமாக ஒப்புக்கொள்ள வில்லை. பெண்களை அடிமைப்படுத்தி வைத்திருந்த காலத்தில் இந்த வாக்கியம் எழுந்ததாகத் தோன்றுகிறது, நமது இலக்கியங்களில் மனைவியை 'வாழ்க்கைத் துணைவி', 'சகதர்மிணி' என்றே அழைத்திருக்கிறார்கள். மனைவியைக் கூப்பிடும்போது கணவன் 'தேவி', அதாவது 'பெண் தெய்வம்,' என்று சொல்லியே அழைக்கிறான். உரிமை, சலுகை யாதொன்று மின்றி மிகவும் கேவலமான நிலைமைக்கு நமது பெண்களை ஒரு காலத்தில் தாழ்த்திவிட்டார்கள். இதைத் துரதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும். இதனால் பெண்களுடைய சாதியும் தாழ்ந்து போய்விடவில்லை. உரிமைகளையும் சலுகைகளையும் கொண்டாடுவதற்காகச் சாதிப் பாகுபாடுகள் ஏற்படவில்லை. சில கடமைகளைச் செய்வதற்கு என்றே அவை ஏற்பட்டிருக்கின்றன. நாமே நமது கடமைகளை அசட்டையாய் விட்டுவிட்டால்தான் உண்டு; மற்றப்படி நம்மை ஒருவராலுமே வேறு வழிகளில் திருப்பிவிட முடியாது. இதை உணர்ந்து தனது கடமைகளைச் சரிவரச் செய்கின்ற பெண் உயர்ந்த அந்தஸ்தை அடைகிறாள். தான் தலைவியாயிருந்து நடத்தும் குடும்பத்தில் அவள் அடிமையாய்க் கிடப்பதில்லை; அரசியாய் ஆளுகிறாள்.

சமூகத்தில் பெண்கள் செய்ய வேண்டிய பணி எனும் விஷயம்பற்றி நான் சொல்லியிருப்பதை ஏற்றுக்கொண்டால் குழந்தைகளின் சாதியை எப்படி நிர்ணயிப்பது என்ற பிரசினை தீர்ந்து போய்விடும். அப்போது கணவனுடைய சாதிக்கும் மனைவியினுடைய சாதிக்கும் வேற்றுமை என்பதே இராது.

# பெண்களின் நிலைமை

**"பெண் உரிமையைப் பொறுத்தவரையில் நான் எதையும் விட்டுக் கொடுத்துவிடுகிறவன் அல்லன். ஆண்களுக்குச் சட்டபூர்வமாக என்னென்ன வசதிகள் இருக்கின்றனவோ, அந்த வசதிகள் யாவும் பெண்களுக்கும் இருக்க வேண்டும். வேற்றுமை பாராட்டாது பெண்களையும் பிள்ளைகளையும் ஒரே மாதிரி சமமாக நாம் நடத்த வேண்டும்."**

*மண வாழ்க்கையிலுள்ள மோகத்தை இதுவரை வெற்றிகரமாகக் கட்டுப்படுத்தி யிருக்கும் பெண்மணி ஒருவர் கீழ்க் கண்டவாறு எழுதி யிருக்கிறார்:*

*"பம்பாயிலிருக்கும் மலபாரி மண்டபத்தில் பெண்கள் மகாநாடு ஒன்று நடந்தது. அனேகர் அதில் கலந்துகொண்டு நல்ல முறையில் பேசினார்கள். பல தீர்மானங்களும் நிறைவேறின. மாலையில் சாரதா மசோதாவைப்பற்றிய பேச்சு வந்தது. பதினெட்டு வயது நிரம்பிய பிறகே பெண்களுக்குக் கலியாணம் செய்ய வேண்டும் என்பதைத் தாங்களும் ஆதரித்திருப்பது பற்றி நாங்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இன்னொரு முக்கியமான தீர்மானம் சொத்துரிமைபற்றிய தாகும். இதைப்பற்றி* 'யங் இந்தியா'*விலும்* 'நவஜீவனி'*லும் தாங்கள் கட்டுரைகள் எழுதியிருந்தால் எவ்வளவோ உதவியாய் இருந்திருக்கும். இழந்துவிட்ட பிறப்பு உரிமையை மீண்டும் அடைவதற்குப் பெண்கள் போராடித்தான் ஆக வேண்டுமா? அல்லது கெஞ்சிக் கேட்டுக்கொண்டால்தான் முடியுமா? நாங்கள் பெற்று வளர்த்த ஆடவர்களே எங்களை 'மெல்லியலார்' என்றும் எங்களுக்கு உரியவற்றை எங்களுக்குக் கொடுக்க மனமுவந்து முன்வருவதாகவும் தாராளமாகவும் தடபுடலாகவும் பேசி வருகிறார்கள். இதைக் கேட்கும்போது விந்தையாய் இருக்கிறது; சில சமயங்களில் சிரிப்புக்கூட வந்துவிடுகிறது. 'கொடுக்கிறோம்' என்று சொல்லுவது பைத்தியக்காரத்தனத்தைத்தானே காட்டுகிறது? மிருக பலத்தைப் பிரயோகித்து அநியாயமாய் எங்களிடமிருந்து பறித்துக்கொண்ட உரிமைகளைத் திருப்பித் தருகிறதில் தாராளமோ பெருந்தன்மையோ எப்படி வந்தது என்பது தெரியவில்லை. ஆணுக்குப் பெண் எதில் குறைந்தவள்? ஆண்களைக் காட்டிலும் பெண்களுக்குச் சொத்துரிமையில் பங்கு ஏன் குறைவாய் இருக்க வேண்டும்? சரிசமமாய் இருந்தால் குடியா முழுகிப்போய்விடும்? இது சம்பந்தமாய் இரண்டு நாட்களுக்கு முன் நாங்கள் மிகவும் காரசாரமாய் விவாதித்தோம். ஒரு பெண்மணி சொன்னார்: 'சட்டத்தில் யாதொரு மாறுதலும் செய்ய வேண்டிய அவசியமில்லை. நாம் திருப்தியாகவே வாழ்ந்து வருகிறோம். குடும்ப*

வாழ்க்கை மகனைச் சுற்றியே அமைந்துகிடக்கிறது. குடும்பத்தின் பெயரையும் புகழையும் அவன்தான் காப்பாற்ற வேண்டியவனாக இருக்கிறான். அப்படி யிருக்கும்போது பங்கு அதிகமாக மகனுக்குக் கொடுக்க வேண்டியது நியாயந்தானே?' என்றார். 'அப்படியானால் மகளுக்கு ஒன்றுமே கிடையாதா?' என்று நாங்கள் கேட்டோம். அங்கு வந்திருந்த ஒரு இளைஞர் துள்ளிக் குதித்து, 'இன்னொரு ஆண்பிள்ளை இருக்கிறான் அவனைக் கவனித்துக்கொள்ள' என்றார். 'அப்படி வாங்களையா! எப்பொழுது பார்த்தாலும் இன்னொருவன், இன்னொருவன்' என்ற பேச்சுத்தானா? இந்த இன்னொரு ஆசாமியால் பெரிய தொல்லையாகவல்லவோ போய்விட்டது! இன்னொருவன் பெண்ணைக் காப்பாற்ற வேண்டும் என்கிற கட்டாயம் என்ன? பெண்ணை ஒருவனிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என்று எல்லாரும் கருதுகிறார்களே, அதன் நோக்கம் என்ன? பெண் என்பது ஒரு சாமான் மூட்டை; அதை வீட்டில் வைத்துப் பாதுகாத்து, எவனாவது ஒருவன் வரும்போது 'சனியன் தொலைந்ததடா!' என்று ஒப்படைத்துவிட வேண்டும் என்பது தான் அவர்கள் கருத்துப் போலும். நீங்கள் பெண்ணாய்ப் பிறந்திருந்தால் உண்மையில் உங்களுக்கு எவ்வளவு கோபம் வரும்?"

பெண்களுக்கு ஆடவர் செய்துவரும் பாதகமான செயல் கண்டிப்பதற்கு நான் பெண்ணாய்ப் பிறக்க வேண்டுமென்பது இல்லை. சொத்துரிமைபற்றி வரும் சட்டங்களை நான் கடைசிப் பட்சமாகவே கொள்ளுகிறேன். அதைவிட மோசமான தீமையைப் போக்க, சாரதா சட்டம் முயல்கிறது. பெண் உரிமையைப் பொறுத்தவரையில் நான் எதையும் விட்டுக் கொடுத்துவிடுகிறவன் அல்லன். ஆண்களுக்குச் சட்டபூர்வமாக என்னென்ன வசதிகள் இருக்கின்றனவோ, அந்த வசதிகள் யாவும் பெண்களுக்கும் இருக்க வேண்டும்; வேற்றுமை பாராட்டாது பெண்களையும் பிள்ளைகளையும் ஒரே மாதிரி சமமாக நாம் நடத்த வேண்டும். பெண்களுக்கு நாம் புகட்டும் கல்வியின் அளவைப் பொறுத்தே அவர்களுக்குத் தைரியமும் ஊக்கமும் பிறக்கும்; எங்கெந்த நிலையில் தங்களை அடிமைப் படுத்தி வைத்திருக்கிறார்கள் என்பதும் புலப்படும்; இயல்பாகவே அதன்மேல் வெறுப்பும் உண்டாகும்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையில் சட்டரீதியாக இருந்துவரும் ஏற்றத்தாழ்வுகளை நீக்க வேண்டியது அவசியந்தான். சட்டரீதியான முறையிலே நீக்கிவிடலாமாயினும் அதனால் ஏற்படும் பலன்கள் சிறிது காலந்தான் இருக்கும். இந்தத் தீமைக்கு அடிப்படை எங்கே இருக்கிறது என்று

சிந்தித்துப் பார்த்தால், பொதுவாக, ஜனங்கள் நினைத்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும் அதிக ஆழத்தில் இருப்பது தெரியவரும். ஆடவரிடம் காணப்படும் அதிகார வெறி, புகழ் மோகம், இன்னும் அதிகமாக, இரு பாலாரிடத்திலும் காணப் படும் காம வெறி இவைதான் ஏற்றத் தாழ்வுக்குப் பிறப் பிடங்கள் எனலாம். ஆணுக்கு அதிகாரம் செலுத்துவதில் எப்போதுமே ஆசையுண்டு. சொத்தின் ஆட்சியைத் தன் வசம் வைத்துக்கொண்டால் அதிகாரம் தானே வந்துசேரும். ஆயுளுக்குப் பிறகும் புகழ் நிலவி நிற்பதில் ஆண்களுக்கு ஒரு மோகம். பிறந்த சந்ததிகள் எல்லாருமே சொத்தைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்பது ஏற்பட்டுவிட்டால், சொத்தின் அளவு வர வரக் குறைந்துகொண்டே போய்விடும். இதனுலே தான் மூத்த மகனுக்கு மட்டும் சொத்தில் அதிக உரிமை யிருக்க வேண்டும் என்று ஏற்படுத்தியிருக்கிருர்கள். எல்லாப் பெண்களும் அனேகமாகக் கலியாணம் செய்துகொள்ளுகிற வர்கள்தான். சட்டம் எப்படியிருந்தபோதிலும் கணவனுடைய அதிகாரத்திலும் விசேஷ உரிமைகளிலும் பெண்களுக்கு இடங் கிடைத்துவிடுகிறது. இவ்வளவு அதிகாரம் உடைய கணவ னுக்கு நாம் மனைவியாய் வாய்த்தோமே என்பதில் அவர்கள் அடையும் மகிழ்ச்சி கொஞ்சநஞ்ச மல்ல! இவர்களைப்போன்ற மனைவிமார்கள் கூட்டங்களில் கலந்துகொள்ளுவார்கள்; முற் போக்கான சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டும் என்றும் ஏற்றத் தாழ்வுகளைப் போக்கிவிட வேண்டு மென்றும் வாதிப் பார்கள்; ஓட்டும் கொடுப்பார்கள். நடைமுறையில் கொணரச் சமயம் வாய்க்கும்போது, தாங்கள் இதுவரை அனுபவித்து வந்த விசேஷமான உரிமைகளை விட்டுக்கொடுக்க மனமில்லாத நிலைமை அவர்களுக்கு ஏற்பட்டுவிடும்.

பெண்களுக்கு இருந்துவரும் சட்டபூர்வமான தடைகளை யெல்லாம் நீக்க நான் பிரியப்படுகிறவன்தான். இருந்தாலும், விஷய ஞானம் உள்ள இந்தியப் பெண்கள் அடிப்படையாய் இருந்து வரும் காரணங்களைப் போக்க முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டு மென்று நான் கருதுகிறேன். பெண்கள் தியாகமே உருவாய் இருக்கிருர்கள். துன்பத்தைத் தாங்கிக் கொள்ளும் சக்தியை அவர்களிடம் அபரிமிதமாகக் காண்கி ருேம். பொதுவாழ்வில் ஈடுபடும்போது, அவர்களது ஈடுபாடு அந்தப் பொதுவாழ்வைப் புனிதப்படுத்துவதாயும், சொத்து சேர்க்கும் ஆசையையும் இன்னும் மற்ற பேராசைகளையும் கட்டுப்படுத்துவதாயும் இருக்க வேண்டும். கோடிக்கணக்கான ஆடவர்கள் தங்களுடைய சந்ததிகளுக்கு யாதொரு விதமான

சொத்தையும் வைத்துவிட்டுப் போக முடியாத நிலையில் இருக்கிறார்கள் என்பதை அவர்கள் தெரிந்துகொள்ளட்டும். சிலருக்குத்தான் மூதாதையரின் சொத்துக் கிடைக்கிறது. இவர்களுக்கும் சொத்து இல்லாதிருந்தால், அதனால் பொது நன்மை எவ்வளவு அதிகப்படும் என்பதை நாம் தெரிந்துகொள்ளலாம். தங்கள் குழந்தைகள் யாவருக்கும் சமமான கல்வியையும் ஒழுக்க சீலங்களையும் பெற்றோர் பயிற்றுவிக்க வேண்டும். அதுதான் பிள்ளைகளுக்கு அவர்கள் வைத்துவிட்டுப் போகும் உண்மையான சொத்து. தாங்களே எல்லாக் காரியங்களையும் சாதித்துக்கொள்ளக் கூடும் என்ற நம்பிக்கை இரு பாலாருக்கும் உண்டாகும்படி பெற்றோர் செய்ய வேண்டும். உடல் உழைப்பினாலேயே வாழ்க்கையை நேர்மையாக நடத்தலாம் என்ற நம்பிக்கையும் அவர்களுக்கு உண்டாக வேண்டும். சிறுவர் சிறுமியர்களை இந்த முறையில் பயிற்றி வைக்க வேண்டிய பொறுப்பு, குடும்ப நிர்வாகிகளாக இருப்பவர்களைச் சாரும். பணக்காரர் வீட்டுப் பிள்ளைகள் பெரும்பாலும் ஒன்றுக்கும் உதவாக்கரையாக இருக்கிறார்கள். மூதாதையர் தேடிவைத்த சொத்தில் ஆசை வைத்துக்கொண்டே அதற்கு அவர்கள் அடிமைகளாகிவிடுகிறார்கள். இந்த அடிமைத்தனம் புதிய தொழில்களில் ஈடுபடுவதற்குத் தேவையான துணிச்சலைக் கொன்றுவிடுகிறது; கெட்ட குணங்களை வளர்த்துவிடுகிறது. இதைத் தொடர்ந்தே சோம்பலும் சுகபோகப் பிரியமும் ஏற்பட்டுவிடுகின்றன. பணக்காரப் பெற்றோர்கள் குழந்தைகளுக்கு நல்ல கல்வியையும் தன் முயற்சியினால் வாழக் கூடிய உணர்ச்சியையும் புகட்டி வைப்பார்களேயானால் இந்தக் குறைபாடுக ளெல்லாம் அகன்று போய்விடும். நீண்ட நாட்களாக இருந்து வருகிற தீமைகளைக் கண்டுபிடித்து, அவற்றை அடியோடு களைய முயல்வதே, விழிப்படைந்த பெண்கள் செய்வதற்குரிய விசேஷமான செயலாகும்.

பெண்கள் பல துறைகளிலும் உரிமையற்றவர்களாய்ப் போனதற்கு, இரு பாலாரிடமும் காணப்படும் காம வெறியே முக்கியமான தென்று சொல்லலாம். இதற்கு நேரிடையான அத்தாட்சியொன்றும் வேண்டியதில்லை. தங்களை அறியாமலே பெண்கள் ஆடவர்களைச் சூக்ஷ்மமாக அனேக துறைகளில் அடக்கி வைத்திருக்கிறார்கள். ஆணும், பெண், தன்னை மீறி விடக் கூடாது என்ற எண்ணத்துடன், தன்னை அறியாமலே அவர்களைப் பல வழிகளில் அடக்க வீணே முயன்று வந்திருக்கிறான். ஒருவரை ஒருவர் ஜெயிக்க முடியாத நிலை ஏற்பட்டிருப்பதுதான் இதனால் நாம் கண்ட பலன். மேலே சொல்லி

யிருக்கிற முறைப்படிப் பார்த்தால் இதை ஒரு கடுமையான பிரசினை என்றே சொல்ல வேண்டும். விழிப்படைந்து உள்ள பாரத புத்திரிகளின் கடமை இந்தப் பிரசினையைத் தீர்க்க முயல்வதே யாகும். மேலை நாட்டுப் பெண்களை இவர்கள் காப்பி யடிக்க வேண்டியதில்லை. அவர்களின் போக்கு அவர்களது நாட்டுக்கும் சூழ்நிலைக்கும் ஏற்றதாக இருக்கும்; நமது நாட்டு நிலைக்கு அது ஒத்துவராது. எவை இந்தியர்களின் சூழ்நிலைக் கும் மனநிலைக்கும் ஒத்திருக்கின்றனவோ அந்த முறைகளையே நமது பெண்மணிகள் கையாள வேண்டும். அவர்கள் செய்யும் சேவை உறுதியானதாகவும், கட்டுப்படுத்துகிற இயல்புடைய தாகவும், புனிதமாக்குவதாகவும், ஒழுங்குபடுத்திச் செல்லும் போக்குடையதாகவும் இருக்க வேணடும். நமது பண்பாட்டில் நல்லவற்றைப் பேணிப் பாதுகாப்பதாயும் தீயவற்றைத் தயக்கமின்றி ஒதுக்கித் தள்ளுவதாயும் இருக்க வேண்டும். அனாவசியமாகச் சண்டைக்குக் கச்சை கட்டிக்கொண்டு நிற் கும் பெண்களாலோ, அடக்க ஒடுக்கமாக இருக்கிறதாகப் பாவனை பண்ணுகிற பெண்களாலோ இதைச் செய்ய முடி யாது. சீதை, திரௌபதி, சாவித்திரி, தமயந்தி போன்ற பெண் மணிகளாலேயே இந்தக் காரியத்தைச் சாதிக்க முடியும்.

# பெண்களை நடத்தும் முறை

"கடவுள் படைப்பிலே பெண்ணில் பெருந்தக்கது ஒன்றில்லை. அத்தகைய பெண்ணைக் காமக் கருவியாகக் கருதினால், நாம் மிருகத்தைவிடக் கீழான நிலையை அடைந்துவிடுவோம். அதைக் காட்டிலும் மனித சமுதாயமே அழிந்தொழிந்து போவது தேவலை என்றே நான் சொல்லுவேன்."

*கட்டாக்கில் வசிக்கும் ஸ்ரீமதி சாரளா தேவி பின்வருமாறு எழுதியிருக்கிறார்:*

*"தீண்டாமையை ஒரு நோய்போலத் தாங்கள் கருதுகிறீர்கள். பெண்களை ஆடவர் நடத்துகிற முறையும் அப்படித்தான் என்பதைத் தாங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா, இல்லையா? எனக்குத் தெரிந்தவரையில், நூற்றுக்குத் தொண்ணூறு இளைஞர்கள்—தேசியவாதிகளாய் இருப்பவர்கள்—பெண்களிடத்தில் மிருகத்தைப்போலத்தான் நடந்துகொள்ளுகிறார்கள். இந்தியாவிலிருக்கும் ஒத்துழையாமைவாதிகளில் எத்தனைப் பேர், காமத்தைத் தணித்துக்கொள்ளும் கருவிகளாகப் பெண்களைக் கருதாமல் இருக்கிறார்கள்? பெண்களை நடத்தும் முறையில் மனமாற்றம் ஏற்படாவிட்டால் நமது வெற்றிக்கு அத்தியாவசியமான ஆத்ம பரிசுத்தத்தை நாம் அடைய முடியுமா?"*

*பெண்களை நாம் நடத்துகிற முறையை, 'தீண்டாமையைப் போல் அவ்வளவு தீங்குள்ள நோயாகக்' கருத வேண்டுமென்று ஸ்ரீமதி சாரளா தேவி சொல்லுகிறார். எனக்கு அது சரியென்று படவில்லை. தீங்கை அவர் மிகைப்படுத்திக் கூறி இருக்கிறார் என்றே நான் கருதுகிறேன். அது மட்டுமல்ல; ஒத்துழையாமைவாதிகள், பெண்களைக் காமத்தைத் தணித்துக்கொள்ளும் கருவியாகக் கருதுகிறார்கள் என்றும் குற்றம் சாட்டுகிறார். அதற்கும் அவர் சரியான ஆதாரங் காட்ட முடியாது. மிகைப்படுத்திச் சொல்லுவதினால், ஒரு கட்சி பலவீனப்பட்டுத்தான் போகிறது. ஆயினும், பெண்ணுக்கும் பெண்ணின் கற்புக்கும் ஆடவர்கள் இன்னும் அதிகமாக மரியாதை காட்ட வேண்டும்; அப்போதுதான் உண்மையான சுயராஜ்யத்திற்கு நாம் தகுதி உடையவர்கள் ஆவோம் என்று சாரளா தேவி சொல்லியிருப்பதை நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். இது விஷயமாக இந்தப் பெண்மணி சொன்னதைக் காட்டிலும் ரொம்பக் காரமாக நண்பர் ஆண்ட்ரூஸ் சொல்லியுள்ளார். நெறிதவறிய பெண்களைப்பற்றிப் பேசுகையில், "பெண்கள் கெட்டுப்போய்விட்டார்கள், நாம் அப்படிக்*

கெட்டுப்போய்விட வில்லை என்று தற்பெருமை பாராட்டுவது, வெறும் மௌட்டிகத்தனம்'' என்று அவர் சொல்லுகிருர். தாசிகளில் சிலர், ஒத்துழையாமைவாதிகளாகிய தங்களையே விரும்புகிருர்கள் என்றும், தங்களிடமே அவர்களுக்குக் காதல் உண்டு என்றும் எந்த ஒத்துழையாமைவாதியும் உற்சாக மாகச் சொல்ல முன்வர மாட்டான். அப்படி ஒரு ஒத்துழை யாமைவாதி இருப்பான் என்று எண்ணுவது மிகவும் கேவல மாகும். நமது ஆன்ம சௌக்கியத்துக்கு இன்றியமையாத தான இந்த ஒழுக்க விஷயத்தில் ஒத்துழையாமைவாதி, ஒத் துழைப்பவன் என்று பாகுபாடு செய்தல் கூடாது. நாம் எந்தப் பெண்ணையும் காமக்கிழத்தியாகக் கருதுதல் கூடாது. அப் படிக் கருதும் நிலையில் ஒரு பெண் இருந்தாலுங்கூட, அதற்காக ஆடவர்கள் எல்லாருமே வெட்கித் தலைகுனிய வேண்டும். கட வுள் படைப்பிலே பெண்ணில் பெருந்தக்கது ஒன்றில்லை. அத் தகைய பெண்ணைக் காமக் கருவியாகக் கருதினுல், நாம் மிரு கத்தைவிடக் கீழான நிலையை அடைந்துவிடுவோம். அதைக் காட்டிலும் மனித சமுதாயமே அழிந்தொழிந்து போவது தேவலை என்றே நான் சொல்லுவேன். இது இந்தியாவுக்கு மட்டும் உரிய பிரசினை அன்று; இதை ஒரு உலகப் பிரசினை என்றே சொல்ல வேண்டும். நமது வாழ்க்கையில் எளிமை இல்லை; தற்கால வாழ்க்கை இந்திரிய சுகம் நிறைந்த போலி வாழ்க்கையாய் இருக்கிறது. இதனுலேதான் அதைக் கண் டித்துப் பிரசாரம் செய்கிறேன். ஆண்களையும் பெண்களையும் ராட்டைச் சுற்றும்படி சொல்லுகிறேன். நாம் நல்லறிவு பெற்று எளிய வாழ்வை மேற்கொள்ளாவிட்டால், மிருகத்தைவிடக் கீழான நிலைக்குப் போவதிலிருந்து நாம் தப்ப முடியாது. நமது பெண்களுக்குப் பூரண சுதந்திரம் இருக்க வேண்டுமென்று நான் மிகவும் ஆசைப்படுகிறேன். குழந்தை மணத்தை நான் அடியோடு வெறுக்கிறேன்; குழந்தை-விதவையைக் கண் டாலே எனக்கு நடுக்கம் உண்டாகிறது. தாரமிழந்தவன், உணர்ச்சி ஒரு சிறிதுமின்றி மிருகத்தைப்போல், உடனே வேறு மணம் செய்துகொள்ளுவதைக் காணும்போது எனக்குக் கோபம் பொங்கி வருகிறது. பெண் குழந்தைகளைப் பெற்ருேர் கள் பேதைகளாக வைத்திருக்கிருர்கள்; பணவசதியுள்ள இளைஞர்களுக்குக் கட்டிக் கொடுத்துவிட வேண்டும் என்ற எண்ணத்தோடேயே அவர்களை வளர்க்கிருர்கள். பெற்ருேர் செய்துவரும் மன்னிக்க முடியாத இந்தக் குற்றத்தைக் கண்டு நான் படுகிற வருத்தம் கொஞ்சநஞ்ச மல்ல. வருத்தமும் கோபமும் கொண்டபோதிலும், இது ஒருகடினமான பிரசினை

என்பதை நான் உணர்வேன். சட்டபூர்வமாகச் சம அந்தஸ்தும் வாக்குரிமையும் பெண்களுக்கு இருக்க வேண்டும். இந்தப் பிரசினை இத்துடன் முடிவடையாது. தேசத்தின், அரசியல் விவகாரங்களில் பெண்களும் கலந்துகொண்டு, ஒரு சலசலப்பு உண்டாக்குகிறபோதுதான் இந்தப் பிரசினை ஆரம்பிக்கிறது.

மேலே சொல்லியிருப்பதை ஒரு உதாரணம் மூலம் விளக்குகிறேன். என் மதிப்பிற்குரிய முஸ்லிம் நண்பர் ஒருவர் லண்டனில் வசித்துக்கொண் டிருந்தார். அப்போது, அவருக்கும் பெண் உரிமையில் பரிவுகாட்டும் ஒருவருக்கும் நடந்த சம்பாஷணையைப்பற்றி அவர் என்னிடம் சொன்னார். பெண் உரிமைக்காரர்கள் ஒரு மகாநாடு நடத்தினார்களாம். அதில் கலந்துகொள்ள இந்த நண்பர் அங்குப் போய்ச் சேர்ந்தார். அதைப்போன்ற கூட்டத்திற்கு முஸ்லிம் ஒருவர் வந்திருப்பதைக் கண்டு, ஒரு பெண்மணி ஆச்சரியப்பட்டாராம். அங்கு அவர் வந்திருந்ததற்குரிய காரணத்தையும் கேட்டாராம். நமது நண்பர் சிறிய காரணங்கள் இரண்டும் பெரிய காரணங்கள் இரண்டும் இருப்பதாகத் தெரிவித்தார்: "நான் சிறுபிள்ளையாய் இருக்கும்போதே என்னுடைய தந்தை இறந்துவிட்டார். என்னை வளர்த்து இந்த நிலைக்குக் கொண்டு வந்தவர் தாயார் தான். பின்னர் நான் மணந்துகொண்டவள் ஒரு உண்மையான வாழ்க்கைத் துணைவி. எனக்கு ஆண் மக்கள் கிடையாது. நான்கு பெண் குழந்தைகள் இருக்கிறார்கள்; எல்லோரும் சிறுமிகள். தந்தை என்ற முறையில் அவர்கள் விஷயத்தில் அக்கறைகொள்ள வேண்டியது நியாயந்தானே? நான் பெண் உரிமைக்காரனா யிருப்பதில் ஆச்சரியம் என்ன?" என்றார். மேலும், "பெண்கள் விஷயத்தில் முஸல்மான்கள் அக்கறை காட்டவில்லை என்று குற்றம் சாட்டுகிறார்கள். இது தவறு; இஸ்லாம் மதச் சட்டத்தில் பெண்களுக்கும் சம உரிமையுண்டு. காமவயப்பட்டு, ஆடவர்கள் பெண்களைக் கீழான நிலைக்குக் கொண்டு வந்துவிட்டார்கள். அவர்களது ஆன்மாவை மதித்து மகிழ வேண்டியதிருக்க, அப்படிச் செய்யாது, உடலை அழகுபடுத்திப் பார்த்து அதிலே ஆனந்தப்படுகிறார்கள். அதிலே அவர்கள் வெற்றியும் பெற்றுவிட்டபடியால், பெண்கள் தங்கள் அடிமைச் சின்னமான உடல் அலங்காரத்தில் தங்களையும் அறியாது மோகங்கொண்டு கிடக்கிறார்கள்; இது உண்மை யல்ல என்று எப்படிச் சொல்ல முடியும்?" என்றார் அவர். இந்த இடத்தில் அவரது குரல் தடுமாறியது; பேச முடியவில்லை. "அப்படி யில்லை யென்றால் நமது நெறி தவறிய சகோதரிகள் அதிக நகைகளை அணிந்துகொள்ளு

வதிலேயே அளவற்ற மகிழ்ச்சியடைகிருர்களே, அது எப்படி நடக்கும்?" என்று கேட்டார். "ஆடவர்களாகிய நாம் அவர்களது ஆன்மாவையே கொன்றுவிட்டோம் அல்லவா?" என்ருர். அப்புறம் சொன்ஞர்: "பெண்கள் விடுதலை அடைய வேண்டியதுதான்; அந்த விடுதலை வெறும் வெளித் தோற்ற மாக இருத்தல் கூடாது. அவர்கள் தங்களைத் தாங்களே அடிமைப்படுத்திக்கொண்டு கிடக்கிருர்கள்; அந்த அடிமைச் சங்கிலிகளை அவர்கள்தான் அறுத்தெறிய முயல வேண்டும். இதை உத்தேசித்தே, எனது பெண்களுக்குச் சுதந்திரமுள்ள தொழில்களில் ஈடுபட வேண்டிய கல்வியையும் தொழிலையும் பயிற்றுவிக்க ஆசைப்படுகிறேன்."

கண்ணியமிக்க இந்தச் சம்பாஷணையை நான் அதிகமாக நீட்ட விரும்பவில்லை. முஸ்லிம் நண்பருடைய பேச்சில் பொதிந்து கிடக்கும் முக்கிய விஷயத்தைக் கவனித்துப் பிர சினையைத் தீர்க்க ஸ்ரீமதி சாரளா தேவி முயல்வாராக. ஆண் களின் காம இச்சையைத் திருப்தி செய்யவே நாம் பிறந்திருக் கிருேம் என்ற எண்ணத்தைப் பெண்கள் விட்டுவிட வேண்டும். இந்த நோயைப் போக்குதற்குரிய மருந்து பெண்கள் வசமே யிருக்கிறது; ஆண்களிடத்தில் அதிகமில்லை. கணவனையும் மற்ற ஆடவர்களையும் திருப்தி செய்யும்பொருட்டுப் பெண்கள் நகை அணிந்துகொள்ளுவதை நிறுத்திவிட வேண்டும். அப் போதுதான் கணவனுடன் வாழ்க்கையைச் சரியாகவும் சம மாகவும் நடத்த முடியும் சீதை, உடல் அழகிஞல் இராமனைத் திருப்திபடுத்த முயன்றதே யில்லை. அதற்காக ஒரு நிமிஷங் கூட, சீதா தேவி வீணைகச் செலவழித்து இருக்க மாட்டாள்.

# பெண்களின் புனர்ஜென்மம்

" பெண் ஆணுக்குத் தோழி; ஆணைப்போலவே உடையவள். ஆணினுடைய ஈடுபாடுகளில், சிறு சிறு அம்சங்களில்கூடக் கலந்துகொள்ளவும், அவற்றில் பங்குபெறவும் பெண்ணுக்கு உரிமை யுண்டு. அவனைப்போலவே அவளுக்கும் சுதந்திரமும் உரிமையுமுண்டு."

**பம்பாய் பாகினி சமாஜ் ஆண்டு விழாக் கூட்டத்தில், மொரார்ஜி கோகுல்தாஸ் மண்டபத்தில், காந்திஜீ பேசும்போது சொன்னது இது :**

*பெண்களின் வாழ்க்கை நிலை சீர்கெட்டுப் போய்விட்டது; அதை நாம் மறுபடியும் திருத்தி அமைக்க வேண்டும் என்று பேசிவருகிறோம். இந்த வார்த்தைகளின் பொருளைத் தெரிந்து கொள்ள வேண்டுவது இப்போது அவசியமாகிறது. 'சீர் கெட்டுப் போய்விட்டது, மறுபடியும் திருத்தி அமைக்க வேண்டும்' என்பது, முன்பு பெண்கள் சீருடன் இருந்தார்கள் என்பதையே சுட்டிக் காட்டுகிறது. ஆகவே, இந்தச் சீர்கேடு எதனால் வந்தது? எப்படி வந்தது? என்பதுபற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டுவது நமது முதல் கடமையாகும். நான் இந்தியா முழுதும் சுற்றியிருக்கிறேன். உலகிலிருக்கும் மக்களில் நம் நாட்டு மக்கள் ஒரு துளிதான். அவர்களிலும் மிகக் குறைந்தவர்களே இப்போது நாம் செய்துவரும் கிளர்ச்சியில் கலந்துகொண் டிருக்கிறார்கள். பாக்கியுள்ள கோடிக்கணக்கான நம் நாட்டு ஆண்களுக்கும் பெண்களுக்கும் இந்தக் கிளர்ச்சியைப்பற்றி எதுவுமே தெரியாது. தங்களைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதை உணராமலே, தங்களுக்கும் அதற்கும் என்ன தொடர்பு இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளாமலே, நூற்றுக்கு எண்பத்தைந்து பேர் இந்தத்தேசத்தில் வாழ்க்கை நடத்துகிறார்கள். இப்படி உள்ளவர்களில் ஆடவர்களும் இருக்கிறார்கள்; பெண்களும்*

*படித்தவர்களும் இருக்கிறார்கள்; படியாதவர்களும்*

*கள். பேதைகளாய் இருக்கிற இந்த மக்கள் ஒருவாறு செம்மையாய் வாழ்க்கை நடத்துகிறார்கள். செய்ய வேண்டிய முறைப்படி, ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ளுகிறார்கள். இந்த எண்பத்தைந்து பேரின் வாழ்க்கையைப் பூரணமற்றதென்று சொல்லுவோமாயின், அதற்குக் காரணம் பாக்கியுள்ள பதினைந்து பேர்தான். இவர்கள் வாழ்க்கையும் பூரணமற்றதாய் இருப்பதால்தான் மேலே குறிப்*

பிட்ட எண்பத்தைந்து பேரின் வாழ்க்கை இப்படி நடந்து கொண்டு போகிறது. இந்த எண்பத்தைந்து பேரின் வாழ்க்கையை, பாகினி சமாஜத்திலுள்ள சகோதரிகள் துருவி ஆராய்ந்து பார்ப்பார்களாயின், மகத்தான தொண்டு செய்வதற்கு வேண்டிய சந்தர்ப்பங்கள் எவ்வளவோ கிடைக்கும்.

நான் கவனித்துள்ள சில விஷயங்களை இப்போது சொல்லப்போகிறேன். அது மேலே சொன்ன பதினைந்து சதவிகித மக்களைப்பற்றியதாகவே இருக்கும். அப்போதுகூட, ஆண் பெண் இரு பாலாருக்கும் பொதுவாக இருந்துவரும் வசதிக் குறைவுகளைப்பற்றி நான் பேசுவது பொருத்தமல்ல. ஆடவர்களை ஒட்டி நமது பெண்களை உயர்வடையச் செய்ய வேண்டும் என்கிற விஷயத்தையே நாம் இப்போது கவனிக்க வேண்டியவர்களா யிருக்கிறோம். பெரும்பாலும் ஆடவர்களே சட்டங்களை இயற்றி வந்திருக்கிறார்கள். பெண்களிடம் நேர்மையாகவும் பாரபட்சமின்றியும் நடந்துகொள்ளாமல், கடமையை மீறி, தங்கள் மனம்போனவாறே அவர்கள் சட்டம் இயற்றியிருக்கிறார்கள். பெண்களை உயர்வுபடுத்த முயலும்போது, நமது முயற்சிகளில் பெரும்பாலான பகுதியை, நாம் நமது சாஸ்திரங்களில் செலுத்தி ஆக வேண்டும். பெண்களை இழிவுபடுத்தும் முறைகளில், அவர்களுக்கு இருக்க வேண்டிய குணங்களாகச் சாஸ்திரங்களில் எழுதி வைக்கப்பட்டுள்ளவற்றை நாம் நீக்கிவிட வேண்டும். இந்தக் காரியத்தை யார் செய்வது? எப்படிச் செய்வது? என்ற கேள்விகள் பிறக்கலாம். சீதை, தமயந்தி, திரௌபதி போன்ற தன்னடக்கமுள்ள, உறுதியான, புனிதம்வாய்ந்த பெண்மணிகளை நாம் தோற்றுவிக்க வேண்டும். அவர்களாலேயே இந்தக் காரியம் கைகூடி வருமென்று நான் அபிப்பிராயப்படுகிறேன். அவர்களைப் போன்ற பெண்மணிகளை இப்போதும் நம்மால் தோற்றுவிக்க முடியுமானால், ஹிந்து சமூகத்தார் அவர்களுக்கும் தகுந்த மரியாதை செய்வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. சாஸ்திரங்களுக்குள்ள மதிப்பு இவர்களுடைய சொல்லுக்கும் ஏற்படும். ஸ்மிருதிகளில் பெண்களைப் பற்றி இருந்து வரும் அபத்த வார்த்தைகளைக் கண்டு நாம் வெட்கப்பட நேரும். அவற்றைச் சில நாளில் மறந்தே போவோம்..இதைப்போன்ற புரட்சிகள் ஹிந்து மதத்தில் முன்பு ஏற்பட்டிருக்கின்றன ; வருங் காலத்திலும் ஏற்படுவது நிச்சயம். இந்த விதமான புரட்சிகளால் நமக்கு நம் மதத்திலுள்ள நம்பிக்கை உறுதிப்படும். மேலே குறிப்பிட்டதைப் போன்ற பெண்மணிகள் விரைவில் இந்தச் சங்கத்திலிருந்து

தோன்ற வேண்டுமென நான் கடவுளைப் பிரார்த்திக்

நமது பெண்கள் தாழ்ந்த நிலையில் இருப்பதற்கு அடிப்படையாயுள்ள காரணத்தையும் பெண்கள் நிலைமை சீர்பட வேண்டியதற்கான இலட்சியத்தையும்பற்றி நாம் இப்போது ஆராய்ந்தோம். இந்த இலட்சியங்களை அடையக் கூடிய பெண்களின் எண்ணிக்கை மிகவும் சொற்பமாகவே இருக்கும். ஆகையால் சாதாரணமான பெண்கள், முயற்சி செய்தால் என்ன நிலையை அடையலாம் என்பதை இப்போது கவனிப்போம். எவ்வளவு இயலுமோ அவ்வளவுக்கு, பெண்களைத் தட்டி எழுப்பி, அவர்களது தற்கால நிலை எப்படி இருக்கிறது என்பதை உணரும்படி செய்வதே, இந்தச் சாதாரண பெண்கள் செய்ய வேண்டிய முதல் வேலை. இந்தக் காரியத்தைப் பள்ளிகூடப் படிப்பினால் சாதித்துவிடலாம் என்று சிலர் நம்புகிறார்கள்; நான் அப்படி நம்பவில்லை. இந்த முறையைப் பின்பற்றி நாம் காரியாதிகள் செய்யத் தொடங்கினால், நமது இலட்சியம் கைகூடுவதற்கு அதிக காலம் பிடிக்கும்; அவ்வளவு காலம் காத்திருப்பது அவசியமில்லை என்பதை எப்போதுமே நான் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். எழுத்தறிவு இல்லாமலே, தங்கள் நிலை எவ்வளவு மோசமாய் இருக்கிறது என்பதைப் பெண்கள் உணரும்படி செய்துவிடலாம். பெண் ஆணுக்குத் தோழி; ஆணைப்போலவே அறிவுத் திறன் உடையவள். ஆணினுடைய ஈடுபாடுகளில், சிறு சிறு அம்சங்களில்கூட, கலந்துகொள்ளவும் அதில் பங்குபெறவும் பெண்ணுக்கு உரிமை யுண்டு. அவனைப்போலவே அவளுக்கும் சுதந்திரமும் உரிமையு முண்டு. சிற்சில காரியங்களை ஆண் அலாதியாகவே செய்கிறான். அதைப்போல, பெண்ணும் சிற்சில காரியங்களை அலாதியாகவே செய்யலாம்; செய்வதற்கு அவளுக்கு உரிமையு முண்டு. இது இயற்கையாக அமைந்து விட வேண்டும்; எழுதப் படிக்கத் தெரிந்துகொள்ளுவதனால் வருவதா யிருக்கக் கூடாது. கொடிய பழக்கத்தின் வேகத்தால் ஆடவர்கள் பலர், ஒன்றுக்கும் உதவாத பேதைகளான ஆடவர்கூட, பெண்கள்மீது அதிகாரம் செலுத்துகிறார்கள். இப்படி அதிகாரம் செலுத்த அவர்கள் எவ்வகையிலும் தகுதியுடையவர்கள் அல்லர்; செலுத்தவுங் கூடாது. பெண்கள் இந்த நிலையில் இருப்பதால்தான், நமது இயக்கங்களில் பெரும்பாலானவை, அரைகுறையாய் நடுவில் நின்றுவிடுகின்றன; பாடுபட்ட அளவிற்குத் தகுந்த பலனும் கிடைக்காமல் போகிறது. போதுமான முதல் இன்றி வியாபாரத்தில்

ஈடுபடும் ஆசாமியைப்போல, பூசனிக்காய் போகிற இடந் தெரியாமல் கடுகுக்காகத் தடியெடுத்துக் கொண்டுபோய்த் திண்டாடுகிறோம் நாம். இது பரிதபிக்கத்தக்க நிலை.

எழுத்து வாசனை இல்லாமலே, பயனுள்ள காரியங்களும் எவ்வளவோ நன்மையும் நாம் செய்ய முடியுமாயினும், எழுதப் படிக்கத் தெரியாமலே எல்லாக் காரியங்களையும் சாதிப்ப தென்பது முடியாது என்று நான் உறுதியாக நம்புகிறேன். கல்வி ஒருவனுடைய புத்தியை விரிவுபடுத்தும்; கூர்மையாக் கும்; நல்ல காரியங்களைச் செய்யும்படி அவனைத் தூண்டும். அப்படியிருந்தும், நான் அதைத் தேவைக்கு அதிகமாக உயர்த் திப் பேசுவதில்லை. உரிய இடத்தில் அதை வைக்கத்தான் நான் முயலுகிறேன். படிப்பில்லாதவர்கள் என்பதைக் காரண மாக வைத்துக்கொண்டு பெண்களின் உரிமைகளைப் பறித்துக் கொள்ளுவதோ, அவர்களுக்குச் சம உரிமை கொடுக்க மறுப் பதோ நியாயமில்லை என்று நான் அடிக்கடி சொல்லுவதுண்டு. பெண்களுக்குக் கல்வி யறிவு அவசியம். அதனால் அவர்கள் தங்களுக்கு இயல்பாய்க் கிடைக்க வேண்டிய உரிமைகளைக் காப்பாற்றிக்கொள்ள முடியும்; அவற்றைச் செம்மைப்படுத் தவும் பரப்பவும் இயலும். இது மட்டு மல்ல. படிப்பு வாசனை இல்லாவிட்டால், கோடிக் கணக்கான மக்களுக்குத் தன்னை அறியும் சக்தியே இல்லாது போய்விடும். ஒருவிதத் தீங்கும் விளைவிக்காமல் இன்பம் தரக் கூடிய புத்தகங்கள் அனேகம் இருக்கின்றன. கல்வியறிவு இல்லாவிட்டால் அவற்றால் கிடைக் கும் இன்பத்தை நாம் இழந்துவிடுகிறோம். விலங்குக்கும் படிப்பில்லாத மனிதனுக்கும் அதிக வித்தியாசம் இல்லை என்று சொல்லுவது மிகைப்படுத்திச் சொல்லுவதல்ல; உண்மையே யாகும். ஆகையால், கல்வியறிவு ஆண்களுக்கு எவ்வளவு அவசியமோ, அவ்வளவு பெண்களுக்கும் அவசியமாகும். ஆண் களுக்கும் பெண்களுக்கும் கல்வி போதிக்கும் முறை ஒரே மாதிரியாய் இருக்க வேண்டு மென்பதில்லை. முதலாவதாக, அரசாங்கக் கல்வி முறை குறைபாடுகள் நிறைந்திருப்பதுடன், அனேக வழிகளில் தீமை பயப்பதாயும் இருக்கிறது. இதை ஆண்களும் பெண்களும் ஒன்றுபோலவே ஒதுக்கித் தள்ள வேண்டுவது அவசியம். தற்பொழுது இருந்துவரும் கல்வி முறையில் காணப்படும் குறைபாடுகளை நீக்கிவிட்டாலுங்கூட இந்தக் கல்விமுறை பெண்களுக்கு எல்லா வகையாலும் ஏற்ற தென்று நான் சொல்ல மாட்டேன். ஆணுக்கும் பெண்ணுக்கும் சம அந்தஸ்து உண்டு. எனினும், இருவருடைய சிருஷ்டியும் ஒரே படித்தான தன்று; ஆணும் பெண்ணும் ஒப்பற்ற ஜோடி.

ஒருவர் குறைவை ஒருவர் நிறைவுபடுத்த வந்தவர்கள்; ஒருவருக்கொருவர் உறுதுணையாய் நிற்பவர்கள். ஒருவரின்றி மற்றவர் வாழ்க்கை என்பதையே சிந்திக்க முடியாது. இதிலிருந்து ஒன்று தெரிந்துகொள்ள வேண்டும். இப்படி இருவருக்கும் நன்மை பயக்கும் வாழ்க்கையில், யாராவது ஒருவருக்கு எந்தத் துறையிலாவது தீங்கு நேருமாயின், அதனால் இருவருக்குமே ஆபத்துதான். பெண்களுக்குரிய கல்வித் திட்டத்தை வகுக்க முயலும்போது, அடிப்படையான இந்த உண்மையை நாம் மறந்துவிடலாகாது. கலியாணம் செய்துகொண்டுள்ள தம்பதிகளில் ஆண் வெளி வேலைகளில் முதன்மையுற்றிருக்கிறன். ஆகவே, ஆண்களுக்குப் போதிக்கும் கல்வியில், அத்தகைய விஷயங்கள் அதிகமாக இருக்க வேண்டும். பெண்களுக்கோ, குடும்ப வேலைகள் அதிகம். ஆகவே, குழந்தை வளர்ப்பு, குழந்தைகளின் கல்விபோதனை, குடும்ப நிர்வாகம் ஆகிய விஷயங்களைப் பெண்களுக்கு அதிகமாகப் போதிக்க வேண்டும். இதனால், அவரவர் கல்விக்குக் கண்டிப்பாய் வரம்புகட்டிவிட வேண்டு மென்ப தல்ல. குடும்ப வேலையை ஆணும் வெளி வேலையைப் பெண்ணும் பயிலக் கூடாது என்று சொல்லவில்லை. வாழ்க்கையில் காணப்படும் வேற்றுமையை யுணர்ந்து, அதற்குத் தகுந்தவாறு நமது கல்விமுறையை நாம் அமைத்துக் கொள்ளாவிட்டால், ஆணும் பெண்ணும் பூரணமான முறையில் வாழ்க்கை நடத்தி, அபிவிருத்தி யடைய முடியாது.

பெண்களுக்கு ஆங்கிலக் கல்வி வேண்டுமா வேண்டாமா என்பதைப்பற்றி இரண்டொரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். சாதாரண முறையில் வாழ்க்கை நடத்துகிற பெண்ணுக்கோ ஆணுக்கோ ஆங்கிலக் கல்வி அவசியம் இல்லை என்ற முடிவிற்கு நான் வந்திருக்கிறேன். அரசியல் இயக்கங்களில் சிரத்தையோடு கலந்துகொள்ளுகிறவர்களுக்கும் வயிற்றுப் பிழைப்புக்காகவும் ஆங்கிலக் கல்வி அவசியம் என்பது உண்மையே. வயிற்றுப் பிழைப்புக்காகப் பெண்கள் உழைக்க வேண்டும், வியாபாரத்தில் ஈடுபட வேண்டும் என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. ஆங்கிலக் கல்வி அவசியம் என்று எண்ணும் பெண்களும், ஆங்கிலக் கல்வியை விரும்பும் பெண்களும் சிலர்தான் இருப்பார்கள். வேண்டுமானல், ஆடவருக்கு இருக்கும் ஆங்கிலப் பள்ளிகளில் சேர்ந்து அவர்கள் படித்துக்கொள்ளலாம். பெண்களுக்கான பள்ளிக்கூடங்களில் ஆங்கிலக் கல்வியைப் புகுத்துவதால் நமது திண்டாட்டந்தான் நீடித்துக்கொண்டே போகும். 'ஆங்கிலத்தில் இலக்கியச் செல்வங்கள் நிறைய இருக்கின்றனவே; அவற்றை ஆண்களும்

பெண்களும் ஒன்றுபோல அனுபவிக்க வேண்டாமா? என்று சொல்லுவதை நான் அடிக்கடி கேட்டிருக்கிறேன். இந்த மன நிலை பிசகானது என்பதை நான் தாழ்மையோடு தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஆண்கள் மட்டும் இலக்கியச் செல்வங்களை அனுபவிக்கட்டும்; பெண்களுக்கு வேண்டாம் என்று ஒருவரும் சொல்லவில்லை. உலகத்தில் இருக்கும் இலக்கியங்களின் சுவையை நீங்கள் அனுபவிக்க விரும்பினால், அதை யாராலும் தடுக்க முடியாது. நாம் ஒரு சமூகத்தையே எடுத்துகொண்டு அதற்கு எப்படிக் கல்வித் திட்டத்தை வகுக்கலாம் என்று ஆலோசனை செய்கிறோம்; அப்போது விரல்விட்டு எண்ணி விடக் கூடிய சில இலக்கிய ரஸிகர்களுக்காக, அவர்களுக்கு தேவைப்படும் சாதனங்களுக்காக, திட்டம் போடுவது இயலாத காரியம். ஆண்களும் பெண்களும் ஆங்கிலக் கல்வியில் அதிக காலத்தைப் போக்க வேண்டாமென்று நான் சொல்லுவது, அவர்கள் இலக்கியச் சுவையை இழந்துவிட வேண்டும் என்ற நோக்கத்துடன் அல்ல. இயற்கையான வழியைப் பின்பற்றிப் படிப்பார்களாயின், குறைந்த செலவோடும் குறைந்த சிரமத்தோடும் அதே இன்பத்தை அவர்கள் அடைய முடியு மென்பது எனது நம்பிக்கை. ஒப்பற்ற, விலை மதிக்க முடியாத மாணிக்கங்கள் உலகம் எங்கணுமே பரவி கிடக்கின்றன. அவை ஆங்கில இலக்கியத்திற்கு மட்டும் சொந்தமானவை யல்ல. ஆங்கிலத்திலுள்ளது போல உயர்தரமான இலக்கியங்கள் தங்களிடமும் உண்டு என்று மற்றப் பாஷைகளும் பெருமை பாராட்டிக் கொள்ளலாம். இவற்றை யெல்லாம் நமது தாய்ப் பாஷைகளில் மொழிபெயர்த்து, பொது ஜனங்கள் எல்லாரும் அனுபவிக்கும்படி செய்யப் படிப்பாளிகள் முன்வர வேண்டும்.

மேலே சொல்லப்பட்ட கல்வித் திட்டத்தினால் மட்டும் குழந்தை மணத்தால் ஏற்படும் தீமை போய்விடாது. அதனால் பெண்களுக்குச் சம உரிமையும் கிடைத்துவிடாது. படித்துக் கொண்டே இருக்கும் பெண்கள் கலியாணம் செய்துகொள்ளுகிறார்கள். உடனே அவர்கள் கல்வியை நிறுத்திக்கொண்டு மறைந்தே போய்விடுகிறார்கள். திரும்பவும் பள்ளிகளில் பயில அவர்களுக்குச் சந்தர்ப்ப மிராது. தங்கள் பெண்களுக்குச் சிறு வயதிலே மணம் முடிப்பது பாபம் என்று தாய்மார்களுக்குத் தெரியும். தெரிந்தும், கல்வி போதிக்க வேண்டு மென்ற எண்ணம் அவர்களுக்கு ஒருசிறிதும் இல்லை. அவர்களது வாழ்க்கையை இன்பமுடையதாய் மாற்ற வேண்டும் என்ற எண்ணமு மில்லை. இது நினைக்க முடியாத, சொல்ல முடியாத

பாபமாகும் என்பதைத் தாய்மார்கள் உணர்வர். சிறு பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளுகிறவன் பரோபகார சிந்தையோடு அப்படிச் செய்வதில்லை; காமத்தின் வயப்பட்டே கலியாணம் செய்துகொள்ளுகிறான். இப்படிப்பட்ட பெண்களைக் காப்பாற்றுகிறவர்கள் யார்? பெண்கள் பிரசினையைச் சரியானபடி தீர்ப்பதே இதற்குச் சரியான மருந்து எனலாம். இந்தப் பிரசினைக்கு ஒரேயொரு முடிவுதான் உண்டு. கணவனைத் தவிர, வேறு யாரால் இவர்களுக்கு உதவி செய்ய முடியும். தன்னை மணந்துகொண்ட கணவனின் மனதை, தனக்குத் துணை செய்யுமாறு திருத்திவிடலாமென்று இளம் மனைவி எதிர்பார்ப்பது வீண் கனவாகும். ஆகையால், இந்தக் கஷ்டமான காரியத்தை ஆண்மக்கள்தான் மேற்கொள்ளவேண்டும். நான் என்ன செய்வேன் தெரியுமா? முதலில் இளம் மனைவியரைப்பற்றிப் புள்ளிவிவரம் எடுப்பேன். பின்னர் சிநேகிதர்களைக் கொண்டும், அமைதியான முறையில் வலியுறுத்திச் சொல்லியும், பெண்கள் படிக்கும்படி ஏற்பாடு செய்வேன். "இளம் மனைவியரை இந்த முறையில் வைத்துக் கொண்டு வாழ்க்கை நடத்துவது சரியல்ல. இதுபெரிய பாபம். இதற்கு விமோசனமே கிடையாது" என்று சொல்லுவேன். "உங்கள் மனைவியர் படிக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டும். பிள்ளைகளைப் பெறவும், பெற்ற பிள்ளைகளைச் சரியானபடி வளர்க்கவும் அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டியது அவசியம். அதுவரையில் நீங்கள் பிரமசரிய வாழ்க்கையை நடத்திவர வேண்டும். இல்லாவிட்டால் நீங்கள் செய்யும் பாபத்துக்கு ஒரு விமோசனமும் கிடையாது" என்பேன்.

பாகினி சமாஜ அங்கத்தினர்கள் தங்கள் சக்தியைச் செலவிடுவதற்கு இதைப்போல இன்னும் எத்தனையோ துறைகள் இருக்கின்றன. மிகவும் உறுதியோடு நின்று இதையும் இதைப்போன்ற வேறு பல இயக்கங்களையும் நடத்தி வைப்பார்களாயின், சுய ஆட்சி என்ற வார்த்தையைக்கூட உச்சரிக்காமல் சுய ஆட்சி இயக்கத்திற்குப் பெருந்தொண்டு செய்தவர்களாவார்கள். அந்தக் காலத்தில் அச்சுக்கூடங்கள் கிடையா. பேசிப் பேசிக் காலத்தைப் போக்குவதற்கு வசதிகள் குறைவாயிருந்தன. இப்போது நாம் ஆயிரம் மைல்கள் பிரயாணம் செய்கிறோம். அந்தக் காலத்தில் ஏறக்குறைய இருபத்து நான்கு மைல்கள்தான் ஒருவன் ஒரு நாளைக்கு நடக்க முடியும். அதனால் அந்தக் காலத்தில் இலட்சியங்களைப் பரப்புவதற்கு ஒரே ஒரு கருவிதான் இருந்தது. 'அதுதான் செயல்.' செயலுக்கு அதிக வலிமையுண்டு. நாம் இப்போது வாயு

வேகம் மனோவேகமாய் பிரயாணம் செய்கிறோம்; பிரசங்க மாரி பொழிகிறோம்; பத்திரிகைகளில் கட்டுரைகள் எழுதுகிறோம். இவ்வளவு இருந்தும் ஒன்றுமே சாதிக்க முடியவில்லை என்ற பரிதாபக் குரல்தான் நமது செவியில் விழுகிறது. பேச்சையும் எழுத்தையும் காட்டிலும், செயல்கள் பொது ஜனங்களிடை வேகம்நிறைந்த செல்வாக்கை உண்டாக்கும்; பண்டைக் காலத்தில் அப்படித்தான். இந்தச் சங்கத்தினரும் சங்கத்தின் அங்கத்தினரும் செயலுக்கு முதன்மை ஸ்தானம் கொடுத்து, வெளிப்பகட்டு இன்றி, அமைதியாகக் காரியங்களைச் செய்து வர வேண்டுமென்று நான் வேண்டு

# பெண்களுக்குரிய தொழில் எது?

**" பெண்கள் மனையறத்தைக் கைவிட்டுவிட்டு, துப்பாக்கியைத் தூக்கிக்கொண்டு மனையைப் பாதுகாக்கப் புறப்பட வேண்டு மென்று கோருவதும் தூண்டுவதும், ஆண், பெண் இரு பாலாருக்குமே கேவலமாகும். அப்படிச் செய்தால் நாம் மீண்டும் காட்டுமிராண்டிகளாய் வருகிறோ மென்றுதான் அர்த்தம்! மனித வாழ்வு அஸ்தமிக்கும் காலம் வந்துவிட்ட தென்றுதான் சொல்ல வேண்டும்."**

*உயர்தரக் கல்வி பயின்ற சகோதரி ஒருவர் எழுதி இருப் பதை, சில பகுதிகளை ஒதுக்கிவிட்டு, கீழே தந்திருக்கிறேன்:*

*அஹிம்சை மூலமாகவும் சத்தியாக்கிரகத்தின் மூலமாக வும், ஆத்மாவின் கௌரவத்தைத் தாங்கள் உலகுக்கு எடுத்துக் காட்டி யிருக்கிறீர்கள். மனிதனிடம் காணப்படும் கீழான பிர விருத்திகளை இந்த இரண்டு வார்த்தைகளாலேதான், நாம் போக்க முடியும்.*

*" கைத்தொழில் மூலமாகக் கல்வி போதிப்பது சிறந்த கொள்கை மட்டு மல்ல; சரியான போதனை முறையே அதுதான். நமது பிள்ளைகள் தன்னம்பிக்கை உடையவர்களாய் இருக்க வேண்டுமாயின், கைத்தொழில் மூலமாகவே நாம் கல்வி போதிக்க வேண்டும். தாங்கள்தான் மிகப் பெரியதான கல் விப் பிரசினை முழுவதையும் ஒரே வாக்கியத்தில் எடுத்துரைத்து, அதைத் தீர்க்கும் மார்க்கத்தையும் கண்டுபிடித்துவிட்டீர்கள்.*

*"இனி விவரங்களை அனுபவம், சந்தர்ப்பம் ஆகியவற்றைக் கொண்டு நாம் வகுத்துக்கொள்ளலாம்.*

*"பெண்கள் சம்பந்தமான பிரசினையையும் தீர்த்துவைக்கு மாறு நான் தங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். ராஜாஜீயோ பெண்களுக்கு எனத் தனியாக ஒரு பிரசினை இல்லை என்று சொல்லுகிறார். அரசியல் விஷயத்தில் அப்படி இல்லாமல் இருக்கலாம். சட்டமியற்றி, ஆண்களும் பெண்களும் உத்தி யோகம் பார்க்கும்படி செய்துவிடலாம் என்று கருதினாலும் கருதலாம். இப்படிச் செய்வதனால் ஆண்களும்,பெண்களும் ஒன் றாகிவிட முடியாது; ஆண்களுக்கும் பெண்களுக்கு மிடையில் இருந்து வரும் அடிப்படையான வேற்றுமைகளை, குணப்பாகு பாடுகளை, இதனால் மாற்றிவிட முடியாது; ஆண்கள் ஆண்கள் தான்; பெண்கள் பெண்கள்தான். அஹிம்ஸை, சத்தியாக்கிர கம் இரண்டையும் தவிர, இன்னும் சில தத்துவங்களும் இருந் தால்தான், பெண்களிடம் காணப்படும் கீழ்மைக் குணங்களை நாம் அகற்ற முடியும். ஆண்களுடைய உணர்ச்சியைப்போல வே, பெண்களின் உணர்ச்சியும் உயர்ந்த இலட்சியங்களை*

அடைவதற்காக முயன்று வருகிறது. காமம், போர்க்குணம், மற்றவர்களைத் துன்புறுத்துவதில் மிருகத் தனமான ஆசை, ஆகிய கீழான குணங்கள் ஆண்களிடம் அமைந்திருக்கின்றன. இவற்றைப் போக்குவதற்காகவே, பிரம்மசரியம், அஹிம்ஸை போன்ற தத்துவங்கள் ஆடவர்களுக்குத் தேவைப்படுகின்றன. ஆண்களைப் போலவே, பெண்களிடமும் பிறவியிலேயே வேறு பல தீய குணங்கள் மலிந்து கிடக்கின்றன. அவற்றைப் போக்குவதற்குப் பெண்களுக்கும் சில தத்துவங்கள் அவசியமாகும். பெண்ணாய்ப் பிறந்த காரணத்தால், அவளை வளர்க்கும் முறையே வேறு; அதே காரணத்தால், அவளது சூழ்நிலைகளும் வேறு விதமாய் அமைந்து கிடக்கின்றன. இவை யெல்லாம் அவளுடைய வளர்ச்சியைத் தடை செய்கின்றன. எந்தக் காரியத்தில் பெண் ஈடுபட்டாலும், இக் காரணங்கள் குறுக்கே நின்று, அவளை முன்னேறவிடாமல் தடைசெய்கின்றன. இதனாலேதான், 'என்ன இருந்தாலும் பெண்பிள்ளைதானே?' என்ற கேவலமான சொல்லும் ஏற்படுவதாயிற்று. பிறப்பே பெண்களின் வளர்ச்சிக்குத் தடைசெய்கிறது என்று நான் சொல்ல நேர்ந்தது இதனால்தான். முன்னேற்றத்திற்கு நாங்கள் தடையாய் இருப்பதாகச் சிலர் கருதுகிறார்கள். மேலே நான் சொல்லி யிருப்பவைகளைப் போக்குவதற்கும், திருத்தமாக வாழ்வதற்கும், சரியான ஒரு மார்க்கத்தை நாம் கண்டுபிடித்தாக வேண்டும்; அப்படி ஒரு நல்ல முறையைக் கண்டுபிடித்துவிட்டால், எங்களிடம் காணப்படும் இரக்கம், அன்பு முதலிய குணங்கள் வளர ஏதுவாகும். அக் குணங்கள் தடைசெய்யாமல் துணை செய்வனவாய் அமைந்துவிடும். ஆடவர்களுக்கும் குழந்தைகளுக்கும் தாங்கள் சில மார்க்கங்களைக் காட்டியிருக்கிறீர்கள். அதைப்போல் பெண்களது முன்னேற்றமும் பெண்களது விழிப்பு உணர்ச்சியிலிருந்தே தோன்ற வேண்டும்.

"இயற்கை, வளர்ப்பு, சூழ்நிலை என்ற விஷயங்களைச் சில உதாரணங்கள் மூலம் விளக்கிக் காட்டுகிறேன்.

"மேன்மையுடையவர்களாய், இளகிய மனமுடையவர்களாய், அனுதாபங்காட்டும் இயல்புடையவர்களாய், குழந்தைகளைக் காப்பாற்றும் தாய்மார்களாக இயற்கை, பெண்களைப் படைத்திருக்கிறது. பெரும்பாலும் அவளுக்கும் தெரியாமலே இக் குணங்கள் அவளை வசப்படுத்திக்கொண்டுவிடுகின்றன. இதனால், அவள் எந்தக் காரியத்தையும் உணர்ச்சி வயப்பட்டே செய்கிறாள். ஆண்களுடன் கலந்து பழகும்போது, அனேக தவறுதல்களைச் செய்துவிடுகிறாள். இரக்கம் காட்டக் கூடாத இடத்தில் இரக்கம் காட்டிவிடுகிறாள். சபல சித்தம் காரணமாக, எளிதில் தற்பெருமை பாராட்டி, பொதுவாக, அசட்டுத்தனமாய் நடந்துகொள்ளுகிறாள்; தங்களைக் கண்டு பேச வேண்டு மென்ற ஆசை எனக்கு அதிகம். சந்திப்பதற்கு முன் நாள் இரவே எனக்குச் சரியானபடி தூக்கம் வரவில்லை. தங்களைக் கண்டு பேசுவதற்காக வந்தேன். தாங்கள் என்னை உட்காரும்படி

சொன்னீர்கள்; நான் திரு. தேசாய்க்குப் பின் புறம் போய் மறைவாக உட்கார்ந்துகொண்டேன். தாங்கள் சொல்லியவை என் காதில் விழவில்லை. தங்களைப் பார்க்காமலே மறைவாய் இருக்க விரும்பினேன். என்ன பேதைமை! மேலும் நான் சொல்ல விரும்பியவற்றை விளக்கமாகச் சொல்லவோ, சரியானபடி உச்சரிக்கவோ என்னால் இயலவில்லை. இதைத்தான் நான் உணர்ச்சி வயப்பட்ட நிலை என்று சொல்லுகிறேன். இந்த உணர்ச்சி எளிதில் நம் வசப்படுவதில்லை; தகுதியான பயிற்சி கொடுத்து, இந்தக் குறைபாட்டைப் போக்கிவிடலாம்; எனினும், அப்படிச் செய்வதால் வேறொரு கெட்ட பழக்கம் புதிதாகத் தோன்றிவிடும் என்று நான் நிச்சயமாகச் சொல்லுவேன்.

"தேசீயத் திட்டக் சப் கமிட்டியிலிருந்து, எனது சினேகிதை ஒருத்திக்குப் பெண்கள் செய்ய வேண்டிய வேலைபற்றிச் சில கேள்விகளைக் குறித்தனுப்பி, பதில் தெரிவிக்கும்படி கேட்டிருந்தார்கள்; அந்தக் கேள்விகள் யாவை என்பதைத் தாங்கள் சந்தேகமின்றித் தெரிந்துகொண்டிருப்பீர்கள். அவை கிட்டத் தட்ட இப்படி இருந்தன: 'தங்கள் பகுதியில் வசிக்கும் பெண்களுக்கு, சொத்தை விற்க, வாங்க, சேமிக்க, வாரீஸ் உரிமையாக்க, மற்றவர்களுக்குக் கொடுக்க எவ்வளவு தூரம் அதிகாரம் இருக்கிறது? பெண்கள் பல திறப்பட்ட துறைகளில் பயிலுவதற்கு என்னென்ன ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள்? என்னென்ன சௌகரியங்கள் இருக்கின்றன? அவ்விதம் பயிற்சி பெற்ற பெண்கள் தாங்கள் பயின்ற வேலையைச் செய்யப் போதுமான சௌகரியங்கள் இருக்கின்றனவா?' என் சினேகிதை தகுந்த பதில் எழுதாமல், விளங்காதபடி கட்டுரை ஒன்று எழுதி அனுப்பிவிட்டாள்: 'ஆதி காலத்தில் பெண்கள் படிக்கவில்லை என்பதை நாங்கள் ஏற்றுக்கொள்ள முடியாது. வேத காலத்தில் கலியாணம் செய்துகொண்ட உடனேயே பெண்களுக்கு வேண்டிய மரியாதைகளைச் செய்திருக்கிறார்கள்; கணவனுடைய வீட்டில் அவள் எஜமானியாகவே இருந்திருக்கிறாள்.' இதற்குச் சான்றாக மனுவிலிருந்து சில ஸ்லோகங்களை எடுத்துக் காட்டியிருக்கிறாள். 'தற்கால நிலைமையைப்பற்றிக் கேட்டிருக்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல், பழைய பழக்கவழக்கங்களைப்பற்றிப் பேச வேண்டிய அவசியமென்ன?' என்று கேட்டேன் 'பதில் சொல்லுவது கட்டுரை மாதிரி இருந்தால் நன்றாய் இருக்குமென்று நினைத்தேன்' என்று முணுமுணுத்தாள். இது மட்டு மல்ல, சந்தோஷமாக இன்னொரு விஷயத்தையும் எடுத்துக் காட்டினாள். 'இன்னொருடைய சம்சாரம் என்னைவிட மோசமாகத்தான் பதில் எழுதியிருக்கிறாள்' என்றாள். பெண்ணாய்ப் பிறந்த காரணத்தால், என் சினேகிதைக்குப் போதிய பயிற்சி கிடைக்கவில்லை. அதனாலேதான் அவள் இப்படித் தவறான பதில் எழுத நேரிட்டது என்று நான் நினைத்துக்கொண்டேன். ஒரு விஷயத்தைப் பற்றிக் கேள்வி கேட்டிருக்கும்போது, ஒரு விஷயத்தை விளக்

கட்டுரை எழுதுவது பொருத்தமற்ற காரியம் என்பது ஒரு குமாஸ்தாவுக்குக்கூடத் தெரிந்துவிடும்.

"இப்படிப் பல உதாரணங்கள் கூறி விரிவுபடுத்தி விளக்க வேண்டிய அவசியமில்லை என்று கருதுகிறேன். பெண்கள் பலருடன் தாங்கள் அதிகமாகப் பழகியிருக்கிறீர்கள். ஆகவே, நான் சொல்லுவதைத் தாங்கள் ஒப்புக்கொள்வீர்களென நினைக்கிறேன். பெண்களுடைய வாழ்க்கையில் அடிப்படையான ஏதோ ஒரு கோளாறு நந்துகொண்டு வருகிறது. அதை நாம் சரிப்படுத்தாவிட்டால் ரகள் திருந்துவது சிரமம்.

"ஹரிஜன் பத்திரிகையைப் படித்து வரும்படி தாங்கள் எனக்குச் சொன்னீர்கள். நான் அதை மிக ஆவலோடு படித்து வருகிறேன். ஆனால் அந்தராத்மாவுக்கு வழிகாட்டும் அறிவுரை ஒன்றும் இதுவரை அதில் தென்படவில்லை. தேச விடுதலைக்காகப் போராடுவதும் ராட்டினத்தில் நூல் நூற்பதும் பயிற்சியின் சில அம்சங்கள் தான்; பிரசினை முற்றும் அவற்றால் தீர்ந்துவிட மாட்டாது. நூல் நூற்கும் பெண்களையும் காங்கிரஸ் இலட்சியங்களுக்காக உழைக்கும் பெண்களையும் நான் பார்த்திருக்கிறேன். அவர்களும் தவறுகள் செய்யத்தான் செய்கின்றார்கள். பெண்களானபடியால்தான் இந்தத் தவறுகள் ஏற்படுவதாகக் கூறப்படுகிறது.

"பெண்கள் ஆண்களைப்போல ஆகிவிட வேண்டுமென்று நான் விரும்பவில்லை. ஆண்களிடம் காணப்படும் கீழான குணங்களைப் போக்கத் தாங்கள் அஹிம்சையைப் போதிக்கிறீர்கள். அதே போலப் பெண்களிடம் காணப்படும் அசட்டுத்தனங்களைப் போக்க ஏதாவது ஒன்றைப் போதிக்க வேண்டுமென்றுதான் நான் தங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். எங்களிடம் காணப்படும் நற்குணங்களே எங்களுக்குத் தீமை விளைவிக்கின்றன. அவற்றை எங்களுக்கு நன்மைதரும் முறையில் மாற்றிக் கொள்ளத் தாங்கள் தயவு செய்து வழிகாட்ட வேண்டும்.

"பெண்ணாய்ப் பிறந்தவள் என்ற உணர்ச்சி என்னை உறுத்திக் கொண்டேயிருக்கிறது: 'என்ன இருந்தாலும் பெண்பிள்ளை தானே!' என்று யாராவது எள்ளி நகையாடும்போது வேதனை தாங்க முடியாமல் என் உயிர் அப்படியே ஒடுங்கிப்போகிறது—அதாவது உயிருக்கு ஒடுங்கிப்போகும் சக்தி இருப்பதாக வைத்துக்கொண்டால். எனக்குத் தெரிந்த ஒரு ஆடவரிடம் நான் இது சம்பந்தமாய்ப் பேசும்படி நேர்ந்தது. அவர் இதைக் கேட்டுச் சிரித்துவிட்டு, இவ்விதம் சொன்னார்: 'நமது சிநேகிதர் வீட்டில் அந்தச் சிறுபிள்ளை விளையாடிக்கொண்டிருந்தானே பார்த்தாயா? அவன் ரயில் வண்டி ஒன்றை வைத்து விளையாடிக்கொண்டிருந்தான்; அதோடு விளையாடிக்கொண்டிருக்கும்போது தூணைச் சுற்றிவருவதற்குப் பதிலாக, அதை இடித்துத் தள்ளிவிடலாமென்று நினைத்து, குழந்தை மனப்பாங்கி

ஞல், தனது தோள்களால் துணை மோதினுன்; அவன் நிலைமை தான் உன் கதையும். நீ சொல்லுவது மன இயல்பைப் பொறுத்தது. மன இயல்பை அறிந்துகொண்டு, அதற்கு ஒரு முடிவு தேட நீ முயல்வதை நினைக்கும்போது எனக்குச் சிரிப்பு வருகிறது.''

சத்தியாக்கிரக இயக்கத்தைக் கண்டுபிடித்ததன் மூலம் பெண்கள் இயக்கத்திற்கும் அடிகோலிவிட்டதாக நான் பெருமை பாராட்டிக்கொள்வதுண்டு. ஆண்களுக்கு அளிக்கும் பயிற்சியைப் போலன்றி, வேறு விதமான பயிற்சியைப் பெண்களுக்கு அளிக்க வேண்டுமென்று இதை எழுதியிருப்பவர் அபிப்பிராயப்படுகிருர். அப்படியாயின், அதற்கு ஏற்ற மருந்தை ஆண்களால் கண்டுபிடிக்க முடியாது என நான் நினைக்கிறேன். பெண்களினின்றும் ஆண்கள் வேறுபட்ட அமைப்பு உடையவர்களாய் இருக்கிறபடியால், எவ்வளவு தூரம் முயன்ருலும், ஆண்களால் வழி கண்டுபிடிக்க முடியாது. இன்னின்ன நிலைமையில் தாங்கள் கஷ்டப்படுகிருர்கள் என்பதை, கஷ்டப்படுகிறவர்கள்தான் அறிய முடியும். ஆகையால் பெண்களுக்குரிய தேவைகளை, பெண்களே உணர்ந்து, தாங்களே தீர்மானமான ஒரு முடிவிற்கு வர வேண்டும். அடிப்படை விஷயங்களில் ஆணும் பெண்ணும் ஒன்றுதான் என்பது என் சொந்த அபிப்பிராயம். எனவே, இரு பாலாரது பிரசினையும் சாரத்தில் ஒன்ருகத்தானிருக்கும். ஆத்மாவின் அமைப்போ இருவருக்கும் ஒன்றுதான். வாழ்க்கைமுறையும் ஒன்ருய்த்தான் இருக்கின்றன. ஆணும் பெண்ணும் தங்களிடம் இருக்கும் குறைபாட்டை ஒருவருக்கொருவர் நிரப்பிப் பூர்த்தி செய்து கொள்கிருர்கள். ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்ளாவிடில் வாழ்க்கை என்பதே இல்லை.*

---

* 1937-பிப்ரவரி மாதத்தில் அமெரிக்காவிலிருந்து வந்திருந்த பெண்மணி ஒருவர் கேட்ட கேள்விக்கு, காந்திஜீ இவ்விதம் பதில் சொன்ஞர்:

"பெண்களுக்குச் சரியான கல்வி போதிக்க வேண்டுமென்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆண்மகனைக் காப்பியடித்து அவனோடு பெண் போட்டியிடுவாளேயாஞல், உலக வளர்ச்சிக்காக அவளால் ஒன்றுமே செய்ய முடியாது. இதுவே எனது நம்பிக்கை. அவளுக்குப் போட்டியிடச் சக்தி உண்டு. ஆயினும் ஆணோடு போட்டியிடுவதஞல், இயல்பாக அடையக் கூடிய மேன்மைகளை அவளால் அடைய முடியாது. அவனிடம் காணப்படும் குறையை நிரப்பிச் சரிப்படுத்துவதே பெண்ணுக்குரிய இயல்பான வேலை."

எப்படியோ தெரியவில்லை, ஆண், பெண்ணை வெகு கால மாகவே அடக்கி ஆண்டு வந்திருக்கிறான். பெண்களுக்கும் தாங்கள் தாழ்ந்தவர்கள் என்ற ஒருவித உணர்ச்சி ஏற்பட்டு விட்டது. ஆணுக்குப் பெண் தாழ்ந்தவள் என்று ஆண் சுய நலத்தோடு சொல்லியதை, பெண் உண்மை என்று நம்பிவிட் டாள். இருந்தபோதிலும் தீர்க்கதரிசிகளாய் இருந்த ஆடவர் கள், பெண்களுக்குச் சம அந்தஸ்து உண்டு என்பதை ஒப்புக் கொண் டிருக்கிறார்கள்.

இருவருக்கு மிடையில் இருந்துவரும் ஒரு பாகுபாட்டை நாம் ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும். அடிப்படையில் இருவரும் ஒன்றாய் இருந்தபோதிலும், உடலமைப்பில் மிகவும் முக்கியமான வேற்றுமை இருந்து வருகிறது. இதன் காரண மாகவே இருவரது தொழில்களும் வெவ்வேறாய் இருக்கின்றன. தாய்மை என்ற பணியை பெரும்பாலும் எல்லாப் பெண்களுமே மேற்கொள்ளுகிறார்கள். ஆடவர்களுக்கு வேண்டியிராத பண்பு கள் அதற்கு அவசியமா யிருக்கின்றன. அதனாலேதான் பெண் அமைதியாய் இருக்கிறாள்; ஆண் சுறுசுறுப்புட னிருக்கிறான். சாராம்சத்தில் அவளைக் குடும்பத்தின் எஜமானி என்று சொல்லிவிடலாம். ஆண் உழைத்து உணவு தேடுகிறான். பெண், அதைப் பாதுகாத்துப் பகிர்ந்து கொடுக்கிறாள். உண் மையில், எல்லா வழிகளிலுமே, அவளுக்குப் பாதுகாக்கும் பொறுப்பு இருந்துவருகிறது. குழந்தைகளைப் பெற்று வளர்ப் பது அவளுக்கென ஏற்பட்ட தனியான வேலை; சிறப்பான வேலையுங்கூட. அவளுடைய கண்காணிப்பு இல்லாவிடின் மனித சமுதாயமே அழிந்துவிடும். பெண்கள் மனையறத்தை கைவிட்டுவிட்டு, துப்பாக்கியைத் தூக்கிக் கொண்டு மனையைப் பாதுகாக்கப் புறப்பட வேண்டு மென்று கோருவதும், தூண்டு வதும், ஆண், பெண் இரு பாலாருக்குமே கேவலமாகும். அப் படிச் செய்தால் நாம் மீண்டும் காட்டுமிராண்டிகளாய் வரு கிறோ மென்றுதான் அர்த்தம்! மனித வாழ்வு அஸ்தமிக்குங் காலம் வந்துவிட்ட தென்றுதான் சொல்ல வேண்டும்.

ஆண்பிள்ளை ஏறியிருக்கும் கிளையை எட்ட முயலும்பெண் தான் தடுமாறி விழுவதுடன், ஆணையும் கீழே தள்ளிவிடுகிறாள். பெண்களுக்குச் சிறப்பாய் அமைந்துள்ள வேலைகளைச் செய்ய வேண்டாம் என்று வற்புறுத்தவோ ஆசை காட்டவோ செய் தால் அந்தப் பாவம் ஆடவருக்குத்தான். வெளியிலிருந்து வரும் அபாயங்களைத் தடுத்து, குடும்பத்தைப் பாதுகாப்பது

எவ்வளவு தீரமோ அவ்வளவு தீரம் குடும்பத்தை நிர்வகித்து நல்ல நிலைமையில் வைத்திருப்பதிலும் இருக்கிறது.

கோடிக்கணக்கான குடியானவர்களை அவர்களுடைய சூழ்நிலையிலேயே நான் பார்த்திருக்கிறேன். இந்தச் சிறிய சேவாகிராமத்திலும் அவர்கள் வேலை செய்கிறதை நான் ஒவ்வொரு நாளும் கவனித்தவண்ணமிருக்கிறேன். இதனால் அவர்களுக்கு இயல்பாகவே அமைந்துள்ள வேலைப் பாகுபாட்டையும் நான் பார்க்க நேர்ந்தது. தச்சு வேலை பார்க்கும் பெண்களையோ கொல்லு வேலை பார்க்கும் பெண்களையோ நான் இது வரை கண்டதில்லை. வயல்களில் ஆண்களும் பெண்களும் சேர்ந்தே வேலை பார்க்கிறார்கள்; கடினமாய் இருக்கும் வேலைகளை ஆண்களே செய்கிறார்கள். குடும்ப வேலைகளைப் பெண்கள் கவனித்துக்கொள்ளுகிறார்கள். குடும்ப வருவாய் குறைவாயிருக்கிறபடியால், அதைச் சிறிது அதிகப்படுத்த எண்ணி, பெண்களும் கூலி வேலை செய்கிறார்கள். இருந்தபோதிலும் குடும்பத்தில் முக்கியமாகச் சம்பாத்தியம் செய்பவன் ஆண்

இன்னின்ன காரியங்களைத்தான் ஆண்கள் செய்யலாம், இன்னின்ன காரியங்களைத்தான் பெண்கள் செய்யலாம் என்று நாம் பாகுபாடு செய்துகொண்டுவிட்டால், அவற்றைச் செயல் முறையில் கொண்டுவருவதற்குத் தேவைப்படும் பொதுப் படையான குணங்களும் பண்பாடும் ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒன்றாகவே இருக்கும்.

சமுதாயமானாலும் சரி, தனி நபர் ஆனாலும் சரி, ஒவ்வொரு துறையிலும் உண்மையையும் அஹிம்ஸையையும் கடைப்பிடிக்க வேண்டுமென்று நான் சொல்லி வந்திருக்கிறேன். இந்தப் பெரிய பிரசினையைத் தீர்க்கும் வகையில் நான் செய்த உதவி இதுதான். பெண்கள்தான் இந்தக் காரியத்தை முன்னணியில் நின்று தலைமை வகித்து நடத்துவார்களென்று நான் ஆர்வத்தோடு நம்பிக்கொண்டிருக்கிறேன். அது மட்டுமல்ல. மனிதவர்க்க வளர்ச்சியில் தங்களுக்குரிய ஸ்தானத்தை அவர்கள் இவ்விதமாக உணர்ந்துகொண்டுவிட்டால், தாங்கள் தாழ்ந்தவர்கள் என்ற எண்ணமும் அவர்களுக்கு இல்லாது போய்விடும்; எல்லாம் காம வயப்பட்டே இயங்குகின்றனவென்று சிலர் தற்காலத்தில் போதனை செய்து வருகிறார்கள். பெண்கள் அஹிம்ஸையையும் உண்மையையும் கடைப்பிடித்து வெற்றியடைய முடியும் பக்ஷத்தில் அவர்கள் இந்தப் போத

லையை உதறித்தள்ள வேண்டும். என்றால் இதை நன்றாய் விளக்கிச் சொல்ல முடியவில்லையோ என்று அஞ்சுகிறேன். இருந்தபோதிலும், எனது கருத்தைத் தெளிவுபடுத்திவிட்ட தாக நம்புகிறேன். எத்தனையோ கோடிக்கணக்கான ஆட வர்கள் யுத்தத்தில் தீவிர பங்கெடுத்துக் கொள்ளுகிறார்கள். காம வயப்பட்டுத்தான் அவர்கள் அப்படிப் போராடுகிறார்கள் என்று சொல்லுவதற்கில்லை; ஆண்களும் பெண்களும் ஒன்றாகச் சேர்ந்து வயல்களில் வேலை பார்க்கிறார்களே, அவர்களை இந்த உணர்ச்சி ஆட்டிவைப்பதில்லை. நான் இப்படிச் சொல்லுவ தனால், ஆணுக்கும் பெண்ணுக்கும் இயல்பாகவே அமைந் துள்ள உணர்ச்சி கிடையாது என்று சொல்லுவதாக எண் ணக் கூடாது. ஆனால் காம இலக்கியங்களிலே மூழ்கிக் கிடப் பவர்களை ஆட்டிவைப்பதைப்போல, அந்த உணர்ச்சி இந்தக் குடியானவர்களை ஆட்டிவைப்பதில்லை என்பது மட்டும் நிச்ச யம். வாழ்க்கையின் உண்மைகளை அறிந்து, கடினமான வாழ்க் கைப் பாதையில் சென்றுகொண்டிருக்கும் ஆணுக்கோ பெண் ணுக்கோ இதைப்பற்றிச் சிந்தித்துக்கொண் டிருக்கப் போதிய அவகாசங் கிடையாது.

பத்திரிகைகளில், நான், பெண்களை அஹிம்ஸையின் அவ தாரம் என்றே எழுதிவந்திருக்கிறேன். அஹிம்ஸை என்றால் அளவுகடந்த அன்பு என்பது பொருள். அதிகமாகத் துன்பத் தைப் பொறுத்துக்கொள்ளும் தன்மையைத்தான் அளவு கடந்த அன்பு எனலாம். மனிதனுக்குத் தாயாக விளங்கும் பெண்ணைத் தவிர வேறு யாரால் அதிகமான துன்பங்களைப் பொறுத்துக்கொள்ள முடியும்? ஒன்பது மாதம் சிசுவை வயிற் றில் தாங்கி, அதற்கு உணவு கொடுப்பதில் துன்பம் இல்லையா? இந்தத் துன்பத்தையோ பெண் ஒரு இன்பமாகவே கருது கிறாள். பிரசவ வேதனையைப் போல் துன்பம் தருவது வேறு என்ன இருக்கிறது? புதியதோர் உயிரைச் சிருஷ்டிக்கிறோம் என்ற மகிழ்ச்சியினால், பெண் அந்தத் துன்பத்தை மறந்து விடுகிறாள். நாள்தோறும் குழந்தை வளர வேண்டும் என்று கவலைப்பட்டுக்கொண் டிருப்பவள் யார்? பெண்தானே? இவ் வளவு அன்புக் களஞ்சியமாய் விளங்குகிற பெண் அவளுடைய அன்பை மனித சமுதாயம் முழுவதுக்குமே அர்ப்பணஞ் செய் யட்டும். ஆணின் காமக் கிழத்தியாய் இதுவரை இருந்து வந்ததையும் இனிமேல் இருக்கக் கூடுமென்பதையும் அவள் மறந்துவிடட்டும். தாயாகவும், சிருஷ்டிகர்த்தாவாகவும், மௌனமான தலைவியாகவும் இருந்துகொண்டு, ஆடவனுக்கு உதவி செய்யும் பெண் உயர்ந்த அந்தஸ்தை அடைகிறாள்.

உலகம் சண்டையில் மூழ்கி, 'சமாதானம், சமாதானம்' என்று தவித்துக்கொண்டிருக்கிறது. அதற்குச் சமாதானம் என்ற அமிர்தத்தை ஊட்டுவது பெண்மக்களைச் சேர்ந்த பொறுப்பு. சத்தியாக்கிரகத்திற்குப் புத்தகப் படிப்பு அவசியமில்லை; நம்பிக்கையிலிருந்தும், துன்பத்தைப் பொறுத்துக்கொள்ளும் சக்தியிலிருந்தும் தோன்றுகிற உறுதியான இதயம் வேண்டும். இந்தக் குணங்களை உடைய பெண்கள் சத்தியாக்கிரகத் தலைவர்களாகிவிடக் கூடும்.

சில வருஷங்களுக்கு முன் நோய்வாய்ப்பட்டு, பூனா சாசூன் ஆஸ்பத்திரியில் நான் இருந்தேன். அப்போது அங்கிருந்த நர்ஸ் எனக்குச் சொல்லிய கதை இது: பூரண கர்ப்பவதியான பெண் ஒருத்தி அங்கு வந்திருந்தாளாம். அவளுக்குச் சஸ்திர சிகிச்சை செய்ய மயக்கங் கொடுக்க வேண்டுமென்று சொன்னார்களாம். அவள் அதை மறுத்துவிட்டாளாம்; தன்னுடைய வயிற்றில் இருக்கும் குழந்தைக்கு அதனால் ஊனம் ஏற்படக் கூடாது என்பது அவளுடைய எண்ணம். குழந்தையின் உயிருக்காக அவள் எவ்விதமான துன்பத்தையும் சகித்துக் கொள்ளத் தயாராய் இருந்தாள். குழந்தையின்மேல் உள்ள அன்பைத் தவிர அவளுடைய நோவைக் குறைவுபடுத்தும் மருந்து வேறொன்று கிடையாது. இதைப் போன்ற வீர ரமணிகள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அப்படி இருக்கும் போது, ஏன் பெண்ணாய்ப் பிறந்தோம் என்று இகழ்ந்து கொள்ள வேண்டாம்; ஆண் மக்களாக ஏன் பிறக்காமல் போனோம் என்று வருத்தப்படவும் வேண்டாம். பெண்களில் இப்படிப்பட்ட தியாகிகள் இருக்கிறார்கள் என்ற சிந்தனை எனக்கு ஏற்படும்போது, நானே அப்படிப்பட்ட பெண்களின் உயர்ந்த மனநிலையைக் கண்டு பொறாமை அடைவதுண்டு. இதைப் பெண்கள் உணர்ந்துகொள்ளவில்லை. பெண் ஆணாய்ப் பிறக்க ஆசைப்படுவதைப்போல், ஆண்களும் பெண்ணாய்ப் பிறக்க ஆசைப்படுதற்குத் தகுந்த காரணங்கள் இருக்கின்றன. இது நிறைவேறக் கூடிய ஆசையா என்ன? ஆகையால், திருப்திகொண்டு, எந்த எந்தக் காரியங்களைச் செய்வதற்காக இயற்கை நம்மைப் படைத்திருக்கிறதோ, அவற்றைக் கடமையாக உணர்ந்து, சந்தோஷத்துடன் செய்ய முயலுவோமாக.

# பெண்களும் அவர்களது வேலையும்

**"நான் கனவு காணுகிற நவ யுகத்திலே, எல்லாரும் தங்கள் தங்கள் சக்திக்கு ஏற்றவாறு பாடுபட்டு உழைப்பார்கள்; உழைப்புக்குத் தகுந்த ஊதியமும் கிடைக்கும். பெண்கள் செய்ய வேண்டிய முக்கியமான வேலை குடும்பத்தைக் கண்காணித்துக்கொள்வதாய் இருக்கும். மற்ற வெளி வேலைகளில் அவர்களுடைய ஈடுபாடு குறைவாகவே இருக்கும்."**

**கேள்வி:** *"பெண்கள் மனையறத்தை கைவிட்டுவிட்டு, துப்பாக்கியைத் தூக்கிக்கொண்டு மனையைப் பாதுகாக்கப் புறப்பட வேண்டுமென்று கோருவதும், தூண்டுவதும், ஆண் பெண் இரு பாலருக்குமே கேவலமாகும். அப்படிச் செய்தால் நாம் மீண்டும் காட்டுமிராண்டிகளாய் வருகிறோமென்றுதான் அர்த்தம்! மனித வாழ்வு அஸ்தமிக்குங் காலம் வந்துவிட்டதென்றுதான் சொல்ல வேண்டும்' என்று தாங்கள் சொல்லுகிறீர்கள். அப்படியானால் கோடிக்கணக்கான பெண்கள் வயல்களிலும் தொழிற்சாலைகளிலும் வேலை பார்த்து வருகிறார்களே, அவர்களைப் பற்றித் தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? உணவுக்காகப் பாடுபட வேண்டிய நிலைமை ஏற்பட்டு இருப்பதால்தானே, பெண்கள் குடும்ப வேலைகளைக் கைவிடும்படி நேரிடுகிறது. தாங்கள் தொழிற்சாலை முறைகளைப் போக்கிவிட்டு, பண்ணைக் கால வாழ்க்கையை மேற்கொள்ள விரும்புவீர்களா? அப்படி மேற்கொள்வது காட்டுமிராண்டித்தன மில்லையா? அது வாழ்க்கையின் அஸ்தமனத்துக்கு அடிகோலியது ஆகாதா? தாங்கள் கனவு காணும் புதிய அமைப்பு முறை எத்தகையதா யிருக்கும்? அங்கே பெண்கள் உடல் வருந்தி உழைக்க வேண்டிய நிலை இல்லா திருக்குமா?"*

*குடும்பக் காரியங்களைக் கவனியாது உதறித் தள்ளிவிட்டு, பெண்கள் உணவிற்காகக் கட்டாயம் பாடுபட்டு உழைக்க வேண்டிய நிலைமை தவறானதுதான்; ஆனால் துப்பாக்கி தாங்கிப் போரிடுவதைப் போல் அவ்வளவு தவறானதல்ல. பாடுபட்டு உழைப்பது கேவலமு மல்ல; காட்டுமிராண்டித்தனமு மல்ல; வீட்டு வேலைகளையும் கவனித்துக்கொண்டு, வயல்களிலும் தாங்களே விரும்பிப் பெண்கள் உழைப்பதில் காட்டுமிராண்டித்தனம் இருப்பதாக நான் கருதவில்லை. என் கற்பனையிலுள்ள புதிய அமைப்பு முறையில், எல்லாரும் தங்கள் தங்கள் சக்திக்கு ஏற்றவாறு உழைப்பார்கள்; உழைப்புக்குத் தகுந்த ஊதியமும் கிடைக்கும். பெண்கள்*

செய்யவேண்டிய முக்கியமான வேலை குடும்பத்தைக் கவனித்துக்கொள்வதாய் இருக்கும்; மற்ற வெளி வேலைகளை அவர்கள் இடைவேளையில்தான் செய்யவேண்டி இருக்கும். அந்தப் புதிய அமைப்பு முறையில் துப்பாக்கி போன்ற கருவிகளுக்கு நிலையான இடம் இராது. ஆண்களைப் பொறுத்தவரையிலுங்கூட, அவற்றின் உபயோகம் வரவரக் குறைந்துகொண்டே போய்விடும். துப்பாக்கி இந்த உலகத்தைவிட்டு மறைந்தொழியும் வரையில், தவிர்க்க முடியாத தொரு தீமையாகவே மக்கள் அதைச் சகித்துக்கொள்வார்கள். ஆனால் நான் மனமறிந்து பெண்களையும் அந்தத் தீமையையும் சம்பந்தப்படுத்த மாட்டேன்.

# பெண்களுக்குரிய சிறப்பான தொண்டு

**"அஹிம்ஸைத் துறையில் தைரியமாக ஈடுபடவும், ஆராய்ச்சிகள் செய்யவும் ஆண்களைக் காட்டிலும் பெண்களே மிகவும் தகுதியுடையவர்கள்; முரட்டுத்தனமான காரியங்களைச் செய்வதில் பெண்களைக் காட்டிலும் ஆண்களுக்கு அதிக துணிச்சல் உண்டு என்று நான் நம்புகிறேன். அதைப் போலவே, தியாகம் செய்வதற்கான துணிச்சல் பெண்களிடம் எப்போதுமே ஆடவர்களைக் காட்டிலும் அதிகமுண்டு."**

*"சமீபத்தில் ஐரோப்பாவில் ஏற்பட்டுள்ள நெருக்கடியைப் பற்றித் தாங்கள் எழுதியிருக்கும் கட்டுரையை மிக மகிழ்ச்சியோடு படித்தேன். தாங்கள்தான் ஐரோப்பாவிற்கு இப்போது உபதேசிக்க வேண்டியவர்கள். மனித சமுதாயமே அழிந்துபோகும் தறுவாயில் இருக்கும்பொழுது தாங்கள் எப்படி ஒதுங்கி நிற்க முடியும் ?*

*"தாங்கள் சொல்லுவதை உலகம் கேட்குமா ? இதுதான் இப்போதுள்ள பிரசினை.*

*"இங்கிலாந்திலுள்ள நண்பர்கள் எழுதும் கடிதங்களைப் பார்த்தால், பயங்கரமான இந்த ஒரு வாரத்திற்கிடையில், மக்கள் எல்லையற்ற துயரத்திற்கு உள்ளாகி யிருக்கிறார்கள் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. அந்தத் துயரம் உலகம் முழுவதிற்குமே ஒரு படிப்பினை. போர் என்ற எண்ணமே—நவீனப் போர்முறை, கருவிகளைக் கண்டுபிடிப்பதில் அதற்கு இருந்துவரும் பேய்த்தனமான திறமை, அதனால் ஏற்படுகிற ஈவிரக்கமற்ற படுகொலை, காட்டுமிராண்டித்தனம் இவை அனைத்தும்—இதுவரையில் மக்கள் யுத்தத்தைப்பற்றி இப்படிச் சிந்தித்ததில்லை என்னும்படியாக, அவர்களைச் சிந்தனை செய்யத் தூண்டிவிட்டிருக்கின்றன. 'யுத்தம் நிறுத்தப் பட்டுவிட்டது' என்ற செய்தி வந்ததும், 'அப்பாடா என்று மக்கள் மகிழ்ச்சி யடைந்ததையும், ஒவ்வொருவரும் கடவுளுக்கு இதய பூர்வமாக நன்றி செலுத்தியதையும் ஆயுள் நாள் முழுதும் என்னால் மறக்க முடியாது' என்று ஒரு ஆங்கில நண்பர் எழுதியிருக்கிறார். யுத்தத்தினால் ஏற்படக் கூடிய எல்லையற்ற இன்னலைப்பற்றிய பயமா ? உற்றார் உறவினர்களைப் பறிகொடுக்க நேரிடுகிறதே என்ற வருத்தமா ? தேசம் அடிமை நாடாகி, கீழான நிலைக்கு வந்துவிடுமே என்ற அச்சமா ? இவற்றில் யுத்தத்தை வெறுக்கும்படி செய்வது எது என்பதே கேள்வி. இன்னொரு தேசத்தை அடிமை நாடாக்கிவிட்டு யுத்தம் நின்று போயிற்று என்பதில் நமக்கு மகிழ்ச்சி உண்டா ? நமது கண்ணியத்தையும் கௌரவத்தையும் இழக்கும்படி நேரிட்டிருந்தால், நமக்கு வேறுவிதமான உணர்ச்சி ஏற்பட்டிருக்குமா ? நமக்*

கிடையில் இருந்துவரும் தகராறுகளை யுத்தத்தின் மூலம் தீர்த்துக்கொள்ளுவது சரியான முறை யன்று என்பதை உணர்ந்து நாம் யுத்தத்தை வெறுக்கிறோமா ? அல்லது நம்மிடைக் காணப் படும் பயமே இந்த வெறுப்பிற்கு காரணமா ? இந்த உலகத்திலிருந்து யுத்த மென்பது அடியோடு தொலைந்துவிட வேண்டு மானல், மேலே குறிப்பிட்டுள்ள கேள்விகளுக்கு நாம் சரியான முறையில் பதில் சொல்லியாக வேண்டும்.

"நெருக்கடி தீர்ந்துபோயிற்று. ஆயினும் நாம் இப்போது எதைக் காண்கிறோம் ? முன்னைக் காட்டிலும் அதி தீவிரமாய் யுத்த தளவாடங்களைப் பெருக்குவதில் நாடுகள் முனைந்து நிற்பதைக் காண்கிறோம். தேவைப்படுகிற வசதிகள் யாவற்றையுமே—ஆண், பெண், பொருள், திறமை, ஆற்றல் அனைத்தையுமே—யுத்தம் நேரிடில் பயன்படுத்தும் பொருட்டு முற்றிலும் விரிவாகவும் மூர்த்தன்னியமாகவும் ஏற்பாடு நடப்பதைக் காண்கிறோம்! 'யுத்தம் இனி வரவே வராது' என்று உறுதியுடன் பேசுகிற பேச்சையே காணோம்! யுத்தம் நின்றுபோயினும், இந்த முயற்சிகள் யாவும், யுத்தம் மீண்டும் வரும் என்ற எண்ணத்தை நினைவுறுத்த வில்லையா ? இயல்பாகவும் சிறப்புரிமையாகவும் உலக அமைதிக்கு, பெண்ணினமாகிய நாங்கள் எவ்வளவு செய்ய வேண்டுமோ அவ்வளவு செய்யாம லிருப்பதைக் காண, பெண்ணாகிய நான் மிகவும் வருந்துகிறேன். யுத்த களத்திலும் அதற்கு வெளியேயும் தம் பொருட்டு உதவி செய்யுமாறு பெண்கள் துணைப் படை அமைக்கப்படுவதையும் பெண்கள் அதிகாரம்செலுத்தி இதற்கு அழைக்கப்படுவதையும் தாங்களே முன் வருவதையும் கேட்கவும் பார்க்கவும் எனக்கு வருத்தமாயிருக்கிறது. யுத்தம் வந்துவிட்டாலோ, பெண்கள் தான் அனலிடு மெழுகாய் உருகித் தவிக்கிறார்கள். அவர்களுடைய ஆன்மா தான் சீர்படுத்த முடியாதபடி பாழ்பட்டுவிடுகிறது. இதற்கு மேல் விளக்கிச் சொல்வது இயலாத காரியம். இவ்வளவு நீண்ட காலமும் இதைவிட நல்ல வழியில் செல்லாமல் நாங்கள் இருந்துவிட்டோமே ? இதற்குக் காரணமென்ன ? பயங்கரமான ஈவிரக்கமற்ற மிருக பலத்திற்கு யாதொரு முணுமுணுப்பு மின்றி, ஏன் பணிந்து வந்தோம் ? எங்களது ஆத்மீக வளர்ச்சியில் வருந்தத்தக்க தொரு சம்பவமாகும். இது நாங்கள் செய்ய வேண்டிய மேன்மையான காரியங்களைச் செய்யத் தவறிவிட்டோம். அஹிம்ஸையின் மேன்மையையும் சக்தியையும் பெண்கள் இதயபூர்வமாக உணர்ந்து கொண்டுவிட்டால், உலகத்தில் யாவும் செம்மையாக நடைபெறும் என்று நான் நிச்சயமாய் நம்புகிறேன்.

"எங்களை-இந்தியப் பெண்மணிகளை-உற்சாகமூட்டிச் செயலில் ஈடுபடும்படி செய்து தாங்கள் வழிகாட்டினுல் என்ன ? தங்கள் 'கைப்பாணமாக' எங்களைத் தாங்கள் பயன்படுத்திக்கொண்

டால் என்ன? இதற்காகத் தாங்கள் இந்தியா முழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்ய வேண்டுமென்று நான் எத்தனை முறை விரும்பி இருக்கிறேன் தெரியுமா? தங்கள் வார்த்தைக்கு எவ்வளவோ பயனிருக்கும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. காரணம்: இந்தியப் பெண்குலத்தின் இதயம் நல்ல நிலையில் இருக்கிறது. தற்பெருமை இன்மையும் தியாக உணர்ச்சியும் இந்தியப் பெண்குலமாகிய எங்களுக்குப் பரம்பரையாக இருப்பதைப் போல் உலகில் வேறு எந்த நாட்டுப் பெண்களுக்கும் இருக்க முடியாது. யார் கண்டார்கள்? தாங்கள் எங்களைப் பயன்படுத்திக்கொண்டால், துன்பத்திலும், துயரத்திலும் மூழ்கிக் கிடக்கும் உலகில் அமைதி நிலவ, எங்களால் ஏதாவது அடக்கமாகச் செய்ய முடிந்தாலும் முடியும்.''-ஒரு பெண்மணி.

தயக்கமில்லாது நான் இந்தக் கடிதத்தை வெளியிடவில்லை. பெண்களின் உள்ளத்தில் உணர்ச்சி பொங்கும்படி செய்து, அவர்களைச் செயலில் ஈடுபடச் செய்ய என்னால் முடியும் என்று இந்தப் பெண்மணி நம்புவதைக் கேட்டு நான் பெருமிதமடைகிறேனாயினும், எனக்குள்ள ஆற்றலின் அளவை ஒருவாறு நான் அறிந்துகொண்டிருக்கிறேன். எனது சுற்றுப் பிரயாணம் கிட்டத்தட்ட முடிந்துவிட்டது. என்னால் முடிகிற அளவிற்கு, எழுத்து மூலம் நான் இதைத் தொடர்ந்து செய்து வருவேன். ஆயினும், அமைதியுடன் பிரார்த்தனை செய்வதில் உள்ள நம்பிக்கை எனக்கு அதிகமாகிக்கொண்டே வருகிறது. அமைதியுடன் பிரார்த்தனை செய்வதே ஒரு கலை. இதற்குச் செலுத்த வேண்டிய கவனமோ மிகவும் நுட்பம் வாய்ந்தது. அஹிம்சையின் மேன்மையையும் சிறப்பையும் வெளிப்படையாக எடுத்துக்காட்டுவதே பெண்களுக்குரிய சிறப்பான தொண்டாகுமென்று நான் நம்புகிறேன். பெண்ணின் இதயத்தை ஆடவனால்தானா ஊக்குவிக்க முடியும்? ஆடவன் என்ற முறையிலன்றி, அஹிம்ஸா தத்துவத்தைப் பொது ஜனங்களும் கையாளக் கூடிய முறையில் காண்பித்தவன் என்று கருதி எனக்கு மட்டும் இந்த வேண்டுகோளை அந்தப் பெண்மணி விடுத்துள்ளார் என்றால், இந்தத் தத்துவத்தை இந்தியப் பெண்களிடம் பிரசாரம் செய்ய வேண்டுமென்ற ஆசை எனக்கு இல்லை. இந்தப் பெண்மணியினுடைய வேண்டுகோளுக்கு நான் இணங்காமலிருப்பது உறுதிக் குறைவினால் அன்று என்பதை அவருக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். காங்கிரஸிலுள்ள ஆண்களுக்கு அஹிம்சையிலிருக்கும் நம்பிக்கை நிலைபேறுடையதாய் இருந்து, பலாத்காரமில்லாத் திட்டத்தை உண்மையாகவும் பரிபூரணமாகவும், அவர்கள் நடைமுறையில் கொணர்வார்களேயானால், பெண்களும் தாங்க

ளாகவே மனமாற்றம் அடைந்துவிடுவார்கள். இந்த நிலைமை ஏற்படும்போது, என்னைக் காட்டிலும் அதிகமாக இந்தக் காரியத்தில் ஈடுபடக் கூடிய ஒருவர் பெண்களிடையிலேயே தோன்றுவார் என்பது நிச்சயம். அஹிம்ஸைத் துறையில் தைரியமாக ஈடுபடவும், ஆராய்ச்சிகள் செய்யவும், ஆண்களைக் காட்டிலும் பெண்களே மிகவும் தகுதியுடையவர்கள். முரட்டுத் தனமான காரியங்களைச் செய்வதில் பெண்களைக் காட்டிலும் ஆண்களுக்கு அதிக துணிச்சல் உண்டு என்று நான் நம்புகிறேன். அதைப் போலவே தியாகம் 'செய்வதற்கான துணிச்சல் பெண்களிடம் எப்போதுமே ஆடவர்களைக் காட்டிலும் அதிகமுண்டு.

# பெண்களும் ராணுவ மனப்பான்மையும்

**''பெண் என்றால் தியாகத்தின் வடிவம் என்று கருதுகிறவன் நான். ஆயினும், ஆண்களுக்கு இல்லாத அபாரமான சக்தி தங்களிடம் உண்டு என்பதைத் துரதிர்ஷ்டவசமாகப் பெண்கள் மறந்தே போனார்கள்.''**

*ஐரோப்பாவிலே, காந்திஜீ பேசிய பல கூட்டங்களில், ராணுவ மனப்பான்மையை ஒழிப்பதற்குப் பெண்கள் எவ்வாறு உதவலாம் என்பதையே குறிப்பாகக் கேட்டார்கள். இத்தாலியில் ஒரு தனிக் கூட்டம் நடந்தது. இந்தியப் பெண்களிடமிருந்து கற்றுக்கொள்ளத் தகுந்தது எதையாவது இத்தாலியப் பெண்களுக்குச் சொல்லும்படி காந்திஜீயைக் கேட்டார்கள்.*

*'' தாங்கள் மெல்லியலார் என்ற எண்ணத்தைப் பெண்கள் விட்டுவிடுவார்களேயானால், யுத்தத்தைப் போக்க எடுத்துக்கொள்ளும் முயற்சியில் ஆண்களைக் காட்டிலும் பெண்களால் எவ்வளவோ சாதிக்க முடியும். இதில் எனக்கு ஒரு சிறிதும் ஐயமில்லை. ராணுவ மனப்பான்மையை நாங்கள் எவ்விதத்திலும் ஆதரிக்க மாட்டோம் என்று தாய்மார்களும், மனைவியரும், புதல்வியரும் சொல்லிவிட்டால், பெரிய பெரிய படைத் தலைவர்களாலும் போர்வீரர்களாலும் என்ன செய்ய முடியும் என்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள்'' என்று பாரிசில் நடந்த கூட்டத்தில் காந்திஜீ சொன்னார்.*

*'' ஐரோப்பியப் பெண்களுக்கு ஏதாவது உபதேசம் செய்யபடி என்னைக் கேட்கிறீர்கள். அவ்விதம் உபதேசம் செய்வதற்குரிய தைரியம் என்னிடம் உண்டோ என்று நான் சந்தேகப்படுகிறேன். நான் சொல்லுவது அவர்களுக்குக் கோபமூட்டாது என்றால், இந்தியப் பெண்மணிகளைப் பின்பற்றுங்கள் என்று சொல்லுவேன். சென்ற வருஷம் இந்தியப் பெண்கள் ஒரேபடியாகத் திரண்டெழுந்து சத்தியாக்கிரக இயக்கத்தில் ஈடுபட்டார்கள். ஐரோப்பா, அஹிம்ஸையைக் கற்றுக்கொள்ள வேண்டுமானால், பெண்கள் மூலமே அந்தப் பாடத்தைக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று நான் உண்மையாகவே நம்புகிறேன். பெண் என்றால் தியாகத்தின் வடிவம் என்று கருதுகிறவன் நான். ஆயினும், ஆண்களுக்கு இல்லாத அபாரமான சக்தி தங்களிடம் உண்டு என்பதைத் துரதிர்ஷ்டவசமாகப் பெண்கள் மறந்தேபோனார்கள். மனிதனுடைய மாய வலையில் சிக்கிக்கொண்டு பெண்கள் துயரப்படுகிறார்கள்*

என்று டால்ஸ்டாய் சொல்லுவது வழக்கம். அஹிம்ஸைக்கு எவ்வளவு பலம் உண்டு என்பதைப் பெண்கள் உணர்ந்து விட்டால், தாங்கள் மென்மையான இயல்புடையவர்கள் என் பதை அவர்களே ஒருபோதும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்" என்று லாசான் என்னுமிடத்தில் காந்திஜீ சொன்னார்.

இத்தாலியில் சிறியதொரு பெண்கள் கூட்டத்தில் பேசும் போது காந்திஜீ சொன்னது இது: "அஹிம்ஸைப் போரிலுள்ள சிறப்பு என்னவென்றால், ஆண்களைப் போலவே பெண்களும் அதில் கலந்துகொள்ள முடியும். பலாத்காரப் போராட்டத்தில் பெண்களுக்கு இந்த வாய்ப்புக் கிடையாது. சென்ற சத்தியாக் கிரகப் போராட்டத்தில் ஆண்களைக் காட்டிலும் பெண்களே அதிகமாகச் சாதித்தார்கள். காரணம் இதுதான் : சத்தியாக் கிரகப் போராட்டத்திற்கு, துன்பத்தைத் தாங்கும் சக்தி ஏராள மாக வேண்டும். பெண்களைக் காட்டிலும் பெருந்தன்மை யோடும் மாசுமறுவற்ற முறையிலும் சகித்துக்கொண்டு போக யாரால் முடியும்? இந்தியாவிலுள்ள பெண்கள் 'பருதா' முறையை உதறித் தள்ளிவிட்டு, வெளியே வந்து, தேசீய சேவையில் முனைந்து ஈடுபட்டார்கள்; குடும்பத்தைக் கவனிப் பது மட்டும் போதாது; இன்னும் பல காரியங்களைத் தேசத் திற்காகச் செய்தே ஆக வேண்டும் என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். சட்டத்திற்கு விரோதமாக உப்புக் காய்ச்சி னார்கள். அன்னியத் துணிக் கடைகளிலும், கள்ளுக் கடை களிலும் மறியல் செய்தார்கள் ; விற்போர், வாங்குவோர் இருவரையுமே அந்தப் பழக்கத்தை விட்டுவிடும்படி செய் தார்கள்; இரவு நேரங்களில் துணிச்சலோடு குடிகாரர்களைத் தொடர்ந்து அவர்கள் செல்லும் இடங்களுக்குச் சென்றார்கள். இதயத்திலிருந்த தர்ம சிந்தனையே அவர்களை இவ்விதம் ஈடு படச் செய்தது. சிறை சென்றார்கள் ; தடியால் மொத் துண்டார்கள். இந்த அளவிற்குத் தேச சேவை செய்த ஆண்கள் இல்லை என்றே சொல்லிவிடலாம். மேலைநாட்டுப் பெண்கள் மிருக மனப்பாங்கு அடைவதில் ஆண்களோடு போட்டியிடுவார்களேயானால், அவர்கள் இந்தியப் பெண்க ளிடமிருந்து கற்றுக்கொள்ளுவதற்கு எதுவுமில்லை. ஜனங்களைக் கொலை செய்யும் பொருட்டு, கணவர்களையும் புதல்வர்களையும் அனுப்பி, அதிலே மகிழ்ச்சி அடைவதையும், கொலைசெய்யும் துணிச்சலைப் பாராட்டி வாழ்த்துவதையும் அவர்கள் விட் டொழிக்க வேண்டும்."

—மகாதேவ தேசாய்

# இந்தியப் பெண்மணிகளுக்கு

**''வலிமை குறைந்தவர்கள் என்று பெண்களைக் கூறுவது வீண் அபவாதமாகும்; ஆடவர்கள் பெண்களுக்குச் செய்த அநீதியுமாகும். பலம் என்பது மிருக பலத்தையே குறிக்கும் என்றால், ஆணைக் காட்டிலும் பெண் மிருகத்தன்மை குறைந்தவள் என்பது உண்மைதான். அப்படியின்றி, பலம் என்பது ஆன்ம பலத்தைக் குறிக்குமானால், ஆணைக் காட்டிலும் பெண் எவ்வளவோ உயர்ந்தவள் என்று சொல்ல வேண்டும்.''**

**பெயர்பெற்ற டண்டி பிரயாணத்தின்போது, காந்திஜ இந்தியப் பெண்மணிகளுக்கு, கீழ்வரும் வேண்டுகோளை விடுத்தார்**

*இந்த நல்ல போராட்டத்தில் கலந்துகொள்ளச் சில சகோதரிகள் ஆத்திரப்படுகிறார்கள். இது ஒரு நல்ல அறிகுறியாகும். உப்பு வரியை எதிர்த்து நடக்கும் இந்த இயக்கம் அவர்கள் மனத்தை எவ்வளவு கவர்வதா யிருந்தாலும் சரி, பெண்மணிகள் இதிலேயே தங்களது முழுக் கவனத்தையும் செலுத்திவிடக் கூடாது; அப்படிச் செலுத்துவது, பைசாவுக்காகப் பவுனைப் பறிகொடுத்த கதையாய்த்தானாகிவிடும் என்று நான் கண்டுகொண்டேன். தேசத்தின் விடுதலைக்காக, துன்பத்தையும் துயரத்தையும் அனுபவிக்கத் துடிக்கும் பெண்கள் உப்புச் சத்தியாக்கிரகத்திலே அவற்றைக் காண முடியாது. அவர்கள் அதில் கலந்துகொள்ளும் பட்சத்தில் கடலில் கரைத்த காயமாய் ஆகிவிடுவார்கள்.*

*பலாத்காரமற்ற இந்தப் போராட்டத்தில், ஆண்களைக் காட்டிலும் பெண்களே அதிகமாக ஈடுபட வேண்டும். வலிமை குறைந்தவர்கள் என்று பெண்களைக் கூறுவது வீண் அபவாதமாகும்; ஆடவர்கள் பெண்களுக்குச் செய்த அநீதியுமாகும். பலம் என்பது மிருக பலத்தையே குறிக்கும் என்றால், ஆணைக் காட்டிலும் பெண் மிருகத்தன்மை குறைந்தவள் என்பது உண்மைதான். அப்படியின்றி, பலம் என்பது ஆன்ம பலத்தைக் குறிக்குமானால், ஆணைக் காட்டிலும் பெண் எவ்வளவோ உயர்ந்தவள் என்று சொல்ல வேண்டும். பெண்ணுக்கு ஆணை விட உள்ளொளி அதிக மில்லையா ? தியாக சிந்தை அதிக மில்லையா ? சகிப்புத்தன்மை அதிக மில்லையா ? தைரியம் அதிக மில்லையா ? பெண் இன்றி ஆண் ஏது ? அஹிம்சைதான்*

நமது வாழ்விற்கு ஆதார மென்றால், எதிர்கால வாழ்க்கை பெண்கள் வசம் இருக்கிற தென்றுதான் சொல்ல வேண்டும்.

இந்த விதமான எண்ணம் எனக்குப் பல வருஷங்களாகவே உண்டு. இந்தப் போராட்டத்தில் ஆண்களோடு தாங்களும் உழைக்க வேண்டு மென்று ஆசிரமத்திலிருக்கும் பெண்கள் வற்புறுத்தியபோது, இந்தப் போராட்டத்தில், கேவலம் உப்புச் சட்டத்தை மீறுவதைவிட மேன்மையான காரியங்களைச் செய்யும்படியான நிலை பெண்களுக்கு ஏற்படும் என்ற எண்ணம் எப்படியோ என் மனதில் உதித்தது.

அவர்களுக்குரிய வேலையை நான் இப்போது கண்டு பிடித்துவிட்டேன் எனலாம். கள்ளுக் கடைகளையும் அன்னியத்துணிக் கடைகளையும் 1921-ம் ஆண்டில் ஆண்கள் மறியல் செய்தார்கள். எதிர்பார்த்த அளவிற்கு மேல் வெற்றி கிடைக்கும் தறுவாயில், பலாத்காரம் தலைகாட்ட ஆரம்பிக்கவே, அது தோல்வியடைந்து போயிற்று. ஜனங்கள் மனதில் பதியத்தக்க முறையில், உண்மையாக ஏதாவது செய்ய வேண்டுமாயின், மறுபடியும் மறியலைத் தொடர்ந்து நடத்துவது அவசியமாகும். மறியல் கடைசிவரையில் அமைதியாக நடைபெறுமாயின், குடித்துப் பழக்கமுடையவர்களும், அன்னியத் துணி வாங்குபவர்களும் அவற்றால் விளையும் தீமையை விரைவாக உணர்ந்துகொள்ளுவார்கள். மறியல் என்பது பலாத்காரம் செய்வதாயிராமல், நன்னெறியைப் புகட்டி மனமாற்றம் செய்வதாய் இருத்தல் வேண்டும். இதயத்தில் பதியும்படியான முறையில், வேண்டிக்கொள்ளும் திறன் பெண்களைவிட அதிகமாய் வேறு யாரிடம் இருக்கிறது ?

போதையூட்டும் குடிவகை, அபின், கஞ்சா போன்றவைகளின் விலக்கு, அன்னியத் துணி மறியல் ஆகியவற்றை நாம் கடைசியில் சட்டபூர்வமாகவே தடுத்தாக வேண்டும். ஆனால், அடிப்படையிலிருந்தே-அதாவது பொதுஜனங்களிடமிருந்தே-திட்டமான • வற்புறுத்தல் இருந்தாலொழியச் சட்டம் ஏற்பட முடியாது.

குடி, அன்னியத் துணி இரண்டையும் தேச நலங் கருதி விலக்க வேண்டு மென்பதை யாருமே மறுக்க மாட்டார்கள். குடியும், அபின், கஞ்சா போன்றவையும், அவற்றில் பழகிப் போனவர்களின் ஒழுக்கத்தையே அடியோடு நாசமாக்கி விடுகின்றன. அன்னியத் துணியோ, தேசத்தின் பொருளாதார அஸ்திவாரத்தையே நிலைகுலையும்படி செய்து,

கோடிக்கணக்கானவர்களுக்கு வேலை இல்லாது செய்துவிடுகிறது. அன்னியத் துணியினாலும், குடியினாலும் ஏற்படும் துன்பம் வீட்டைத்தான், அதனால் பெண்களைத்தான், அதிகம் பாதிக்கிறது எனலாம். ஒரு காலத்தில் அமைதிக்கும் ஒழுங்குக்கும் நிலைக்களமாய் இருந்த குடும்பத்தில், குடிப் பேய் எவ்விதத் துன்பத்தைப் புகுத்திவிடுகிறது என்பதை, குடிகாரக் கணவனுடன் வாழ்க்கை நடத்தும் பெண்களால்தான் உணர முடியும். வேலையில்லாத் திண்டாட்ட மென்றால் என்ன என்பதை, நமது குக்கிராமங்களில் வசிக்கும் கோடிக்கணக்கான பெண்கள் அறிவார்கள். சர்க்கா சங்கத்தில் இன்று ஒரு லட்சத்திற்கு அதிகமான பெண்கள் வேலைசெய்து வருகிறார்கள். அதில் வேலைபார்க்கும் ஆண் மக்களின் எண்ணிக்கையோ பதினாயிரத்திற்கும் குறைவுதான்.

இந்த இரண்டு காரியாதிகளிலும் இந்தியப் பெண்மணிகள் ஈடுபடுவார்களாக. ஈடுபட்டு, அவற்றில் திறமையடைவார்களாக. அப்படிச் செய்வார்களேயானால் ஆடவர்களைக் காட்டிலும் தேசவிடுதலைக்குப் பெண்கள் அதிகமாக உழைத்தவர்க ளாவார்கள். தன்னம்பிக்கையும் அதிகார ஆற்றலும் இதுவரை பெண்களுக்கு இல்லாது இருந்தன. இந்தக் காரியாதிகளில் ஈடுபட்டால் அவை நிச்சயமாய் இனிமேல் அவர்களுக்குக் கிட்டும்.

அன்னியத் துணி விற்போர், அன்னியத் துணி வாங்குவோர், கள் விற்பனை செய்வோர், குடிப் பழக்கமுடையோர் ஆகியவர்களைப் பெண்கள் வேண்டிக்கொள்வார்களேயானால், அது அவர்களின் இதயத்தை நிச்சயமாக உருக்கிவிடும். அப்படியில்லாவிட்டாலும் மேலே சொல்லிய நான்கு பிரிவினருக்கும் பெண்கள் பலாத்கார முறையில் தீங்கு இழைப்பார்கள் என்றோ, தீங்கு இழைக்கும் எண்ணம் அவர்களுக்கு உண்டு என்றோ யாரும் சந்தேகிப்பதற்கில்லை. இப்படி அமைதியான எதிர்ப்பில்லாத முறையில் நடந்துவருகிற ஒரு கிளர்ச்சியை, எந்த அரசாங்கமும் நீண்ட காலம் அலட்சியம் செய்ய முடியாது.

பெண்களாலேயே ஆரம்பிக்கப்பட்டு, பெண்களின் ஆதிக்கத்திலேயே நடந்து வருவதுதான் இந்தக் கிளர்ச்சியிலுள்ள விசேஷம். அவசிய மேற்படும்போது அவர்களுக்கு ஆடவர்கள் உதவி செய்யலாம்; செய்யத்தான் வேண்டும். ஆனால் அப்படி உதவி செய்ய நேரும்போது, ஆடவர்கள் பெண்களுக்கு அடங்கித்தான் நடந்துகொள்ள வேண்டும்.

இந்தக் கிளர்ச்சியில், ஆயிரக்கணக்கான பெண்கள் படித்தவர்களாயினும் சரி, படியாதவர்களாயினும் சரி, கலந்து கொள்ளலாம்.

கல்வியறிவு நிரம்பிய பெண்கள் எனது வேண்டுகோளுக்குச் செவிசாய்ப்பார்களேயானால், சாமான்ய ஜனங்களின் நலன்களைத் தங்கள் நலன்களாகக் கருதிக் காரியம் செய்வதற்கு அவர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. இதனால் அந்த ஜனங்களுக்கு, ஒழுக்கத் துறை, பொருளாதாரத் துறை ஆகிய இரண்டிலுமே அவர்கள் உதவியவர்கள் ஆவார்கள்.

அன்னியத் துணிப் பகிஷ்காரம் என்ற விஷயத்தை அவர்கள் பரிசீலனை செய்து பார்ப்பார்களேயானால், கதர் மூலம் தவிர, வேறு எந்த வழியிலும் அதைச் சாதிக்க முடியாது என்பதைக் கண்டுகொள்வார்கள். இன்னும் சிறிது காலம் வரை, இந்திய மக்களுக்குத் தேவைப்படும் அளவிற்கு, ஆலைகளிலே போதுமான துணி உற்பத்தி செய்ய முடியாதென்பதை ஆலை முதலாளிமார்களே ஒப்புக்கொள்வார்கள். சரியானபடி வசதிகள் செய்துகொடுத்தால், நமது கிராமங்களிலிருக்கும் எண்ணிக்கையற்ற குடும்பங்களில் கதர் உற்பத்தி செய்யக் கூடும். இந்த ஒவ்வொரு நிமிடத்தையும் கதர் நூற்பதில் செலவிடுவதன் மூலம் வசதிகளைச் செய்துகொடுப்பது இந்தியப் பெண்மணிகளின் பிறப்புரிமை யாகட்டும். கதர் உற்பத்திப் பிரசினை, போதுமான அளவு நூல் நூற்கும் பிரசினை தான். டண்டி கடற்கரைக்குப் பிரயாணம் செய்த பத்து நாட்களில், தக்ளியின் சக்தியை, சந்தர்ப்ப வயத்தால் நான் அறிய நேர்ந்தது; இதை அந்த அளவிற்கு என்னால் அதற்கு முன் அறிந்துகொள்ள முடியவில்லை.

உண்மையில் தக்ளி ஒரு அற்புதக் கருவிதான். இயல்பாகச் செய்ய வேண்டிய காரியங்களை நிறுத்தாமலே, எனது தோழர்கள், விளையாட்டாகவே, நான்கு சதுர கெஜம் துணி நெய்யக் கூடிய அளவிற்கு, 12-ம் நம்பர் நூலை ஒரே நாளில் நூற்றுத் தள்ளிவிட்டார்கள். யுத்த காலத்தில், கதரோடு எதுவும் போட்டிபோட முடியாது. இந்த இரண்டு சீர்திருத்தங்களினால் ஒழுக்க வகையில் ஏற்படும் பலன்களோ மிகமிகப் பெரியனவாயிருக்கும். அரசியல் துறையில் ஏற்படும் பலனும் அவற்றிற்குக் குறைந்ததாக இராது. போதைதரும் குடிவகைகளையும் கஞ்சா, அபினி போன்றவைகளையும் விலக்கிவிடுவோமேயானால், அரசாங்க வருமானத்தில் வருஷத்திற்கு

இருபத்தைந்து கோடி ரூபாய் குறைந்து போய்விடும். அன்னியத் துணிப் பகிஷ்காரத்தால், கோடிக்கணக்கான இந்திய மக்களுக்குக் குறைந்த பட்சம் அறுபது கோடி ரூபாய் மீதப்படும். அந்த இரண்டு காரியங்களும் வெற்றியடைந்தால், பொருளாதாரத் துறையில் உப்புச் சட்டத்தை ரத்து செய்வதனால் ஏற்படக் கூடியதைவிட அதிகமான நலன் ஏற்படும். ஒழுக்கத் துறையிலோ, அந்த இரண்டு சீர்திருத்தங்களினால் ஏற்படும் பலன்களை மதிப்பிடவே முடியாது.

கள்ளுக் கடை, அன்னியத் துணி மறியல் இரண்டிலுமே மனவெழுச்சிக்கும், துணிச்சலான காரியங்களுக்கும் இடமிராதே என்று சில சகோதரிகள் மறுத்துச் சொல்லக் கூடும். நல்லது, முழு மனதோடு அந்தக் கிளர்ச்சியில் அவர்கள் ஈடுபடுவார்களாயின், போதுமான அளவிற்கு மனவெழுச்சி பெறவும் துணிவான காரியங்களைச் செய்யவும் இடமிருப்பதைக் காண்பார்கள். அந்தக் கிளர்ச்சி முடிவடைவதற்கு முன்பே அவர்கள் சிறைசெல்ல நேரலாம்; அவமரியாதையும் உடம்பிலே காயங்களுங்கூட ஏற்படலாம். அந்த வகையில் அவமரியாதையும் காயங்களும் அடைந்து துன்புறுவதே அவர்களுக்குப் பெருமை அளிக்கும். இந்த விதமாகப் பெண்கள் துன்புற நேர்ந்தால் இலட்சியம் விரைவிலே கைகூடிவிடுவது நிச்சயம்.

நான் சொல்லுவதைக் கேட்டு, எனது வேண்டுகோளுக்கு இசைந்து நடக்க விரும்பினால், இந்தியப் பெண்கள் விரைவாகவே செயலில் இறங்க வேண்டும். இந்தியா முழுவதும் உடனே செய்ய இயலாவிடினும் பாதகமில்லை. ஏற்பாடு செய்யக்கூடிய மாகாணங்கள் முதலிலே இந்தக் காரியங்களைச் செய்யட்டும். அவைகளை மற்ற மாகாணங்களும் விரைவிலே பின்பற்ற ஆரம்பித்துவிடும்.

# குடிப் பேய்

''நல்ல காரியங்களிலே கணவன்மாரை எவ்வளவு தூரம் தாங்கள் திருப்பிவிடலாம் என்பதை மனைவிமார்கள் இன்னும் அறிந்துகொள்ளவில்லை. தங்களை அறியாமலே அந்தச் செல்வாக்கைப் பெண்கள் செலுத்துகிறார்கள் என்பது உண்மைதான்; ஆனால் அது போதாது. அவர்கள் அதை உணர வேண்டும். அந்த உணர்வு பலத்தைக் கொடுக்கும். வாழ்க்கைத் துணைவர்களைத் திருத்துவதற்குரிய வழியையும் காட்டும்.''

•

*சகோதரி ஒருவர் பின்வருமாறு எழுதுகிறார் :*

*''நான் கிராமங்களுக்குச் சென்று பார்வையிட்டபோது, குடியினால் மக்கள் எவ்வளவு தூரம் பாழடைந்துவிட்டார்கள் என்பதைக் கேட்டு மிகவும் வருந்தினேன். சில பெண்கள் கண்ணீர் வடித்தவண்ணமாய் இருக்கிறார்கள். அவர்கள் வேறு என்ன செய்வார்கள்? நம்மிடையிலிருந்து குடிவகைகளை அடியோடு ஒழிப்பதற்கு விரும்பாத பெண்ணே இருக்க மாட்டாள் என்று சொல்லிவிடலாம். குடும்பங்களில் காணப்படும் வறுமை, துன்பம், சீர்கெட்ட உடல்நிலை யாவற்றிற்கும் குடியே பெருங் காரணமாகும். ஆண்கள் குடித்து அந்தப் பழக்கத்திற்கு அடிமையாகிவிடுவதானால், தொல்லைகள் யாவும் வழக்கம்போல, பெண்மக்கள் தலையிலே விழுகிறது. இவ்விதம் துன்புறுகிற பெண்களுக்கு நான் சொல்லக் கூடிய யோசனை யாது? ஆண்களின் கோபத்தையும் கொடிய நடத்தையையும் சமாளிப்பது மிகவும் கஷ்டமா யிருக்கிறது. வகுப்புப் பிரசினையில் காணப்படும் அநீதியைப் போக்கும் பொருட்டுச் செலவிடும் தங்கள் காலம், முயற்சி, அறிவு ஆகியவற்றை, குடியை அடியோடு ஒழிப்பதற்கு இந்த மாகாணத்திலுள்ள தலைவர்கள் செலவிடுவார்களேயானால், எவ்வளவோ நன்மை ஏற்படுமே என்று நான் எண்ணுவ துண்டு. மக்களது ஒழுக்கப்பண்பும் மனப்பண்பும் உயருமேயானால், எத்தனையோ சில்லறை விவகாரங்கள் தாமே சரிப்பட்டுவிடும். ஆனால் அத்தகைய சில்லறை விஷயங்களில் சிரத்தை காட்டி உண்மையில் முக்கியமான காரியங்களை அலட்சியம் செய்வது நமக்குச் சகஜமாய் விட்டது. குடியால் விளையும் கேட்டை விளக்கி, தாங்கள் ஒரு வேண்டுகோள் விடுத்தால் என்ன? இந்தக் கேட்டினால் மக்கள் அடியோடு நாசமடைந்து வருவதைக் காண மிகவும் வருத்தமா யிருக்கிறது.''*

குடிப்பவர்களுக்கு நான் வேண்டுகோள் விடுப்பதனால் ஒரு நன்மையும் விளையப் போவதில்லை. அது பிரயோசனப்

படாது. குடிகாரர்கள் '**ஹரிஜன்**' பத்திரிகையை வாசிப்பதே கிடையாது, வாசித்தாலும் கேலிசெய்யும் நோக்கத்தோடேயே வாசிப்பார்கள். குடியினால் ஏற்படக் கூடிய கேட்டை விளக்கி எவ்வளவுதான் எடுத்துரைத்தபோதிலும் அது அவர்களுக்கு ஏற மாட்டாது; அவர்கள் அந்தத் தீய பழக்கத்தையே விடாப்பிடியாய்ப் பிடித்துகொண்டிருப்பார்கள். இந்தச் சகோதரிக்கும், அவர் மூலமாக, இந்தியாவிலிருக்கும் பெண்மணிகள் அனைவருக்கும் நான் ஒரு விஷயத்தை நினைவுபடுத்த விரும்புகிறேன்: டண்டி யாத்திரையின்போது, என் ஆலோசனையைக் கேட்டு இந்தியப் பெண்மணிகள், குடியை எதிர்த்துப் போராடுவதையும், ராட்டை சுழற்றுவதையும் தங்கள் விசேஷப் பணியாகக் கொண்டார்கள். ஆயிரக்கணக்கான பெண்கள், பயமின்றிக் கள்ளுக் கடைகளைச் சுற்றி வளைத்துக் கொண்டதையும், குடிப் பழக்கமுடையவர்களைக் குடியை விட்டு விடும்படி வேண்டிக்கொண்டு அதில் பெரும்பாலும் வெற்றி அடைந்ததையும் இக் கடிதக்காரர் நினைவுகூர்வாராக. இப்படித் தாங்களே மேற்கொண்ட இந்தப் பணியில், குடிகாரர்களின் தூஷணையையும், சில சமயங்களில் தாக்குதலையுங்கூட, அவர்கள் பொறுமையோடு சகித்துக்கொண்டார்கள். கள்ளுக் கடைகளை மறியல் செய்த குற்றத்திற்காக நூற்றுக்கணக்கான பெண்கள், சிறை சென்றார்கள். ஆர்வத்தோடு அவர்கள் செய்த இந்தச் சேவை, தேச மெங்குமே ஆச்சரியப்படத்தக்கதொரு மாறுதலை உண்டாக்கிற்று. துரதிர்ஷ்டவசமாக, சட்ட மறுப்பு இயக்கம் நின்றபோது, அதற்கு முன்பேகூட, கள்ளுக் கடை மறியலும் தளர்ந்துபோயிற்று. தளர்ச்சிக்குரிய காரணங்களை மறுபடியும் ஆராய வேண்டிய அவசியமில்லை. பணி செய்வதற்குத் தொண்டர்களே தேவை. பெண்கள் கொடுத்த வாக்குறுதியும் இன்னும் நிறைவேறாமலே இருந்துவருகிறது. அவர்கள் வாக்குறுதி கொடுத்தது, ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டு மல்ல. இந்தியா வெங்கும் பூரண மதுவிலக்கு ஏற்பட்டாலொழிய, அவர்கள் கொடுத்த வாக்குறுதி நிறைவேறாமலே இருந்துவரும். பெண்கள் ஈடுபட்டுச் செய்த காரியம் மிகவும் கண்ணியமானது. மனிதனிடம் காணப்படும் நல்ல பண்புகளைத் தட்டி எழுப்புவதன் மூலம், கள்ளுக்கடைகளை எல்லாம் காலிசெய்து பூர்ண மதுவிலக்கை நடைமுறையில் கொணர அவர்கள் பாடுபட்டார்கள். மதுவிலக்கு இயக்கத்தை அவர்கள் தொடர்ந்து நடந்திவந்திருப்பார்களேயானால், அவர்களது எளிய சுபாவமும் சிரத்தையும் சேர்ந்து குடிகாரனை நிச்சயமாய்க் காப்பாற்றியிருக்கும்.

இப்போது ஒன்றும் கெட்டுப்போகவில்லை. இந்த இயக்கத்தை, பெண்கள் உருவாக்க முடியும். இந்தக் கடிதம் எழுதியிருப்பவர் குறிப்பிடுகிற குடிகாரர்களின் மனைவிமார்கள் மனப்பூர்வமாக முயன்றால், நிச்சயமாக அவர்கள் தங்கள் கணவர்களின் மனப்போக்கை மாற்றிவிட முடியும். நல்ல காரியங்களிலே கணவன்மாரை எவ்வளவு தூரம் தாங்கள் திருப்பிவிடலாம் என்பதை மனைவிமார்கள் இன்னும் அறிந்துகொள்ளவில்லை. தங்களை அறியாமலே அந்தச் செல்வாக்கைப் பெண்கள் செலுத்துகிறார்கள் என்பது உண்மைதான்; ஆனால் அது போதாது. அவர்கள் அதை உணர வேண்டும். அந்த உணர்வு பலத்தைக் கொடுக்கும். வாழ்க்கைத் துணைவர்களைத் திருத்துவதற்குரிய வழியையும் காட்டும். பெரும்பாலான பெண்கள் கணவன்மார் செய்யும் காரியங்களில் அக்கறைகொள்வ தில்லை. இதுதான் இதில் வருந்துதற்குரிய விஷயம். கணவனுடைய ஈடுபாடுகளில் தலையிடத் தங்களுக்கு உரிமை இல்லை என்று பெண்கள் எண்ணுகிறார்கள். எப்படி மனைவியினுடைய ஒழுக்கத்திற்குக் கணவன் பாதுகாப்பாய் இருக்க வேண்டுமோ, அதேபோல, கணவனுடைய ஒழுக்கத்திற்குப் பாதுகாப்பாய் இருக்க வேண்டுவது தங்களது கடமை என்பதைப் பெண்கள் உணர்வதில்லை. கணவன் செய்யும் நன்மை தீமைகளில் மனைவிக்கும், மனைவி செய்யும் நன்மை தீமைகளில் கணவனுக்கும் சரிசமமான பங்கு உண்டு என்பதைவிடத் தெளிவான விஷயம் வேறு என்ன இருக்கிறது? மனைவியருக்குள்ள கடமையையும் சக்தியையும் உணரும்படி செய்து, அவர்களைத் தட்டி எழுப்புவதற்கு, வேறொரு பெண்தானே மிகவும் தகுதி உடையவர்? குடியை எதிர்த்துப் பெண்கள் நடத்தும் இயக்கத்தில் இது ஒரு பகுதியாகுமே யன்றி வேறில்லை.

குடிப்பவர்களின் எண்ணிக்கை, குடிப் பழக்கத்தைத் தூண்டிவிடும் காரணங்கள், குடியை ஒழிப்பதற்கான ஏற்பாடுகள் இவற்றைப் பரிசீலனை செய்ய, சரியான ஏற்பாடுகளுடன் தகுதியுள்ள பெண்கள் போதுமான அளவு இருக்க வேண்டும். பழைய அனுபவத்தை வைத்துக்கொண்டு பார்த்து, குடிக்கும் பழக்கத்தை நிறுத்திவிடுவதற்கு வேண்டுகோள் மட்டும்போதாது, அதனால் பலன் ஏற்படாது என்பதை அவர்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். குடியை ஒரு நோயாகக் கருதி, அதைப் போக்குவதற்குப் பரிகாரம் தேட வேண்டும். அதாவது, சில பெண்களாவது இதைப்பற்றி ஆராய்ச்சி செய்வதில் தங்கள் நேரத்தைச் செலவிட்டு, பல

வகைகளிலும் ஆராய்ச்சி நடத்த வேண்டும். எந்தத் துறையில் சீர்திருத்தம் செய்ய விரும்பினும் சரி, தொடர்ந்த ஆராய்ச்சியும் அந்த விஷயத்தைப்பற்றிய பூரணமான அறிவும் தேவை. சீர்திருத்தம் அவசியம்தான் என்று ஏற்றுக் கொண்டபோதிலும் எல்லாச் சீர்திருத்த இயக்கங்களும் ஓரளவுக்கோ முற்றுமோ தோல்வியடைந்ததற்கு, அறியாமையே அடிப்படையான காரணமாகும். ஏனெனில், ஒவ்வொரு முயற்சியும் சீர்திருத்த மென்ற பெயரை வைத்துக் கொண்டு, பொய் வேஷத்தோடு வெளியே கிளம்புகிறது. அப்படிக் கிளம்புவதையெல்லாம் சீர்திருத்தம் என்று சொல்லி விடக் கூடாது.

# புது மணமக்களுக்கு

" பிரமசரிய வாழ்க்கையும் புலனடக்கமும் தீங்கு பயக்கு மென்றும் கட்டுப்பாடின்றிக் காம இச்சையைத் தணித்துக் கொள்வதும், கட்டுப்பாடின்றிக் காதல் புரிவதும் மிக மிக இயற்கையான காரியங்கள் என்றும் சொல்லி வருகிறார்கள். இதைவிடக் கேடு பயக்கும் மூடநம்பிக்கை வேறு கிடையவே கிடையாது."

ஹட்லி எனுமிடத்தில், காந்தி சேவா சங்கத்தின் ஆண்டு விழா நடைபெற்றது. அப்போது காந்திஜீயின் பேத்தி திருமணமும் மகாதேவ தேசாயின் சகோதரி திருமணமும் நடந்தன. மணச் சடங்குகள் முடிந்த பின், தம்பதிகளைப் பார்த்து, காந்திஜீ கீழ்வருமாறு பேசினார் :

*"சடங்குகளில் எனக்கு நம்பிக்கை இல்லை என்பதும், கடமை உணர்ச்சியைத் ' தட்டி எழுப்புகிற அளவிற்கே அவற்றை நான் நம்புகிறேன் என்பதும் உங்களுக்குத் தெரியும். சுயமாகச் சிந்தனை செய்யத் தொடங்கிய கால முதற்கொண்டு இந்த விதமான மனநிலை எனக்கு உண்டு. நீங்கள் கூறிய உறுதிமொழிகளும் மந்திரங்களும் சம்ஸ்கிருத மொழியில் இருந்தன. அவற்றை உங்களுக்கு மொழிபெயர்த்துச் சொன்னார்கள். சம்ஸ்கிருதச் சொற்களுக்கு ஒருவித சக்தி உண்டு; அந்தச் சொற்களைக் கேட்கக் கேட்க, அவற்றில் நமக்கு ஒருவித ஆர்வம் உண்டாகும் என்பதை நான் அறிவேன். அதனுல் தான் வாசகத்தைச் சம்ஸ்கிருதத்தில் வைத்துக்கொண்டோம்.*

*"நல்ல திடகாத்திரமான புத்திரனுக்குத் தாயாக மணப்பெண் விளங்க வேண்டு மென்பது, தனது விருப்பங்களில் ஒன்று என்பதாக, சடங்குகள் நடந்துகொண் டிருந்தபோது மணமகன் சொன்னார். இந்த விருப்பத்தைக் கேட்டு நான் திகில் அடையவில்லை. வம்ச விருத்தி கட்டாயம் என்பது இதன் பொருளல்ல; பிள்ளை வேண்டும் என்ற எண்ணமிருப்பின், திருமணத்தை மத உணர்ச்சியோடு நடத்த வேண்டுவது மிக மிக அவசியமாகும் என்பதே இதன் பொருள். குழந்தையை விரும்பாதவர்கள் மணமே செய்துகொள்ள வேண்டியதில்லை. காம உணர்ச்சியைத் தணித்துக்கொள்ளும் பொருட்டுச் செய்துகொள்ளுகிற மணம், மணமன்று; அதை விபசி*

சாரம் என்றே சொல்ல வேண்டும். சதிபதிகள் இருவருக்கும் குழந்தை வேண்டு மென்ற விருப்பம் இருப்பினல்லது, கலவி செய்யக் கூடாது என்பதே இன்று நடந்த சடங்கின் பொருளாகும். இது முழுதுமே ஒரு புனிதமான விஷயம். எனவே, கலவி என்பது தியானத்தோடு கூடியதாய் இருத்தல் வேண்டும். காம இன்பத்தையும் உணர்ச்சியையும் கிளறிவிடத் தக்க முறையில், வழக்கம்போல் சரஸ சல்லாபம் செய்து, கூடுவதாய் இருத்தல் கூடாது. ஒரு பிள்ளையைத் தவிர வேறு பிள்ளை வேண்டா மென்று எண்ணிஞல், வாழ்க்கையில் ஒரேயொரு முறை மட்டுமே கலவி செய்ய இடமுண்டு. ஆகவே, சீலமும் நல்ல உடல்நிலையும் இல்லாதவர்கள் கலவி செய்வதற்கே அதிகாரமில்லை. அவர்கள் செய்வார்களாயின் அதை வியபிசாரம் என்றே சொல்ல வேண்டும். மிருக இச்சையைத் தணித்துக்கொள்ளும் பொருட்டே மணம் ஏற்பட்டுள்ளதாக யாரேனும் உங்களுக்குக்குச் சொல்லி யிருந்தால், அதை நீங்கள் உடனே மறந்துவிடுங்கள். இந்த எண்ணம் மூடநம்பிக்கை யாகும். புனிதமான அக்கினியின் முன்பாகவே சடங்குகள் யாவும் நடந்தேறுகின்றன; உங்களிடமிருக்கும் காம உணர்ச்சிகளை எல்லாம் இந்த அக்கினியானது சாம்பலாக்கி விடட்டும்.

“இந்தக் காலத்தில் அதிகமாய்ப் பரவிக்கிடக்கும் இன்னொரு மூடநம்பிக்கையும் நீங்கள் விட்டுவிட வேண்டும். பிரமசரிய வாழ்க்கையும் புலனடக்கமும் தீங்கு பயக்கு மென்றும் கட்டுப்பாடின்றிக் காம இச்சையைத் தணித்துக்கொள்வதும், கட்டுப்பாடின்றிக் காதல் புரிவதும் மிக மிக இயற்கையான காரியங்கள் என்றும் சொல்லி வருகிருர்கள். அதைவிடக் கேடுபயக்கும் மூடநம்பிக்கை வேறு கிடையவே கிடையாது. புலனடக்கத்தைக் கைக்கொள்வதற்கு உங்களுக்குப் போதிய திறன் இல்லாதிருக்கலாம்; அதன் காரணமாக இலட்சியத்தை அடைவது சாத்தியமில்லாதும் போய்விடலாம். அதற்காக நீங்கள் உங்களது இலட்சியத்தையே தாழ்த்திக் கொண்டுவிடக் கூடாது; மதத்திற்குப் புறம்பான காரியங்களை மதம் என்று கருதக் கூடாது. தவறிவிடுவோம் என்ற எண்ணம் வருகிற சந்தர்ப்பங்களில் நான் சொல்லியதை நினைவுகூருங்கள்; புனிதமான இந்தச் சந்தர்ப்பத்தை நினைவுகூர்ந்தால் உங்களுக்குப் புலனடக்கமும் உறுதியும் ஏற்படும். காம இச்சையிலிருந்து விடுபட்டு மேல்நோக்கிச் செல்லுவதும் கட்டுப்பாட்டுடன் வாழ்க்கை நடத்துவதுமே மணவாழ்க்கையின் அடிப்படையான நோக்கங்களாகும். அவையன்றி வேறு

இலட்சியங்களுக்காகத் திருமணம் நடைபெறுமாயின், அது புனிதமற்ற ஒரு சடங்காகிவிடுகிறது.

"உற்ற நண்பர்கள் என்ற முறையிலும் சம அந்தஸ்து உடையவர்கள் என்ற முறையிலும் இப்போது இந்தத் திருமணத்தினால் நீங்கள் பிணைக்கப்படுகிறீர்கள். கணவனை ஸ்வாமி (எஜமான்) என்று அழைத்தால் மனைவியைத் தேவி (எஜமானி) என்று அழைக்கிறோம். ஒருவருக்கொருவர் எஜமானராகவும், கூட்டாளியாகவும் இருந்து, வாழ்க்கையில்நிறை வேற்ற வேண்டிய காரியங்களையும் கடமைகளையும் நிறை வேற்றிவைக்க ஒத்துழைக்க வேண்டும். இளைஞர்களே! மணப் பெண்களைக் காட்டிலும் சிறந்த அறிவும் உணர்ச்சியும் உங்களுக்கு இருக்குமாயின், அவற்றை அவர்களுக்கு ஊட்டுங்கள்; உண்மையான ஆசிரியர்களாகவும் வழிகாட்டிகளாகவும் இருந்து அவர்களுக்கு உதவுங்கள்; வழிகாட்டுங்கள்; தடைப் படுத்தாதீர்கள்; தப்பான வழிகளில் செலுத்தாதீர்கள். எண்ணம், சொல், செயல் ஆகிய அனைத்திலுமே, உங்களிடையே பரிபூரணமான ஒற்றுமை நிலவட்டும்; இரகசியமென்றபேச்சே வேண்டாம். ஈருடலும் ஓருயிருமாக விளங்குவீர்களாக!

"போலிகளாய் இராதீர்கள். இயலாத காரியங்களைச் சாதிக்க வீணே முயன்று, உடல்நலத்தைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள். கட்டுப்பாடு, ஒருவனது உடல் நலத்தைக் கெடுக்கவே மாட்டாது. வெளிப்படையான கட்டுப்பாடுகளால் உடல்நலம் குன்றுகிறதே யன்றி, மன அடக்கத்தினால் உடல் நலம் கெடுவதில்லை. உண்மையான தன்னடக்கமுள்ளவனுக்குத் தினந்தோறும் பலம் அதிகரித்துக்கொண்டே போகும்; மன அமைதியும் வளர்ந்துகொண்டே வரும். மனதை அங்குமிங்கும் அலையவிடாமல் எண்ணங்களைக் கட்டுப்படுத்துவதுதான் தன்னடக்கத்திற்கு முதற் படியாய் இருப்பது. உங்களுக்கு இருக்கும் ஆற்றலின் அளவை அறிந்துகொள்ளுங்கள்; எவ்வளவுக்கு உங்களால் இயலுமோ அவ்வளவுக்கு எதிலும் ஈடுபடுங்கள். இலட்சியம் எது என்பதைச் சரியான முறையில் உங்களுக்குச் சொல்லிவிட்டேன். நேர்மையாகவே நடந்துகொள்ள, கூடுமானவரை முயலுங்கள். தவறிவிட்டால், அதற்காக வருத்தமோ, வெட்கமோ பட வேண்டாம். பூணூல் அணிந்துகொள்வது எப்படி ஒரு புனிதமான சடங்கோ, அதை எப்படி ஒரு புதிய பிறப்பு என்று சொல்லுகிறோமோ அதே போலத் திருமணமும் ஒரு புனிதமான சடங்குதான், புதிய

பிறப்புத்தான் என்பதை உங்களுக்கு எளிய முறையில் விளக்கிச் சொன்னேன். நான் சொன்ன விஷயங்களைக் கேட்டுத் திகிலோ, சோர்வோ கொள்ள வேண்டாம். எண்ணம் சொல், செயல் ஆகிய மூன்றுக்குமிடையில் எப்போதுமே பரிபூரணமான தொடர்பு இருக்கட்டும். எப்போதுமே எண்ணத்தைப் பரிசுத்தமாக வைத்துக்கொள்ளுங்கள். மற்றவை யாவும் தாமே சரிப்பட்டுவிடும். எண்ணத்தைவிட வன்மை பொருந்தியது வேறெதுவுமில்லை. செயல் சொல்லைப் பின்பற்றியும், சொல் எண்ணத்தைப் பின்பற்றியும் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. மகா பலம் பொருந்திய எண்ணத்தினாலேயே, உலகம் இயங்குகிறது. எண்ணம் என்பது பரிசுத்தமாயும் பலம் பொருந்தியதாயும் இருக்குமானால், அதனால் ஏற்படும் பலன்களும் எப்போதுமே பரிசுத்தமானவையாயும் பலம் பொருந்தியவையாயும் இருக்கும். உன்னதமான இந்த இலட்சியத்தையே ஆயுதமாகக்கொண்டு, நீங்கள் வெளிக் கிளம்புங்கள். எந்த விதமான ஆசாபாசங்களாலும் உங்களுக்கு ஒரு விதத் தீங்கும் நேராது. கல்மஷமெதுவும் உங்களை வந்து பற்றிக்கொள்ள முடியாது.

"உங்களுக்கு விளக்கிச் சொல்லப்பட்ட பலசடங்குகளையும் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். எளிதானதாகத் தோன்றும் 'மதுபர்க்கா' என்ற சடங்கைச் சிறிது கவனியுங்கள். உலக முழுதுமே இனிமையான மது, இனிய அமுதம், நிறைந்திருக்கிறது; உலகத்தில் உங்களைத் தவிர, பாக்கி உள்ளவர்களுக்கு உரிய பங்கைக் கொடுத்துவிட்டு உங்களுக்கென ஏற்பட்டுள்ள பங்கை எடுத்துக்கொள்வதானால் நீங்கள் அந்த மதுவை அனுபவிக்கலாம். அதன் பொருள் என்னவென்றால் துறவு மனப்பாங்கே இன்பம் பயக்கும் என்பதாகும்.

**"பிள்ளைப்பேற்றில் ஆசை யில்லாவிட்டால் மணமே செய்துகொள்ளக் கூடாதா?" என்று மணமகன்களில் ஒருவர் கேட்டார்,**

"நிச்சயமாய்க் கூடாது. கட்டுப்பாடு இன்றி நடக்கும் மணங்களில் எனக்கு நம்பிக்கை இல்லை. காம வேட்கைக்காக வன்றி, பெண்களைப் பாதுகாக்க வேண்டு மென்ற நோக்கத்தோடு மணம் செய்துகொள்ளுகிற ஆடவர்களு முண்டு. இப்படி நடைபெறுகிற மணங்கள் மிக மிக அபூர்வம். பரிசுத்தமான மண வாழ்க்கையைப்பற்றி, நான் எழுதி யிருப்பவற்றை யெல்லாம் நீங்கள் படித்துப் பாருங்கள். மகாபாரதத்தில்

நான் படித்த விஷயம் ஒன்று என் உள்ளத்தில் தினந்தோறும் வேரூன்றி வருகிறது. நியோக முறைப்படி வியாசர் மணம் செய்துகொண்டார் என்று அங்கே சொல்லப்பட்டிருக்கிறது. அப்போது அவர் அழகில்லாது குரூபியாய்த் தோற்றமளித்தாராம்! அவருடைய தோற்றம் மிகவும் பயங்கரமா யிருந்ததென்றும், காம லீலை யாதொன்றையும் அவர் செய்யவில்லை என்றும், கலவி செய்வதற்கு முன்பு உடல் முழுதுமே நெய் பூசிக்கொண்டார் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. காம இச்சையைத் தணித்துக்கொள்வதற்காக அன்றி, பிள்ளைப் பேற்றிற்காகவே அவர் கலவி செய்தார். குழந்தை வேண்டுமென்ற ஆசை முற்றும் இயற்கையானது; அந்த ஆசை பூர்த்தியாகிக் குழந்தை பிறந்துவிட்டால், அப்புறம் கலவி என்பதே கூடாது.

"முதலில் பிறக்கிற குழந்தையைத் தர்மஜா வென்றும்-அதாவது கடமை உணர்ச்சியில் பிறந்த பிள்ளை என்றும்-அதற்குப் பிறகு பிறக்கிற குழந்தையைக் காமஜா வென்றும்—அதாவது காம இச்சையினால் பிறந்த பிள்ளை என்றும்—மனு சொல்லி இருக்கிறார். கலவி பற்றிய சட்டத்தின் சாராம்சம் இதில் அடங்கி இருக்கிறதெனலாம். சட்ட மென்பது என்ன? கடவுள்தான். சட்டத்தின்படி ஒழுகுவதே, கடவுளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகும். 'இந்தச் சட்டத்தை எந்த வழிகளிலும் மீற மாட்டேன்' என்று நீங்கள் மூன்று முறை திரும்பத் திரும்பச் சொன்னீர்கள். இதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். இந்தச் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு நடக்கும் ஆடவர் பெண்டிர் சுருக்கமாய் இருப்பினும் பாதகமில்லை. அவர்களைக் கொண்டு உண்மையான, திடகாத்திரமுள்ள ஆடவரையும் பெண்டிரையும் உற்பத்தி செய்துகொண்டு விடலாம்.

"காம இச்சையோடு கஸ்தூரிபாயை நோக்குவதை விட்டொழித்த பிறகே, மண வாழ்க்கையை நான் உண்மையாக அனுபவித்தேன் எனலாம். இதை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் இளமை ரத்தம் எனது உடலில் துடி துடித்துக்கொண்டிருந்த காலத்தில், நோய் நொடியின்றித் திடகாத்திரனாய் இருந்த காலத்தில், பிரமசரிய விரதத்தை அனுஷ்டிப்பதென நான் உறுதிகொண்டேன். அந்தச் சமயத்தில், எல்லோரும் சொல்லுகிற முறையில், போதுமான அளவு நான் இளைஞனாய் இருந்தேன் எனலாம். நானும் மற்றவர்களும் நாமெல்லோரும் புனிதமான ஒரு கைங்கரியத்தை நிறை

வேற்றும் பொருட்டே பிறந்திருக்கிறோம் என்ற எண்ணம் ஒரு நாள் திடீரென்று என் மனதில் உதித்தது. நான் மணம் செய்துகொண்ட காலத்தில், இந்த எண்ணம் எனக்கு இருந்த தில்லை. ஒரு கைங்கரியத்தைச் செய்து முடிக்கும் பொருட்டே பிறந்துள்ளேன் என்பதும் மணம் செய்துகொள்வது அந்தக் கைங்கரியத்திற்கு உதவிபுரிவதாய் இருக்கிற தென்றும் உணர்ந்துகொண்டேன்; அறிவும் அப்படியே சொல்லிற்று. அதன் பிறகே உண்மையான தர்மத்தை நான் உணர்ந்தேன். பிரதிக்ஞை செய்துகொண்ட பிறகே வாழ்க்கையில் உண்மை யான ஆனந்தம் பிறந்தது. கஸ்தூரி பாய் தோற்றத்தில் மெலிந்திருப்பினும், நல்ல தேகக்கட்டு வாய்ந்தவள்; காலையி லிருந்து இரவுவரை பாடுபட்டு உழைப்பாள். என்னுடைய காம இச்சைக்கு இலக்காகி இருந்திருப்பாளேயானால், அவ ளால் இவ்வளவு தூரம் பாடுபட முடியாது.

இப்படி இருந்தும், சில ஆண்டுகள் மணவாழ்க்கை நடத்தி யிருக்கிறேன்; ஆதலால், காலம் கடந்தே நான் விழிப்படைந் தேன் என்று சொல்ல வேண்டும். உங்களை அதிர்ஷ்டசாலி கள் எனலாம். ஏனெனில் சரியான காலத்தில் உங்களால் விழிப்படைய முடியும். நான் கலியாணம் செய்துகொண்ட காலத்தில், நிலைமைகள் மிகவும் மோசமாய் இருந்தன. ஆனால் உங்களுக்கோ இப்போது கால நிலை ஒத்ததாய் இருக்கிறது. ஒன்று மட்டும் எனக்குப் பாதுகாப்பாய் இருந்தது; அதைக் கொண்டு நான் கரையேறிவிட்டேன். உண்மைதான் அந்தப் பாதுகாப்பு; என்னை அபாயத்திலிருந்து விலக்கி, பாதுகாத்தது அதுவே யாகும். ¦எனது வாழ்க்கைக்கு அடிப்படையாய் இருந்தது உண்மைதான். பிறகே, உண்மையிலிருந்து அஹிம் சையும் பிரமசரியமும் தோன்றின; ஆகையால் எதைச் செய் யினும் உள்ளத்தில் உண்மையோடு செய்யுங்கள்; உலகத்திற் கும் உண்மையாக நடந்துகொள்ளுங்கள். சிந்தனைகளை ஒளிக் காதீர்கள் ; அவற்றை வெளியிடுவது வெட்கம் தருவதாய் இருக்குமானால், அவற்றை எண்ணிக்கொண் டிருப்பது இன் னும் அதிக வெட்கத்தைத் தருவதாகும்.

# 'திடுக்கிடச் செய்யும் முடிவுகள்'

**"காமப் பசியைத் தணித்துக்கொள்ளாமல் அடக்கிவிடுவதனுல் நோய் வரா தென்றும், உடம்போடு மனமும் ஒத்தியங்கினுல் உடல் நலமும் பலமும் உண்டாகு மென்றும் ஆணும் பெண்ணும் தெரிந்துகொள்வது அவசியம்."**

*வில்லியம் ஆர். தர்ஸ்டன், அவரது நூலை வெளியிட்டுள்ளவர்கள் முன்னுரைப்படி, ஐக்கிய அமெரிக்க ராணுவத்தில் மேஜர், உத்தியோகம் பார்த்தவர். அந்த ராணுவத்தில் கிட்டத்தட்டப் பத்து ஆண்டுகள் அவர் வேலைபார்த்திருக்கிறுர். இந்தப் பத்து வருடங்களுக்கிடையில், சீன உள்பட, உலகின் பல பகுதிகளிலும் அவருக்குப் பலவிதமான அனுபவங்கள் ஏற்பட்டன. மணம்பற்றிய சட்டங்களையும், பழக்க வழக்கங்களையும், இவற்றினுல் வரும் பலாபலன்களையும் தமது பிரயாணங்களின்போது அவர் நுட்பமாக ஆராய்ந்து பார்த்திருக்கிருர். அதன் விளைவாக', மணத்தைப்பற்றி ஒரு புத்தகம் எழுத வேண்டுமென்ற எண்ணம் உண்டாகி, ஒரு புத்தகமும் எழுதியிருக்கிருர். '**மணத்தைப்பற்றித் தர்ஸ்டன் தத்துவம்**' என்பது அந்தப் புத்தகத்தின் பெயர். இதை நியூயார்க்கிலிருக்கும் டிப்பனி பிரஸ்காரர் சென்ற வருடம் வெளியிட்டுள்ளார்கள். புத்தகத்தைப் பெரிய எழுத்தில் முப்பத்திரண்டு பக்கங்களில் அச்சிட்டிருக்கிருர்கள். ஒரு மணி நேரத்தில் அதைப் படித்து முடித்துவிடலாம். அதன் ஆசிரியர் வாதப் பிரதிவாதங்களில் தலையிடாது, தான் கொண்டுள்ள முடிவுகளை மட்டும் எழுதியிருக்கிருர். இந்த முடிவுகளைத் 'திடுக்கிடச் செய்யும் முடிவுகள்' என்று வெளியீட்டாளர் குறிப்பிட்டிருப்பது உண்மையேயாகும். யுத்த காலத்தில் எடுத்த 'சமூக சுகாதாரப் புள்ளி விவரம், மருத்துவ முறையில் எடுத்த புள்ளி விவரம், வைத்தியர்கள் கொடுத்து உதவிய தகவல்கள், சொந்தமாகக் கண்டறிந்த உண்மைகள்' ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டே இந்த முடிவுகளுக்கு வந்ததாக ஆசிரியர் தமது முகவுரையில் குறிப்பிட்டுள்ளார். அவரது முடிவுகள் வருமாறு:*

1. "உணவிற்காகவும் உறைவிடத்திற்காகவும் குழந்தை பெற வேண்டிய இயற்கை உரிமையை நிறைவேற்றுவதற்காகவும், ஆணுக்குப் பெண் அடிமையாக இருக்க வேண்டுமென்பதில்லை; அவற்றின் பொருட்டாக, கருவுற்று இருக்கும்போதும் சும்மா இருக்கும்போதும், ஆடவனேடு இரவு தவருமல் ஒரே படுக்கையிலே படுக்க வேண்டும்; வாழ்நாள் முழுதும் ஒரே வீட்

டிலே வாழ வேண்டும் என்று பெண்ணை இயற்கை படைக்க வில்லை.''

2. "இப்போது இருந்துவரும் மணம்பற்றிய சட்டங்கள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றின் விளைவாக ஆணும் பெண்ணும் தினந்தோறும் இரவில் ஒரே படுக்கையில் படுத்துக் கொள்கிறார்கள். இந்தப் பழக்கம் வரையறையில்லாமல் கலவி செய்யத் தூண்டுகிறது; இதனால் ஆணுக்கும் பெண்ணுக்கும் இயல்பாக உள்ள இயற்கை உணர்வு பாழ்பட்டுவிடுகிறது; மணம் செய்துகொண்டிருக்கும் பெண்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர், ஓரளவிற்கு வியபிசாரிகளாகிவிடுகிறார்கள். சட்டபூர்வமானதாய் இருக்கிறபடியால், அப்படி நடந்து கொள்வதே சரி என்றும் இயற்கை என்றும் மணம் செய்து கொண்ட பெண்களை நம்பும்படி செய்து வந்திருக்கிறோம்: கணவனுடைய அன்பு குன்றாதிருக்க வேண்டுமானால் இப்படி நடந்துகொள்வது அவசியமாகும் என்று சட்டமும் பழக்கமும் பெண்ணை நம்ப வைத்துவிட்டன.''

'கட்டுப்பாடின்றித் தொடர்ந்து கலவி செய்வதனால் ஏற்படும் பலாபலன்களைப்பற்றி, பிறகு ஆசிரியர் வர்ணித்துக் கொண்டு போகிறார். அவற்றை நான் சுருக்கமாகக் கீழே

(அ) "மிதமிஞ்சிய கலவியானது, பெண்களை, திருப்தியற்றவர்களாய், அமைதியற்றவர்களாய், சிடுசிடுப்புள்ளவர்களாய், நோயாளிகளாய், பிஞ்சிலே பழுத்தவர்களாய், மிகவும் நரம்புத் தளர்ச்சிகொண்டவர்களாய், குழந்தைகளைச் சரியானபடி கவனிக்கச் சக்தியற்றவர்களாய்ச் செய்துவிடுகிறது.

(ஆ) "தேவைக்கு அதிகமான குழந்தைகள் ஏழைகளுக்குப் பிறந்துவிடுகின்றன.

(இ) "உயர்தர வகுப்பாரிடையோ கட்டுப்பாடற்ற கலவி, கருச் சிதைவு, கருப்பத்தடை முதலிய முறைகளைக் கையாளும்படி செய்துவிடுகிறது.'' "பாமரப் பெண்களில் பெரும்பான்மையினருக்கு, '**பிள்ளைப்பேற்றை ஒழுங்குபடுத்தல் என்னும் பெயராலோ வேறு பெயராலோ கருப்பத்தடை முறைகளைக் கையாளும்படி சொல்லிக் கொடுப்போமேயானால் பொதுப்படையாக, நோயுற்று, ஒழுக்கங் கெட்டு, பாழாய்ப்போகும் நிலைக்கு மக்களினம் வந்துவிடும். கடைசியாக, மக்களினமே அழிந்து போகும்**'' [தடித்த எழுத்து ஆசிரியர் உபயோகித்துள்ளது.]

(ஈ) "சிறந்த முறையில் வாழ்வதற்குப் போதுமான சம்பாத்தியம் வேண்டும். அதற்குத் தேவைப்படும் உயிர்ச்சத்து மிதமிஞ்சிய கலவியினால் ஆணிடமிருந்து நீங்கிவிடுகிறது.''

**"ஐக்கிய அமெரிக்காவில் தாரமிழந்த ஆண்களைக் காட்டிலும் விதவைகள் சுமார் இருபது லட்சம் பேர் அதிகமாய் இருக்கிறார்கள். இந்த விதவைகளில் யுத்தத்தில் கணவனை இழந்து விதவையானவர்கள் எண்ணிக்கை சொற்பம்."**

*(உ) "இப்போது இருக்கிற மணவாழ்க்கை நிலை, மிதமிஞ்சிய கலவிக்கு இடந் தருகிறது.* **இதனால் ஆண் பெண் இரு** *சாராருமே செயலில் ஈடுபடுவதற்கு வேண்டிய உற்சாகத்தை இழந்துவிடுகிறார்கள். அவர்களிடம் செயலற்றதன்மை அதிகரித்துவிடுகிறது."* **"பெரிய பெரிய நகரங்களில் கேவலமான, சுகாதாரக் குறைவான பகுதிகள் பல இருப்பதற்கும் உலகில் காணப்படும் வறுமைக்கும் காரணம் லாபந்தரக்கூடிய தொழில் முறை இல்லாமை யன்று; தற்காலத்திய மணச் சட்டங்களின் விளைவாக நடைபெறும் கட்டுப்பாடற்ற மிதமிஞ்சிய கலவியே காரண மாகும்."**

*(ஊ) "மக்களினத்தின் பிற்கால வாழ்வை மனதில் வைத்துக்கொண்டு பார்ப்போமேயானால், இவை யாவற்றையும்விட மிக மிக அபாயமானது, பெண்கள் கருவுற்று இருக்கும் காலத்தில் கலவி செய்வதுதான்."*

*பிறகு, இந்தியாமீதும் சீனாமீதும் குற்றம் சாட்டும் பகுதி வருகிறது. அதைப்பற்றி நான் ஆராய விரும்பவில்லை. இந்த விஷயம் அந்தச் சிறிய புத்தகத்தில் பாதி அளவு இருக்கிறது. மறு பாதியில் பரிகாரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.*

*கணவனும் மனைவியும் தனித் தனி அறைகளில் வசிக்க வேண்டும், தனித் தனியே படுத்துறங்க வேண்டும். முக்கியமாக மனைவிக்குக் குழந்தை விருப்பம் இருந்தால் மட்டுமே கலவி செய்ய வேண்டும் என்பதை அடைப்படையாக வைத்தே பரிகாரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. மணச் சட்டங்களில் என்னென்ன மாறுதல்கள் செய்யலாம் என்று குறிப்பிட்டுள்ளவற்றைப்பற்றி நான் ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. மணம் செய்துகொள்வோர் ஒரே அறையில் ஒரே படுக்கையில் படுத்துக்கொள்கிறார்கள் ; உலக முழுமைக்குமே இந்த முறை பொதுவாக இருக்கிறது. இதை ஆசிரியர் அளவு மீறிக் கண்டிக்கிறார்; அவர் கண்டிப்பது சரிதான் என்பது என் கருத்து. ஆண் பெண் இரு பாலாரிடையும் காம இச்சை அதிகமிருப்பதற்குக் காரணம், மணம் செய்துகொண்டவர்கள் ஒரே அறையில் ஒரே படுக்கையில் படுத்துக்கொள்ள வேண்டும் என்ற மூடநம்பிக்கைதான். இந்த மூடநம்பிக்கைக்கு மதத்தின் அங்கீகாரமும் கிடைத்திருக்கிறது. இவ்விதமான சூழ்நிலையில் வாழ்ந்து வருவதால், அதனால் ஏற்பட்டுள்ள கேடு எவ்வளவு என்பதை நம்மால் சரியானபடி மதிப்*

பிட முடியவில்லை. இப்படிச் சீரழிந்த நிலைக்கு வந்துவிட்டது நமது மனநிலை.

இதைப் போலவே, கருப்பத் தடையையும் ஆசிரியர் கடுமையாகக் கண்டிக்கிறார். இதை நாம் ஏற்கனவே பார்த்தோம்.

அவர் சொல்லியுள்ள மற்ற பரிகாரங்கள் நமது நடைமுறைக்கு ஏற்றனவா யில்லை. அவற்றைச் சட்ட மூலமாகவே கொணர வேண்டு மென்று நான் அபிப்பிராயப்படுகிறேன். சட்டம் வரட்டும் என்று நாம் காத்திருக்க வேண்டியதில்லை. ஒவ்வொரு கணவனும் மனைவியும் ஒரே அறையில் ஒரே படுக்கையில் படுப்பதில்லை என்று இன்றே உறுதியோடு தீர்மானம் செய்துகொள்ளட்டும். மனிதனிடமும் விலங்கினிடமும் காணப்படும் போக இச்சை ஒரே யொரு உயர்ந்த நோக்கத்தை நிறைவேற்றும் பொருட்டே ஏற்பட்டதாகும். அதைத் தவிர வேறு நோக்கோடு கலவி செய்ய மாட்டோம் என்று அவர்கள் உறுதி செய்துகொள்ளட்டும்.

விலங்குகள் இந்த நியதியில் யாதொரு மாறுதலுமின்றி நடந்துகொள்கின்றன. பகுத்தறிவு இருந்தும் தவறான வழியில் மனிதன் சென்றுவிட்டான்; வருந்தத்தக்க முறையில், தவறு செய்துவிட்டான். கருப்பத்தடை முறை எதுவுமே எங்களுக்கு வேண்டா மென்று பெண்கள் மறுத்துவிடலாம். காமப் பசியைத் தணித்துக்கொள்ளாமல் அடக்கிவிடுவதனால் நோய் வரா தென்றும், உடம்போடு மனமும் ஒத்தியங்கினால் -ல்நலமும் பலமும் உண்டாகு மென்றும் ஆணும் பெண் ும் தெரிந்துகொள்வது அவசியம். உலகத்தில் காணப்படும் கள் யாவற்றிற்கும் பெரும்பாலும் பொறுப்பாய் இருப்பன நடைமுறையில் தற்காலத்தில் இருந்துவரும் மணச்சட்டங்கள்தான் என்று ஆசிரியர் ஒரேயடியாய் அடித்துவிட்டார். நான் சொல்லிய இரண்டு விஷயங்களைப்பற்றித் தீர்மான மான முடிவிற்கு வர, அவரது கருத்தை நாமும் ஏற்றுக்கொள்ள வேண்டு மென்பதில்லை. எதிர்காலச் சந்ததியாரின் ஒழுக்கத்துக்கு நம்மைத் தர்மகர்த்தாக்களாகக் கருதிக்கொண்டு, ஆண் பெண் தொடர்பு பற்றிய விஷயங்களைச் செம்மையான முறையிலும் தெளிந்த அறிவோடும் கவனிப்போமானால் உலகில் காணப்படும் துன்பங்களில் பெரும்பாலானவை மறைந்துவிடும் என்பதில் ஒருசிறிதும் ஐயமில்லை.

# கருப்பத்தடை உற்சாகி

**"புதிதாய் ஒரு உயிரைச் சிருஷ்டிப்ப தென்பது கிட்டத்தட்ட தெய்விகமான தொரு காரியம். நான் சொல்வதெல்லாம் அந்தக் காரியத்திலே தெய்விகமான தொரு முறையில் ஈடுபட வேண்டு மென்பதுதான். அதாவது ஆணும் பெண்ணும் புதிதாய் ஒரு உயிரைச் சிருஷ்டிக்க வேண்டு மென்ற ஆசையைத் தவிர, வேறு ஆசை எதுவுமே இல்லாமல், ஒருவரை ஒருவர் அணுக வேண்டும்."**

ஏழைகளின் தொண்டிற் கென்றே தன்னுடமுள்ளவை அனைத்தையும் செலவிட்ட கிழக் குடியானவனுக்கு முற்றும் நேரமாறாக விளங்கினார் இங்கிலாந்திலிருந்து இங்கு வந்திருந்த கருப்பத்தடை உற்சாகியான திருமதி. ஹௌ-மார்டின். இந்தியாவி லிருக்கும் ஏழை மக்களிடம் தமது சித்தாந்தத்தைப் பரப்பி, அவர்களைக் கைதூக்கிவிட வேண்டு மென்ற நோக்கோடு அவர் இங்கு வந்தார். இந்த விஷயத்தில் ஒன்று காந்திஜீயின் கொள்கையை மாற்றுவது அல்லது காந்திஜீ மூலம் தம் கொள்கையை மாற்றிக்கொள்வ தென்று அவர் வந்தார்; இந்தியாவுக்கு முதல் தடவையாக வந்திருப்பதால் அவருக்கு இங்குள்ள ஏழை மக்களைப்பற்றி எதுவுமே தெரியாது. பிரிட்டனில் ஏழை எளியவர்கள் வசிக்கிற பகுதிகளில் தமக்குள்ள அனுபவத்தை எடுத்துச் சொல்லி, வலிமை படைத்த ஆடவனுக்கு இணங்கிப் போக வேண்டியிருக்கும் "அபலையான பெண்"ணுக்குக்காக அவர் பரிந்து பேசலானார்.

முதல் சித்தாந்தத்தைச் சொல்லுகையிலேயே காந்திஜீ அவரைப் பிடித்துக்கொண்டார். "அபலைப் பெண் என்று ஒருத்தி கிடையாது. நீங்கள் அபலை என்று சொல்லும் பெண்ணுக்கு ஆணைக் காட்டிலும் அதிக சக்தி யுண்டு. இந்தியக் கிராமங்களுக்கு என்னோடு நீங்கள் வருவீர்களேயானால், இந்த உண்மையை நான் நிரூபிக்க முடியும், தனக்குப் பிரியமில்லாததைச் செய்யும்படி வற்புறுத்துவதற்கு, பெண் வயிற்றில் பிறந்த எந்த ஆடவனாலுமே முடியாது என்பதை அங்குள்ள எந்தப் பெண்ணும் நிச்சயமாய்ச் சொல்வதை நீங்கள் காணலாம் என் மனைவியிடம் அடைந்த அனுபவத்தைக் கொண்டுதான் நான் இதைத் தங்களுக்குச் சொல்லுகிறேன். என்னைப்போல இந்த அனுபவம் இன்னும் எத்தனையோ பேருக்கு உண்டு. இறந்தாலும் இறப்பேனே ஒழிய இணங்கவே மாட்டேன் என்ற உறுதி பெண்களுக்கு இருக்குமாயின், எவ்வளவு பலம் படைத்த பூதமாயினும் சரி, பெண்களை இணங்கும்படி செய்ய முடியாது. சரி, அது போகட்டும்.

கலவி என்பது இரு தரப்பிற்கும் பொதுவான ஒரு காரியம்' ஆண் பெண் இருவரிடமுமே தெய்வத்தன்மை மிருகத்தன்மை இரண்டும் கலந்திருக்கின்றன. மிருகத்தன்மையை வசப் படுத்திவிட்டால் எல்லாம் நன்மையாய் முடியும்.''

''தனக்கு அதிகமான குழந்தைகள் வேண்டா மென்பதற் காக, ஆடவன் வேறு பெண்ணை நாடினால் பெண் என்ன செய்வது?''

"எந்தக் கருத்தோடு பேச ஆரம்பித்தீர்களோ அதற்கே மாருக நீங்கள் இப்போது பேசுகிறீர்கள். நீங்கள் சொன்ன பீடிகையையே திரித்துக் கூறினால், தவருன முடிபுக்கு வரும் படி நேரிடும். இது இப்படி இருக்கும், அது அப்படி இருக்கும் என்று கற்பனை செய்துகொள்ளாதீர்கள். ஆண் தன்மையை ஒழித்து ஆணைப்பற்றியும் பெண் தன்மையை ஒழித்துப் பெண் ணைப்பற்றியும் பேசாதீர்கள். நீங்கள் பரப்ப விரும்புகிற கொள்கையின் அடிப்படை யாது என்பதை எனக்குத் தெரி யக் கூறுங்கள். உங்கள் கருப்பத்தடைப் பிரசாரமே அறிமுகத் துக்குப் போதுமே என்று நான் சொன்னபோது, நான் அதை வெறும் விளையாட்டாக மட்டும் சொல்லவில்லை; கருக்கடை யோடுதான் சொன்னேன். நமது ஈடேற்றத்திற்கு வழி கருப் பத்தடைதான் என்று சில ஆடவரும் பெண்டிரும் எண்ணு கிருர்கள் என்பது எனக்குத் தெரியும். எனவே கருப்பத் தடையின் அடிப்படையான நோக்கம் என்ன வென்பதை என்னிடம் சொல்லுங்கள்.''

''உலகத்தின் ஈடேற்றம் கருப்பத்தடையிலே இருக்கிறது என்று சொல்லுவது சரியல்ல. ஆனால் எந்த உருவத்திலாவது கருப்பத்தடை இருந்தே யாக வேண்டும்; இல்லையேல் ஈடேற் றம் என்பதும் இல்லை. தாங்கள் சொல்லுகிற முறை ஒரு விதமாய் இருக்கலாம். தாங்கள் சொல்லுகிற முறையையும் நான் சிபாரிசு செய்யத்தான் செய்கிறேன். ஆனால், எல்லோ ருக்குமே அது பொருந்தாது. ஒரு அழகான காரியத்தை ஆட்சேபகரமானதாகத் தாங்கள் கொள்வதாகத் தோன்று கிறது. இரண்டு உயிர்கள் புதியதொரு உயிரை சிருஷ்டிப் பதற்கே ஒன்றுசேர்கின்றன. இந்த நிலையில் அந்த இரண்டு உயிர்களும் தெய்வத்தன்மையை அணுகுவதாகச் சொல்ல லாம். இந்த ஈடுபாட்டில் ஏதோ மிகவும் அழகான விஷயம் இருக்கவே செய்கிறது'' என்று திருமதி மார்ட்டின் சொன்னார்.

காந்திஜீ சொன்னார்: '' இங்கேயும் தாங்கள் மறுபடியும் குழப்பமடைந்து கஷ்டப்பட்டுகிறீர்கள். புதிதாய் ஒரு உயி ரைச் சிருஷ்டிப்பதென்பது கிட்டத்தட்ட தெய்விகமானதொரு

காரியம். நான் சொல்வதெல்லாம் அந்தக் காரியத்தில் தெய்விகமான தொரு முறையில் ஈடுபட வேண்டுமென்பதுதான். அதாவது ஆணும் பெண்ணும், புதிதாய் ஒரு உயிரைச் சிருஷ்டிக்க வேண்டுமென்ற ஆசையைத் தவிர வேறு ஆசை எதுவுமே இல்லாமல் ஒருவரை ஒருவர் அணுக வேண்டும். அப்படியின்றி, காம இச்சையோடு ஒருவரை ஒருவர் தழுவிக்கொள்ள முற்படுவார்களேயானால், பைசாசத்தன்மையை அவர்கள் அணுகிவிட்டதாகவே சொல்ல வேண்டும். தெய்வத்தன்மைக்கு அண்மையில் இருக்கிறோம் என்ற எண்ணம் துரதிர்ஷ்டவசமாக ஆடவனுக்கு இருப்பதில்லை. அதை மறந்து, அவனிடம் மிருக இயல்பு மேலோங்கிவிடுகிறது. இதன் காரணமாக, மனிதன் மிருகத்தைவிடக் கீழான நிலைக்கு வந்துவிடுகிறான்."

"மிருகத்தைத் தாங்கள் ஏன் இவ்வளவு தூரம் பழித்துரைக்கிறீர்கள்."

"நான் மிருகத்தைப் பழித்துரைக்கவில்லையே. மிருகம் தனது இயல்புக்கு ஏற்றவாறு நடந்துகொள்கிறது. சிங்கத்தின் தோற்றத்தைப் பார்த்தாலே அது ஒரு கெம்பீரமான மிருகம் என்பது தெரியவரும், என்னை விழுங்கிவிடுவதற்கு அதற்குப் பூரண உரிமையுண்டு. அதற்காக நானும் அதைப் போல நகங்களை வளர்த்துக்கொண்டு உங்கள்மீது பாயலாமா? அப்படிப் பாய்ந்தால் மிருகத்தின் நிலைமைக்கு நான் கீழே இறங்கி வந்து, மிருகத்தைவிடக் கேவலமாக ஆகிவிடுகிறேன்."

"என்னுடைய எண்ணத்தைச் சரிவரத் தெரிவிக்க முடியாமைக்கு வருந்துகிறேன். கருப்பத்தடையினால் பெரும்பாலோர் ஈடேற முடியாதென்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். மேலான வாழ்க்கை வாழ்வதற்கு, கருப்பத்தடை உதவியாயிருக்கும். எனது கருத்தைத் தெளிவாக உங்களுக்குச் சொல்லிவிட்டேனா என்ற சந்தேகம் எனக்கு இருப்பினும், நான் சொல்ல விரும்பியதைத் தாங்கள் தெரிந்துகொண்டிருக்கக் கூடும்" என்று திருமதி. ஹௌ-மார்ட்டின் சொன்னார்.

"இல்லை. என்னுடைய கருத்தைத் தாங்கள் புரிந்துகொள்ளும்படி சொல்வதுதான் எனது விருப்பமேயன்றி, தங்களிடம் காணப்படும் குறைபாட்டை அநாவசியமாகப் பயன்படுத்திக்கொள்வது என்னுடைய நோக்கமன்று. தப்பாக எண்ணிக்கொண்டு விஷயத்தை ஒதுக்கிவிட வேண்டாம். மேல்நோக்கிச் செல்வது அல்லது கீழ்நோக்கிப்

போவது இந்த இரண்டு வழிகளில் ஒன்றை மனிதன் கடைப் பிடித்தாகவேண்டும். கீழ்நோக்கிப்போவதற்குரிய பாதையை அழகுபடுத்திக் காட்டிவிட்டால், மிருக இயல்பு உள்ள மனிதன் மேல்நோக்கிச் செல்வதற்குப் பதில் கீழ்நோக்கி எளிதாகப் போய்விடுவான். தர்மம் என்ற ஆடையை உடுத்திப் பாவத்தை அழகுபடுத்திக் காட்டிவிட்டால் மனிதன் அதற்கு எளிதிலே அடிமையாகிவிடுவான். இதையே மேரி ஸ்டோப்ஸூம் பிறரும் செய்துகொண் டிருக்கிறார்கள். மனம் போனவாறு அனுபவிக்கலாம் என்ற சித்தாந்தத்தைப் பரப்ப முயலுவோமாயின், ஆண்கள் அதை விடாப்பிடியாக எளிதில் பற்றிக்கொள்வார்கள். உங்களைப் போன்றவர்கள் உங்களுடைய கொள்கைகளைப் பற்றித் தன்னலமற்ற உற்சாகத்தோடு, தொண்டை கிழியக் கத்தினால் வெளித்தோற்றத்துக்கு வெற்றியை அடையக் கூடும். அப்படி நீங்கள் அடையும் வெற்றி கடைசியில் சாவாகவே முடியும்; இது தவறு என்பதை நீங்கள் உணராது இருக்கவும் கூடும். கீழ்நோக்கிச் செல்லும் இயல்புக்குப் பரிந்து பேச வேண்டிய அவசியமில்லை; விவாதமும் தேவையில்லை. அவை இரண்டும் அதில் அடங்கியே இருக்கின்றன. கீழ்நோக்கிப் போகும் தன்மையை கட்டுப்படுத்தி ஒழுங்கு செய்யாவிட்டால், நோயும் தொத்து வியாதியும் பரவ ஏதுவாகும்.''

தெய்வத்தன்மைக்கும் பேய்த்தன்மைக்குமிடையில் வேறுபாடு உண்டு என்று இதுவரை கருதிய திருமதி ஹௌ மார்ட்டின், இப்போது அவை இரண்டிற்கும் இடையில் உண்மையாகவே அதிக வேறுபாடு கிடையாதென்றும், மக்கள் எண்ணுவதைக் காட்டிலும் அவை இரண்டிற்குமிடையில் அதிகமான தொடர்பு இருக்கிறதென்றும் சொல்லி, திருப்தியடைந்தார். உண்மையாக, கருப்பத்தடைத் தத்துவத்தை யெல்லாம் தாங்கிநிற்பது இது ஒன்றுதான்; அவர்களின் உயிர்நிலையான ஆயுதமும் இதுதான்; கருப்பத்தடையைப்பற்றிப் பேசும் உற்சாகிகள் அதுவே தங்கள் கொள்கையிலுள்ள ஊனம் மென்பதை மறந்துவிடுகிறார்கள்.

"அப்படியாயின், தெய்வத்தன்மையும் பேய்த்தன்மையும் ஒன்றுதான் என்று சொல்லுகிறீர்களா? ஒளியில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா? அதில் நம்பிக்கை இருக்குமாயின் இருட்டிலும் உங்களுக்கு நம்பிக்கை இருந்துதானே ஆக வேண்டும்''? என்று கேட்டார் காந்திஜீ.

"இருட்டைத் தாங்கள் ஏன் பேய் என்று குறிப்பிடுகிறீர்கள்?''

"பிரியப்பட்டால், தாங்கள் அதைக் 'கடவுள்-இன்மை' என்று அழைக்கலாம்."

"இருட்டில் கடவுள்-இன்மை இருப்பதாக நான் கருத வில்லை. எங்குமே உயிர்த் தத்துவம் நிரம்பிக் கிடக்கிறது."

"உயிர் இன்மை என்பது இருக்கவே செய்கிறது. உயிர் மறைந்துவிட்டதும் ஹிந்துக்கள் உற்றார் உறவினர் உடல்களை நெருப்பிலிட்டுச் சாம்பலாக்கிவிடுவார்கள். இது உங்களுக்குத் தெரியுமா? உயிர்வர்க்கம் அனைத்திலுமே, முக்கியமாக ஒருவித ஒற்றுமை நிலவுகிறது; அதேபோல வேற்றுமையும் நிலவுகிறது. இவற்றை நன்கு ஆராய்ந்து பார்த்து வேற்றுமைகளுக் கிடையில் ஒற்றுமையைக் காண வேண்டும், நீங்கள் பார்ப்பதைப் போல, அறிவுக் கண்கொண்டு இதைப் பார்த்தல் கூடாது. உண்மை இருக்கிற இடத்தில் பொய்யும் இருக்கும். மனம், புத்தி, உடல் மூன்றையும் பணிய வைத்தாலன்றி விரிந்த மனஉணர்வு வருவது இயலாத காரியம்."

திருமதி ஹௌ-மார்ட்டின் திகைப்படைந்தவராய்க் காணப்பட்டார். நேரமும் அதிகமாகிக்கொண் டிருந்தது. காந்திஜீ சொன்னார்: "உங்களுக்கு இன்னும் அவகாசம் தருகிறேன், வர்தாவுக்கு வந்து என்னோடு தங்கி யிருங்கள். நானும் இந்த விஷயத்தில் உங்களைப் போலவே ஒரு உற்சாகி தான். இந்தியாவைவிட்டுப் புறப்படுவதற்கு முன், என் மனநிலை மாற்றம் அடையும்படி நீங்கள் செய்ய வேண்டும்; அல்லது உங்கள் மனநிலை மாற்றம் அடையும்படி நான் செய்ய வேண்டும்."

உணர்ச்சி வேகத்துடன் நடந்த இந்த விவாதத்தை நான் கேட்டுக்கொண் டிருந்தேன். மற்ற ஏற்பாடுகள் வந்து குறுக்கிட்டமையால், விவாதம் அத்துடன் நின்றுபோயிற்று. அப்போது ஞானி அஸ்ஸிஸி பிரான்ஸிஸின் மகத்தான வாக்கு என் நினைவிற்கு வந்தது; ஒளி கீழே குனிந்து பார்த்தது, எங்கும் இருள்மயமா யிருந்தது: அங்கே நான் போயாக வேண்டும் என ஒளி சொல்லிற்று. சாந்தம் குனிந்து பார்த்தது, யுத்தம் நடப்பதைக் கண்ணுற்றது: சரி, நாம் அங்கே போவோம் என்று சொல்லிற்று சாந்தம். அன்பு குனிந்து பார்த்தது; வெறுப்பு தென்பட்டது. சரி, நாம் அங்கே போவோம் என்று அன்பு சொல்லிற்று. இந்த மூன்றும் ஒன்றுசேர்ந்து, உடம்பும் உயிருமாகி நம்மிடையே உலவிக்கொண் டிருக்கின்றன."

—மகாதேவ தேசாய்

# திருமதி சாங்கரும் கருப்பத்தடையும்

**" பெண்களுக்கு விரோதமாக ஆண்கள்தான் சட்டம் _ _ _ ஞர்கள். ஆண் பெண்ணைத் தனக்கொரு கருவியாகக் கருதி வந்திருக்கிருன். பெண்ணும் ஆணுக்குக் கருவியா யாக இருக்கக் கற்றுக்கொண்டுவிட்டாள். கடைசியில் இப்படி இருப்பதே சுகம், இதுவே இன்பம் எனக் கண்டு கொண்டாள். பள்ளத்தில் விழுகிறவன் மேலே இருக்கின்ற வனைப் பரபர வென்று எளிதாகக் கீழே இழுத்துவிடலாம்."**

*கருப்பத்தடை இயக்கத்தின் பிரசித்தபெற்ற தலைவி யான திருமதி மார்கரெட் சாங்கர் வர்தாவிற்கு வந்துபோனுர். இங்கு வந்து திரும்பிய நாள்முதல் அவரிடம் காணப்படும் பலதிறப்பட்ட மனப்போக்குகளை நான் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறேன். முதன் முதலாக, காந்திஜீ அவருக்கு அளித்த விசேஷம் வாய்ந்த பேட்டியில் நான் கண்டதைச் சொல்கிறேன். "அடிக்கடி கருப்பமுற்றுத் தொல்லைப்படாமல் இருப்பதற்கு, நடைமுறைக்கு ஏற்றதான வழி ஏதேனும் சொல்லும்படியும், குடும்பத்தின் அளவைக் கட்டுப்படுத்திக் கொள்ள விருப்பமிருந்தும், என்ன செய்வதென்று தெரியாத வர்களுக்கு ஏதாவது உபதேசம் செய்யும்படியும், ஒழுக் கத்தை உபதேசிக்கும் பெரியார் என்ற முறையில் காந்தி ஜீயைத் தாம் வேண்டிக்கொள்வதாகவும்" அந்தப் பேட்டி களின்போது திருமதி சாங்கர் சொன்னுர். இந்தச் சம்பாஷ ணையில் காந்திஜீ தமது ஆவி ஜீவன் அடங்கலையும் ஈடுபடுத்தி அந்த அம்மையாரோடு பேசிக்கொண் டிருந்தார். அம்மை யாரோ, காந்திஜீக்கும் தமக்கும் ஒரு விஷயத்திலாவது ஒத்த மனப்போக்கு இருப்பதைக் காணப் பிரயத்தனப்பட் டார்; தாமும் அவரும் எவ்வளவு தூரம் உடன்பட முடியும் என்பதையும் காண முயன்ருர்; எந்த அளவுக்குத் தான் உடன் பட முடியு மென்பதைக் காந்திஜீ குறிப்பிட்டுக்காட்டினுர். "இந்தியாவிலுள்ள ஆயிரக்கணக்கான பெண்களின் அனு பவம் அபிலாஷை ஆகியவற்றைப்பற்றி எனக்குத் தெரியும்" என்று "வியக்கத்தக்க முறையில் தற்பெருமை பாராட்டிக் கொள்பவர்" என்று காந்திஜீயைப்பற்றி* **டைம்ஸ் ஆப் இந்தியா** *வாரப் பத்திரிகையில் திருமதி சாங்கர் கேலி செய் திருக்கிருர். அவருடைய இரண்டாவது மனப்போக்கு இந்தக் கட்டுரையில் வெளியாகிறது.* **"உங்களுடைய வாக்கை ஒரு மகானின் வாக்குப்போல் கோடிக்கணக்கான மக்கள் மதிக்கிருர்கள்" என்று சொல்லி, சிக்கலான இந்தப்**

பிரசினைக்கு முடிவு காணும்பொருட்டுத் தாம் வர்தாவுக்கு வந்திருப்பதாகத் தெரிவித்தார். காந்திஜீயின் சொல்லைக் கேட்டு ஆயிரக் கணக்கான பெண்கள் சிறை சென்றிருக்கிறார்கள்; அப்படியிருந்தும், அவர்களுடைய அனுபவங்கள் அபிலாஷைகளைப்பற்றித் தமக்குத் தெரியும் என்று காந்திஜீ சொல்வதை திருமதி சாங்கர் நையாண்டி பண்ணுகிறார். இந்தியப் பெண்மணிகளைப்பற்றிக் காந்திஜீக்கு ஒன்றுமே தெரியாது என்று நிரூபிப்பதே அவருடைய நோக்கம். பேட்டி கண்டபோது, எந்தெந்த விஷயங்களில் காந்திஜீயுடன் தாம் உடன்பட முடியும் என்பதைக் காண முயன்றதையும், எவ்வளவிற்கு, காந்திஜீ அவருடன் உடன்படத் தயாராய் இருந்தார் என்பதையும் பற்றி, அந்தக் கட்டுரையில் ஒன்றுமே காணோம். சர்வமத மகாநாட்டில் "வருங்காலப் பெண்கள்" என்பதுபற்றி திருமதி சாங்கர் ஒரு பிரசங்கம் செய்துள்ளார். அவரிடம் காணப்படும் மூன்றாவது மனப்போக்கு இதில் வெளியாகிறது. இதைப் பற்றி, கட்டுரையின் கடைசிப் பகுதியில் குறிப்பிடுகிறேன்.

சரி, பேட்டியைப்பற்றிக் கவனிப்போம். ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல, காந்திஜீ தமது உள்ளத்தை அப்படியே அவருக்குத் திறந்து காட்டினார். தமது அந்தரங்க வாழ்க்கையில் நடந்த விஷயங்களை எல்லாம் குறிப்பாக எடுத்துச் சொன்னார்; தன்னடக்கத்தின் மூலமே தன்னை அறிய முடியுமென்றும், வாழ்க்கையில் காணப்படும் சிக்கல்களுக்கு அது ஒன்றினாலேயே வழி காண முடியுமென்றும், வாழ்க்கையைப் பற்றித் தாம் கொண்டுள்ள சித்தாந்தம் இதுதான் என்றும், தம்முடைய சக்தியின் அளவைத் தாம் அறிந்திருப்பதாகவும், அந்த மகத்தான சக்திக்குள் தமது வாழ்க்கைச் சித்தாந்தம் எவ்வளவு தூரம் அடங்கியுள்ளது என்பதைத் தாம் அறிந்திருப்பதாகவும், காந்திஜீ தெரிவித்துக்கொண்டார். "எனது சம்மதத்தைப் பெற விரும்புகிற பெண்ணுக்கு, கருப்பத்தடை முறையைச் சாதனமாகக் கொள்ளும்படி நான் சொல்ல மாட்டேன். இப்படித்தான் சொல்வேன்: "நான் சொல்லுகிற சாதனம் உங்களுக்குப் பயன்படாது; வேறு யாரிடமாவது போய்க் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள் என்று சொல்லிவிடுவேன்." "சிலருக்கு இது கடினமாயிருக்குமே" என்றார். திருமதி சாங்கர். "ஆம், சிலருக்கு இது சங்கடம் தரும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். இல்லாவிட்டால், கருப்பத்தடை உற்சாகிகளுக்குப் பேசுவதற்கு விஷயமேது? கூடுமானவரை முயன்று ஏதாவது பரிகாரம் தேடுங்கள். நீங்கள் இப்போது சொல்லுகிற பரிகாரம் நீங்கலாக வேறு எதை வேண்டுமானாலும் கண்டு

பிடியுங்கள். ஒழுக்கநடையைத் திருத்தியமைக்க விரும்புகிற வர்கள் என்ற முறையில் நாம் இருவரும் இதை ஒதுக்கிவிட்டு வேறு முறைகளைத்தான் கையாண்டு பார்க்க வேண்டும் என்று சொல்லுவோமாயின், நிச்சயமாக அந்த முறைகளைக் கண்டு பிடித்துவிடலாம்" என்றார் காந்திஜீ. பெண்களுடைய தலை எழுத்தைப் பெண்களே நிர்ணயித்துக்கொள்ள வேண்டுமென் பதையும் பெண்களுக்கு விடுதலை வேண்டுமென்பதையும் இருவரும் ஒப்புக்கொண்டார்கள். அஹிம்சையின் மூலமாக வெற்றிபெற முடியாது என்று உறுதிகொண்டு, பலாத்காரத் தில் நம்பிக்கை உள்ளவர்கள், இந்திய விடுதலைக்குக் காந்திஜீ பலாத்கார முறைகளைக் கையாள வேண்டுமென்று விரும்பு கிறார்கள். அதேபோல, திருமதி சாங்கரும், தமக்கு ரொம்ப வும் பிடித்தமான திட்டத்தின் மூலமாகவே காந்திஜீ பெண் களின் விடுதலைக்காகப் பாடுபட வேண்டுமென்று விரும்புகிறார்.

காந்திஜீக்கு இந்தியப் பெண்மணிகளைப்பற்றி ஒன்றுமே தெரியாது என்பதை நிரூபித்துவிட வேண்டும் என்ற ஆத்தி ரத்தில், திருமதி சாங்கர் மேலே சொன்ன அடிப்படையான வேற்றுமையை மறந்துவிடுகிறார். இந்தியப் பெண்மணிகளுக்குச் சாத்தியப்படாத ஒரு வேண்டுகோளை — அதாவது கணவன் மாரை எதிர்த்து நிற்கும் வேண்டுகோளை — காந்திஜீ விடுக்கிறார் என்பதை ஆதாரமாகவைத்துக்கொண்டு அவருக்கு இந்தியப் பெண்மணிகளைப்பற்றி ஒன்றுமே தெரியாது என்று திருமதி சாங்கர் நிரூபிக்கப் பார்க்கிறார். நல்லது. காந்திஜீ என்ன சொன்னார் என்பதைப் பார்ப்போம்: "என் மனைவியை நடு நாயகமாகக் கொண்டே மற்ற பெண்களின் தன்மையை நான் ஆராய்ந்தேன். தென் ஆப்பிரிக்காவில் இருந்தபோது அநேக ஐரோப்பிய பெண்களை நான் அறிவேன். அங்குள்ள ஒவ்வொரு இந்தியப்பெண்ணைப்பற்றியும் எனக்கு நன்றாய்த்தெரியும். அவர் களும் நானும் ஒன்றுசேர்ந்து சேவை செய்திருக்கிறோம். பெற் றோருக்கும் புருஷனுக்கும் பெண்கள் அடிமையில்லை; அரசியல் துறையில் மட்டுமின்றி, குடும்பத்திலும் பெண்கள் அடிமை யாக இருக்க வேண்டியதில்லை என்பதை நான் அவர்களுக்கு எடுத்துக்காட்ட முயன்றிருக்கிறேன். அதில் ஏற்பட்ட சங்க டம் என்னவென்றால், சில பெண்களால் கணவன்மாரை எதிர்த்து நிற்க இயலவில்லை. இதற்குப் பரிகாரம் பெண்க ளிடமே இருக்கிறது. இந்தப் போராட்டம் மிகக் கஷ்ட மானதுதான். ஆயினும் நான் பெண்களைக் குறைகூற மாட் டேன். ஆண்களையே குறைகூறுவேன். பெண்களுக்கு விரோதமாக ஆண்கள்தான் சட்டம் இயற்றினார்கள். ஆண்

பெண்ணைத் தனக்கொரு கருவியாகக் கருதிவந்திருக்கிறன். பெண்ணும் ஆணுக்குக் கருவியாக இருக்கக் கற்றுக்கொண்டு விட்டாள். கடைசியில் இப்படி இருப்பதே சுகம், இதுவே இன்பம் எனக் கருதிவிட்டாள். பள்ளத்தில் விழுகிறவன் மேலே இருக்கிறவனைப் பரபர வென்று எளிதாகக் கீழே இழுத்துவிடலாம். மீதமுள்ள எனது வாழ்நாளில், பெண்களுக்கும் சுதந்திரம் உண்டு என்ற உண்மையை அவர்கள் மனதில் பதியச் செய்துவிட என்னல் கூடுமானல், கருப்பத் தடைப் பிரசினை என்பதே இந்தியாவில் இருக்க மாட்டாது. கணவன்மார் காம இச்சையோடு நெருங்கினல், 'முடியவே முடியாது; என்று சொல்ல மட்டும் பெண்கள் பழகிக்கொண்டால் போதும், கணவன்மார் எல்லாருமே மிருக உணர்ச்சி உடையவர்களல்லர். மிருக இச்சை உள்ள கணவனை எதிர்த்து நிற்கப் பெண்கள் பழகிக்கொண்டால் எல்லாம் நன்மையாய் முடியும். கணவன்மாரை எதிர்த்து நிற்கும்படியாகப் பெண்களுக்கு நான் போதித்து வந்திருக்கிறேன். இதில் உள்ள உண்மையான சிக்கல் என்ன வென்றல், பெண்கள் அனேகருக்கு, கணவன்மாரை எதிர்த்து நிற்க விருப்பமில்லை. 100-க்கு 99 குடும்பங்களில், மனக்கசப்பு ஏற்படக் கூடிய முறையில் எதிர்த்து நிற்கவேண்டிய நிலை ஏற்படாது. 'எனக்குப் பிரியமில்லை' என்று மனைவி சொல்லிவிட்டால், கணவன் தொந்தரவு செய்ய மாட்டான். ஆனல், கணவனை எதிர்த்து நிற்கும்படி பெண்களுக்கு ஒருவரும் சொல்லிக்கொடுக்க வில்லை. பெரும்பாலான பெற்றோரும் சொல்லிக்கொடுக்க மாட்டார்கள். தங்கள் புதல்வியரை வலுக்கட்டாயப்படுத்தித் தாய்மைக்கு ஆளாக்க வேண்டாம் என்று மாப்பிள்ளைமாரை வேண்டிக் கொண்ட பெற்றோர் சிலரை எனக்குத் தெரியும். பொறுப்பை உணர்ந்து இணங்கிப் போகிற கணவன்மார்களையும் நான் பார்த்திருக்கிறேன். பெண்களின் தலையாய உரிமை, இந்த விஷயத்தில் கணவரை எதிர்த்து நிற்கப் பழகிக்கொள்வது தான். கணவனை எதிர்ப்பதற்குப் போதுமான உணர்ச்சி தன்னிடம் இல்லை என்பதாகப் பெண் கருதுகிறள்."

இந்தியப் பெண்களைப்பற்றியோ பெண் குலத்தைப்பற்றியோ காந்திஜீக்கு ஒன்றுமே தெரியாது என்று சொல்வதற்கு இதில் என்ன இருக்கிறது? அதுதான் எனக்கு விளங்கவில்லை; ஏசு கிறிஸ்து, "எதிரியையும் உன்னைப்போல் நேசி; தீமையை எதிர்த்து நிற்காதே" என்று போதித்தார். அதற்காகத் தமது ரத்தத்தையும் சிந்தினர். இந்தப் போதனையின் படி நம்மால் நடக்க முடியவில்லை என்பதற்காக, மனித சமு

தாயத்தைப்பற்றி ஒன்றுமே அறியாதவர் சொல்லிய சொல் என்று இதைச் சொல்லமுடியுமா?

"அன்பு கனிந்த பார்வை", "கனிவு நிறைந்த முத்தம்" "அருமை ததும்பிய பேச்சு" முதலியனவின்றிச் "சிடுசிடுப்பும் மனக்கசப்பும், ஆசையை அடக்கி ஒடுக்கிய மனப்போக்குந் தான், காந்திஜீ சொல்லும் முறையைப் பின்பற்றும் குடும்பங் களில் இருக்கும்" என்று திருமதி சாங்கர் கற்பனை செய்து காட்டுகிறார். கருப்பத்தடை முறைகளைக் கையாண்டமை யால், அமெரிக்காவில், விவாகரத்து, சிடுசிடுப்பு, மனக்கசப்பு இன்னும் இதைவிடக் கேவலமான தன்மைகள் கணக்கின்றிப் பெருகி இருப்பதை அவர் மறந்துவிடுகிறார். அப்டன் சிங்க் ளேர் போன்ற, உண்மையைக் காணும் சீர்திருத்தக்காரர்கள் எழுதியுள்ள புத்தகங்களின் மூலமாக நாம் காணும் அமெ ரிக்கா, திருமதி சாங்கர் தமக்குத் தெரிந்துள்ளதாகச் சொல் லிக்கொள்ளும் அமெரிக்காவிலிருந்து வேறுபட்டு நிற்கிறது. இச்சையை அடக்கிக்கொண்டே வருவதனால் நரம்புத் தளர்ச் சியும் மூளைக்கோளாறும் ஏற்படுகின்றன என்பதற்குத் திருமதி சாங்கர் பல உதாரணங்களை எடுத்துக்காட்டினார். தபாலி லும் காந்திஜீக்கு வரும் ஏராளமான கடிதங்களிலிருந்து தாம் தெரிந்துகொண்டவற்றைக் காந்திஜீ சாங்கரிடம் சொன்னார் "உள்ளத்திலும் உடலிலும் பலவீனமுள்ளவர்களைப் பரிசீலனை செய்து இந்த முடிவு செய்கிறார்கள். ஆரோக்கியமான மனப் போக்குடையவர்களைப் பரிசீலனை செய்து அவர்கள் இந்த முடிவிற்கு வரவில்லை. அவர்கள் உதாரணமாகக் காட்டுகிற வர்கள்சிறிதளவாவது பிரமசரியத்தை அனுஷ்டித்திருக்க மாட் டார்கள். ஒழுங்கற்ற வாழ்க்கை நடத்திக்கொண் டிருக்கும் போது, அதைக் கவனியாது, மக்கள் எல்லாரும் தன்னடக் கத்தோடுதான் வாழ்க்கை நடத்துகிறார்கள் என்று தவறுத வாக எண்ணிக்கொண்டு, நரம்புத் தளர்ச்சி சம்பந்தமாய் ஆராய முற்பட்டுவிடுகிறார்கள். தன்னடக்கம் பெறுவதற் குப், பதிலாகப் பைத்தியம் பிடித்து அலைவதுதான் இதனால் கண்ட பலன். அனேகருடன் எனக்குக் கடிதப் போக்கு வரத்து உண்டு. தங்களுக்கு இருக்கும் நோய்களைப்பற்றி அவர் கள் எனக்கு விளக்கி எழுதுகிறார்கள். தாங்கள் சொல்லும் கருப்பத்தடையைக் கையாளும்படி அவர்களுக்குச் சொல்வே னயின் அவர்கள் வாழ்க்கை இன்னும் மோசமானதாகிவிடும்."

மணமாகாத இளைஞர்களுக்கும் இளம் பெண்களுக்கும் கருப்பத்தடை எவ்வளவு கேடு செய்திருக்கிறதென்பதைக் கல்கத்தாவில் கேட்டுப்பார்த்தால் தெரியுமென்று காந்திஜீ

சாங்கருக்குச் சொன்னர். மணம்புரிந்துள்ள மக்களிடை மட்டும் திருமதி சாங்கர் கருப்பத்தடைப் பிரசாரம் செய்ய எண்ணுகிறர் என்பது சம்பாஷணையிலிருந்து தெரிகிறது.

புலனடக்க மில்லாது செய்யப்படும் கருப்பத்தடையால் வாழ்க்கையில் "அதிகமான சிற்றின்ப உணர்ச்சியும் மட்டு மீறிய கலவியும் ஏற்பட்டுவிடும் என்பதாகக் காந்தி பயப்படுகிறர்" என்று அவர் காந்திஜீயைக் கேலிபண்ணுகிறர். "கருப்பவதியாக இருக்கும் ஒன்பது மாதங்களிலும் சிற்றின்ப உணர்ச்சியும் மட்டுமீறிய கலவியும் ஏற்படலாந்தானே? இதைப்பற்றிக் காந்தி யோசித்திருக்கிறரா?" என்று குத்தலாகக் கேட்கிறர். இப்படிச் சொல்லி விவாதம் பண்ணுகிற திருமதி சாங்கர் தம் இனமாகிய பெண்குலத்திற்கே அநீதி இழைக்கிறர். மிதமிஞ்சிய காம வெறியர்களையும் அளவுக்கு மிஞ்சி அடங்கிக்கிடப்பவர்களையும் தவிர வேறு யாருமே கருத்தரித்திருக்கும் காலத்தில் கலவி செய்ய இணங்க மாட்டார்கள்.

சில தம்பதிகளால் காம இச்சையை வெகுவாக அடக்க முடிவதில்லை. இதற்கு என்ன செய்யலாம்?

இந்த எண்ணத்தை மனதில் வைத்துக்கொண்டு திருமதி சாங்கர் "காதல் இன்பம் கணவன் மனைவி இருவரையும் ஐக்கியப்படுத்தி, பரிபூரண முடையவர்களாய்ச் செய்துவிடுகிறது. இதனல் நுட்பமான முறையில் ஒருவரை யொருவர் அறிந்துகொண்டு, ஆன்மா வளர்ச்சி யடைகிறது" என்கிறர். இப்படிச் சொல்வதில் குற்ற மொன்று மில்லைதான். ஆனல், இதே முறையில் காம இன்பத்தைப் பற்றியும் சொல்லிவிடலாம். அப்போது குழப்பம் அதிகரித்துவிடுகிறது. பிறகு அதைத் தனித் தனியே வேறுபடுத்திச் சொல்வதும் குழப்பந்தான். காதல் - இன்பம், காம-இன்பம் இரண்டையும் காந்திஜீ வேறுபடுத்துவதை, கீழ்க்கண்ட சம்பாஷணைக் குறிப்புகளிலிருந்து தெளிவாகக் காணலாம்.

**காந்திஜீ** : தங்களுடைய செயலினல் ஏற்படும் பலாபலனை அனுபவிக்க மனமின்றி, காமஇச்சையைத் தணித்துக்கொள்ள விரும்பும்போது, அது காதலன்று, காமமே யாகும். காதல் தூயதாக இருக்குமேயானல், காம இச்சையைக் கடந்து, அது தன்னைத் தானே ஒழுங்குபடுத்திக்கொள்ளும். காமத்தைப்பற்றி இன்னும் போதிய அளவிற்கு நாம் நன்ருக அறிந்துகொள்ளவில்லை. கணவன் "நமக்குக் குழந்தைகள் வேண்டாம்; கலவி மட்டும் செய்துவருவோம்" என்று சொல்வதாக

வைத்துக்கொள்வோம். இதைக் காம இச்சை என்று சொல்லாது வேறு என்ன வென்று சொல்வது ? குழந்தை வேண்டாமென்ற எண்ண மிருக்குமாயின், கூடிக்கலப்பதை நிறுத்திக் கொள்வதுதான் ஒழுங்கு. காம இயல்புகளைத் தணித்துக் கொள்ளும் கருவியாகக் காதலைப் பயன்படுத்துவோமாயின் அந்தக் கணமே காதல் காமமாக மாறிவிடுகிறது. உணவு உட்கொள்வதிலும் இதே கதைதான் இன்பத்தை மட்டும் உத்தேசித்து உணவு உட்கொள்வோமாயின், அதுவும் காமமே யாகும். பசியைத் தணித்துக்கொள்வதற்கு உண்ணுது இன்பந் தரும் என்பதற்காக, சாக்கலெட்டைத் தின்கிறீர்கள். பின்பு டாக்டரிடம் போய் மாற்றுமருந்து கேட்கிறீர்கள். இன்னெரு சமயம் விஸ்கியைக் குடித்துவிட்டு, 'மூளை குழம்புகிறதே, இதற்கு மாற்றுமருந்து ஏதாவது சொல்லுங்கள்' என்று கேட்கிறீர்கள். இதற்குப் பதிலாக, சாக்கலெட்டோ, விஸ்கியோ சாப்பிடாமல் இருந்தால் என்ன ?

**சாங்கர் :** தாங்கள் சொல்லும் உவமையை என்னுல் ஏற்றுக்கொள்ள முடியாது.

**காந்திஜீ :** ஆம், தாங்கள் இந்த உவமைக்கு உடன்பட மாட்டீர்கள். ஏனெனில், குழந்தை பெறும் விருப்பமின்றி, காம இன்பம் துய்ப்பது ஆன்மீக வேட்கை என்று தாங்கள் கருதுகிறீர்கள். இந்தக் கருத்தை என்னுல் ஏற்றுக்கொள்ள முடியாது.

**சாங்கர் :** ஆம். காம இன்பம் ஆன்மீக வேட்கையே யாகும். பயனைக் காட்டிலும் இந்த வேட்கையே மிக முக்கியமானது; இந்தத் தொடர்பு பயனைக் கருதி ஏற்படுவதில்லை. பெற்ருேரின் விருப்பமின்றியே பெரும்பாலான. குழந்தைகள் ஏதோ தற்செயலாய்ப் பிறக்கின்றன. இதை நாம் அறிவோம். குழந்தை வேண்டு மென்ற நோக்கோடு தம்பதிகள் ஒரு போதும் கூடிக் கலப்பதில்லை......இரண்டு வருடங்களுக்கு ஒரு முறை மட்டுமே கலவிசெய்வது என்று கலவியை ஒழுங்குபடுத்திக்கொண்டு வாழ்வது, காதலர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்குமா? அது சாத்தியமானதா? குழந்தை பெறும் விருப்பம் இருந்தால் மட்டுமே புணரலாம் என்கிறீர்களா, உண்மையாகவே தாங்கள் இவ்விதம் எண்ணுகிறீர்களா ?

**காந்திஜீ :** நான் அப்படியே செய்திருக்கிறேன்; நான் ஒருவன் மட்டு மல்ல, இன்னும் அனேகரும் அப்படியே செய்

செய்கை ஒன்ருய் இருந்தும், குழந்தை வேண்டுமென்று கூடுவது காமம் என்று சொல்வது அறிவுக்குப் பொருந்த வில்லை என்பதாக, திருமதி சாங்கர் கருதினர். காந்திஜீ அவருடன் இணங்கிப் போக எண்ணி, சரி, கலவி என்ருலே அதில் காம உணர்ச்சிக்கும் பங்குண்டு என்பதை ஒப்புக்கொள்ளத் தயாராய் இருக்கிறேன் என்ருர். பிறகு தம்முடைய சொந்த வாழ்க்கையிலிருந்தே உதாரணங்களை எடுத்துக்காட்டி, அதை வெகுவாகத் தெளிவுபடுத்திச் சொன்னர்: "என் மனைவியை நான் காம நோக்கோடு பார்த்து வந்தவரையில், ஒருவரையொருவர் நாங்கள் நன்கு அறிந்துகொள்ள முடியவில்லை. இது தான் என் சொந்த அனுபவம். அதுவரை எங்களுடைய காதலும் உயர்ந்த தன்மையை அடையவில்லை. வாழ்க்கையில் பிரியத்துக்குக் குறைவு ஏற்பட்டதில்லையாயினும், காம இச்சையிலிருந்து விடுபட்டுக் கட்டுப்பாடாக வாழ்க்கை நடத்த முயன்றதும், முக்கியமாக நான் கட்டுப்பாடாக வாழ்க்கை நடத்த நடத்த, எங்கள் இருவரிடையும் இருந்து வந்த கனிவு அதிகப்பட்டுக்கொண்டே வந்தது. கட்டுப்பாடாக வாழ்க்கை நடத்த என் மனைவி எப்போதுமே தயாராய் இருந் தாள். பெரும்பாலும் அவள் தன்னடக்கத்தோடுதான் நடந்து கொள்வாள். ஆயினும், பல சமயங்களில் தனக்கு இச்சை யில்லாதிருந்தும் என் இச்சையை அவள் எதிர்த்து நின்ற தில்லை. நான் அவளிடம் காமஇன்பத்தை நாடியபோதெல்லாம் என்ருல் அவளுக்குத் தொண்டு செய்ய முடியவில்லை. காம இன்பத்தைநாடும் வாழ்க்கையைக் கைவிட்ட உடனே எங்கள் வாழ்க்கையே ஆன்மீக உணர்ச்சி நிரம்பியதாய் மாறிவிட்டது. காமம் செத்தொழிந்து போயிற்று; அது இருந்த இடத்தில் காதல் ஆட்சி செய்யத் தலைப்பட்டது" என்ருர் காந்திஜீ.

கட்டுப்பாடின்றி மனம்போனபடி கட்டித் தழுவிக்கொள் வதைக் காதல் என்றும் கலவியும் அது சம்பந்தமான லீலை களும் இல்லாத மணவாழ்க்கையை மந்தமான உயிரற்ற வாழ்க் கையாக என்பதாகவும் திருமதி சாங்கர் கருதுகிருர் போலும். காந்திஜீயின் சொந்த அனுபவங்கள் அவருடைய மனதில் யாதொரு உணர்ச்சியையும் உண்டாக்கவில்லை. "இலட்சிய வாதியின் போக்கு" என்பதாக இதை ஒதுக்கிவிட்டார். "தமக் குச் சொந்தமான காங்கிரஸ் வேலைகளிலும், இன்னும் முன்னேற் றக் காரியங்களிலும் ஈடுபடுத்துவதற்கு என்று தங்கள் காதல் விருப்பங்களை உயர்ந்த நிலைமையில் வைத்துள்ள இலட்சிய வாதிகள் அடங்கிய சிறு கூட்டம்" என்று மறைமுகமாக அவர் எள்ளி நகையாடுவதிலிருந்து இது தெரிய வருகிறது.

அன்று நடந்த சம்பாஷணையில் ஓரிடத்திலாவது காங்கிரஸைப் பற்றியோ அல்லது காங்கிரஸ்காரர்களைப்பற்றியோ காந்திஜீ ஒன்றுமே குறிப்பிடவில்லை. இலட்சியவாதிகள் அடங்கிய சிறிய கூட்டத்தினரின் செயல்களே எங்கும் ஒழுக்க முன்னேற்றத்திற்கு உதவியாய் இருந்திருக்கின்றன என்பதையும், தமது சொந்த இயக்கத்தின் விஷயத்தில் தோன்றும் முன்னேற்றங்கூடத் தன் சித்தாந்தத்தை இலட்சியப்படுத்திக் காட்டுவதைப் பொறுத்ததுதான் என்பதையும் திருமதி சாங்கர் மறந்துவிடுகிறார். தமது இயக்கத்தைப்பற்றிச் சொல்லுகையில் "இந்த உலகில் வசிக்கின்ற நம்மிடம் காணப்படும் அறிவு, ஞானம், துணிவு, திருஷ்டி, பொறுப்பு ஆகிய யாவுமே இதற்குத் தேவை என்றும் இந்தப் பாதை ஒன்றே மனிதனுடைய தலை எழுத்தை நிர்ணயிக்கக் கூடிய பாதை" என்றும் சொல்லித் தமது இலட்சியத்தையும் இயக்கத்தையும் உயர்த்திப் பேசுகிறார்.

காந்திஜீ வெறும் மனக்கோட்டை கட்டுகிறவர் என்று நிரூபித்துவிட வேண்டுமென்ற ஆத்திரத்தில், திருமதி சாங்கர், காந்திஜீ சொன்ன அனுபவசாத்தியமான முறைகளை மறந்துவிட்டார்.

"வாழ்க்கை முற்றுமே மூன்று நான்கு முறைதானா கலவி செய்ய வேண்டும்?" என்று திருமதி சாங்கர் கேட்டார்

காந்திஜீ இதற்குப் பின்வருமாறு பதிலளித்தார்: "மூன்று நான்கு குழந்தைகளுக்கு மேல் பெறுவது ஒழுக்கத்திற்குப் புறம்பானதென்றும், அந்த அளவிற்குக் குழந்தைகள் பிறந்துவிட்டால் தனித் தனியாகப் படுத்துக்கொள்வதுதான் நல்லதென்றும் மக்களுக்கு ஏன் சொல்லிக் கொடுக்கக் கூடாது? ஜனங்களுக்கு இவ்விதம் போதித்தால் இது பழக்கமாகிவிடும். இதை எடுத்துச்சொல்லி மக்களிடம் உணர்ச்சியை உண்டாக்கச் சமூக சீர்திருத்தக்காரரால் முடியவில்லை என்றால், சட்டத்தின் மூலம் செய்துவிட்டால்போகிறது. நான்கு குழந்தைகள் பெறுவதற்குள் கணவனும் மனைவியும் போதுமான அளவு காம இச்சையை அனுபவித்துவிடலாம் அல்லவா? இதற்கு மேல் அவர்களுடைய காதலை இன்னும் உயர்ந்த நிலைக்குத் தூக்கிவிட வேண்டும். விரும்பின அளவு குழந்தைகளைப் பெற்றுவிட்ட பிறகு, உடல் உறவு ஆன்மீக உறவாக மாறிவிடுகிறது. பெற்ற குழந்தைகள் இறந்துபோய் மேலும் குழந்தைகள் வேண்டும் என்று விரும்பினால், அவர்கள் மறுபடியும் கூடலாம், ஏனைய உணர்ச்சிகளுக்கு அடிமையாய் இருக்க விரும்பாதவர்கள் ஏன் காம இச்சைக்கு மட்டும் அடிமையாக

வேண்டும்? கருப்பத்தடையைப்பற்றி அவர்களிடம் பேசும் போது அது ஒரு கடமை என்றும் நடைமுறையில் கொணரா விட்டால், அவர்களுடைய ஆன்மீக வளர்ச்சி தடைப்பட்டு விடும் என்றும் சொல்லுகிறீர்கள். வரையறையான ஒரு ஒழுங்கு வேண்டுமென்று நீங்கள் சொல்வதே இல்லை. இந்த அளவிற்குத்தான் போக வேண்டும், இதற்கு மேல் போகக் கூடாது என்று கருப்பத்தடைபற்றிப் பிரசாரம் செய்யும்போது அவர்களிடம் சொல்லாமல் விட்டுவிடுகிறீர்கள். மிதமாகவே மக்கள் இருந்துவிடுவார்கள் என்று எண்ணி, மக்களை மிதமாகக் குடிக்கச் சொல்லுகிறீர்கள். மிதமான மக்கள் யார் என்பதை நான் அறிவேன்.''

இவ்வளவுக்குப் பிறகும் திருமதி சாங்கர் தம் கொள்கையில் ஆழ்ந்த நம்பிக்கைகொண்டிருந்தபடியால், தம் மனதிற்கு இசைந்த இன்னொரு பரிகாரத்தையும் காந்திஜீ சொன்னார். ஒரு மாதத்தில் கருத்தரிக்கக் கூடிய "பயமில்லாத" இருபது நாட்களை ஒதுக்கிவிட்டு, பத்து நாட்களில் கலவி செய்யலாம் என்பதுதான் அது. இதில் அடக்கமாக வாழ வழி இருக்கிறபடியால், மற்ற இருபது நாட்களிலும் கட்டுப்பாடாக வாழ்வதற்கு இடமுண்டு என்றார். திருமதி சாங்கர் மனதிற்கு இது பிடித்தமாய் இருந்ததோ இல்லையோ அது எனக்குத் தெரியாது. உண்மையை நாடுகிறவர் என்ற முறையில் காந்திஜீ இங்கு பேசினார். **டைம்ஸ் ஆப் இந்தியா**வில் தாம் எழுதியுள்ள கட்டுரையிலோ, அவர் அளித்த பேட்டிகளிலோ இதைப்பற்றி திருமதி சாங்கர் குறிப்பிடவே இல்லை. எளிய இந்த முறையைக் கையாண்டு அதனால் திருப்தியடைந்துவிட்டால், கருப்பத்தடைச் சாமான்களை விற்பவர்களுக்கும் அதைப் பரப்ப எண்ணங்கொண்டு பிரசாரம் செய்பவர்களுக்கும் வேலை இல்லாது போய்விடுமே என்று கருப்பத்தடைவாதிகள் கருதுகிறார்கள் போலும்.

திருமதி சாங்கரிடம் காணப்பட்ட மூன்றாவது மனப்போக்கைப் பார்ப்போம். இந்த மனப்போக்கு சர்வமத மகாநாட்டில் பேசிய பேச்சிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. தமது நாட்டின் சார்பாக அவர் அங்கு கள்ளங் கபடமற்ற முறையில் பேசினார்: "வேறு எந்த நாட்டையும்விட, உலகில் எனது நாட்டிலேதான் குற்றம் மலிந்த கருப்பச் சிதைவு மிக மிக அதிகம். வருஷந்தோறும் இருபது லட்சம் கருப்பச் சிதைவுகள் ஏற்படுகின்றன என்று கணக்கெடுத்திருக்கிறார்கள். கருப்பந்தரித்த பெண்கள் கருவிகள் மூலமாகவோ மருந்துமூலமாகவோ சிதைக்கும் கருப்பத்தின் எண்ணிக்கை

சாங்கர் குறிப்பிடும் கணக்கில் மணஞ் செய்துகொண்ட பெண்களை மட்டும் சேர்த்திருக்கிறார் என்று எண்ண வேண்டாம். மணம் செய்து கொள்ளாத பெண்களும் அடங்கியிருக்கின்றனர். அவர்களுக்கும் கருப்பத்தடைக் கருவியை உபயோகிக்கும்படி சொல்ல, திருமதி சாங்கர் தயங்க மாட்டார். "சரியான, பலன் தரக் கூடிய, நம்பிக்கைக்கு இடமுள்ள கருப்பத்தடை முறைகளால் இதைத் தீர்த்துவிட முடியு''மென்று திருமதி சாங்கர் சொல்லுகிறார். இப்போது இருந்து வரும் சமூக அமைப்பில் கருப்பத் தடையைத் தடுக்க முடியாது; அதனால், கருச்சிதைவையும் தடுக்க முடியாது. இப்படி ஒன்றையொன்று பற்றிக்கொண்டு சரியான விஷம சக்கரமாகக் கிடக்கிறது விஷயம். "மனித இயல்பில் அமைந்துள்ள அற்புதமான சிருஷ்டி சக்தியை துஷ் பிரயோகமும் வீண்விரையமும் செய்வதைத்" தடுக்க வேண்டுமென்று மிக ஆர்வத்தோடு வேண்டிக்கொள்கிறார் திருமதி சாங்கர். கருப்பத்தடைக் கருவிகளை உபயோகிப்பதனால், சிருஷ்டி சக்தி அளவுகடந்து நாசமடையும் என்பதை அவர் மறந்துவிடுகிறார்.

ஆனால், இன்னொரு விஷயத்தையும் அவர் பேச்சிலிருந்து கண்டுபிடித்தேன்; அது என்னை அப்படியே திடுக்கிடச் செய்தது மன்றி, அவர் பேசுவதெல்லாம் உண்மைதானா என்பதிலும் சந்தேகம் கொள்ளும்படி செய்தது. " ஜனத்தொகையைப் பெருக்குவதில், தனது அளவையும் மீறிப்போய்க்கொண்டிருக்கிறது ஜப்பான்; இதனால், கீழ்க்கோடி முனையில் நெருக்கடி ஏற்படுவதுடன் உலக அமைதிக்கே பங்கமும் ஏற்படும். ஆசிய நாட்டினரிடைக் காணும் இந்தப் பிள்ளைப்பேற்றுப் போட்டியால் ஏற்படுகிற முடிவு இதுதான். அபாயமான இந்தப் போக்கைத் தடுப்பதற்கு, சர்வதேசங்களும், உலக நீதிமன்றமும் முன்வர இதுவே தக்க காலமல்லவா? போதுமானதைக் காட்டிலும் அதிக ஜனத்தொகை ஜப்பானில் இருப்பதாலும் அதற்கு இடம் தேடிக்கொடுக்கும் பொருட்டு ஜப்பான் முனைந்து நிற்பதாலும், 'பிரகடனம் செய்யாத யுத்தம்' சீனவிற்கு எதிராக நடைபெறுகிறது; மஞ்சுகோ என்ற பெயருடன் ஒரு பொம்மை அரசும் தோன்றிவிட்டது; கண்ணியமான முறையில் செய்து கொடுத்த ஒப்பந்தங்களும் காற்றில் பறந்தன. வேறு ஒரு உலக யுத்தத்திற்கே விதைத்தாய்விட்டது." இன்னொரு மஞ்சள் அபாயமா? இப்படிப் பேசுகிறவர் யார்? மனித சமுதாயத்தினிடம் பரிவுகொண்டு அதைச் சீர்திருத்த எண்ணுகிறவரா? அல்லது அதிலிருந்து முற்றிலும் வேறுபட்ட ஆசாமியா? எனக்குப் புரியவில்லை. —**மகாதேவ தேசாய்.**

# செவிடன் காதில் ஊதிய சங்கு

''ஆசையைக் கிளப்புவதிலே சாராயப் புட்டியைக் காட்டிலும் கருப்பத் தடைக் கருவிகளுக்கு எத்தனையோ மடங்கு வலிமை அதிகம் உண்டு. ஆனால் மோகமூட்டி உயிருக்கே கேடு செய்யுங் காரணத்தால் பளபளப்பான அந்தச் சாரா யத்தைவிட, கருப்பத்தடைக் கருவி எந்த விதத்திலும் நியாய மானதன்று. இவ்விரண்டையும் உபயோகிப்பவர்களின் எண் ணிக்கை பெருகிவருவதைக் கண்டு, நம்பிக்கை யிழந்து, இவற்றை எதிர்ப்பதை விட்டுவிடக் கூடாது.''

*''கருப்பத்தடைவாதியான திருமதி சாங்கருடன் தாங்கள் செய்த விவாதத்தின் விமர்சனத்தை நான் சமீபத்தில் படித் தேன். படித்து மிக ஆனந்தங்கொண்டேன். தங்கள் கருத்துத் தான் சரி என்பது என்னுடைய அபிப்பிராயம். அதைத் தங்க ளுக்குத் தெரிவிக்கவே இந்தக் கடிதத்தை எழுதியிருக்கிறேன். தங்கள் துணிவுக்காகத் தங்களை ஆண்டவன் ஆசீர்வதிப்பானாக.*

*''சென்ற முப்பது ஆண்டுகளாகப் பையன்களுக்குப் பாடம் சொல்லும் தொழிலில் நான் ஈடுபட்டு வந்திருக்கிறேன். உடம் பைக் கட்டுப்படுத்தி வாழ வேண்டும் என்று நான் எப்பொழு தும் பிரசாரம் செய்து வந்ததோடு, தன்னலமற்ற வாழ்க்கை வாழும்படியாகவும் பையன்களைத் தூண்டி வந்திருக்கிறேன்.*

*''என் வீட்டுக்கு அருகில் திருமதி சாங்கர் வசித்துவந்தபோது அவர் இருப்பதைப் பயன்படுத்திக்கொண்டு, உயர்தரப் பள்ளி யில் படிக்கும் சிறுவர்களும் சிறுமிகளும், ஒழுங்கற்ற முறையில் கூடிக் கலந்து காம இன்பம் துய்க்கத் தலைப்பட்டுவிட்டார்கள். அதனால் ஏற்படும் பலன்களுக்குஅவர்கள் அஞ்சினதாகத் தெரிய வில்லை. திருமதி சாங்கரின் கொள்கை வெற்றியடையுமேயா னால், உலகமே சிற்றின்ப நுகர்ச்சியில் ஈடுபட்டு, காதல் என் பதே இல்லாது அற்றுப்போய்விடும். உயர்ந்த இலட்சியங்களை மக்களிடையே பரப்பி, பின்பற்றும்படி செய்வதற்குப் பல நூற்றாண்டுகள் பிடிக்கும். ஆனால் இந்தக் கொள்கைகளைப் பரப்புவதற்கு இதைவிடச் சரியான சமயம் கிடையாது. காம இச்சையையே திருமதி சாங்கர் காதல் என்று கருதிவிடுகிறார். காதல் என்பது காம இச்சையிலிருந்து பிறக்கவே பிறக்காது; ஆன்ம உணர்விலிருந்தே காதல் தோன்ற வேண்டும்; ஏற்க னவே மனந்தடுமாறியவர்கள்,காம இச்சையை வளர்ப்பவர்கள் இவர்களைத் தவிர, வேறு யாருக்கும் கலவி இன்பத்தைக் கட்டுப்படுத்துவதனால் தீமை ஏற்படாது என்று டாக்டர் அலெக்சிஸ் காரல் அபிப்பிராயப்படுகிறார். இது தங்கள்*

கருத்தை ஆதரிப்பதாய் இருக்கிறது. பிரமசரியம் அனுஷ்டிப்பதால் தீங்கு நேரும் என்று பெரும்பாலான டாக்டர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள் என்று திருமதி சாங்கர் சொல்லுவது தவறு. அமெரிக்க சமூக சுகாதார சங்கத்தைச் சேர்ந்த முக்கியமான டாக்டர்களும் விஞ்ஞானிகளும் காம இன்பத்தைக் கட்டுப்படுத்துவதனால் நன்மை உண்டு என்று சொல்லுகிறார்கள்.

"தாங்கள் செய்துவரும் சேவை மகத்தானது. வாழ்நாளெல்லாம் தாங்கள் நடத்திவரும் போராட்டம் எப்படி எல்லாம் நடந்துவந்திருக்கிற தென்பதை நான் ஆர்வத்தோடு கவனித்து வந்திருக்கிறேன்; ஆண் பெண் சம்பந்தமான பிரசினையை, ஆன்ம உணர்வும் உயர்ந்த நோக்கமும் கொண்டு தங்களைப் போல் பார்ப்பவர்கள் மிக மிகச் சொற்பம். நம்மிருவருக்கும் இடையில் கிடக்கும் பெரிய சமுத்திரங்களையும் கடந்து தங்கள் கொள்கையில் எனக்கும் உடன்பாடு உண்டு என்பதைத் தெரிவிக்கவே நான் இதை எழுதி யிருக்கின்றேன்.

"பிற்கால வாழ்வு இளைஞர் கைவசமே இருப்பதால் இந்த நல்ல கொள்கையை அவர்களிடம் பரப்பும் வேலையைத் தொடர்ந்து செய்து வருவோம்.

"நான் பையன்களுக்குச் சொல்லி வருவதிலிருந்து சில வாக்கியங்களை இங்கே தருகிறேன். 'சிருஷ்டி செய்யுங்கள்; எப்பொழுதுமே சிருஷ்டி செய்வதில் ஈடுபடுங்கள். சிருஷ்டிப்பது மேன்மையான காரியம். அது மனிதனை மேன்மைப்படுத்தும்; உற்சாகமூட்டும்; ஆனால் புலன் இன்பம் நுகரும் பொருட்டு சிருஷ்டித் திறனைப் பயன்படுத்தத் தலைப்பட்டதும், நீங்கள் சிருஷ்டி சக்தியையே ஏமாற்றுகிறீர்கள். உங்கள் உள்ளே ஆழப் பொதிந்து கிடக்கும் மேன்மையான ஆன்மீகப் பண்புகளை எல்லாம் அழித்துவிடுகிறீர்கள். இந்தப் போக்கினால் கடைசியில் ஏமாற்றமே விளையும்.

"உடலாலும், மனத்தாலும், ஆத்மாவாலும் சிருஷ்டிப்பது இன்பம்; அதுவே வாழ்க்கை. சிருஷ்டிக்கும் நோக்கமின்றி உடல் இன்பத்தை மட்டும் விரும்பி, அல்லது சிருஷ்டி சக்தியைத் தடைப்படுத்தும் நோக்கோடு ஈடுபடுகிற காரியமெதுவும் உங்களது இயற்கைப் போக்கைத் தலைகீழாக மாற்றிவிடும். ஆன்மீக சக்தியினையும் கொன்றுவிடும்.

"கட்டுப்பாடில்லாத காம இச்சையின் விளைவு தோல்விதான்; ஏமாற்றம்தான்; தளர்வுதான். ஆன்ம உணர்ச்சியுள்ள ஆடவரையும் பெண்டிரையும் கொண்ட ஒரு புதிய மனித சமுதாயத்தை நிர்மாணிப்பதற்குத் தேவையான உயர்ந்த பண்புகளை எல்லாம் கட்டுப்பாடு இல்லாத காம இச்சை அழித்துவிடும்.

"இந்த உபதேசமெல்லாம் காட்டிலே கதறும் தீர்க்கதரிசியின் கதறலாகத்தான் முடியு மென்பது எனக்குத் தெரியும். ஆயி

னும் இதில் அடங்கியுள்ள உண்மையில் எனக்கு நம்பிக்கை யுண்டு. வழியைத்தான் நான் காட்ட முடியும்? வேறு என்ன தான் செய்யலாம்?''

கருப்பத்தடைக் கருவிகளை உபயோகிப்பதைக் கண்டித்து ஏதோ சில சமயங்களில் எனக்கு அமெரிக்காவிலிருந்து கடிதங்கள் வருவதுண்டு, அவற்றில் இந்தக் கடிதமும் ஒன்று. உடல் அனுபவிக்கும் மேன்மையான இந்த இன்பத்தைத் தவிர்ப்பதன் மூலம் உடலைக் கட்டுப்படுத்தி ஒடுக்கும் மூட நம் பிக்கையாகிய தளையிலிருந்து விடுவிக்கின்ற இந்த நவீன முறையை அமெரிக்காவில் முட்டாள்களும் பலவீனர்களும் தவிர வேறு யாருமே எதிர்ப்பதில்லை யென்று, மேல்க்கோடி யிலிருந்து வாரந்தோறும் நாம் இறக்குமதி செய்யும் நவீனப் பத்திரிகைகளும் துண்டுப் பிரசுரங்களும் நம்மை நம்பும்படி செய்ய முயலுகின்றன. கலவி இன்பத்தில் உள்ள மோகத் தைப்போலவே, இந்த வெளியீடுகள் சிறிது நேரமே நிலைத்து நிற்பதான மோகத்தை உண்டுபண்ணுகின்றன. கலவியினுல் ஏற்படும் இயற்கையான பலனுக்கு ஆளாகாமல் அதிலே ஈடுபடும்படி இந்த வெளியீடுகள் போதனை செய்வதோடு தூண்டியும் விடுகின்றன. தனிப்பட்டவர்கள் மேலைநாட்டி லிருந்து எழுதும் கண்டனக் கடிதங்களை மட்டும் நான் ஹரிஜன் பத்திரிக்கையில் பிரசுரிப்பதில்லை; உண்மையை நாடுகிறவன் என்ற முறையில் அவற்றினுல் எனக்கு உபயோக முண்டு; ஆனுல் சாதாரண வாசகர்களுக்கு அவற்றினுல் ஒரு நலனு மில்லை. இந்தக் கடிதமோ அப்படிப்பட்ட தன்று; முப்பது ஆண்டுகளாகப் பையன்களுக்குப் பாடம் சொல்லிவருகிற ஒரு ஆசிரியரின் அனுபவங்கள் அடங்கிய கடிதம் இது. இதற்கு நிச்சயமான மதிப்பு உண்டு. இந்தியாவில் ஆசிரியர் களும் பொது வேலையில் ஈடுபட்டுள்ள ஆடவர் பெண்டிரும், கரைபுரண்டு ஓடும் இந்த வெள்ளத்தால் இழுக்கப்பட்டிருக் கிறுர்கள். அவர்களுக்கு இந்தக் கடிதம் வழிகாட்டியாய் இருந்து பயன்பட வேண்டும். ஆசையைக் கிளப்புவதிலே சாராயப் புட்டியைக் காட்டிலும் கருப்பத்தடைக் கருவி களுக்கு எத்தனையோ மடங்கு வலிமை அதிகம் உண்டு. ஆனுல் மோகமூட்டி உயிருக்கே கேடு செய்யுங்காரணத்தால் பளபளப் பான அந்தச் சாராயத்தைவிட, கருப்பத் தடைக்கருவி, எந்த விதத்திலும் நியாயமானதன்று. இவ்விரண்டையும் உபயோகிப் பவர்களின் எண்ணிக்கை பெருகி வருவதைக் கண்டு, நம் பிக்கை யிழந்து, இவற்றை எதிர்ப்பதை விட்டுவிடக் கூடாது; எதிர்ப்பவர்களுக்கு, தாங்கள் செய்யும் நல்ல காரியத்தில் நம்

பிக்கையிருக்குமாயின், அவர்கள் அந்த வேலையைத் தொடர்ந்து செய்துகொண்டே வர வேண்டும். பித்துப்பிடித்த கூட்டத்திற்கு என்னதான் சொன்னாலும் செவியில் ஏறவே மாட்டாது; அந்தச் சொல்லுக்கு வன்மையும் இருக்க மாட்டாது. ஆனால் காட்டில் நின்றுகொண்டு கூப்பாடு போட்டாலும் அதற்கு ஒரு வன்மையுண்டு, தனிமையில் எழுகிற சொல்லுக்கு, தியான முண்டு, ஆராய்ச்சி யுண்டு, அசையாத பக்தியுண்டு. சந்தை இரைச்சலைப் போன்று மெதுவாகக் கத்துகிறவர்களுக்கோ சொந்த அனுபவமும் தாய்மார்கள் படுகிற துன்பம், வேண்டாத பிள்ளைப் பேறு இவற்றைப் பார்த்துக்கொள்ளும் பொய்யான, உணர்ச்சியளவான அனுதாபமும் தவிர ஒன்றுமே துணையாய் நிற்பதில்லை குடிகாரனின் செயலுக்கு உள்ள மதிப்புத்தான் சொந்த அனுபவம் என்று சொல்லுகிற சொல்லுக்கும் இருக்கும். இரக்கம் என்பதெல்லாம் வலை. அதற்குள் விழுந்துவிட்டால் மோசம்தான். நலம் செய்யும் பொருட்டே இயற்கை சில தந்திர முறைகளை அமைத்து வைத்து இருக்கிறது, வேண்டாத பிள்ளை பிறப்பதனால் துன்புறும் விருப்பற்ற தாய்மைக்கு, தண்டனையாகவும் எச்சரிக்கையாகவுமே இந்தத் தந்திர முறைகள் அமைந்துள்ளன. ஒழுங்கு, கட்டுப்பாடு இவற்றை அலட்சியம் செய்வது தற்கொலையாகவே முடியும். நாம் எடுத்துள்ள பிறப்பு பயிற்சி பெறுவதற்கேயாம்; போராட்டத்துக்குப் பயந்து, கோழைகள் வாழ்க்கை இன்பத்தை இழந்துவிடுகிறார்கள். கட்டுப்பாடாக இருப்பதில் அதிக கஷ்டம் இருக்கிறது என்று அதை ஒதுக்கிவிடுவோமேயானால் நமது வாழ்க்கை தோல்வியில்தான் முடியும்.

# கருப்பத்தடை—1

**"புலன் அடக்கத்தின் மூலமாகக் கருப்பத்தடை செய்வது, கஷ்டமான காரியந்தான்; இதில் சந்தேகமில்லை. ஆயினும் அதனுல் ஏற்படுகிற நலன்களேயோ, கருப்பத்தடைக் கருவி களைவிட இதுதான் மேலான முறை என்பதையோ யாரும் இதுவரை மறுக்க முன்வரவில்லை."**

நான் எழுதுவதைக் கவனத்தோடு படித்துவருபவரும் என்னுேடு சேவையில் ஈடுபட்டுள்ளவருமான ஒரு தொண்டர், கருப்பத்தடைக்குப் "பயமில்லாத காலச்" சேர்க்கை முறையை நான் ஆதரித்துவிடப் போவதாகப் பயந்து, மனங்குழம்பி விட்டார். கருப்பத்தடைக் கருவிகளைக் காட்டிலும் "பயமில்லாத கால" முறை எனக்கு அதிக வெறுப்பூட்டுவதில்லை என்றும், பெரும்பாலும் கல்யாணமானவர்களே இந்த முறையைக் கையாள முடியும் என்று அந்த நண்பருக்குத் தெளிவு படுத்திச் சொன்னேன். ஆனுல், நாங்கள் செய்த விவாதம் இருவரும் எதிர்பாராத அளவிற்கு மேற்சென்று, ஆழமாக ஆராயும்படி எங்களைச் செய்துவிட்டது. குழந்தை வேண்டுமென்ற பிரியம் இருந்தாலே கலவி செய்யலாம் என்று ஸ்மிருதிகள் சொல்லுகின்றன. இந்தக் கட்டளைக் கிணங்க, சாதாரண ஜனங்களும் நடைமுறையில் செய்து காட்ட முடியும் என்று அந்த நண்பர் தாம் நம்புவதாகச் சொன்னுர். அதனுலேயே "பயமில்லாத காலக்" கருப்பத் தடை முறையும் கருப்பத்தடைக் கருவிகள் உபயோகிப்பதும் அவருக்கு வெறுப்பூட்டின. இந்த விதியை நான் ஏற்கெனவே அறிந்திருந்தபோதிலும், விவாதத்தின்போது இருந்து வந்த மன நோக்கோடு அதை நான் முன்பு ஆராய்ந்ததே இல்லை. ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டிருக்கும் யோசனை பரிபூரணமானதா யிருக்கிறது. எழுத்தெண்ணி இதன்படி நடக்க வேண்டுமென்ப தில்லை. பிள்ளை வேண்டுமென்று ஆசையில்லாவிட்டாலும் இரு தரப்பினரும் மன ஒருமையோடு சம்மதித்தால் கலவி செய்வது நியாயமே யாகும்; ஸ்மிருதிகளின் கட்டளைக்கு மாறுபட்டதன்று என, இவ்வளவு காலமும் நான் எண்ணிவந்தேன். புதிய மனப்பாங்கோடு, ஸ்மிருதிகளை ஆராய முயன்றதும், சில உண்மைகள் வெளியாயின. ஸ்மிருதிகளின் கட்டளையைத் தவருது பின்பற்றி

நடந்தால் மணம் செய்துகொண்டவர்களும் மணம் செய்து கொள்ளாது பரிசுத்தமான வாழ்க்கை நடத்தும் பிரமசாரி களைப் போலவே பிரமசாரிகள் ஆவர் என்று நான் இப்போது அறிகிறேன். இந்த விதமான உணர்வு ஸ்மிருதிகளைப்பற்றி எனக்கு முன்பு ஏற்படவில்லை.

கலவி என்றாலே பிள்ளைப் பேறுதான் என்றும் காம இச்சையைத் தணித்துக்கொள்கிற செயல் அல்லவென்றும் நான் இப்போது அறிவிக்கிறேன். இந்தக் கருத்தின்படி பார்த்தால், காம இச்சையைத் தணித்துக்கொள்ளப் பயன் படுத்துகிற மணத்தையும் காமமாகக் கருத வேண்டும். இது வரையில் நியாயமானதென்றும் குற்றமற்றதென்றும் எண்ணி வந்த ஒரு பழக்கத்தை, நமது இன்ப அனுபவத்தை, இவ்விதம் கடிந்து சொல்வது கடுமையாகத் தோன்றலாம். பழக்க வழக்கங்களைப்பற்றி நான் இப்போது ஆராய வர வில்லை; ஹிந்து முனிபுங்கவர்களால், மணம் என்பது எவ்விதம் விவரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது என்பதையே ஆராய்கி றேன். அவர்கள் சொல்லியுள்ள வாசகங்கள் சரி யில்லாமல் இருக்கலாம்: முற்றுமே தவறாயும் இருக்கலாம். அனுபவத்தி னாலும் தூண்டப்பட்ட ஸ்லோகங்கள் பல ஸ்மிருதிகளில் உண்டு என்பதாக நான் நம்புகிறேன். என்னைப் போன்றவர் களுக்கு, ஸ்மிருதிகளின் பொருளைத் தவறென்று ஒப்புக் கொள்வது சாத்தியமில்லை. ஸ்மிருதிகளின் பழைய மூலங் களை நன்கு ஆராய்ந்து, அவற்றின் பொருளை நன்கு உணர்ந்து, உண்மையைக் காணுவதைத் தவிர எங்களுக்கு வேறு வழி இல்லை. இப்படிச் செய்வதில் எவ்வளவோ கஷ்டமிருக்க லாம்; அதைப் பொருட்படுத்தாமல் பழைய மூலங்களிலிருந்து புதிய புதிய உண்மைகளை நாம் காண முயல வேண்டும்.

மேலே சொன்ன புத்துணர்வைக் கொண்டு கருவிகளின் மூலமாகவும் இன்னும் பல விதங்களிலும் கருப்பத்தடை செய்வது மிகவும் தவறான தென்று எண்ணுகிறேன். எனக் குள்ள பொறுப்பை உணர்ந்தே நான் இவ்விதம் எழுது கிறேன். திருமதி சாங்கரிடமும் அவரைப் பின்பற்றுகிறவர் களிடமும் எனக்குப் பெரு மதிப்புண்டு. தமது கொள்கையில் திருமதி சாங்கர் வைத்திருக்கும் உறுதி என் மனதில் மிகவும் ஆழமாகப் பதிந்தது. தேவைப்படாத குழந்தைகளை வயிற்றில் சுமந்து, பெற்று வளர்க்க வேண்டிய பொறுப்பு பெண்களைச் சார்ந்திருப்பதால், அவ்விதம் அவதிப்படும் பெண்களிடம் திருமதி சாங்கர் மிகுந்த பரிவு காட்டுகிறார். இது எனக்குத் தெரிந்ததே. பிராட்டஸ்டெண்டு மதத்தில் முக்கியமானவர்

அனேகரும், டாக்டர்கள், விஞ்ஞானிகள், படிப்பாளிகள் முதலியோரும் இந்தக் கொள்கைக்கு ஆதரவு தருகிறார்கள் என்பதையும் நான் அறிவேன். அவர்களில் அனேகரை எனக்கு நேரே தெரியும், அவர்களிடம் எனக்குப் பெருமதிப்புமுண்டு. கடவுள், உண்மை வடிவானவர்; உண்மையைத் தவிரக் கடவுள் என்பது வேறில்லை அப்படி இருக்கும் போது, இந்தக் கொள்கையைப் பிரசாரம் செய்கிறவர்களிடத்திலும் வாசகர்களிடத்திலும் எனது நம்பிக்கையை மறைத்து வைப்பேனாயின், நான் கடவுளையே ஏமாற்றிய பொய்யனாவேன். இப்போது நான் கொண்டுள்ள இந்த நம்பிக்கையையோ, எனக்கு இருக்கும் இன்னும் வேறு பல நம்பிக்கைகளையோ நானே மறைக்க முயன்றால், நான் செய்யும் தவறுகளையே என்னால் கண்டுபிடிக்க முடியாது. கருப்பத் தடை உள்பட ஒழுக்கநடை பற்றிய அனேக பிரசினைகளை நான் வெளிப்படையாகச் சொல்லியே தீர வேண்டும். ஏனெனில் அனேக ஆடவரும் பெண்டிரும் எனது ஆலோசனையையும் நான் காட்டும் வழியையும் ஏற்றுக்கொண் டிருக்கிறார்கள்.

கருவிகள் வேண்டும் என்பவர்களுக்கும் அத்தகைய முறைகளை ஆதரிப்பவர்களுக்கும் பிறப்பைக் கட்டுப்படுத்தி ஒழுங்குபடுத்த வேண்டு மென்கிற விஷயம் பொதுவாயுள்ள விஷயமாகும் தன்னடக்கத்தின் மூலமாக, காம இச்சையை அடக்கலாம் என்பது சிரமமான காரியம். இதை யாரும் மறுக்க முடியாது; மனிதனுக்கு ஏற்பட்டுள்ள கடமையை அவன் சரிவரச் செய்து முடிக்க வேண்டுமேயானால், தன்னடக்கத்தைத் தவிர வேறு வழி கிடையவே கிடையாது. கருவி மூலம் கருப்பத்தடை செய்வது உலகமெங்கும் பரவிவிடுமேயானால், மனித சமுதாயத்தின் ஒழுக்கநடையே சீர் கெட்டு நாசமாகிவிடும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். கருவி மூலம் கருப்பத்தடை செய்யலாம் என்று பிரசாரம் செய்பவர்களின் முடிவுக்கு, நான் சொல்லுவது முற்றும் மாறுபட்டதா யிருப்பினும் நான் அதைச் சொல்லியே தீரவேண்டியிருக்கிறது.

நான் எதையும் கண்மூடித்தனமாக நம்புகிறவனல்லன். புராதனமானது என்பதனாலேயே உண்மை, உண்மையாகிவிடாது புராதனம் என்பதற்காக எல்லாவற்றையும் சந்தேகிக்கவும் கூடாது. செய்து முடிப்பது வாழ்க்கையில் கஷ்டமாயிருக்கிறது என்பதற்காக, வாழ்க்கைக்கு மிகவும் முக்கியமாய் இருப்பவற்றை வேண்டா மென்று ஒதுக்கித் தள்ளிவிடக் கூடாது.

புலன் அடக்கத்தின் மூலமாகக் கருப்பத்தடை செய்வது கஷ்டமான காரியந்தான்; இதில் சந்தேகமில்லை. ஆயினும் அதனால் ஏற்படுகிற நலன்களையோ, கருப்பத்தடைக் கருவிகளைவிட இதுதான் மேலான முறை என்பதையோ, யாரும் இதுவரை மறுக்க முன்வரவில்லை.

எனவே சாஸ்திரங்களில் சொல்லியுள்ள கட்டளையை ஏற்றுக்கொண்டு, கலவி செய்வதை வரைப்படுத்திக்கொள்வோமேயானால், புலன் அடக்கத்தை அனுஷ்டிப்பது மிக எளிது. இந்த எண்ணத்தோடு செய்யும் கலவியே அதிக இன்பம் பயக்கும். பிள்ளைப்பேற்று உறுப்புகள், பிள்ளைகளை உற்பத்தி செய்வதற்கே ஏற்பட்டன. அந்த நோக்கோடுதான் மணம் செய்துகொண்ட தம்பதிகள் பிள்ளைப்பேற்று உறுப்புக்களை உபயோகிக்க வேண்டும். அப்படி உபயோகப்படுத்தினால்தான் சிறந்த திடகாத்திரமான பிள்ளைகளை நாம் தோற்றுவிக்க முடியும். பிள்ளை வேண்டுமென்ற விருப்பம் இருவருக்கும் இருந்தாலே புணர்ச்சி செய்யலாம். புணர்ச்சியின் இலட்சியம் பிள்ளைப்பேறுதான். அப்படியின்றிச் செய்யும் கலவியைச் சட்டவிரோதமானதாகக் கருதுவதோடு, அதைத் தடுக்கவும் வேண்டும்.

சாதாரண மனிதன் இந்தக் கட்டுப்பாட்டை எப்படி அனுசரிக்கலாம் என்பதற்குரிய சாதனங்களை அடுத்த இதழில் ஆராய்வோம்.

# கருப்பத்தடை—2

**''சாதாரண வருவாய் உள்ளவர்களுக்குத் துன்பம் நேராத படியும் தேவைக்கதிகமான பிள்ளைகள் புதிதாகப் பிறக்காத படியும் கருப்பத்தடைக் கருவிகள் ஓரளவிற்கு ஒழுங்கு படுத்துவது உண்மைதான். ஆனால், சமூகத்திற்கும் தனிப் பட்டவர்களுக்கும் அதனால் ஏறபடும் ஒழுக்கச் சீர்கேடோ இவ்வளவு அவ்வளவு என்று கணக்கிட்டுச் சொல்ல முடியாது.''**

*இப்போதுள்ள சமூக அமைப்பில், தன்னடக்கத்தை வளர்பதற்குரிய வசதிகள் இல்லவே யில்லை. தன்னடக்கத் திற்கு மாறுபாடான முறையிலேயே நம்மை வளர்த்து விட்டார்கள். குழந்தைகளுக்கு எப்படியாவது மணம் முடித்துவிட வேண்டும், அவர்கள் பெற்றுப் பெருகி வாழ வேண்டும் என்பதே பெற்றோரின் முக்கிய நோக்கமாய் இருந்துவருகிறது. ஒழுக்கநலத்தைப்பற்றிய எண்ணம் ஒரு சிறிது மின்றி. கூடுமானவரையில் மிக மிகச் சின்ன வயதிலே யே பெண்களுக்குக் கலியாணம் முடித்துவிடுகிறார்கள். விருந்தும் களியாட்டமும்அற்பத்தனமானஎண்ணங்களுந்தான் மணச்சடங்கில் முக்கியத்துவம் வகிக்கின்றன. தொடர்ந்து வருகிற ஒரு துன்பம் போல, இந்தக் கலியாணச் சடங்கு நெடுகிலும் வளர்ந்து வருகிறது. குடும்பஸ்தனுடைய வாழ்க் கை, பழைய பழக்கவழக்கங்களிலேயே பின்னிக்கிடக்கிறது; சிற்றின்ப இச்சையை நீடிக்கச் செய்கிறது. அதிகமாகவும் சுதந்திரமாகவும் புலன் இன்பத்தை அனுபவிக்கும் பொருட் டே, விடுமுறை நாட்களும் சமூகக் களியாட்டங்களும் ஏற்பாடு செய்யப்படுகின்றன. சமூகத்தில் திணிக்கப்படுகிற இலக்கியங்களோ, காம இச்சையைக் கிளறிவிடுவனவாய் இருக்கின்றன. மிகவும் நவீனமாய் உள்ள இலக்கியங்கள் சிற்றின்பத் துறையில் நன்றாக அனுபவிப்பதே கடமை என்றும், பரிபூரண பிரமசரிய விரதம் அனுஷ்டிப்பது பாபம் என்றும் போதனை செய்கின்றன.*

*சாத்தியப்படாத நிலை ஏற்படவில்லையாயினும் காம இச்சையைக் கட்டுப்படுத்துவதில் ஓரளவு சிரமம் இருக்கவே செய்கிறது; இதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக் கிறது? தன்னடக்கத்தின் மூலமாகவே கருப்பத்தடை செய்ய*

வேண்டும்; அதுவே நியாயமான முறை, அறிவுக்கு ஒத்த முறை, தீமை பயவாத முறை என்று கருதுவோமாயின், சமூக இலட்சியத்தையும் சூழ்நிலையையும் நாம் மாற்றியமைக்க முயல வேண்டும். விரும்பிய இந்த இலட்சியத்தை அடைய வேண்டுமேயானால், தன்னடக்கத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் தாங்களாகவே முதலில் முயல வேண்டும். முயன்று, அசையாத பக்தியோடு சூழ்நிலையில் ஒரு சலசலப்பு ஏற்படும்படி செய்ய வேண்டும். அப்படி முயலுகிறவர்களுக்கு, சென்ற வாரம் மணத்தைப்பற்றி விவாதித்த விஷயம் மிகவும் பயனுடையதாய் இருக்கும். அதைச் சரியானபடி புரிந்து கொண்டுவிட்டால், மனப்போக்கே முற்றிலும் புரட்சிகரமான முறையில் மாறிவிடும். தேர்ந்தெடுத்த ஒருசில நபர்களுக்கு மட்டும் நான் இதைச் சொல்லவில்லை மனித சமுதாயமும் கடைப்பிடிக்க வேண்டிய நியதி என்றே நான் தன்னடக்கத்தைக் குறிப்பிடுகிறேன். தன்னடக்கத்தைக் கடைப்பிடிக்காவிட்டால் மனிதத்தன்மை மிகவும் கீழானதாகிவிடும்: தண்டனை என்ற முறையில் தேவைக்கு அதிகமான குழந்தைகள் பிறந்து, பெருகி, நோயும் நொடியும் தொடர்ந்து நம்மை விடாப்பிடியாய்ப் பற்றிக்கொண்டு வளரும். கடவுளுக்குப் பொறுப்பாளியாக இருக்க வேண்டிய மனிதனுடைய ஒழுக்க நடையில் ஊனம் ஏற்பட்டுவிடும். சாதாரண வருவாய் உள்ளவர்களுக்குத் துன்பம் நேராதபடியும் தேவைக்கதிகமான பிள்ளைகள் புதிதாகப் பிறக்காதபடியும் கருப்பத்தடைக் கருவிகள் ஓரளவிற்கு ஒழுங்குப்படுத்துவது உண்மைதான்; ஆனால் சமூகத்திற்கும் தனிப்பட்டவர்களுக்கும் அதனால் ஏற்படும் ஒழுக்கக் கேடோ இவ்வளவு அவ்வளவு என்று கணக்கிட்டுச் சொல்ல முடியாது. காம இச்சையைத் தணித்துக்கொள்ளும் பொருட்டே காம இன்பத்தை அனுபவிப்பவர்களுக்கு வாழ்க்கையைப் பற்றி அவர்கள் கொண்டுள்ள எண்ணத்தில் ஒரு பெரிய மாறுதல் ஏற்படும். மணத்தை புனிதமான ஒரு சடங்காக அவர்கள் கருத மாட்டார்கள். இதுவரையில் உயர்ந்த பொக்கிஷம் போலக் கருதி வந்த சமூக இலட்சியங்களையே மறுபடியும் மதிப்பிட்டுப் பார்க்க வேண்டிய நிலைமை ஏற்படும். பழைய காலத்தில் மணத்தைப் பற்றி இருந்துவந்த இலட்சியங்களை மூட நம்பிக்கை என்று கருதுகிறவர்களுக்கு இந்த விவாதம் பிடிக்கவே பிடிக்காது; இதில் ஐயமில்லை. மணத்தை ஒரு புனிதச் சடங்காகவும், பெண்ணைக் காமத்தைத் தணித்துக்கொள்ளும் கருவி என்றல்லாமல் மக்களினத்திற்கே தாயாகவும், குழந்

தைகளின் ஒழுக்கநடைக்கு தர்மகர்த்தாவாகவும் கருதுகிற வர்களுக்கு மட்டுமே எனது வாதத்தை நான் தெரிவிக்கிறேன்.

தன்னடக்கத்தில் நான் அடைந்த சொந்த அனுபவமும் எனது சகாக்களின் அனுபவமும், நான் இப்போது சொல்லும் கருத்தை வலியுறுத்துகின்றன. புராதன காலத்தில் மணத் தைப்பற்றி இருந்த அபிப்பிராயம் எங்களுக்குத் தெளிவுபட விளங்கியது. இந்தக் கருத்தும் எங்கள் அனுபவத்திற்கு மிகவும் ஆக்கம் தருவதாய் இருக்கிறது. மணம் செய்து கொண்ட பின் பிரமசாரியாக வாழ்க்கை நடத்துவது, இப் போது எனக்கு இயற்கையை ஒட்டியதாகவும் தவிர்க்க முடி யாததாகவும் தோன்றுகிறது. மணவாழ்க்கையைப் போலவே இதுவும் எளிதானதாய் இருக்கிறது. கருப்பத்தடை சம்பந்த மான மற்ற முறைகள் பயனற்றனவாயும் நினைக்கத் தகாதன வாயும் தோன்றுகின்றன. ஆணுக்கும் பெண்ணுக்கும் அமைந்துள்ள பிள்ளைப்பேற்று உறுப்புகள், பிள்ளைப்பேற்றை அடையும் பொருட்டே, அந்த மேன்மையான நோக்கத்திற் காகவே, ஏற்பட்டுள்ளன. அதைத் தவிர வேறு நோக்கதிற் காக அந்த உறுப்புக்களை நாம் பயன்படுத்தினால், உயிர்ச் சத்து நிறைந்ததான இந்திரியம் வீண் விரையமாகும்; அதனால் ஆணுக்கு உள்ளத்தில் கிளர்ச்சி ஏற்பட்டு விலை மதிக்க முடியாத சக்தியே செலவழிந்து போய்விடும். ஆதிகாலத்தி லிருந்த அறிவாளிகள் இந்திரியத்தின் சிறப்பை உணர்ந்து வலியுறுத்தியதையும், அந்தச் சக்தியைச் சமூக நலன் கருதி மேன்மையான காரியங்களில் ஈடுபடுத்த வேண்டும் மென்று தெரிவித்ததன் நோக்கத்தையும், நாம் இப்போது எளிதில் உணர்ந்துகொள்ளலாம். ஆணாய் இருந்தாலும் சரி பெண்ணாய் இருந்தாலும் சரி காம இச்சையைக் கட்டுப்படுத்தியவர் களுக்கு உடல், உள்ளம், ஆன்மா மூன்றுமே பலப்படும் என்றும், இதனால் ஏற்படும் சக்தியை வேறு எந்த வழிகளா லும் அடைய முடியாதென்றும் அழுத்தமாகச் சொல்லி யுள்ளார்கள்.

எடுத்துக்காட்டாகக் காட்டுவதற்கு இத்தகைய மகத்தான பிரமசாரிகள் பலரோ அல்லது ஒருவரோ இப் போது நம்மிடையே இல்லையே என்பதற்காக வாசகர்கள் கவலைப்பட வேண்டாம். இன்று நாம் காணும் பிரமசாரிகளைப் பரிபூரணமான பிரமசாரிகள் என்று சொல்வதற்கில்லை. கூடிய வரையில் இவர்கள் உடம்பைக் கட்டுப்படுத்தி யிருக்கிறார்கள். ஆனாலும், இவர்களுக்கு இன்னும் மனக் கட்டுப்பாடு ஏற்பட வில்லை; ஆசை காட்டுகின்றவற்றை எதிர்த்து நிற்கும் மன

வலிமை இல்லை. பிரமசரியத்தை அனுஷ்டிப்பது கஷ்டமென்ற காரணத்தால் ஏற்பட்டவை யன்று இவை. சமூகத்தின் சூழ்நிலை அவர்களுக்கு மாறுபட்டு நிற்கிறது. மேலும், காம இச்சையை அடக்க வேண்டும் மென்று உண்மையாக முயன்று வருபவர்களில் பெரும்பாலோர், தங்களை அறியாமலே மற்ற இச்சைகளை யெல்லாம் கட்டுப்படுத்தாமல், காம இச்சையை மட்டும் கட்டுப்படுத்த முயல்கிறார்கள். முயற்சி வெற்றி பெற வேண்டுமானால், மனிதனை ஆட்டிவைக்கும் எல்லா இச்சைகளையுமே நாம் கட்டுப்படுத்த முயல வேண்டும். சராசரி நிலையிலுள்ள ஆண் பெண்களுக்கு, பிரமசரிய விரதத்தைக் கடைப்பிடிப்பது இயலாத காரியமன்று; ஏதாவது ஒரு நுண்கலையில் திறமை பெற விரும்பி, அதிலேயே தனது முயற்சிகள் அனைத்தையும் செலுத்தும் ஒரு சாதாரண மாணவருக்கு வேண்டிய அளவு முயற்சி, பிரமசரிய விரதம் அனுஷ்டிப்பதற்கும் தேவைதான். வாழ்க்கைத் தத்துவத்தைச் சரிவர உணர்ந்து, அதில் முழுத் திறமை பெறுதலையே நாம் பிரமசரியம் என்று இங்கு குறிப்பிடுகிறோம்.

# அமெரிக்காவிலிருந்து ஒரு சான்று

**"புலன்களைச் சரியானபடி கட்டுப்படுத்தாது, பிள்ளைப்பேற்று உறுப்புகளைக் கட்டுப்பாடு செய்வது சாத்திய மன்று. ஒன்றுக் கொன்று தொடர்புடையனவாய் உள்ளன."**

மான்டனாவில் (ஐக்கிய அமெரிக்க நாடுகள்) வசிக்கும் கன்னி மேபல் இ. சிம்சன் ஆசிரியருக்கு எழுதியிருப்பது:

"வழக்கம் போலவே, விஷயங்களைத் துருவியாராய்ந்து கருப்பத் தடையைப்பற்றி, மிஸ்டர் காந்தி தெளிவுபெறக் கட்டுரை எழுதியிருப்பதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். இருபது ஆண்டுகளுக்கு முன்னர், கருப்பத்தடைக்கு அமெரிக்காவில் ஆதரவு இல்லாது இருந்தது; இப்போதோ அதனுடைய ஆதிக்கம் எங்குமே வியாபித்து இருக்கிறது. அமெரிக்காவிற்கு வந்து, இந்த இரு நிலைகளையும் அவர் கவனித்திருப்பாரேயானால் ஒழுக்கச் சீர்கேடு கருப்பத் தடையால் எவ்வளவு ஏற்பட்டிருக்கிறது என்பதைக் கண்டுகொள்வார். கருப்பத்தடையால் ஏற்படுகிற கேட்டை விளக்கிச் சொல்லி அவரால் ஒருவரையும் திருத்த முடியாது. கருப்பத்தடையை அனுஷ்டிக்கிறவர்கள் ஒழுக்க, ஆன்மீக விஷயங்களைக் கண்டதும் தங்கள் கண்களை அப்படியே மூடிக்கொள்கிறார்கள். இதனால் ஆன்மீக அறிவோடோ ஒழுக்க அறிவோடோ அவற்றை ஆராயும் சக்தி அவர்களுக்கு இல்லாது போய்விடுகிறது. மேலைநாட்டைப் பார்த்து இந்தியாவும் கருப்பத்தடை முறையைப் பின்பற்றுமேயானால், ஒப்பற்ற, விலைமதிக்க முடியாத இரு செல்வங்களை அது நிச்சயமாய் இழந்துவிடும். சிறு குழந்தைகளிடம் வாஞ்சை, பெற்றோருக்குச் செய்யும் மரியாதை இவை இரண்டுமே இல்லாது போய்விடும். அமெரிக்கா இந்த இரண்டு செல்வங்களையும் இழந்துவிட்டது. இழந்ததைப்பற்றி அது அறியவுமில்லை. 'பிரமசரியம்' என்ற வார்த்தையின் பொருளை விளக்கமாகப் பத்திரிக்கையில் எழுதுவீர்களா? இதன் பொருள் என்னவென்று கேட்கிறார்கள். அதன் பொருளைப்பற்றி எனக்கு ஓரளவு தெரியுமாயினும் போதுமான அளவு அதன் பொருளைப் பிறருக்கு விளக்கிச், சொல்ல என்னால் முடியவில்லை. வணக்கம்."

வாசகர் ஒவ்வொருவரும் இந்தச் சான்றைப்பற்றித் தாமே ஒரு முடிவிற்கு வரலாம்; கருப்பத்தடைக் கருவிகளை உபயோகப்படுத்தியதனால் நன்மை விளைந்திருக்கிறது என்று சொல்லுகிறவர்களின் சான்றைவிட, அதை எதிர்த்துச் சொல்லுகிற இந்தச் சான்று அதிக மதிப்புக்குரியது என்று நான் எண்ணுகிறேன். காரணம் வெளிப்படையாகவே தெரி

கிறது. குழந்தைகள் அடிக்கடி பிறப்பதை இது தடுத்து விடுகிறது என்ற நன்மையை ஒருவரும் மறுக்கவில்லை. ஆனால் அதனால் விளையும் ஒழுக்கச் சீர்கேட்டை இவ்வளவு அவ்வள வென்று கணக்கிட்டுச் சொல்ல முடியாது. அதனால் விளைந் துள்ள தீமையின் அளவைக் கன்னி சிம்சன் நமக்குத் தெரிவித் துள்ளார்.

பிரமசரியம் என்ற சொல்லுக்கு உரிய வியாக்கியா னத்தை இப்போது பார்ப்போம்: கடவுளோடு நம்மை இணைக்கும் நடத்தை என்பதே அதன் ஆழமான பொருளாகும் புலன்களை யெல்லாம் பூரணமாய் அடக்கியாளுவதுதான் நடத்தை; இதுதான் அந்த வார்த்தைக்கு உண்மையான சரியான பொருளாகும்.

பொதுப்படையாக, உடல் சம்பந்தப்பட்ட, பிள்ளைப் பேற்று உறுப்புக்களைக் கட்டுப்படுத்துவது என்று அதற்குப் பொருள் கூறுகிறார்கள். இந்தக் குறுகிய பொருள் பிரமசரி யத்தின் இயல்பைக் கேவலப்படுத்திவிட்டது. அதை நடை முறையில் சாத்திய மில்லாதபடியும் செய்துவிட்டது. புலன்களைச் சரியானபடி கட்டுப்படுத்தாது, பிள்ளைப்பேற்று உறுப்பினைக் கட்டுப்பாடு செய்வது சாத்தியமன்று. அவை ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாய் உள்ளன; கீழ்ப் படியிலே மனம் என்பது புலன்களில் அடங்கிவிடுகிறது. மனத்தைக் கட்டுப்படுத்தாது உடலைக் கட்டுப்படுத்த முயல் வது சிறிது காலத்திற்குச் சாத்தியமா யிருக்கலாம்; அதனால் யாதொரு பயனும் கிட்டாது.

# கருப்பத்தடைக் கருவிகள்

**"தனக்குள்ளே இருக்கும் எண்ணிறந்த எதிரிகளை எதிர்த்து நிற்கத் திறன் இன்றி, கற்பனை செய்துகொண்டு வெளியே இருப்பவர்களோடு, போர் செய்பவனைச் சரியான போர் வீரன் என்று சொல்ல முடியாது. இன்னும் மோசமான காரியம் என்ன வென்றால், உள்ளே இருக்கும் எதிரிகளைத் தனது நண்பர்களாக அவன் பாவிப்பதுதான்."**

*ஒரு நிருபர் எழுதுகிறார்:*

*"மகாத்மா காந்திக்கும் திருமதி சாங்கருக்கும் நடந்த பேட்டியைப்பற்றி, சமீபத்தில் வெளியான ஹரிஜன் பத்திரிக்கையில் விவரம் வெளியாகி இருக்கிறது. அதைப்பற்றி நான் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.*

*"இந்தப் பேட்டியில் முக்கியமான ஒரு உண்மையை—அதாவது மனிதனுடைய சிறப்பு, அவனுடைய கலைத்திறத்திலும் சிருஷ்டிக்கும் ஆற்றலிலும் இருக்கிறது என்ற உண்மையை—மறந்து விட்டதாகவே தோன்றுகிறது. தேவையைப் பூர்த்தி செய்து கொள்வது என்பதோடு மட்டும் மனிதன் திருப்தி யடைவதில்லை. அதோடுகூட அழகு, வர்ணம் கவர்ச்சி முதலியனவும் அவனுக்கு வேண்டும். "உன்னிடம் ஒரே ஒரு பைசா இருக்குமானால், அதற்கு ரொட்டி வாங்கு; இரண்டு பைசா இருக்குமானால் ஒரு பைசாவிற்கு ரொட்டியும் மற்றொன்றுக்குப் பூவும் வாங்கு" என்று முகம்மது நபி சொல்லியிருக்கிறார். இதில் ஒரு மகத்தான மனோதத்துவ உண்மை—அதாவது, பிறவியிலேயே மனிதன் கலைஞன் என்ற உண்மை — அடங்கிக் கிடக்கிறது. உடலை மூடிக்கொண்டால் மட்டும் போதாது; உடை அழகாயும் இருக்க வேண்டும் என்ற எண்ணம் மனிதனுக்கு இருப்பதனாலேதான், அவன் ஆடைகளை அழகுபெற உற்பத்தி செய்வதைக் காண்கிறோம். மிகவும் அரும்பாடுபட்டே, தேவைப் பொருள்களைக்கூட, மனிதன் கலைப்பொருள்களாக ஆக்கிக் கொள்ள முயலுகிறான்; அவனிடம் அமைந்துகிடக்கும் சிருஷ்டி தத்துவம், தொல்லைகளையும் பிரசினைகளையும் தனக்குத் தானே அதிகப்படுத்திக்கொள்ளும்படி அவனைத் தூண்டுகிறது; மறுபடியும் அவற்றைச் சரிபடுத்தும்படியும் செய்கிறது. காந்திஜீ விரும்புகிறபடி ரூஸோ, ரஸ்கின், டால்ஸ்டாய், தோரோ இவர்களைப் போன்று மனிதன் 'எளிய' வாழ்க்கை நடத்த முடியாது. மனிதனுடைய சிருஷ்டி சக்திக்கு உடந்தையாக, யுத்தம் அத்யாவசியமான தேவையாய் இருக்கிறது. அதனாலேதான் யுத்தத்தைக்கூட மனிதன் ஒரு பெரிய கலையாகச் செய்துவிட்டான்.*

"மனிதனுடைய இயல்பிற்கு, இயற்கையின் போக்கு முற்றுமே ஒவ்வாத தன்மையில் இருப்பதால், இயற்கையிலிருந்து உதாரணங்களை எடுத்துக்காட்டி, அதன்படி மனிதன் நடக்க வேண்டுமென்று சொல்வது பயனற்றதாகும். அவனுக்கு ஆசிரியனாக 'இயற்கை' அமையவே முடியாது. இயற்கையில் மலையும் குன்றும் புல்வெளியும் பூங்காவும் மட்டுமில்லை; வெள்ளம், புயல், பூகம்பம் முதலியனவும் இருக்கின்றன. இயற்கையைப் பார்த்து நடந்துகொள்ளும்படி போதனை செய்பவர்கள் இந்த உண்மையை மறந்துவிடுகிறார்கள். பழைய சம்பிரதாயங்களைத் தகர்ப்பவரான நீட்சே, கலை நோக்கோடு பார்த்தால், மனிதனுக்கு எடுத்துக்காட்டாக இயற்கை இருக்க முடியாது என்று சொல்லுகிறார். இயற்கையில் மிகையும் சிதைவும், ஊனங்களும் இருக்கவே செய்கின்றன. இயற்கை என்பது அகஸ்மாத்தாய் அமைந்திருப்பது; எனவே இயற்கையிலிருந்து கற்பது, மனிதனுக்குக் கேடு செய்யும் என்று தோன்றுகிறது. குப்பை கூளங்களைக் கிண்டிப்பார்க்கிற காரியம், சரியான கலைஞனுக்கு உரிய தொழிலன்று. வேறு வகையான அதாவது கலையுணர்ச்சிக்கு எதிரிடையான அறிவுப் போக்குடையவர்களின் செயலை அறிய அவர்கள் யாவர் என்பதைக் கவனிக்க வேண்டும். உடம்பை வளர்த்துக் கொள்ள வேண்டிய தேவையின் நிமித்தமாகவே, கொடுமையான விலங்குகள் பச்சை மாமிசத்தைப் புசிக்கின்றன. சுவையைப் பிரதானமாகக் கருதி அவை புசிப்பதில்லை. இயற்கையிலே சில பருவங்களைத் தவிர வேறு பருவங்களில் பிராணிகள் கலவியில் ஈடுபடுவதில்லை என்பதையும் நாம் அறிவோம்; ஆனால் இப்படி நடந்துகொள்வது சரியான கலைஞனை மனிதனுக்கு ஏற்றதன்று என, மறுபடியும் நமது தத்துவசாஸ்திரி சொன்னதையே நாம் எடுத்துக்காட்ட வேண்டியதிருக்கிறது. இனிமேல் பிள்ளைகள் வேண்டாம் என்ற எண்ணம் வந்தவுடன் கலவியை நிறுத்திவிடுவதோ, அல்லது பிள்ளை வேண்டுமென்ற ஆசை வெளிப்படையாக இருக்கும்போது மட்டும் கலவி செய்வதோ, கணக்குப் பார்த்துச் செய்கிற காரியமாயும், அளவுக்கு மிஞ்சிய இயற்கைப் போக்காயும் சுவாரஸ்யமில்லாத சாமானிய நிகழ்ச்சியாயும் இருக்கிறது. நமது தத்துவ சாஸ்திரி சொல்லுவதுபோல, மனிதனிடம் காணப்படும் பலமான கலையுணர்ச்சிக்கு இது முற்றிலும் மாறுபட்டதாகும். பிள்ளைப்பேறு வேண்டுமென்ற ஆசை இல்லாமலே காம இன்பத்தை நுகர்கிற போக்கு இயல்பாகவே மனிதனுக்கு உண்டு. அந்த இன்ப நுகர்ச்சி, ஆன்மீக உணர்விலிருந்தே தோன்றுகிறதென்று, ஹாவ்லக் எல்லிஸ், மேரி ஸ்டோப்ஸ் போன்ற அறிவாளிகள் சொல்லுகிறார்கள். இந்த இன்பம் ஆன்மாவிலிருந்து தோன்றியபோதிலும், உடற்சேர்க்கையின்றிப் பரிபூரணத்தன்மையைப் பெறுவது சாத்தியமில்லை;

உடலின் மூலமாகவே ஆன்மாவைக் காண்கிறோமே யன்றி, ஆன்மாவை மட்டும் தனியே நாம் காண்பதில்லை. கலவியினால் ஏற்படும் பலாபலன்களைப்பற்றி ஆராய்வது வேறு விஷயம். கருப்பத்தடை இயக்கத்தின் வேலை இந்தப் பலாபலன்களை ஆராய்வதில்தான் இருக்கிறது. இந்த ஆராய்ச்சியையே ஆன்மீக உணர்வைத் திருத்தும் பொருட்டுச் செலவிட்டால்— இதைத்தான் 'தன்னடக்கம்' என்று சொல்கிறார்கள்—அதாவது புற உணர்ச்சிகளால் திருத்தி அமைத்துவிட்டால், அதனாலும் கூட, சரியான பலன் கிடைக்குமென்று நம்புவதற்கு இல்லை. உறுதியான மனோதத்துவ மாறுதலின்றி, கருப்பத்தடை இயக்கமும் நடக்க இயலாது.

"நான் இப்படிக் கூறுகிறபடியால், தன்னடக்கத்தின் சிறப்பை அதாவது பிரமசரியத்தின் மேன்மையைக் குறைகூற வில்லை. காம உணர்ச்சியைக் கலை நோக்கோடு பரிபூரணமாகக் கட்டுப் படுத்த முயல்வதை நான் வியப்பதுண்டு; மற்றக் கலைகள், எப்படி வாழ்க்கைக் கலையைப் பலவீனப்படுத்தாமல் பரிபூரணத்தை நோக்கி வளர்கின்றனவோ, அதே போல (நீட்சேயின் கொள்கைப்படி) ஒரு தத்துவத்தினுடைய சிறப்பு மற்ற தத்துவங்களின் சிறப்பைப் பலவீனப்படுத்துவதாய் இருத்தல் கூடாது. எனவே, பிரமசரிய தத்துவந்தான் மற்ற தத்துவங்களைவிட மேன்மையானது என்பதையோ, அல்லது மற்ற தத்துவங்களை யெல்லாம் அது அடக்கி வருவதையோ, நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன்: ஜனத்தொகைப் பெருக் கத்தைக் கட்டுப்படுத்துவதற்குப் பிரமசரியத்தை ஒரு கருவி யாக உபயோகிப்பதையும் நான் ஒப்புக்கொள்ள முடியாது. பிரமசரியத்தைப் பிரமாதப்படுத்தி ஒரு பைசாசமாக ஆக்கி விட்டோம்! 'யுத்தக் குழந்தைகள்' எனச் சிலரை அழைக்கிறார் கள். ரத்தத்தைச் சிந்தி, யுத்தம் செய்து, தேசத்திற்கு அவர் கள் வெற்றி தேடித் தருகிறார்கள். யுத்தம் செய்து, அப்படி வெற்றி தேடித் தந்த போர்வீரர்களை, யுத்தம் செய்தார்கள் என்பதற்காக வெறுக்கலாமா? மதிக்க மறுக்கலாமா? அப்படி ஒருவரும் செய்ய மாட்டார்கள். இந்த விதமான எண்ணங்களை மனதிற்கொண்டே, உபநிஷத்துக்கள் (பிரஷ்னோபனிஷத்) இவ்விதம் சொல்லி யிருக்கிறது: இரவு நேரங்களில் கலவி செய் வது பிரமசரியமாகும் என. அதாவது மத்தியான நேரங்களில் கலவி செய்வது இயற்கைக்கு விரோதமாகும். இங்கே சாதா ரணமான கலவி முறையே பிரமசரியம் என்று சொல்லப் பட்டிருக்கிறது. நமது வாழ்க்கையின் பல தத்துவங்களையும் தலைகுப்புற மாற்றிவிட்ட பின்புதான் பிரமசரியம் என் பதற்கு ஒரு கடுமையான பொருள் ஏற்பட்டது."

நிந்தனையோ, இகழ்ச்சியோ, மறைமுகமான குத்தலோ நிறைந்திராத கடிதங்களை யெல்லாம் வெளியிடுவதைப்

போலவே, இந்தக் கடிதத்தையும் நான் மகிழ்ச்சியோடு வெளியிடுகிறேன். ஒரு விஷயத்தை அலசி ஆராயும்போது இரு தரப்பாரது அபிப்பிராயங்களையும் தெரிந்துகொள்ள வேண்டும்; அப்போதுதான் உறுதியான ஒரு முடிவிற்கு வருவது சாத்தியமாகும். ஒரு விஷயத்தை எடுத்துக்கொண்டு, அதில் காணப்படும் சிறப்பான பகுதிகளையே நான் விளக்க முயல்வதுண்டு. சில திறமைசாலிகள் நான் சொல்வதை அப்படியே ஒதுக்கித்தள்ளிவிட எண்ணி—அறிவிற்குப் பொருத்தமானது, இதனால் நன்மை உண்டு என்று சொல்லி—எனது கருத்திற்கு முற்றும் முரண்பட்ட கருத்துக்களைச் சொல்லி வருகிறார்கள். அதனாலேயேதான் அவர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன்.

மணம் செய்துகொண்டவர்கள் காம இச்சையைத் தணித்துக்கொள்வது தன்னளவில் நல்லது, இருவருக்கும் நன்மை தரும் என்பதை, எனக்குத் திருப்தி ஏற்படும் முறையில் ஒருவரும் நிரூபித்துக் காட்டவில்லை. அதற்கு விரோதமாக, எனது சொந்த அனுபவத்திலிருந்தும் அனேக நண்பர்களின் அனுபவத்திலிருந்தும் போதுமான சான்றுகளை என்னால் எடுத்துக்காட்ட முடியும். கட்டுப்பாடு இல்லாத வாழ்க்கையால் யாதொரு நலனும—உடல், மனம், ஆன்மா எதற்கும்— உண்டு என்று சொல்வதற்கில்லை. ஏதோ சிறிது நேரத்திற்கு மனக்கிளர்ச்சியும் ஒருவித திருப்தியும் கலவியினால் ஏற்படுவது உண்மைதான். ஆயினும் அதைத் தொடர்ந்தே களைப்பும் ஏற்படுகிறது, களைப்புத் தீர்ந்தவுடன் கலவியில் ஆசையும் உண்டாகிறது. மாறி மாறி வருவதுதான் இதன் இயல்பு. நான் எப்போதுமே கவனமாய் இருந்து செயல்களில் ஈடுபடுகிறவன். அப்படியிருந்தும் சிற்றின்பக் கவர்ச்சியால் என் வேலைகள் தடைப்பட்டுப் போனதை நான் எடுத்துக்காட்ட முடியும்; கலவிக்கு உள்ள எல்லையின் அளவை உணர்ந்து, நான் தன்னடக்கத்தைக் கைக்கொள்ள முயன்றேன். நீண்ட காலமாக யாதொரு விதமான நோயுமின்றி, திடகாத்திரத்தோடு நான் இருப்பதற்குக் காரணம் இந்தத் தன்னடக்கமே ஆகும் என்பதில் எனக்கு ஒருசிறிதும் ஐயமில்லை. என்னுடைய உடலுழைப்பும் மூளையுழைப்பும் பிரமாதமானவை யென்று நேரில் பார்த்தவர்கள் சொல்லியிருக்கிறார்கள்; இதற்குத் தன்னடக்கமே காரணமாகும்.

இந்த நிருபர், தாம் படித்தவற்றைத் தவறுதலாகப் பயன்படுத்துகிறார். மனிதன் கலைஞன் என்பதும் சிருஷ்டி

கர்த்தா என்பதும் உண்மைதான். அழகையும் வர்ணச் சாயங்களையும் அவன் அனுபவிக்க வேண்டியவன்தான். பாகுபாடு செய்யாமல், ஒரே இடத்தில் பல நிறங்களைக் கொட்டி வைப்பதில் அழகு இருக்க மாட்டாது என்றும், எல்லா வற்றையுமே நல்லதென்று அனுபவிப்பது இன்பம் பயக்கா தென்றும், அவனிடம் காணப்படும் சிருஷ்டி சக்தியும் கலையுணர்ச்சியும் அவனுக்குப் போதனை செய்கின்றன. கலையின் உபயோகத்தின் மூலமே இன்பம் காண வேண்டு மென்பதை, அவனது கண்கள் அறிவுறுத்துகின்றன. மனித வளர்ச்சியின் ஆரம்ப காலத்தில், வாழ்வதற் கென்றே மனிதன் உணவு உட்கொண்டானே யன்றி, நம்மில் இப்போது சிலர் உண்பதைப்போல உண்பதற்காகவே உணவு உட்கொள்ளவில்லை. பின்னர் வாழ்வதற்கே வாழ்க்கை நடத்துவதில் ஆனந்தமும் அழகும் இல்லை என்பதையும், தன்னைப்போன்ற உயிரினத்துக்கும் அதன் மூலம் தன்னைப் படைத்த கடவுளுக்கும் தொண்டு செய்வதிலே இன்பமும் அழகும் இருப்பதாகக் கண்டான். அதைப்போலவே கலவியினல் உண்டாகிற இன்பத்தைப்பற்றியும் ஆலோசனை செய்து பார்த்தான். மற்றப் புலன்களைப் போலவே, பிள்ளைப்பேற்று உறுப்பினையும் பயன்படுத்தவும் துஷ்பிரயோகப்படுத்தவும் முடியு மென்பதையும் கண்டான். அதற்குரிய சரியான தொழில் பிள்ளைப்பேறுதான் என்பதைக் கண்டான். வேறு இன்பத்திற்காக அதை உபயோகிப்பது அவனுக்கு அருவெறுப்பைக் கொடுத்தது. மேலும் அவ்விதம் துஷ்பிரயோகப்படுத்துவதனல் சமூகத்திற்கும் தனக்குமே பெருங்கேடு உண்டாகிறது என்றும் கண்டான். இந்த விவகாரத்தை இதற்குமேல் நீட்ட நான் விரும்பவில்லை.

அத்தியாவசியமான தேவைகளினலேதான் கலைகள் பிறக்கின்றன என்று இந்த நிருபர் நன்ருகச் சொல்லியிருக்கிருர். தேவைக்கு, அத்தியாவசியமான புதுப் பொருளைச் சிருஷ்டிப்பது மட்டுமின்றி, கலைகளையும் பிறப்பிக்கும் ஆற்றல் உண்டு. எனவே, அத்தியாவசியமான தேவையை அடிப்படையாகக் கொண்டிராத கலைகளைப்பற்றி நாம் கவனமாய் இருக்க வேண்டும்.

சிறு சிறு தேவைகளையெல்லாம் அத்தியாவசியமான தேவை என்று சொல்லிப் பெருமைப்படுத்திவிடக் கூடாது. மனிதனுடைய தொழில் பயிற்சி பெறுவதுதான். அவன் பயிற்சி பெற்று வருகிற காலத்தில் நன்மை தீமை இரண்டுமே வந்து அவனைத் தாக்குவதுண்டு; ஆசை காட்டும் பொருள்கள்

அவனை மயக்கிவிடுவ துண்டு. இவ்விதம் ஆசை காட்டும் பொருள்களை எதிர்த்து நின்று போராடி, மனிதன் தனக்குள்ள மனிதத்தன்மையை மெய்ப்பித்துக் காட்ட வேண்டும் தனக்குள்ளே இருக்கும் எண்ணிறந்த எதிரிகளை எதிர்த்து நிற்கத் திறன் இன்றி, தன் கற்பனை சிருஷ்டிக்கும் வெளி எதிரிகளோடு போர் செய்பவனைச் சரியான போர்வீரன் என்று சொல்ல முடியாது. இன்னும் மோசமான காரியம் என்னவென்றால், உள்ளே இருக்கும் எதிரிகளைத் தனது நண்பர்களாக அவன் பாவிப்பதுதான். போராட்டம் என்பது ஒரு அவசியமான காரியம் என்பது உண்மையாயினும், அதற்காகவே, மனிதன் அதைக் கலையாகச் செய்துவிட்டான் என்று இந்த நிருபர் சொல்வது பிழையாகும். யுத்தக் கலையை மனிதன் இன்னும் சரியானபடி அறிந்துகொள்ளவில்லை. நமது முன்னோர்கள் தங்களிடமுள்ள கேவலமான இச்சைகளைத் தியாகம் செய்வதற்குப் பதில், தவருக மனிதவர்க்கத்தைச் சேராத எளிய ஜந்துக்களை யாகம் என்னும் பெயரினல் கொலை செய்தது போலவே, இன்னும் செய்து வருகிறதைப் போலவே, இந்த நிருபரும் பொய்யான யுத்தத்தை உண்மையான யுத்தம் என்று எண்ணித் தவறு செய்துவிட்டார்; உண்மையான யுத்தக் கலையை நாம் இனிமேல்தான் படித்துக்கொள்ள வேண்டும். அபிசீனிய எல்லைப்புறத்தில் இன்று நடக்கிற யுத்தத்தில் அழகுமில்லை; 'கலையுணர்ச்சியு மில்லை என்பது நிச்சயம். உதாரணங்களாக, சில பெயர்களை—அவருக்குப் பிடிக்காத பெயர்களை—இந்த நிருபர் காட்டுகிருர். ரூஸோ, ரஸ்கின், தோரோ, டால்ஸ்டாய் முதலியோர், அவர்கள் காலத்தில், முதல் தரமான கலைஞர்களாக விளங்கினர்கள். நம்மில் அநேகர் மாண்டு மண்ணோடு மண்ணாய்க் கலந்து மறக்கப்பட்டுபோன பிறகும்கூட, இந்தப் பெரியார்களின் புகழ் நின்று நிலவும் என்பது திண்ணம்.

'இயற்கை' என்ற சொல்லையும் இந்த நிருபர் தவருதலாகப் பயன்படுத்துகிருர். இயற்கையைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்னும்போது, பாம்பையோ சிங்கத்தையோ பின்பற்றும்படியாக நாம் மனிதனுக்குச் சொல்வதில்லை. மனிதனிடம் காணும் சிறந்த பண்புகளையே—அதாவது மறுமலர்ச்சிக்குப் பிறகு அவனிடம் காணப்படும் சிறந்த பண்புகளையே—பின்பற்ற வேண்டுமென்று நான் சொல்லுகிறேன். மறுமலர்ச்சி யடைந்த மனிதனது பண்புகள் யாவை என்று அறிய அதிகமாகப் பிரயாசை எடுத்துக்கொள்ள வேண்டும். புராதன ஆசிரியர்கள் எழுதியவற்றை உதாரணமாக எடுத்துக்

காட்டுவது, இந்தக் காலத்தில் அபாயம் விளைவிப்பதாய் இருக்கிறது. பிரஷ்ஞோபநிஷத்தையும் நீட்சேயையும் உதாரணமாகக் காட்ட வேண்டுமென்பது அவசியமில்லை. என்னைப் பொறுத்தவரையில், இந்தப் பிரசினை மேற்கோள்களையெல்லாம் கடந்து நிற்பதாகும். பகுத்தறிவு, இந்த விஷயத்தைப் பற்றி என்ன சொல்லுகிறது? பிள்ளைப்பேற்று உறுப்புகளை, பிள்ளைப்பேற்றைத் தவிர்த்து, வேறு துறையில் பயன்படுத்தக் கூடாது என்று சொல்வது சரியா, தவறா? வேறு துறையில் உபயோகப்படுத்துவது தவறு என்று மனதில் பட்டுவிட்டால், சரியான முறையில் பயன்படுத்தப் பழகிக்கொள்வது சிரமமில்லை.' உண்மையை நாடுவதாகச் சொல்லுகிறவர்களுக்கு, கெடுதலைவிட்டு நல்ல வழியில் செல்வது, எவ்விதக் குழப்பத்தையும் உண்டாக்காது.

# சீர்திருத்தக்காரர்களான பெண்களுக்கு

"கருப்பத்தடைக் கருவிகளைக் கைக்கொள்ளும்படி இந்தியப் பெண்களுக்குச் சொல்லிக்கொடுப்பது, வண்டிக்குப் பின்னால் மாட்டைப் பூட்டுகிற கதைதான்; முதலாவது செய்ய வேண்டிய காரியம், பெண்ணிடம் காணப்படும் அடிமை மனப்புத்தியைப் போக்கிவிட வேண்டும்; தேச சேவை, மனித சமுதாய சேவை ஆகியவற்றின் மேன்மையையும் அவளது உடம்பின் புனிதத்தன்மையையும்பற்றி, அவளுக்குப் போதிக்க வேண்டும்."

சகோதரி ஒருவருடன் காரசாரமாக விவாதம் செய்து கொண்டிருந்தேன். அப்போது, கருப்பத்தடைக் கருவிகளைப் பயன்படுத்துவது சம்பந்தமாக, நான் சொல்வதை ஒருவரும் இன்னும் சரியானபடி புரிந்துகொள்ளவில்லை என்று கண்டேன். மேலை நாட்டிலிருந்து வந்த முறை என்பதற்காக நான் கருப்பத்தடை முறையை எதிர்க்கவில்லை. மேலை நாட்டினருக்குப் பயன்படுதல் போல, நமக்கும் பயன் தரும் சில மேலை நாட்டுப் பொருள்களை, நன்றியறிதலோடு நான் உபயோகிப்பதுண்டு. கருப்பத்தடை முறையினை நான் எதிர்ப்பது, அவற்றின் தராதரம்பற்றியே யாகும்.

மணம் செய்துகொண்டு குழந்தை வேண்டாது, தங்கள் காமத்தையும் தங்கள் கணவன்மாரது காமத்தையும் தணிக்க விரும்புகிற பெண்களுக்கு மட்டுமே பிரசாரம் செய்வதாக கருப்பத்தடைப் பிரசாரம் செய்கிறவர்களில் சிறந்த அறிவாளிகளாய் இருப்பவர்கள் கூறுகிறார்கள். இந்த விருப்பம் மனித இயல்புக்கு ஒத்ததன்று; இயற்கையு மன்று. மனித சமுதாயத்தின் ஆன்மீக முன்னேற்றத்திற்கு இதனால் அதிக பாதகம் விளையும். நான் இப்படிச் சொல்வதற்கு விரோதமாக, அனேக சான்றுகளை எடுத்துக்காட்டுகிறார்கள். பென் என்னும் இடத்தைச் சேர்ந்த டாஸன் பிரபுவின் சான்றும் அவற்றில் ஒன்று:

"உலகில் காணப்படுகிற தலை தூக்கிநிற்கும் மிக மிக முக்கியமான சக்திகளில் காதலும் ஒன்று. நம்மிடம் காணப்படும் இந்த இயற்கை உணர்வு, மிக மிக அடிப்படையானதாயும் வன்மை மிகுந்ததாயும் இருக்கிறது. இதனுடைய சக்தியை நாம் ஏற்றுக்கொண்டேயாக வேண்டும். இந்த உணர்வை அடக்கி ஒடுக்கிவிடலாம் என்பது இயலாத காரியம். காம இன்பத்தின் போக்கை நல்ல வழிகளில் நாம் திருப்பிவிட வேண்டும்; எப்படியும் அதற்கு ஒரு போக்கு வழி இருந்தாக வேண்டும். நாம் செலுத்திவிடுகிற வழி ஏற்றதா யிராவிட்டாலும் அல்லது அளவிற்கு மீறி அதைத் தடைசெய்வதாய் இருப்பினும், இந்த

உணர்ச்சி கட்டுக்கடங்காது ஒழுங்கற்ற வழிகளில் சென்று விடும். தன்னடக்கத்திற்கும் ஒரு எல்லை யுண்டு. ஏதாவது ஒரு சமூகத்தில் மணம் நடைபெறுவதற்குச் சிரமம் அதிக மிருப்பினும் அல்லது காலங்கடந்து மணம் நடைபெறினும், ஆண் பெண் சேர்க்கை ஒழுங்கற்ற முறையில் அதிகமாவதற்கு இடமுண்டாகிவிடும். உடல் ஐக்கியத்தோடு, மனமும் உயிரும் ஐக்கியப்பட வேண்டுவது அவசியம் என்பதை எல்லாரும் ஒப் புக்கொள்கிறார்கள்; குழந்தைகள் பெற்று வளர்ப்பதுதான் முக்கியமான நோக்கம் என்பதையும் ஒப்புக்கொள்கிறார்கள். குழந்தை வேண்டுமென்ற விருப்பமோ எண்ணமோ இல்லா மலே கலவி இன்பம் உடலின் வேட்கையாக மீண்டும் மீண்டும் தோன்றத்தானே செய்கிறது? நமக்கு ஏற்படும் இந்த உணர்வு தவறானதா? அல்லது வாழ்க்கையோடு ஒட்டிய உண்மை களுடன் ஒருவித உயிர்த்தொடர்பு வைத்துக்கொள்ள, நமது கிறிஸ்தவ மதம் பின்வாங்குகிறதா? கிறிஸ்தவ மதத்திற்கும் மக்களுக்கு மிடையில் தொடர்பின்மை இருப்பதற்குக் கார ணம் இதுதானா? உண்மைகளை ஒட்டி, கள்ளங்கபடமின்றி, தைரியமான மனப்போக்கைக் காட்டினாலன்றி, இளைஞர்களின் ஒத்துழைப்பை, மத அதிகாரி உள்பட, எந்த அதிகாரியுமே நிச்சயமாகப் பெற முடியாது.

"காம இன்பத்தின் நோக்கம் குழந்தைகள் பெறுவது மட்டுமன்று. வேறு காரியங்களும் அதற்கு உண்டு. மணம் செய்துகொண்டவர்கள் இன்பம் பெறவும், உடல்நலத்துடன் விளங்கவும், காம இன்பம் மிக மிக அவசியமாகும். கடவுள் தந்த பேறு என்று நாம் காம இன்பத்தைக் கருதினால், அதை நல்ல முறையில் பயன்படுத்தப் பழகிக்கொள்ள வேண்டும். இப்படிப் பெறுகிற இன்பம் ஒருவருக்கு மட்டுமன்றி இரு தரப் பிற்கும் உரியதாயும் ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்ளக் கூடியதாயும் இருக்க வேண்டும். அப்படி இருந்தால்தான் கணவனுக்கும் மனைவிக்கும் இடையில் உறுதியான பற்றுதல் ஏற்படும். அதனால் மணவாழ்க்கை சிதைவுறாமல் நீடித்து நிலைத்து நிற்கும். காம இன்பத்தை அதிகமாகத் துய்ப்பதனால், மண வாழ்க்கை சிதைவுறுவதில்லை; பரிபக்குவமற்ற, ஏற்றத் தாழ்வான காம இன்ப அனுபவத்தினாலேதான், மண வாழ்க் கைகளில் பல சிதைந்துவிடுகின்றன. காம இச்சை வெறுப் புக்கு உரியதன்று, மதிப்பிற்கு உரியதேயாகும். பல தகுதி யான மனிதர்களிடமும் காம இச்சை இருப்பதைக் காண்கி றோம். விடாய் இல்லாத காம இன்பம் ஜீவனில்லாத விஷய மாகும். அதிகமான இந்திரிய சுகத்தை மீதூண் உண்பதற்கு ஒப்பிட்டுச் சொல்லலாம். அது உடலில் வந்த மிகை. பிரார்த் தனைப் புத்தகத்தைத் திருத்தியமைப்பதில் இப்போது கவனம் செலுத்தி வருகிறார்கள். மணச் சடங்குகள் பற்றி வரும் பகுதியில் அடியில் கண்ட திருத்தத்தைச் சேர்த்துக்கொள்ள

வேண்டு மென்று மிக மரியாதையுடன் நான் சொல்ல ஆசைப் படுகிறேன்; 'காதல் இன்பத்தை இந்தப் பெண்ணும் ஆணும் ஒருவருக்கொருவர் பரிபூரணமாக வழங்கி அனுபவித்துக் கொள்ளட்டும்.'

"மிக மிக முக்கியமான கருப்பத்தடைப் பிரசினைபற்றி இனிக் கவனிக்கலாம். நன்மையோ தீமையோ தெரியாது, கருப்பத்தடைமுறை நிலைத்து நிற்கவே போகிறது; அது மட்டு மல்ல. அதை ஏற்றுக்கொண்டே தீர வேண்டும் என்ற நிலை யும் ஏற்பட்டுவிட்டது. அதை எவ்வளவுதான் சபித்தபோதி லும், அது இருந்தே தீரும். குழந்தைகளின் பிறப்பைக் கட்டுப் படுத்த, பெற்றோர்கள் விரும்புதற்குரிய காரணங்கள், சில சமயங்களில் தன்னலம்வாய்ந்தனவாக இருக்கலாம். பெரும் பாலான சந்தர்ப்பங்களில் அவை கண்ணியம் வாய்ந்தன வாயும் இருக்கின்றன. சுருங்கிய வருவாய், வாழ்க்கைப் படித் தரம், தாங்க முடியாத வரிச்சுமை, இவைதான், குழந்தைகள் பெற்று, வாழ்க்கைப் போராட்டத்தைச் செம்மையாய் நடத்த மணம் செய்துகொண்டவர்களுக்குப் பெருந் தடைக ளாய்க் குறுக்கே வந்து நிற்கின்றன. மேலும், படித்த வகுப் பாரிடையே பெண்கள் வாழ்க்கைப் போராட்டத்தில், தாங்க ளும் ஈடுபட விரும்புகிறார்கள்; கணவனது அலுவல்களிலும் பங்குகொள்ள ஆசைப்படுகிறார்கள்; அடிக்கடி கருப்பமுறுவத ஞல், இது சாத்திய மில்லாமற் போய்விடுகிறது. கருப்பத் தடை முறை இல்லாதுபோனுல் காலங்கடந்து மணம் நடை பெறுகிறது. இதனுல் ஒழுங்கற்ற கலவிமுறையும் அதன் பல ஞய்ப் பெருந் தீமைகளும் ஏற்படுகின்றன. சட்டவிரோத மான கலவி 'கூடாது கூடாது' என்று கூச்சல் போட்டுக் கொண்டே, அதே சமயத்தில் திருமணம் நடைபெற வொட் டாது இடையூறுகளைப் புகுத்துவது வீண் வேலையாகும். ஆனுல், அநேகர் இப்படிச் சொல்லுகிறார்கள்; 'கருப்பத்தடை அவசிய மானது, அதைக் கலவியின்மையின் மூலம் மட்டுமே செய்வது நியாயமானது' என்கிறார்கள். அத்தகைய கட்டுப்பாடு பலனைத் தாராது; தந்தாலும், நடைமுறைக்கு ஏற்றதாய் இராமலும் உடல் நலத்திற்கும் இன்பத்திற்கும் கேடு பயப்ப தாயும் இருக்கும். ஒரு குடும்பத்திற்கு நான்கு குழந்தைகள் இருந்தால் போதும் என்று சொல்லி, குடும்பத்தின் அளவைக் கட்டுப்படுத்தி நீண்ட காலத்திற்குத் தன்னடக்கமாக வாழச் சொல்வது, ஏறக்குறையப் பிரமசரிய வாழ்க்கையே யாகும். பொருளாதார நோக்கோடு பார்த்தால், கலியாணம் செய்து கொண்ட புதிதில்தான் கருப்பத்தடை முறைகளை அனுஷ் டிப்பது நல்லது. ஆனுல், அந்தக் காலத்தில்தான் கலவி யுணர்ச்சி மிக மிக அதிகமாய் இருக்கும். இந்த விதமான முறையில் வாழ்க்கை நடத்தும்படியாகச் சொல்வது, பெரும் பாலான மக்களுக்குச் சாத்தியமாய் இராது என்றே நான் அபிப்பிராயப்படுகிறேன். இப்படிப் பலவந்தமாக முயன்று

துன்புறுவது உடலுக்குத் தீங்கு பயக்கும்; இன்பத்திற்கும் கேடாய் முடியும். அதனால் ஒழுக்கமே அபாயகரமான முறையில் சீர்குலைந்து போகும்; இது விபரீதமான போக்காகும். தாகவிடாய் கொண்ட மனிதனுக்கு அருகில் தண்ணீரை வைத்துவிட்டு, 'குடியாதே, குடியாதே' என்று சொல்வது இதைவிட எவ்வளவோ மேலானது. இது இயலாத காரியம். கலவியின்மை என்ற வகையில் கருப்பத்தடை பயன் தாராது; தந்தாலும், மனிதனையே அது பாழ்படுத்திவிடும்.

"கருப்பத்தடை ஒழுக்கத்திற்கு விரோதமானது. இயற்கைக்கு விரோதமானது என்கிறார்கள். இயற்கைச் சக்திகளை ஒழுங்குபடுத்தி மனிதனுடைய ஆசைக்கும் உபயோகத்திற்கும் ஏற்றவாறு அவற்றைப் பயன்படுத்துவதையே நாம் நாகரிகம் என்று சொல்லுகிறோம். கடவுள், பெண்களைக் கஷ்டப்படுவதற் கென்றே சிருஷ்டித்துள்ளார்: அப்படி இருக்கும்போது பிரசவ காலங்களில் வலிபோக்கும் மருந்தைப் பிரயோகப் படுத்துவது, இயற்கைக்கு மாறுபட்ட தென்றும், கொடுமையான காரியம் என்றும், வலிபோக்கும் மருந்தை முதன் முதலில்உபயோகப்படுத்தியபோது கூக்குரலிட்டார்கள். செயற்கை முறையில் பிள்ளைப் பேற்றைக் கட்டுப்படுத்துவதை, இயற்கைக்கு மாறுபட்ட தென்று இனிமேல் சொல்லிக்கொண்டிருக்க முடியாது; கருப்பத்தடைக் கருவிகளைப் பயன்படுத்துவது நல்லது. துஷ்பிரயோகப்படுத்துவதுதான் கெடுதி. கிறிஸ்தவ மதத்தினர், மற்ற சிலருடன் ஒன்று சேர்ந்து நவீன அறிவின் உதவி கொண்டும், புதிய உலகத்தின் தேவையை எண்ணியும் பயனற்ற பழக்க வழக்கங்களை உதறித் தள்ள வேண்டும். அப்படித் தள்ளிவிட்டு இந்தப் பிரசினையைக் கவனிக்கும்படியாக வேண்டிக்கொண்டு, இதை முடிக்கிறேன்."

டாஸன் பிரபுவுக்கு உள்ள மேன்மையை நான் மறுக்கவில்லை; வைத்தியர் என்ற முறையில் அவருடைய திறமையை நான் முழு மனதோடு மதித்தபோதிலும், அவர் சொல்லுகிற சான்றை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. ஒழுக்கத்திற்கோ, உடல் நலத்திற்கோ யாதொரு தீங்கும் நேராதபடி, பிரமசரிய விரதம் அனுஷ்டித்த அனுபவமுள்ள ஆண்களும் பெண்களும் இருக்கிறார்கள். அவர்களுடைய அனுபவத்திற்கு எதிரிடையாக, டாஸன் பிரபு சான்று கூறுவதைத்தான், நான் சிறப்பாக எதிர்க்க வேண்டியதிருக்கிறது. சுகாதார சட்டங்களை மீறி நடந்து, அதனால் நோய்களைச் சம்பாதித்துக்கொண்டிருப்பவர்களைத்தான் பொதுவாக வைத்தியர்கள் சந்திக்கிறார்கள். துன்பத்தைப் போக்கி நலனடையும் பொருட்டுச் சில மருந்துக்களைச் சொல்லி, அதில் வெற்றியும் பெற்றுவிடுகிறார்கள். ஆனால், உடல் நலமுள்ள ஆண்களும் பெண்களும் எப்படி நடந்துகொள்வது நல்லது என்பதைச் சுட்டிக்காட்டி, அந்த வழியே நடக்கும்படியாக வைத்தியர்களுக்குச் சொல்லத்

தெரியாது. மணம் செய்துகொண்டவர்கள் பிரமசரியம் அனுஷ்டிப்பதால் என்ன நேரிடுமென்று டாஸன் பிரபு கூறுவதை மிக்க ஜாக்கிரதையோடுதான் பார்க்க வேண்டும். மணம் செய்துகொண்டவர்கள் காம இச்சையைத் தணித்துக் கொள்ள ஆசைப்படுவது நியாயமானதே; இதில் சந்தேகம் இருப்பதற்கில்லை. ஆனல், தற்கால வாழ்வில் நாம் எதையும் அப்படியே ஏற்றுக்கொள்வதில்லை; சரியானபடி அலசி ஆராய்ந்து பார்த்து, பின்னரே எதையும் ஏற்றுக்கொள்கிறோம். காம இச்சையைத் தணித்துக்கொள்ளும் பொருட்டுத்தான் இதுவரையில் மண வாழ்க்கையைப் பயன் படுத்தி வந்திருக்கிறார்கள் என்பதற்காக, இந்தப் பழக்கத்தை நியாயமென்றாவது உடல் நலத்திற்கு ஏற்றது என்றாவது சொல்லி, அதை ஏற்றுக் கொள்ளுதல் சுத்தத் தவறு. அனேக புராதன பழக்கவழக்கங்களை நிறுத்திவிட்டத ஞல் நன்மைகள் விளைந்திருக்கின்றன. அப்படி இருக் கும்போது, இந்தப் பழக்கத்தை மட்டும் நாம் ஏன் ஆராயா மல் விட்டுவிட வேண்டும்? ஒழுக்கம் உடல்நலம் இரண்டிற் குமே தீங்கு நேராமல் தன்னடக்கமாக மணவாழ்க்கை நடத்தியதனுல் ஆண் பெண் இருவருமே நலன் அடைந்திருக் கிறார்கள் என்பதை உதாரணமாகக்கொண்டு ஆராய்ந்து பார்த்தால் என்ன?

நான் கருப்பத்தடைக் கருவிகளை எதிர்ப்பதற்கு, இந் தியா சம்பந்தப்பட்ட வரையில் சிறப்பான காரணங்களும் உண்டு. இந்தியாவிலுள்ள இளைஞர்களுக்குக் கலவிக் கட்டுப் பாடு என்றாலே தெரியாது. இது அவர்கள் குற்றமல்ல. இளமை யிலேயே அவர்களுக்கு மணம் நடந்துவிடுகிறது. இது வழக்க மாயும் போய்விட்டது. மணவாழ்க்கையைத் தன்னடக் கத்தோடுதான் நடத்த வேண்டுமென்பதை, ஒருவரும் அவர் களுக்குச் சொல்லுவதில்லை. பேரன் பேத்திகளைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் பெற்றோருக்கு அதிகமாக இருக்கிறது. எவ்வளவு விரைவாகப் பிள்ளைகளைப் பெற இயலுமோ அவ்வ ளவு விரைவாகப் பிள்ளைகளைப் பெற வேண்டுமென்று சுற்றி லும் இருப்பவர்கள் கருதுகிறார்கள். இப்படிப்பட்ட சூழ் நிலைக்கு மத்தியில், கருப்பத்தடைக் கருவிகளைப் புகுத்துவது குறும்பை இன்னும் அதிகமாக்கிவிடும். கணவனுடைய ஆசைக்கு இதுவரை இணங்கிப் போய்க்கொண்டிருந்த பெண் களுக்கு, பிள்ளைப்பேற்றில் விருப்பில்லாமல் கலவியை விரும்பு வது நியாயமானதே என்று ஒரு புதுப் பாடத்தை இப்போது சொல்லிக்கொடுக்கிறோம். இந்தப் புதுப் பாடத்தின் மூலமாக இந்த இரண்டு நோக்கங்களையும் நிறைவேற்றிக்கொள்வதற்கு

கருப்பத்தடைக் கருவிகளை அவர்கள் கையாள வேண்டியிருக்

மணம் செய்துகொண்ட பெண்களுக்குச் செய்யும் இந்தப் போதனை மிக மிக நாசத்தை விளைவிக்கும் என்று நான் கருது கிறேன். ஆணைப் போலவே பெண்ணும் காம இச்சைக்கு இறையாகிறாள் என்பதை என்னால் நம்ப முடியவில்லை. தன் னடக்கத்தை மேற்கொள்வது ஆணைக்காட்டிலும் பெண் ணுக்கு எளிது. கணவன் இச்சைப்படும்போதெல்லாம் இணங்க மறுத்துவிடும்படியும், கணவனுடைய கருவியாகவோ பொம்மையாகவோ இருப்பது அவளுடைய கடமை யல்ல வென்றும் இந்த நாட்டிலிருக்கிற பெண்களுக்குச் சரியான முறையில் போதிக்க வேண்டும். பெண்களுக்குக் கடமையும் உண்டு; உரிமையும் உண்டு. சீதா தேவி ராமனுக்கு அடிமை போல இருந்தாள் என்று எண்ணுகிறவர்கள், சீதை அனுப வித்த உன்னதமான சுதந்திரத்தையோ, ராமன் எல்லாத் துறைகளிலும் அவளிடம் பரிவு காட்டியதையோ உணர்ந்து கொள்ள முடியாது. தன்னையோ தனது மானமரியாதை யையோ தற்காத்துக்கொள்ளும் திறன் அற்ற அபலையாய் சீதை இருக்கவில்லை. கருப்பத்தடைக் கருவிகளைக் கைக் கொள்ளும்படி இந்தியப் பெண்களுக்குச் சொல்லிக்கொடுப் பது, வண்டிக்குப் பின்னால் மாட்டைப் பூட்டுகிற கதைதான். முதலாவது செய்ய வேண்டிய காரியம் பெண்ணிடம் காணப் படும் அடிமை மனப்புத்தியைப் போக்கிவிட வேண்டும். தேச சேவை, மனித சமுதாய சேவை ஆகியவற்றின் மேன்மையை யும் அவளது உடம்பின் புனிதத்தன்மையையும் பற்றி அவளுக்குப் போதிக்க வேண்டும். திருத்த முடியாத நிலையில் இந்தியப் பெண்மணிகள் இருக்கிறார்கள் என்று எண்ண வேண்டாம். அடிக்கடி கருத்தரியாமல் பிள்ளைப்பேற்றைத் தடுக்கவும், உடல் நலத்தைப் பேணிக்கொள்ளும் பொருட்டும் இந்தியப் பெண்மணிகள் கருப்பத்தடைக் கருவிகளை உப யோகித்தே தீர வேண்டு மென்பது அவர்களை இழிவு படுத்துவதாகும்.

பிரியப்பட்டாலும் பிரியப்படாவிட்டாலும், கருத்தரித்து அதனால் பெண்கள் படுகிற துன்பத்தைக் கண்டு சகியாது, சகோதரிகள் ஆத்திரப்படுவது நியாயந்தான். அதற்காகப் பொறுமை இழந்துவிட வேண்டாம். கருப்பத் தடையைப் பற்றிப் பிரசாரம் செய்வதனால் மட்டும் நாம் விரும்புகிற இலட் சியம் உடனே கைகூடிவிடாது. எதுவும் பயிற்சி மூலமாகவே வர வேண்டும். கொடுக்கிற பயிற்சி சரியானதாய் இருக்க வேண்டும் என்பதே எனது வேண்டுகோள்.

# மீண்டும் தன்னடக்கமே

**"அஹிம்சையும் உண்மையும் குறிப்பிட்ட ஒருசிலருக்கு மட்டும் ஏற்பட்டவையன்று. மனித சமுதாயம் அனைத்துமே தினசரி வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டியவையாகும் அவை. என் சொந்த அனுபவத்தைக்கொண்டே நான் இதைச் சொல்லுகிறேன். இது போலவே, தன்னடக்கமென்பதும், ஒருசில மகாத்மாகளுக்கு மட்டும் ஏற்பட்டதன்று; மனித சமுதாயம் அனைத்திற்குமே ஏற்பட்டதாகும்."**

*"தன்னடக்கத்தைப்பற்றித் தாங்கள் சமீபத்தில் எழுதிய கட்டுரைகள் ஒருவிதக் கிளர்ச்சியை உண்டுபண்ணி இருக்கின்றன. உங்கள் கருத்துக்கு ஒன்றிய கருத்துடையவர்கள்கூடத் தன்னடக்கத்தை நீண்ட காலம் கடைப்பிடிப்பது சிரமம் என்று கருதுகிறார்கள். மனித சமுதாயம் அனைத்திற்குமே தங்கள் அனுபவம் ஒத்து வராது என்றும் எண்ணுகிறார்கள். பிரமசரியத்தைப் பூரணமாக அனுஷ்டிப்பது தங்களாலும் முடியவில்லை என்பதாகத் தாங்களும் ஒப்புக்கொண்டிருக்கிறீர்கள். காம இச்சையைத் தாங்களும் இன்னும் வென்றபாடில்லை, குழந்தைகளின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்துவதன் அவசியத்தைத் தாங்களும் ஒப்புக்கொள்கிறபடியால், குடும்பத்தடைக் கருவிகள்தான், பெரும்பாலான மக்களுக்கு, நடைமுறைக்கு ஏற்றவையாகும்."*

*என்னிடம் காணப்படும் குறைபாடுகளை நானே ஒப்புக்கொள்கிறேன். தன்னடக்கத்திற்கும் கருப்பத்தடைக் கருவிகளுக்கும் இடையே உள்ள மாறுபாட்டை நான் மிகவும் தெளிவாக உணர்ந்திருக்கிறேன்; பூமியில் பிறந்துள்ள மக்களில் பெரும்பாலருக்கு என்னென்ன இயல்புகள் இருக்கின்றனவோ அந்த இயல்புகளே என்னிடமும் உள்ளன. பிரமாதமான வேறு சக்திகள் என்னிடம் இல்லை என்பதாக எனக்குள்ள குறைபாடுகள் தெளிவாக அறுவுறுத்துகின்றன. தன்னடக்க விஷயத்தில் நான் கொண்டுள்ள நோக்கமும் சர்வசாதாரணமானதே; தேசம், மனித சமுதாயம் இரண்டிற்கும் தொண்டு செய்யும்பொருட்டே பிள்ளைப்பேற்றைக் கட்டுப்படுத்த வேண்டுமென்பதே அந் நோக்கம். பெரிய குடும்பத்தைக் காப்பாற்ற முடியாத காரணமே, பிள்ளைப்பேற்றைக் கட்டுப்படுத்துவதற்குப் போதிய தூண்டுகோலாகும். தேச சேவை மனித சமுதாய சேவை இரண்டும் அதன் பிறகு கவனிக்க வேண்டிய விஷயங்களே. சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளாக, வெற்றிகரமான முறையில் புலன் அடக்கத்*

தைக் கைக்கொண் டிருந்தும், மிருக உணர்ச்சி விஷயத்தில் நான் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருக்கிறது. நானும் சாதாரண மனிதன் என்பதற்கு இது ஒன்றே போதிய சான்ருகும். எனவே, வேண்டிய அளவு முயன்ருல், எனக்குச் சாத்தியமானவை பிறருக்கும் சாத்தியமாகும்.

சாதாரண மனிதர்களால் தன்னடக்கத்தைக் கைக் கொள்ள முடியாதென்று கருப்பத்தடைவாதிகள் சொல்லுவதால்தான், அவர்களோடு நான் சண்டைபோட வேண்டியிருக்கிறது சாத்தியமானுலுங்கூடத் தன்னடக்கத்தைக் கைக் கொள்ளக் கூடாது என்று சொல்லுகிற அளவிற்கு அவர்களில் சிலர் வந்துவிட்டார்கள். அவர்கள் துறைகளில் அவர்களுக்கு எவ்வளவுதான் திறமை இருந்தபோதிலும், தன்னடக்கத்தினுல் என்னென்ன சாத்தியமாகும் என்ற அனுபவமின்றியே அவர்கள் பேசி வருகிருர்கள் என்பதை, மிகத் தாழ்மையோடும், ஆனுல் மிக உறுதியாகவும் நான் அவர்களிடம் தெரிவித்துக்கொள்ளுகிறேன். மனித ஆன்மாவிற்கு உள்ள அகண்ட சக்தியைக் குறைவுபடுத்திச் சொல்ல அவர்களுக்கு எவ்வித உரிமையும் இல்லை; இதைப் போன்ற சந்தர்ப்பங்களில் என்னைப் போன்றவர்கள் எடுத்துக்காட்டக் கூடிய சான்ருனது நம்பிக்கைக்கு ஏற்றதாக இருந்தால், அதை மேன்மையானதாகவும் பிரயோஜனமுள்ளதாகவும் கருதுவதோடு, அதையே முடிந்த முடிபாகவும்கொள்ள வேண்டும். என்னைச் சாதாரண மக்கள் மகாத்மா என்று கருதும் காரணத்தைக் கொண்டு, முக்கியமான ஒரு பிரசினையில் நான் கூறும் அத்தாட்சியைப் பயனற்றதென்று தள்ளிவிடுவது பொருந்தவே பொருந்தாது.

மேலே கொடுத்துள்ளதைவிடப் பலமான ஆதாரத்தைக் காட்டி வாதிக்கிருர் ஒரு சகோதரி; அவர் கூறுவதாவது :

> "கருப்பத்தடைக்குப் பரிந்து பேசுகிற நாங்கள், சமீப காலத்தில்தான் அதைப்பற்றிப் பேச ஆரம்பித்திருக்கிருேம். எத்தனையோ தலைமுறைகளாக - ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக—தன்னடக்கவாதிகள் பிரசாரம் செய்து வந்திருக்கிருர்கள். இவ்வளவு காலங்களுக்கிடையில் அவர்கள் சாதித்துள்ள சாதிப்பென்ன ? தன்னடக்கத்தை உலகம் கற்றுக்கொண்டுவிட்டதா? குழந்தைகள் அதிமாகப்பிறக்கின்றன;அதன் காரணமாக, குடும்பங்களில் ஏற்படுகிற தொல்லைகளைப் போக்க நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள் ? தாய்மையின் புண்பட்ட உள்ளம் கதறுவது உங்கள் காதில் விழவில்லையா ? இப்போதும் வந்து உங்கள் மனம் போல் பிரசாரம் செய்யுங்கள். தன்னடக்கத்தை, நீங்கள் பிரசாரம் செய்வதைப்பற்றி எங்களுக்கு

ஒரு கவலையுமில்லை. வேண்டாதபோது கணவன்மார் அணுகுவதைத் தடுத்து மனைவியரைக் காப்பாற்ற முடியுமானால் காப்பாற்றிப் பாருங்கள். அதில் நீங்கள் வெற்றிபெற வேண்டுமென்பதே எங்கள் ஆசை. அப்படி இருக்கும்போது, நீங்கள் ஏன் நாங்கள் கையாளும் முறைகளைப்பற்றிக் கூக்குரல் போடுகிறீர்கள் ? பொதுவாக, மனிதனிடம் காணப்படும் குறைபாடு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றுக்கு இடம் கொடுத்தே, நாங்கள் இந்த முறைகளைக் கையாளும்படி சொல்லுகிறோம். நாங்கள் சொல்லுகிற முறைகளைச் சரியானபடி கையாண்டால், கொண்ட நோக்கம் பெரும்பாலும் வெற்றி பெறுமல் போகாது. இதை நீங்கள் கவனிக்க வேண்டும்.''

அடிக்கடி குழந்தைகள் பிறப்பதனால், குடும்பத்தின் தேவைகள் பெருகி, வருந்துகிற குடும்பங்களைக் கண்டு, அவற்றின்மீது பரிவு காட்டும் பெண்மணி வருத்தமடைந்து இடித்துக் கூறிய மறுமொழியாகும் இது, மனிதர்கள் படுகிற சிரமத்தைக் கண்டு, கல்நெஞ்சமே இளகிவிடும் என்றால்,மென்மையான ஆத்மாவுடைய சகோதரிகளை இது என்ன பாடுபடுத்தும் ? தன்னுடைய இலட்சியத்தில் உறுதியாக நிற்காவிட்டால், வழிதப்பி வேறு வழிகளில் சென்று தத்தளிக்க நேரும். இவர்களுடைய கதி, தண்ணீரில் மூழ்கியவன் வைக்கோல் துரும்பைப் பிடித்து வெளியேற முயன்ற கதைதான்.

மக்கள் மதிப்பிடுகிற தராதரங்கள் அதிவேகமாக மாற்றம் அடைகிற காலம் இது; எனவே தாமதமாக வரும் பலா பலன்களினால் நாம் திருப்தியடைவதில்லை. நமது நாடு மட்டுமோ நமது ஜாதியார் மட்டுமோ நலம் அடைவதனால் மாத்திரம் நாம் திருப்தி கொள்வதில்லை. மனித சமுதாயம் அனைத்தையுமே நாம் ஒன்றுசேர்த்துப் பார்க்கிறோம்; அல்லது பார்க்க விரும்புகிறோம் இலட்சியத்தை நாடிச் சென்று கொண்டிருக்கிற மனித சமுதாயத்திற்கு, இந்த மனநிலை ஒரு பெரும் பேறு என்றே சொல்ல வேண்டும்.

மனித சமுதாயத்தில் காணப்படும் தீமைகளுக்குப் பரிகாரம் பொறுமையை இழந்துவிடுவதனாலோ அல்லது பழைமை என்ற காரணம் பற்றிப் பழைமையை ஒதுக்கிவிடுவதனாலோ கிடைத்துவிடாது என்பதைக் காண்கிறோம். நாம் உணர்ச்சி வயப்பட்டுக்காண்கிற கனவை, நமது முன்னோர்கள் தெளிவற்ற முறையில் கண்டார்கள். எதிர்பார்த்த அளவிற்கு மேல் சமுதாயத்தின் பரப்பு விரிந்திருப்பினும், நாமும் அவர்கள் கண்டுபிடித்துள்ள மருந்துகளை, அந்தந்த நோய்களுக்குப் பயன்படுத்திப் பார்க்கலாம்.

அஹிம்சையும் உண்மையும் குறிப்பிட்ட ஒருசிலருக்கு மட்டுமே ஏற்பட்டவை அன்று. மனித சமுதாயம் அனைத்துமே தினசரி வாழ்க்கையில் கடைப்பிடிப்பதற் கென்று ஏற்பட்டவை யாகும் அவை. சொந்த அனுபவத்தைக் கொண்டே நான் இதைச் சொல்லுகிறேன். இதுபோலவே தன்னடக்கமென்பது ஒருசில மகாத்மாக்களுக்கு மட்டும் ஏற்பட்டதன்று; மனித சமுதாயம் தனது இலட்சியத்தின் மேன்மையைக் குறைத்துக்கொள்ள வேண்டியதில்லை. அதேபோல, தன்னடக்கமென்பதைப் பெரும்பாலோர் பின்பற்றமாட்டார்கள் என்பதற்காக, நாமும் நமது இலட்சியத்தின் மேன்மையைக் குறைத்துக்கொள்ள வேண்டாம்

வழக்கு கஷ்டமா யிருப்பதற்காக, அறிவுள்ள நீதிபதி தவறான தீர்ப்புக் கூற மாட்டார். தமது மனதை உறுதிப்படுத்திக் கொண்டு, சட்டத்திற்கு ஊனம் வாராதபடி பாதுகாப்பதிலேயே உண்மையான கருணை இருக்கிறது என்று எண்ணுவார்.

உடல் அழியும் தன்மை உடையது. பல குறைபாடுகள் நிரம்பிய உடலுக்குள் வசிக்கும் காரணத்தால், அழிவற்ற ஆன்மாவிற்கு, உடலின் குறைபாடுகளை ஏற்றிச் சொல்லக் கூடாது ஆன்மாவை இயக்குகிற சட்டங்களைக் கண்டுபிடித்து அவற்றுக்கு இயைந்தவாறு உடலை நாம் ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும். இப்படிப்பட்ட சட்டங்களின் எண்ணிக்கை மிக மிகக் குறைவென்றும், அவை மாறுகின்ற இயல்புடையவை அல்லவென்றும், மனித சமுதாயம் அனைத்துமே அவற்றை அறிந்துகொண்டு பின்பற்ற முடியும் என்றும் நான் அபிப்பிராயப்படுகிறேன். அனுஷ்டானத்தில் கொணருகிற அளவு வித்தியாசப்படலாமாயினும் தன்மை வித்தியாசப்படாது அசையாத நமக்கு நம்பிக்கை இருந்தால் நாம் நிச்சயமாய்த் தோற்றுப்போக மாட்டோம். மனித சமுதாயம் தனது இலட்சியத்தை அறியவோ, உணரவோ, அதனை நெருங்கவோ இலட்சக் கணக்கான வருஷங்கள் பிடித்தாலும் பிடிக்கலாம். ஜவாஹர்லால் நேரு சொல்வதைப்போல, நமது இலட்சியத்தின் போக்கை மட்டும் நாம் சரியானபடி வைத்துக் கொள்வோம்.

சகோதரியின் அறைகூவலுக்கு இன்னும் பதில் சொல்லியாகவில்லை. தன்னடக்கவாதிகள் உறங்கிக்கொண்டு இருக்கவில்லை. தங்கள் கருத்தை, அவர்கள் பிரசாரம் செய்து கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்களுடைய முறைக்கும் கருப்பத்தடைக் கருவிக்காரர்களின் முறைக்கும் வேறுபாடு

இருக்கலாம்; இருந்தே தீரும்; இதை அவர்கள் பிரசாரத்தில் குறிப்பிட்டேயாக வேண்டும். ‘தன்னடக்கவாதிகளுக்கு’ மருத்துவசாலைகள் தேவை யில்லை. அவர்களிட மிருக்கும் மருந்துக்கு விளம்பரமும் அவசியமில்லை. ஏனெனில் அவர்களிடம் இருக்கிற மருந்து விற்பனைச் சரக்கன்று. கருப்பத் தடைக் கருவிக்காரர்களைக் கண்டிப்பதும், பொது ஜனங்களிடம் அதை உபயோகப்படுத்த வேண்டாம் என்று எச்சரிப்பதும் அவர்களின் பிரசாரத்தில் ஒரு பகுதி எனலாம். தன்னடக்கவாதிகளின் ஆக்க வேலை, இயற்கையாகவே, உணர முடியாத முறையிலும் கண்ணுக்குத் தெரியாத முறையிலும் நடை பெறுகிறது. தன்னடக்கத்தைக் கைக்கொள்ள வேண்மென்ற பிரசாரம் எப்போதும் நின்றதே இல்லை. தாம் பின்பற்றிக் காட்டுவதே சிறந்த முறையாகும். தன்னடக்கத்தை வெற்றிகரமாக நடைமுறையில் காட்டக் கூடிய நேர்மையான மனிதர்கள் அதிகரிக்க அதிகரிக்க, பிரசாரத்தின் வேகமும் வலுவடைந்துகொண்டே போகும்.

# மண வாழ்க்கையில் பிரமசரியம்

**"இமய மலைமீது ஏறுவதில் உள்ள இன்பம், வெற்றி, மகிழ்ச்சி ஆகியவை நிரந்தரமானவை யல்ல. தன்னைத் தானே வெற்றிகொள்வதில் உள்ள பேரானந்தம் குறைவு படாமல் மேலும் மேலும் வளர்ந்து கொண்டே இருக்கும்."**

ஒரு நண்பர் எழுதுகிறார் :

" கருப்பத்தடை செய்வதற்கு, தன்னடக்கமே மிகவும் மேன்மை யான சாதனம் என்று தாங்கள் சொல்வதை நீண்ட கால மாகவே சரி என்று நம்பி வந்திருக்கிறேன். பிள்ளைப்பேற்றைத் தவிர வேறு நோக்கோடு எந்த முறையில் கலவி செய்யினும் சரி, அது இயற்கைக்கு விரோதமாய்க் காம இச்சையைத் தணித்துக்கொள்வதாகத்தான் ஆகும் என்பதை நிரூபிக்கத் தேவை இல்லை. சில சமயங்களில், சிலருக்கு இதனால் தர்ம சங்கடமான நிலை ஏற்படுகிறது. இரண்டொரு முறை செய்கிற கலவியினால் கருத்தரிக்கவில்லை என்று வைத்துக்கொள்வோம். அப்போது செய்ய வேண்டுவது என்ன? கலவி செய்வதை எந்த அளவோடு நிறுத்திக்கொள்வது? இப்படியே போய்க் கொண்டிருந்தால் பிள்ளைகள் பிறக்காமல் போய்விடலா மல்லவா? மேலும் அளவு கடந்த சிற்றின்ப நுகர்ச்சியால், ஆணுக்கு வீரியச்சத்து அடியோடு விரையமாகிவிடுகிறது. இந்த நிலையிலுள்ளவனுக்கு இரண்டொரு கலவியால் பிள்ளைப் பேறு கிடைக்காவிட்டால், தலைவிதி என்று சொல்லி, அதற்கு மேல் கலவியே செய்யாது நிறுத்திவிடும்படி சொல்லலாமா? ஆன்மீக வலியும் அளவுகடந்த தன்னுணர்வும் இருந்தால் தானே இது சாத்தியமாகும்? வாலிபத்திலும் மத்திய பருவத் திலும் பிள்ளைப்பேறு கிடைக்காமல், முதுமையில் பிள்ளைப் பேறு அடைந்தவர்கள் அபூர்வ மென்றோ, இல்லைவே இல்லை என்றோ சொல்ல முடியுமா? இந்த மாதிரியான நிலைமைகளில் தன்னடக்கமான பிரமசரியம் கஷ்டமானதல்லவா? நோய் நொடி இல்லாது, மற்றப்படி உடல்நலம் பெற்றவர்களாய் இருப்பின், விஷயம் இன்னும் சங்கடமானதாய்விடுகிறது.'"

இதில் சிரமம் உண்டு என்பதை நான் ஏற்றுக்கொள் கிறேன். இந்தப் பிரசினைக்குள் இயல்பாகவே இந்தச் சிரமம் அடங்கிக் கிடக்கிறது. எந்த முன்னேற்றத்திற்கும் சிரமம் இருக்கவே செய்யும். வாழ்க்கையில் நேரிடுகிற இன்னல்களை மனிதன் வெற்றிகரமாகச் சமாளித்தே, வளர்ச்சியுற்று மேன்மை அடைந்திருக்கிறான். இமய மலையின் சிகரத்தைக் கண்டுபிடிக்க எடுத்துக்கொண்ட முயற்சிகளைப் பார்ப்போம்.

உயர ஏற ஏற, செங்குத்து அதிகமாகி ஏறுவது மிக மிகக் கடினமாய்விடுகிறது. எனவே, உடீரமான சிகரத்தை இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை. இதற்காக மனிதர்கள் பட்ட கஷ்ட நஷ்டங்களுக்கு எல்லையே இல்லை. ஆனால், இவ்வொரு ஆண்டும் புதியவர்கள் வந்து, முயன்றுகொண்டே இருக்கிறார்கள். ஆனாலும் முடிவிலே முன்னைபோலத் தோல்விதான். இவ்வளவு முறை தோல்வியுற்றும், உச்சியைக் கண்டுபிடிக்க விரும்புகிறவர்களின் உற்சாகம் குன்றவே இல்லை. இமயமலையின் உச்சியைக் காணுவதிலேயே இவ்வளவு சிரமம் இருக்குமானால், தன்னைத் தானே, வெற்றிகொள்வதில் சிரமம் அதிகம் இருக்கத்தானே செய்யும்? இமயமலை மீது ஏறுவதில் உள்ள இன்பம், வெற்றி, மகிழ்ச்சி ஆகியவை நிரந்தரமானவை யல்ல. ஆனால் தன்னைத் தானே வெற்றிகொள்வதில் உள்ள பேரானந்தம் குறைவுபடாமல் மேலும் மேலும் வளர்ந்துகொண்டே இருக்கும். பிரமசரியத்தை அனுஷ்டித்து வந்திருப்பவனுடைய விந்து நிச்சயமாய்க் கருத்தரிக்கச் செய்யும்; கருத்தரித்தே தீரும். இது பிரமசரிய சாஸ்திரத்தின் உண்மைகளில் ஒன்று. தன்னிடமிருக்கும் மிருக மனப்பாங்கின்மீது வெற்றிகொண்ட மனிதனுக்கு, பிரமசரிய விரதத்தை அனுஷ்டிப்பது இயல்பான ஒரு காரியமாகிவிடும். காமத்தைத் தணித்துக்கொள்வதற்காகவே கலவி செய்கிற ஆசையும் அப்போது நின்றுபோகும். அப்போது, பிள்ளை வேண்டுமென்ற விருப்பமிருந்தால்தான் கலவி ஏற்படும். மணவாழ்க்கையில் பிரமசரியம் என்பதன் பொருள் இதுவேயாகும். இந்த விதமாக நடந்துகொண்டு, மணவாழ்க்கை நடத்துகிறவனுக்கு, கலவியே செய்யாதவனுக்கு என்னென்ன நன்மைகளும் சிறப்புகளும் கிடைக்குமோ அவை யாவும் கிடைக்கும். கலவி என்பது பிள்ளைப்பேற்றுக்காகவே யன்றி, காம இன்பம் நுகர்வதற்காக வன்று. நடைமுறையில் இந்த இலட்சியத்தை முற்றும் கடைப்பிடிக்கவில்லை என்பது உண்மைதான். நம்மிடம் குறைபாடுகள் இருக்கின்றன; தவறுகள் நேர்ந்துவிடுவது சாத்தியம் என்ற எண்ணத்தோடு, நமது இலட்சியங்களை நாம் உருவாக்குதல் கூடாது. கருப்பத்தடைக் கருவிகளைப் பிரசாரம் செய்பவர்களின் இலட்சியம் சிற்றின்பம் துய்த்தலேயாகும். சிற்றின்பம் எப்போதுமே வாழ்க்கையின் இலட்சியமாக இருக்க முடியாதென்பது தெளிவு. இலட்சியத்தை நடைமுறையில் கொணரும்போது, அதற்கு எல்லை இருத்தல் ஆகாது. வரையறையின்றிச் சிற்றின்ப நுகர்ச்சியில் அழுந்துதல், தனிப்பட்ட மனிதனையோ சமுதாயத்தையோ நிச்சயமாய்

நாசமாக்கிவிடும். இது எல்லோரும் ஒப்புக்கொள்ளக் கூடிய விஷயந்தான். எனவே, தன்னடக்கம்தான் நமது இலட்சிய மாக இருக்க முடியும். ஆதி காலமுதலே அப்படித்தான் எண்ணி வந்திருக்கிறார்கள். ஆகையால் தன்னடக்கத்தை அடைவதற்குரிய மார்க்கங்களைத் தடைப்படுத்தாமல் துருவி யாராய்ந்து பார்க்க வேண்டும்.

பிரமசரிய விரதத்தை நடைமுறையில் கொணருவதற்கு ஏற்படும் கஷ்டங்கள் பெரும்பாலும், அதனுடைய விதிகளை நாம் அறிந்துகொள்ளாமையால் ஏற்படுபவைதான் என்பது எனது உறுதியான நம்பிக்கை. அவ் விதிகளைச் சரியாக உணர்ந்துவிட்டால், கஷ்டங்கள் தாமாகவே மறைந்துவிடும். இலட்சிய முறையை மனதில் வைத்துக்கொண்டு, இப்போது நிருபர் சொல்லி இருப்பதை ஆராயலாம் இலட்சிய முறையில் வாழ்க்கை நடத்தி, ஆரம்பமுதலே, அதாவது சிறு பிராயத்தி லிருந்தே பிரமசரிய விதிகளைக் கவனித்து, அவற்றின்படி நடந்துகொண்டு வருகிற தம்பதிகள் கலவி செய்தால், கருத் தரியாமல் போகவே போகாது. நடைமுறையில் சில விபரீதங் கள் தோன்றக் கூடும். இந்த மாதிரியான சந்தர்ப்பங்களில் கருத்தரிக்கும் வரையில், வீட்டுக்கு விலக்கான காலம் முடி வுற்றதும் மாதம் ஒரு முறை கலவி செய்யலாம் என்னும் விதியை ஏற்படுத்திக்கொள்ளலாம். கருத்தரித்தது தெரிந் தும், கலவி செய்வதை நிறுத்திவிட வேண்டும். புலன் நுகர்ச்சி கருதி, கலவி செய்தல் கூடவே கூடாது. போக இச்சையின்றி இருக்க இருக்க, உடலும் உள்ளமும் நலமடைகின்றன என்பது எனது நம்பிக்கையாகும். இதில் ஆச்சரியப்படத் தக்கது ஒன்றுமில்லை. மனிதனையே உற்பத்தி செய்து தரவல்ல பொருளை, சரியானபடி சேமித்து வைத்துப் பாதுகாத்து வந் தால், இணையற்ற பலமும் சுறுசுறுப்பும் ஏற்படுவது நிச்சயம். சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் இந்த உண்மையை சொந்த அனுபவத்தினுல் யாருமே பரிசீலனை செய்து பார்க்கலாம். இந்த விதி, ஆண்களைப் போலவே பெண்களுக்கும் பொருந் தும். காம வயப்பட்ட அறிகுறிகள் வெளிப்படையாக இருக் கக் கூடாது என்று வீணே தடுக்க முயன்றுகொண்டு அதே சமயத்தில் மனதிற்குள் அந்த எண்ணத்தைப் பதிய வைத் திருப்பதாலேதான் உண்மையில் சங்கடங்கள் தோன்று கின்றன. இதன் காரணமாக உடம்பும் உள்ளமும் சீர்கெட்டுப் போய்விடுகின்றன; நமது வாழ்க்கையே, கதை சொல்வது போல், பொய்யும் புனைசுருட்டும் வடிவெடுத்தாகிவிடுகிறது.

# தர்மசங்கடம்

**மணம் பற்றிய சம்பிரதாயங்கள் உலகமெங்கும் ஒரே மாதிரி இல்லை; பெரும்பாலும் சமூகப் பழக்கவழக்கங்களைக் கொண்டே சம்பிரதாயங்கள் முதலியன அமைகின்றன. பல பல வகுப்புகளில் காணப்படும் வித்தியாசங்களைப் போலவே, மணம் பற்றிய பழக்க வழக்கங்களும் மாகாணத்திற்கு மாகாணம் வேறுபட்டு இருப்பதைக் காண்கிறோம். இளைஞர்கள் நிரந்தரமாக நிலைபெற்றுப் போன வேறுபாடுகளையும் சமூகப் பழக்கவழக்கங்களையும், சம்பிரதாயங்களையும் ஒரேயடியாய் அலட்சியம் செய்து தள்ளிவிடக் கூடாது.''**

*ஒரு நண்பர் எழுதுகிறார்:*

*"இரண்டரை வருஷங்களுக்கு முன் இந்த நகரில், சமூக சீர்கேட்டின் விளைவாக, தற்கொலை நடந்துவிட்டது. வைசியக் கனவான் ஒருவருக்குப் பதினறு வயதில் ஒரு பெண் இருந்தாள். அதே நகரில், இருபத் தொருவயதுள்ள அவளுடைய தாய் மாமன் கல்லூரியில் படித்துக்கொண் டிருந்தான். இருவரும் இரகசியமாகவே ஒருவரை யொருவர் காதலித்தார்கள். இதன் பயனய் அப் பெண் கருப்பவதியானள். இரகசியம் கடைசியாக எப்படியோ வெளிப்பட்டுப் போகவே, நஞ்சைத் தின்று, காதலர்கள் இருவரும் தற்கொலை செய்துகொண்டார்கள். பெண் உடனே இறந்துபோனள். பையன், இரண்டு மூன்று நாட்கள் சென்று ஆஸ்பத்திரியில் இறந்துபோனன். இந்த நிகழ்ச்சி பல வாதப் பிரதிவாதங்களைக் கிளப்பிவிட்டு, பலரும் அவதூறகப் பேசும்படி செய்துவிட்டது, இதனல் அந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த பெண்ணைப் பறிகொடுத்து வருந்தும் பெற்றோர் அந்த நகரத்தில் வசிப்பது மிகவும் கஷ்டமாய்விட்டது. காலக்கிரமத்தில் பேச்சின் வேகம் குறைந்து போயினும், இந்த நிகழ்ச்சியின் நினைவு மக்களின் மனதை விட்டு அகலவே இல்லை. எப்போதாவது இதைப்போன்ற நிகழ்ச்சிகள் நேர்ந்துவிட்டால், பழைய நிகழ்ச்சியை நினைவுறுத்திப் பரிகசிக்க ஆரம்பித்துவிடுகிறார்கள். இதைப்பற்றிய பேச்சு உச்ச நிலையில் இருந்த காலத்தில், துரதிர்ஷ்ட வசத்தால் இறந்துபோன காதலர்களைப்பற்றிப் பரிவோடு பேசுவோரையே காணேம். காதலர்களின் மனப்போக்குப்படியே நடப்பதற்கு விட்டிருக்க வேண்டும் என்று நான் சொன்னதைக் கேட்டு எல்லாரும் திடுக்கிட்டுப் போனர்கள். என்னுடைய வார்த்தை செவிடன் காதில் ஊதிய சங்காகிவிட்டது. இதைப்பற்றித் தாங்கள் கொள்ளும் அபிப்பிராயம் என்ன?''*

வேண்டு மென்றேதான், நிருபரது பெயரையும் ஊரையும் நான் குறிப்பிடவில்லை. குறிப்பிட்டால் பழைய நிகழ்ச்சிகள் மறுபடியும் நினைவிற்கு வந்து, மனது புண்பட நேரு மென்று சொல்லி, கடிதம் எழுதியிருப்பவர் ஊரையும் பெயரையும் குறிப்பிட வேண்டா மென்று கேட்டுக்கொண்டிருக்கிறார். அதனாலே தான் நான் அவற்றைக் குறிப்பிடவில்லை. இருந்தாலும், இது மாதிரியான நுட்ப விஷயங்களைப் பொது ஜனங்கள் விவாதிப்பது அவசியமாகு மென்று நான் உணருகிறேன். இந்தவித மான மணங்களுக்கு, குறிப்பிட்ட சில சமூகங்களில் தடை இருந்து வருகிறது; ஒருவர் மனம் வைப்பதனால் மட்டுமோ அல்லது எடுத்த எடுப்பிலோ இத்தகைய மணங்களை அங்கீகரிப்பது இயலாத காரியமாகும். அதேபோல, இத்தகைய மணம் செய்துகொள்ள விரும்பும் இளைஞரது சுதந்திரப் போக்கை, பலாத்காரமாகக் கட்டுப்படுத்த, சமூகத்திற்கோ அல்லது உறவினர்களுக்கோ உரிமை கிடையாது. நிருபர் சொல்லியுள்ள நிகழ்ச்சியில் தம்பதிகள் வயது வந்தவர் களாகவே காணப்படுகிறார்கள்: இதைப்பற்றித் தீர்க்கமாக ஆலோசனை செய்து பார்க்க அவர்களுக்குச் சக்தி உண்டு. அவர்கள் ஆலோசனை செய்து ஒரு முடிவிற்கு வந்து மணம் செய்துகொண் டிருப்பின், அவர்களை வேண்டா மென்று பல வந்தமாகத் தடுக்க யாருக்கும் உரிமை இல்லை. மிஞ்சிப் போனால் அங்கீகரிக்கச் சமூகம் மறுக்கலாம்; அவ்வளவுதான் இத்தகைய மணங்களைத் தற்கொலை செய்துகொள்ளக் கூடிய நிலைமைக்குக் கொண்டுபோய்விடுவதைக் கொடுமையின் சிகர மென்றுதான் சொல்ல வேண்டும்.

மணம் பற்றிய சம்பிரதாயங்கள் உலகமெங்கும் ஒரே மாதிரி இல்லை. பெரும்பாலும் சமூகப் பழக்கவழக்கங்களைக் கொண்டே சம்பிரதாயங்கள் முதலியன அமைகின்றன. பல பல வகுப்புகளில் காணப்படும் வித்தியாசங்களைப் போலவே, மணம் பற்றிய பழக்க வழக்கங்களும் மாகாணத்திற்கு மாகாணம், வேறுபட்டு இருப்பதைக் காண்கிறோம். இளைஞர் கள், நிரந்தரமாக நிலைபெற்றுப்போன வேறுபாடுகளையும் சமூகப் பழக்க வழக்கங்களையும் சம்பிரதாயங்களையும் ஒரே படியாய் அலட்சியம் செய்து தள்ளிவிடக் கூடாது. காரியத்தில் இறங்கு முன், பொதுஜன அபிப்பிராயத்தை, தங்களுக்கு அனுசரணையாக மாற்றிக்கொள்ள அவர்கள் முயல வேண்டும். இதற்கிடையில் காதலர்கள் பொறுமையாக நடந்து கொண்டு காலம் வருகிறவரையில் காத்திருக்க வேண்டும்; காத்திருப்பது சாத்திய மில்லை என்றால் பொறுமையோடும்

அமைதியாகவும் சமூகத்தினர் இழைக்கும் இன்னல்களையும் கொடுமைகளையும் சகித்துக்கொள்ள வேண்டும்.

அதே சமயத்தில் சமூகத்தினரும், சமூக சம்பிரதாயங்களையும் பழக்கவழக்கங்களையும் உதறித் தள்ளுகிறவர்களிடம், இரக்கமற்ற மாற்றாந் தாய்போல நடந்துகொள்ளாமலிருக்க வேண்டும்; அதுதான் சமூகத்தின் கடமையாகும். இந்த நிருபர் சொல்லியிருக்கிறபடி நிகழ்ச்சிகள் உண்மையாகவே நடைபெற்றிருந்தால், இந்த இளந் தம்பதிகளைத் தற்கொலை செய்துகொள்ளும் நிலைக்கு ஆளாக்கின குற்றம் சமூகத்தைத்தான் சாரும்.

# மண வாழ்க்கையின் இலட்சியம்

**ஆன்மீக வாழக்கையை, அல்லது மேலான வாழ்க்கையை நாடுகிறவர்களுக்கே, பரிபூரண பிரிமசரியமும் மண வாழ்க்கைப் பிரமசரியமும் ஏற்பட்டுள்ளன இந்த இலட்சியமே அவர்களுக்கு வாழ்க்கை.''**

ஒரு நண்பர் எழுதுகிறார்:

*''சமீபத்தில் வெளிவந்த 'ஹரிஜன் சேவக்' என்னும் பத்திரிகையில்', தர்மசங்கடமான ஒழுக்கம் என்ற கட்டுரையில், 'சமூகப் பழக்க வழக்கங்களிலேயே மணம் பற்றிய சம்பிரதாயங்கள் தோன்றியிருக்கின்றன; ஜீவாதாரமான, ஒழுக்க சம்பந்தமான, சமய சம்பந்தமான கோட்பாடுகள் முதலியவற்றை இந்தச் சம்பிரதாயங்கள் ஆதாரமாகக்கொண் டிருக்கவில்லை' என்று எழுதியிருக்கிறீர்கள். பிள்ளைப்பேற்று சாஸ்திரத்தை அடிப்படையாகக் கொண்டே இந்தச் சம்பிரதாயங்கள் தோன்றியிருப்பதாக என் அனுபவமும் இயற்கை உணர்வும் சொல்லுகின்றன. வேறு வகுப்புகளில் கலப்பு மணம் செய்து கொள்வதனால் ஆரோக்கியமான குழந்தைகள் பிறக்கிறதென்றும், ஒரே வகுப்பில் செய்துகொண்டால் அப்படிப் பிறப்பதில்லை என்றும் பிள்ளைப்பேற்று நூல் சொல்லுகிறது. இது காரணமாகவே சகோத்திர மணத்தையும் சபிண்ட மணத்தையும் ஹிந்து மதம் தடுத்திருக்கிறது. இந்தத் தடைகளெல்லாம் பல்வேறுவிதமான சமூகப் பழக்க வழக்கங்களினால் தோன்றிவைதான் என்றால், ஒரு பெண் தன் தகப்பனின் சகோதரனை மணப்பதற்கும் சகோதரியும் சகோதரனும் மணம் செய்துகொள்வதற்கும் தடை இருப்பதற்குரிய காரணங்களைக் கண்டுபிடிக்க முடியுமா? நீங்கள் சொல்வதைப்போல் பிள்ளைப்பேறுதான் மணம் செய்துகொள்வதன் இலட்சியமென்றால், ஆரோக்கியமான குழந்தைகளைப் பெறத் தகுதி கொண்டு, தம்பதிகள் கூடவேண்டும்; மற்ற விஷயங்களை எல்லாம் முக்கியமானவை அல்லவென்று தள்ளிவிட வேண்டுமா? அப்படி இல்லையென்றால் எந்த முறையை முதன்மையாகக் கொள்ளலாம். கீழே குறித்துள்ளபடி இருக்கலாமென்று நான் எண்ணுகிறேன்;*

*(1) இரு தரப்பிலும் ஒரு கவர்ச்சி அல்லது காதல்.*
*(2) பிள்ளைப்பேற்றுக்குரிய தகுதி.*
*(3) குடும்பத்தாரின் சம்மதம்; தான் பிறந்துள்ள சமூக நலம்.*
*(4) ஆன்மீக அபிவிருத்தி.*

*''தாங்கள் இதற்குக் கூறும் மறுமொழி என்ன?*

**மணம் நடக்கும்போது மணமகளைப் பெரியார்கள் உனக்கு**

'எட்டுக் குழந்தைகள் பிறக்கட்டும்' என்று சொல்லி ஆசீர் வதிப்பது புராதன வழக்கம். எனவே மணம் செய்து கொள் வதன் இலட்சியம் பிள்ளைப்பேறுதான் என்பதை ஹிந்து சாஸ் திரங்கள் உறுதியாக வரையறுத்திருக்கின்றன. கலவி செய்வது பிள்ளைப்பேற்றுக்காகவே யன்றி, காம இச்சையைத் தணித்துக் கொள்வதற்காக அன்று என்ற தங்களின் கருத்து இதில் அடங்கி யிருக்கிறது. அப்படியாயின் தம்பதிகளுக்குப் பிறக்கும் குழந்தை ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி, போது மென்று எண்ணு கிறீர்களா? தங்கள் சந்ததி நீடித்து நிலைத்து நிற்க எல்லாரும் விரும்புவார்கள்- தாங்களும் இதைச் சரியான தென்று ஒப் புக்கொள்கிறீர்கள். ஆண் சந்ததி மூலம் குடும்பம் நிலைத்து நிற்பதே நல்லது என்ற பலமான உணர்ச்சி நம்மிடையே இருந்து வருகிறது. எனவே பெண் குழந்தையைக் காட்டிலும் ஆண் குழந்தை பிறப்பதையே எல்லாரும் விரும்புகிறார்கள். முன்னால் பெண் குழந்தைகள் பிறந்துவிட்டால். அதன் பின் ஒரு ஆண் குழந்தை பிறக்கும் வரையாவது கலவி செய்யலாம் என்ற முறையில் உங்கள் இலட்சியத்தை நீங்கள் மாற்றிக் கொள்ள வேண்டுவது அவசிய மல்லவா?

"மணம் செய்துகொண்டாலும்,, பிள்ளைப்பேற்றை இலட்சிய மாகக்கொண்டு கலவி செய்பவர்களைத் தாங்கள் பிரமசாரிகள் என்று சொல்லுவதை நான் பரிபூர்ணமாக ஏற்றுக்கொள்கி றேன். மணம் செய்துகொள்வதற்கு முன்னும் பின்னும் பரி சுத்தமாய் இருந்து வாழ்க்கை நடத்தியவர்களின் முதல் கலவி லேயே கருத்தரித்துவிடும் என்று தாங்கள் சொல்வதையும் நான் ஏற்றுக்கொள்கிறேன். முதலாவது சொன்ன குறிப்பிற்கு நமது சாஸ்திரங்களில் ஆதாரமிருக்கிறது. வசிஷ்டரின் மனைவி அருந்ததிக்கு நூற்றொரு குழந்தைகள் உண்டு. அவர் தாய் மைத் தத்துவத்தை ஏற்று அதை நிறைவேற்றும் பொருட்டே மணம்செய்துகொண்டார். கணவனோடு அவர் கொண்ட தொடர்பும் இதை நோக்கமாகக் கொண்டதே யாகும். அவர் சொல்லுக்குப் பஞ்ச பூதங்களுமே கீழ்ப்படிந்து நடந்தனவாம். அவரை வரவேற்க நேர்ந்த சமயத்தில், பரிபூரணம் வாய்ந்த பிரமசாரிணி என்றுசொல்லி விஸ்வாமித்திரர் அழைத்தாக ஒரு சிறந்த கதை இருக்கிறது. ஆனால் உங்கள் இலட்சியத்திற்கு—ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி, ஒரு குழந்தை இருந் தால்போது மென்ற இலட்சியத்திற்கு—ஹிந்து சாஸ்திரங்களில் ஆதாரம் இருக்குமோ வென்று நான் சந்தேகிக்கிறேன். எனவே உங்கள் இலசியத்தை நீங்கள் சிறிது தளர்த்திக் கொண்டு பிறக்கும் பெண் குழந்தைகளுடன் ஒரு ஆண் குழந் தை பிறக்கும்வரை கலவி செய்யலா மென்று விதிப்பது நலம். இது மணம் செய்துகொண்ட தம்பதிகளுக்கு மிகவும் திருப்தி யளிக்கும் அப்படியின்றி முதல் குழந்தைக்குப் பிறகு, அது ஆணாயிருந்தாலும் சரி, பெண்ணாயிருந்தாலும் சரி, கவனியாது

கலவி செய்வதை நிறுத்திவிட வேண்டுமென்றால் இது மிகவும் கஷ்டமான காரியம். இதற்குப் பதிலாகக் கலியாணம் செய்து கொள்ளாமல் இருந்துவிடலாம். இயல்பிலே மனிதனுக்குக் கலவிசெய்கிற ஆசை உண்டு: தன்னடக்கமென்பது நாளடைவில் அவன் பயின்றுகொண்ட ஒரு தர்மம். அதாவது இதன் உதவிகொண்டு ஆன்மீகத் துறையிலும் சமயத் துறையிலும் அவன் ஒரு படி வளர்ச்சி அடைந்திருக்கிறான். இந்த வளர்ச்சியே அவனுக்கு ஏற்பட்ட இயற்கையான நியதியாகும். அதனாலேதான் தன்னடக்கத்தை மிகவும் உயர்த்திப் பேசி வந்திருக்கிறார்கள். பிள்ளைப்பேற்றுக்காகவே கலவிசெய்ய வேண்டும் என்ற இலட்சியம் உடையவர்களை நான் கௌரவிக்கிறேன். அதைத் தவிர்த்துச் செய்யப்படுகிற கலவி சிற்றின்பம் என்பதையும் ஒப்புக்கொள்கிறேன். ஆனாலும் சிற்றின்ப அனுபவத்தைக் கொடிய பாவமான காரியம் என்று கண்டிக்கவோ, இயல்பாக அமைந்துள்ள இந்தக் கலவி இன்பத்தைக் கட்டுப்படுத்த முடியாத கணவன் மனைவியரை இகழ்ந்து பேசிக் கேவலப்படுத்தவோ நான் தயாராக இல்லை."

மணம் சம்பந்தமாய்ச் சில தடைகள் விதித்திருக்கிறார்கள். அப்படி ஏற்பட்ட தடைகள் விஞ்ஞான சாஸ்திர ஆதாரத்தைக் கொண்டு ஏற்பட்டவையா என்பது எனக்குத் தெரியாது. தன்னடக்கத்திற்கும் ஆசாரத்திற்கும் உதவுகிற எந்தச் சமூகப் பழக்க வழக்கங்களுக்கும் ஒழுக்க நியதி ஆதரவு தரும் என்பது நிச்சயம். சகோதரனும் சகோதரியும் கலியாணம் செய்துகொள்வது, பிள்ளைப்பேற்று சாஸ்திரத்திற்கு மாறுபட்ட ஒழுக்கம் என்றால், அத்தை பிள்ளை அம்மான் பிள்ளை கலியாணம் செய்துகொள்வதையும் அதேபோலக் கருதித் தடுக்க வேண்டுமல்லவா? ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் இருந்துவரும் பழக்க வழக்கங்களை ஏற்றுக்கொள்வதே சரியான நடைமுறையாகும். இந்த நிருபர் சொல்லியிருக்கிற இலட்சிய மணத்திற்குரிய நிபந்தனைகளை நான் ஏற்றுக்கொள்கிறேன். முக்கிய தத்துவத்தின் ஒழுங்கு முறையை மாற்றி, 'காதல்' என்பதற்குக் கடைசி இடந்தான் நான் கொடுப்பேன். காதலுக்கு முதலிடம் கொடுத்துவிட்டால் மற்றெல்லா நிபந்தனைகளையும் அது மறைத்துவிடுவதோடு, அவற்றை ஏறக்குறையப் பொருளற்றனவாகவும் செய்துவிடும். எனவே, மணம் செய்துகொள்கிறவர்கள் ஆன்மீக அபிவிருத்திக்கே முதல் இடம் கொடுக்க வேண்டும். இரண்டாவது இடம் தொண்டிற்கும், குடும்ப விஷயங்கள் சமூக விஷயங்களுக்கு மூன்றாவது ஸ்தானத்தையும் 'காதலுக்கு'

நான்காவது இடத்தையும் கொடுக்க வேண்டும். இதன் பொருள் என்னவென்றால், மற்ற நான்கு நிபந்தனைகளும் நிறைவேறவிட்டால், காதல் மட்டுமே மணம் செய்துகொள்வதற்குத் தகுந்த ஆதாரமாகாது என்பதுதான். அதேபோல மற்ற நான்கு நிபந்தனைகளும் நிறைவேறி, காதலுக்கு இடம் இல்லாது போயின், அத்தகைய மணத்தையும் நாம் ஏற்றுக் கொள்வதற்கில்லை. பிள்ளைப்பேற்றுக்குத் தகுதியான உடல் நிலை இருக்க வேண்டுமென்பதை நான் நிபந்தனையாக ஒப்புக் கொள்ள மாட்டேன். பிள்ளைப்பேறு மணவாழ்க்கையின் நடு நாயகமாக இருப்பதால், உடல்நிலை நிபந்தனையல்ல; அதுவே மண வாழ்க்கையின் உயிர்நிலையாக அமைய வேண்டும்.

ஆண்மகவிற்கு ஹிந்து மத சாஸ்திரங்களில் சலுகைகள் குறிப்பிடத்தக்க முறையில் இருக்கின்றன. யுத்தம் மலிந்து, ஆண்கள் அதிகக் கிராக்கியாகி, ஆண்கள் இருந்தால் அதுவே ஒரு சக்தி, அதுவே ஒரு வெற்றி என்று எண்ணிய காலம் அது. அந்தக் காலத்தில் ஆண்மகவிற்கு அதிக சலுகை காண்பித்தார்கள். அதிக ஆண்மகவு உடையவனைப் பல வானாகவும் வீரியவனாகவும் கருதினார்கள். அதிக ஆண் குழந்தைகளை விரும்பி, பலதார மணங்களை ஆதரித்து உற்சாக மூட்டினார்கள். மணத்தை ஒரு புனிதமான காரியமாகக் கருதினால், ஒரு குழந்தை இருந்தலே போதும். இதனாலேதான் முதல் பிறக்கும் குழந்தையைக் கடமைக்குப் பிறந்தது என்றும் பின்னால் பிறக்கும் குழந்தைகளை எல்லாம் காமத்திற்குப் பிறந்தவை என்றும் நமது சாஸ்திரங்கள் பேசுகின்றன. மகன் மகள் என்று பிரித்து நான் வேற்றுமை பாராட்டுவதில்லை. இப்படிப் பாகுபடுத்துதல் வஞ்சகமானது, தவறானது. மகன் பிறந்தாலும் சரி, மகள் பிறந்தாலும் சரி. இரண்டையும் ஒரு விதமாகவே பாவிக்க வேண்டும்.

பிள்ளைப்பேற்றை நோக்கமாகக் கொண்டு நடக்கிற திருமணங்கள், பிரமசரிய இலட்சியத்திற்கு மாறுபட்டவையல்ல என்பதற்கு, விஸ்வாமித்திரர் வசிஷ்டர் கதை, சரியான எடுத்துக்காட்டாகும். அந்தக் கதையை அப்படியே நாம் எழுத்தெண்ணிப் பார்க்கக் கூடாது. காம இச்சைக்காகக் கலவி செய்வது, மனிதனை மிருக நிலைக்குக் கொண்டுபோய்விடுமாதலால், மனிதன் அந்த நிலையிலிருந்து உயர வேண்டும். கணவன் மனைவி இவர்கள் இந்த இலட்சியத்திலிருந்து பிறழ்ந்துவிட்டால், அது பாபமான தன்று; அதை இழித்

துரைக்கவும் கூடாது. கோடிக்கணக்கான பேர்கள் சுவைக்காகவே உணவு உட்கொள்கிருர்கள். அதேபோல, கோடிக்கணக்கான ஆடவரும் பெண்டிரும் காம இச்சையைத் தணித்துக்கொள்ளும் பொருட்டே, இயற்கையை மீறிக் கலவி செய்கிருர்கள். இதனுல் தவிர்க்க முடியாத பல இன்னல்களுக்கும் நோய்களுக்கும் ஆளாகி, உரிய தண்டனையை அனுபவிக்கிருர்கள். ஆன்மீக வாழ்க்கையை, மேலான வாழ்க்கையை நாடுகிறவர்களுக்கே, பரிபூரண பிரமசரியமும் மண வாழ்க்கைப் பிரமசரிய இலட்சியமும் ஏற்பட்டுள்ளன. இந்த இலட்சியமே அவர்களுக்கு வாழ்க்கை.

# அசங்கியமான விளம்பரங்கள்

**“குறும்புத்தனம் செய்வதற்குச் சக்தி இருக்குமாயின், நன்மையைச் செய்வதற்கும் தேவைப்படுகிற சக்தி தங்களிடம் மறைந்து இருக்கிறது என்பதைப் பெண்கள் உணர்வார்களா? மனிதனுடைய விளையாட்டுப் பொம்மை என்ற எண்ணத்தையும தான் வலியற்றவள் என்ற எண்ணத்தையும் பெண் விட்டுவிடுவாளாளுல், இந்த உலகத்தைத் தனக்கும், தனது துணைவனுக்கும் வசிப்பதற்கு மிகவும் தகுதி உடைய இடமாக, அவளால் செய்ய முடியும். அப்படிச் செய்வார்களேயானுல், ஆடவர்களை, நல்ல தந்தையாகவோ, நல்ல மகனுகவோ, அல்லது நல்ல கணவனுகவோ அவர்களால் செய்ய முடியும்.”**

*ஒரு பிரபலமான பத்திரிகையில் வந்திருக்கும், வெறுக்கத்தகுந்த ஒரு புத்தகத்தின் விளம்பரத்தைக் கத்தரித்து அனுப்பி, ஒரு சகோதரி எழுதியிருப்பது:*

*“.........பத்திரிகையைப் புரட்டிக்கொண்டிருக்கும்போது இத்துடன் அனுப்பியிருப்பது என் கண்ணில் பட்டது. இந்தப் பத்திரிகை, உங்களுக்கு வருகிறதா இல்லையா என்பதை நான் அறியேன். வந்தபோதிலும் அதைப் படித்துப் பார்க்க உங்களுக்கு அவகாசம் இராதென்றே எண்ணுகிறேன். அசங்கியமான விளம்பரங்களைப்பற்றி முன்பு ஒரு முறை தங்களிடம் பேசியிருக்கிறேன்; அதைப்பற்றித் தாங்கள் சௌகரியப்பட்டபோது எழுத வேண்டுமென்பது என் விருப்பம். இப்போது விளம்பரப்படுத்தியுள்ளதைப் போன்ற புத்தகங்கள்தான் இன்று கடைகளில் மலிந்திருக்கின்றன. இது மிகவும் உண்மை; ஆனுல்.........ப்போன்ற பொறுப்புவாய்ந்த பத்திரிகைகள் இவற்றின் விற்பனைக்கு ஊக்கம் கொடுக்கலாமா? எனது பெண்மைக்குரிய நாணம் இவற்றைக் கண்டு மிகவும் வெறுக்கிறது. தங்களைத் தவிர வேறு யாருக்கும் இதைப்பற்றி நான் எழுதியே இருக்க மாட்டேன். குறிப்பிட்ட சில தொழில்களை நிறைவேற்றிவைக்கும் பொருட்டு, பெண்களுக்கு கடவுள் சில உறுப்புக்களை அளித்திருக்கிருர். அந்த உறுப்புக்களைத் துஷ்பிரயோகப்படுத்த, விளம்பரம் செய்யலாமா? அதை எழுதவே என் கை கூசுகிறது. இதைப்பற்றிப் பொறுப்புள்ள இந்தியப் பத்திரிகைகள், சஞ்சிகைகள் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதைத் தாங்கள் எழுத வேண்டுமென்று விரும்புகிறேன். கண்டனத்தைத் தெரிவிக்கும் பொருட்டுப் பல முறை இவ்விதமான பத்திரிகைத் துண்டுகளை நான் தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். அவற்றில் இதுவும் ஒன்று.”*

*நான் அந்த விளம்பரத்தை மீண்டும் இங்கு வெளியிடப் போவதில்லை. விளம்பரப்படுத்தியுள்ள புத்தகத்தில் அடங்கி*

யிருக்கும் விஷயத்தைத் தெரிந்துகொள்ளும் முறையில், கூடுமானவரையில் அசங்கியமாக வருணித்து விளம்பரம் செய்திருக்கிருர்கள். புத்தகத்தின் பெயர். **'பெண் உறுப்புக் களின் அழகு.'** இந்தப் புத்தகத்தை வாங்கிஞல், இன்னும் இரண்டு புத்தகங்கள் இனமாகச் சேர்த்து அனுப்புவதாக விளம்பரப்படுத்தி யுள்ளார்கள். அந்த இரண்டு புத்தகங் களின் பெயர்கள் **'மணப் பெண்ணுக்கு வேண்டிய புதிய அறிவு', 'காமவயப்பட்டுக் கட்டித் தழுவுதல் அல்லது உனது கூட்டாளியை நீ எப்படி மகிழ்விக்கலாம்.'**

இந்த மாதிரியான புத்தக விளம்பரங்களை மாற்றும்படி செய்யவோ, இலாபத்திற்காக இந்தக் காரியங்களைச் செய்து வருகிற பத்திரிகை ஆசிரியர்கள், வெளியீட்டாளர்கள் இவர் களை ஒரு அசைப்பு அசைத்துவிடவோ, இந்தச் சகோதரி என்னை நம்புவாராஞல், மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கின கதையாகவே முடியும். வெறுக்கத்தகுந்த புத்த கங்களையும் அவற்றின் விளம்பரங்களையும் வெளியிட வேண்டா மென்று நான் எவ்வளவுதான் வேண்டிக்கொண்டபோதிலும் வெளியீட்டாளர்கள் அதைக் கேட்கப் போவதில்லை. எனக்குக் கடிதம் எழுதியிருக்கிற சகோதரியும் கல்விகற்ற மற்ற சகோதரிகளும் வெளியே வந்து, அவர்களுடைய காரியத்தை— அவர்களுக்குச் சிறப்பானதான காரியத்தைச்-செய்ய முன்வர வேண்டும். இதுவே என் விருப்பம். ஒரு கெட்ட பெயரை ஒருவருக்குச் சூட்டி, அடிக்கடி அந்தக் கெட்ட பெயரிஞல் அவரை அழைப்பதாக வைத்துக்கொள்வோம். காலக் கிரமத்தில் அந்தக் கெட்ட பெயரிலேயே ஒரு நம்பிக்கை விழுந்துவிடுகிறது. பெண்களை 'மெல்லியலார்' என்று அழைப் பது பழிச் சொல்லாகும். எந்த வழியில் பெண் மெலிந்தவள் என்பது எனக்கு விளங்கவில்லை. ஆண்களைப் போல, ஆண் களிடம் காணப்படுகிற அளவிற்குப் பெண்களிடம் மிருக சுபா வம் இல்லை என்று சொன்ஞல், அந்தக் குற்றச்சாட்டை ஏற் றுக்கொள்ள வேண்டியதுதான். இந்த எண்ணத்தோடு பார்த் தால், பெண்தான் மேலானவள். அடிப்பதில் பெண் வலியற்ற வள்தான்; ஆஞல், சகிப்புத்தன்மையில் பெண் அதிக வலிமையுடையவள். தியாகமும் அஹிம்சையும் பெண்களாக உருக்கொண்டு காட்சியளிக்கின்றன என்று நான் சொல்லுவ துண்டு. தன்னுடைய மானத்தையும் தர்மத்தையும் பாது காத்துக்கொள்ளப் பெண் ஆடவனை நம்பியிருத்தல் ஆகாது. பெண்ணின் தருமத்தைப் பாதுகாக்க, எப்போதாவது ஆடவன் முனைந்திருக்கிருஞ என்பதற்கு ஒரு உதாரணம்

கூட என்னால் எடுத்துக்காட்ட முடியாது. அவன் விரும்பினாலும் அவனால் பெண்ணின் மானத்தைக் காப்பாற்ற முடியாது. சீதையின் மானத்தை ராமரோ, அல்லது திரௌபதியின் மானத்தைப் பஞ்ச பாண்டவர்களோ காப்பாற்றவில்லை. இந்த இரண்டு மாதரசிகளும் தங்கள் தர்மத்தை, தூய ஒழுக்கத்தின் சக்தியினால் பாதுகாத்துக்கொண்டார்கள். தன்னை அறியாமலே, சுய மதிப்பையும் கௌரவத்தையும் ஒருவரும் இழப்பதில்லை. தூய ஒழுக்கமுள்ள பெண் ஒருத்தி ஆடவனை மயக்கி அவனைக் கெடுக்க முயன்றால், ஆடவன் தன் மனவுறுதியையும் நடத்தையையும் உடனே இழந்துவிடுகிறான். அப்படி ஒரு பெண்ணை ஆடவன் கெடுக்க முயன்றால், பெண் ஆடவனைப்போல அவ்வளவு சீக்கிரமாக, தனது மன உறுதியையும் தர்மத்தையும் இழந்துவிட மாட்டாள்.

ஆண்களின் அழகுகளைப் பாராட்டிப் புத்தகங்கள் எழுதப்படாமல் இருப்பது ஒரு விசேஷந்தான். ஆண்களின் மிருக இச்சையைக் கிளறிவிடுவதற்கென்றே எப்போது பார்த்தாலும் வெளியீடுகள் ஏன் தோன்றுகின்றன? மனிதன் விரும்பிச் சூட்டுகிற பட்டங்களைப் பெண்கள் ஏற்றுக்கொள்ளச் சித்தமாகவே இருக்கிறார்கள் என்பதுதான் இதன் பொருளா? தனது உருவத்தின் அழகை மனிதன் சுயநலத்துடன் பயன்படுத்திக்கொள்வதை அவள் விரும்புகிறாளா? மனிதனுக்கு முன்னால் தனது உருவம் அழகோடு விளங்க வேண்டுமென்பது அவளுடைய விருப்பமா? இந்த விதமான இலக்கியங்களும் விளம்பரங்களும் மனதைப் புண்படுத்துகின்றன என்றால் ஈவிரக்கமற்ற முறையில், துணிந்து எதிர்த்து அவர்கள் போராட வேண்டும். அப்படிப் போராடினால், அவை ஒரு கணத்தில் நின்றுவிடும். குறும்புத்தனம் செய்வதற்குச் சக்தி இருக்குமாயின் நன்மையைச் செய்வதற்குத் தேவைப்படுகிற சக்தியும் தங்களிடம் மறைந்து கிடக்கிறது என்பதைப் பெண்கள் உணர்வார்களா? மனிதனுடைய விளையாட்டுப் பொம்மை என்ற எண்ணத்தையும் தான் வலியற்றவள் என்கிற எண்ணத்தையும் பெண் விட்டுவிடுவாளேயானால், இந்த உலகத்தை, தனக்கும், தனது துணைவனுக்கும் வசிப்பதற்கு மிகவும் தகுதியுடைய இடமாக அவளால் செய்ய முடியும். அப்படிச் செய்வார்களேயானால், ஆடவர்களை, நல்ல தந்தையாகவோ, நல்ல மகனாகவோ, அல்லது நல்ல கணவனாகவோ அவர்களால் செய்ய முடியும். தேசத்தோடு தேசம் கிறுக்குத்தனமாகச் சண்டை செய்து சமூகம் அழிந்து போகாமலும், சமூகத்தின் ஒழுக்க அஸ்திவாரத்தையே எதிர்க்கிற அதைவிட

மோசமான வேறு யுத்தங்களும் இல்லாதிருக்க வேண்டு மானால், பெண்கள் அவர்கள் செய்து முடிக்க வேண்டிய காரியங்களைச் செய்ய முன்வர வேண்டும். ஆடவர்களைப் போலன்றி, பெண்மை உணர்வோடு பெண்களாகவே செய்ய முன்வர வேண்டும். யாதொரு பயனும் இன்றி, மனிதன் தனது திறமையினால் உயிர்களைக் கொலை செய்து வருகிறான். மனிதனைப் போலவே போட்டியிட்டு அவளும் சமுதாயத்தை நாசம் செய்ய முனைந்தால், அவளால் சமுதாயத்தை மேன்மைப் படுத்த முடியாது. மனிதன் தவறு செய்து, தன்னையும் பெண்ணையும் பாழ்படுத்திவிடுகிறான். அந்தத் தவறைப் பெண் செய்யாதிருப்பதோடு, தவறு செய்கிற ஆடவனைத் திருத்துவதும் அவளுடைய விசேஷ உரிமையாகும். எந்தப் போக்கில் வாழ்க்கை போய்க்கொண் டிருக்கிறது என்பதையே இந்தக் கேவலமான விளம்பரங்கள் காட்டுகின்றன. வெட்க மின்றி, பெண்களைச் சுயநலத்தோடு பயன்படுத்துவதாகும் இது. 'உலகத்திலுள்ள காட்டுமிராண்டிக் கூட்டத்துப் பெண் களின் உருவ அழகு' என்கிற அளவுக்கு இந்த விளம்பரங்கள் போய்விடும்போல் தோன்றுகிறது.

# பெண்ணுக்குக்கொடுக்கும் போலிமேன்மை

**" காகிதத்தில் பேனுவைக் கொண்டு எழுத ஆரம்பிக்கு முன் பெண்ணை உங்களின் சொந்தத் தாய்போல எண்ணிக் கொள்ளுங்கள். அப்படி எண்ணினுல், தாகத்தினுல் பரி தவிக்கும் பூமிக்கு, எப்படி வானத்திலிருந்து இன்பந் தரும் மழை கிடைக்கிறதோ, அதேபோல உங்கள் எழுதுகோலி லிருந்தும் பரிசுத்தமான இலக்கியம் பிறக்கும்."**

அகமதாபாத்தில் நடந்த கூர்ஜர இலக்கிய மகாநாட்டின் போது, ஜோதி சங்கம் என்ற பெயருடன் பெண்கள் இயக்கத்தை நடத்தி வருகிற பெண்கள், காந்திஜீக்கு ஒரு கடிதம் எழுதினுர்கள்: பெண்களைத் தற்கால இலக்கியம் வருணித்து வருகிற போக்கைக் கண்டித்துத் தாங்கள் நிறைவேற்றிய தீர்மானத்தின் நகலையும் அத்துடன் அனுப்பி யிருந்தார்கள். அவர்களின் குற்றச்சாட்டில் நியாயமிருப் பதாகக் கண்டு, காந்திஜீ கூறியதாவது :

*தற்கால ஆசிரியர்கள் பெண்களை முற்றும் தவறுதலாக வருணித்துக் காட்டுகிறுர்கள் என்று அவர்கள் குறை கூறு கிறுர்கள். அவர்களது உடல் உறுப்புக்களை, மிக்க கேவல மான முறையில் வருணிப்பதற்குக் காரணமான மனே விகாரத்தை எண்ணி அவர்கள் மிகவும் கோபப்படுகிறுர்கள். அவர்களுடைய பலமும் அழகும் மனிதனுடைய காமக் கண் ணுக்கு உடலில் மட்டும்தாஞ தெரிகின்றன? எப்போதுமே பணிவுள்ளவர்களாகவும் அடிமைப் புத்தியுள்ளவர்களாகவும் தொழும்பு வேலை செய்கிறவர்களாகவும் தற்கால ஆசிரியர்கள் பெண்களைக் குறிப்பிடுகிறுர்கள். அதோடுகூட, கணவனே அவர்களுக்குரிய தெய்வம் என்றும் எழுதுகிறுர்கள். அவர்கள் ஏன் அப்படி எழுத வேண்டுமென்றும், இது நியாயமா வென்றும் இந்தக் கடிதம் எழுதியிருப்பவர்கள் கேட்கிறுர்கள். அவர்கள் கேட்பது நியாயமானதே. உள்ளது உள்ளபடியே அவர்களை வருணித்துக் காட்டினுல் என்ன? நாங்கள் தேவ லோக அரம்பைகளல்ல, தாபமும் உணர்ச்சியுஞ் சேர்ந்த தசை மூட்டை யல்ல என்று அவர்கள் சொல்லுகிறுர்கள்; ஆடவர் களைப் போலவே நாங்களும் மனித இனத்தைச் சேர்ந்தவர்கள் தான் என்றும். அவர்களைப் போலவே எங்களுக்கும் சுதந்திர வேட்கை உண்டு என்றும் சொல்லுகிறுர்கள். அவர்களையும் அவர்களது மனப்போக்கையும்பற்றி எனக்குப் போதிய*

அளவு நன்ருய்த் தெரியும். ஒரு காலத்தில் தென் ஆப்பிரிக்கா வில், ஆடவர்கள் யாவருமே சிறைசெல்ல நேர்ந்தமையால், ஏராளமான பெண்களின் மத்தியிலேயே நான் வாழ நேர்ந்தது. ஏறக்குறைய அறுபது பெண்கள் இருந்தார்கள்; அந்தச் சிறு பெண்களுக்கும் மாதர்களுக்கும் தந்தை போலவும் தமையன் போலவும் நான் இருந்துவந்தேன். என் கீழ்ப் பயிற்சி பெற்ற படியால் அதிக பலமும் உணர்ச்சியும் பெற்று, கடைசியில் அவர்களுமே சிறை சென்றுவிட்டார்கள்.

நமது இலக்கியங்களில் பெண்களை அளவிற்கு மிஞ்சி மேன்மைப்படுத்திப் பேசுகிற பகுதிகளும் உண்டென்று நான் கேள்விப்படுகிறேன். இப்படிப் போலி மேன்மை யளிப்பது தவருன போக்காகும். ஒரு எளிய கேள்வி உங்களைக் கேட் கிறேன்? பெண்களைப் பற்றி எழுத முற்படும்போது, எந்த நோக்கத்துடன் நீங்கள் அவர்களை எண்ணிப் பார்க்கிறீர்கள்? காகிதத்தில் பேனவைக் கொண்டு எழுத ஆரம்பிக்கு முன் பெண்ணை உங்கள் சொந்தத் தாய்போல எண்ணிக் கொள்ளுங் கள். அப்படி எண்ணினுல், தாகத்தினுல் பரிதவிக்கும் பூமிக்கு எப்படி வானத்திலிருந்து இன்பந்தரும் மழை கிடைக்கிறதோ, அதேபோல, உங்கள் எழுதுகோலிலிருந்தும் பரிசுத்தமான இலக்கியம் பிறக்கும். மனைவியாக வரு முன்பே, பெண் உங் களுக்குத் தாயாக இருந்திருக்கிருள் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். ஆன்மவிடாயைத் தணிக்காமல், விலகிப்போய், சில ஆசிரியர்கள் காம உணர்ச்சிகளைத் தூண்டி விடுகிற முறையில் எழுதிவிடுகிருர்கள். அதனுல், அப்பாவி யான பேதைப் பெண்கள் நமது கற்பனைக் கதைகளில் வருணித்திருப்பதைப் போல நடந்துகொள்வது எப்படி என் பதில் காலத்தையும் பொழுதையும் வீணுக்குகிருர்கள். அவர் களது உடல் அழகை வருணிப்பது இலக்கியத்திற்கு அவசியந் தாஞ என்பது எனக்குப் புரியவில்லை. குரான், பைபிள், உப னிஷதம் போன்றவைகளில் இந்த விதமான வருணனை ஏதாவது உண்டா? பைபிள் இல்லாவிட்டால் ஆங்கில மொழி ஏது? மூன்று பகுதி பைபிள், ஒரு பகுதி சேக்ஸ்பியர் என்று ஆங்கில மொழியைச் சொல்லலாம். குரான் இல்லா விட்டால் அரபி மொழியையே மக்கள் மறந்திருப்பார்கள்; துளசிதாஸ் இல்லாமல் ஹிந்தி உண்டா! தற்கால இலக் கியத்தில் காண்பதைப்போல, பெண்களைப் பற்றிய தவறுத லான வருணனைகளை மேலே சொன்ன நூல்களில் நாம் காண முடியுமா?

# மாணவர்களுக்கு அவமானம்

**“தற்காலத்துப் பெண், பல இளைஞர்களோடு வேடிக்கை யாகப் பேசிப் பழக விரும்புகிருள் என்றே நான் எண்ணு கிறேன். தொந்தரவும் ஆபத்தும் வரட்டுமே என்று தான் அவள் எண்ணுகிருள்......தற்காலத்துப் பெண்ணே மழை, வெயில், காற்று இவற்றிலிருந்து தன்னைக் காப் பாற்றிக்கொள்வதற்காக ஆடை அணியவில்லை; பார்ப் பார்ப்போரின் கவனத்தைத் தன்வசம் ஈர்க்கும் பொருட்டே ஆடை அணிந்துகொள்ளுகிருள்.”**

**பா**ஞ்சாலத்தில், கல்லூரியில் படிக்கிற ஒரு பெண்ணிட மிருந்து ரெம்பவும் பரிதாபகரமான ஒரு கடிதம் வந்திருக்கிறது. சுமார் இரண்டு மாதங்களாக எனது கடிதக் கட்டில் இது இருந்து வருகிறது. நேரம் கிடைக்கவில்லையென்று சொல்லு வது, இப் பெண் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல் தப்ப முயலுவதற்கான போலிச் சமாதானமாகும். இதற்குப் பதில் எனக்குத் தெரிந்திருந்தாலும், எப்புடியோ யில் சொல்லாமலே இருந்துவிட்டேன். தற்கிடையில், மிக்க அனுபவம் வாய்ந்த மற்றொரு பெண்மணியிடமிருந்து வேறொரு கடிதம் எனக்கு வந்தது. அந்தக் கல்லூரிப் பெண்ணின் உண்மையான கஷ்டத்தைப்பற்றிக் கவனிப்பது தவிர்க்க முடியாத ஒரு கடமை. இதை இனியும் தாமாதம் செய்யலாகாதென்று நான் உணர்ந்தேன். அவருடைய கடி தம் நல்ல சுத்தமான ஹிந்துஸ்தானியில் எழுதப்பட்டிருக் கிறது. அந்தக் கடிதம் அவருடைய ஆழ்ந்த உணர்ச்சியை அப்படியே படம் பிடித்துக்காட்டுகிறது. அந்த உணர்ச்சியை ஆங்கிலத்தில் கொண்டுவர என்னுல் கூடியவரை முயல் கிறேன். அந்தக் கடிதத்தின் ஒரு பகுதியை ஆங்கிலத்தில் கீழே தருகிறேன் :

“சிறு பெண்களும் வயதுவந்தபெண்களும் பெரும்பாலும் தனியே போக எண்ணுவதில்லை. நகரத்தின் ஓர் இடத்திலிருந்து இன் னொரு இடத்திற்கோ அல்லது ஒரு நகரத்திலிருந்து இன்னொரு நகரத்திற்கோ தனியாகப் போகும்படி ஏற்பட்டுவிடு கிறது. இப்படிப் பெண்கள் தனியாகப் போவதைக் கண்டால் கெட்ட எண்ணமுடைய சிலர் அவர்களைத் தொல்லைப்படுத்து கிருர்கள். பக்கத்தில் போகும்போது ஒழுங்கற்ற, பேசத் தகாத சொற்களைச் சொல்லுகிருர்கள். பயம் என்பது இருந்து அவர்களைத் தடுக்காவிட்டால், அதற்கு மேல் கேவலமாக நடக்

கவும் அவர்கள் தயங்க மாட்டார்கள். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் அஹிம்சை என்ன செய்யக் கூடும் என்பதை அறிய விரும்புகிறேன். ஹிம்சையை உபயோகிப்ப தென்பது இயல்பாக இருக்கவே இருக்கிறது. இளம் பெண்ணுக்கோ அல்லது வயதுவந்த பெண்ணுக்கோ போதுமான அளவு தைரியமிருந்தால். தன்னுடைய சாமர்த்தியததால் அந்தத் துஷ்டனுக்கு நல்ல பாடம் கற்பிப்பாள். வேறொன்றும் செய்ய முடியாவிட்டாலும் சுற்றி இருக்கும் ஜனங்களுடைய கவனத்தைக் கவரும் படியான முறையிலாவது ஒரு சண்டையைக் கிளப்பி, அவனுக்குச் சவுக்கடி வாங்கிக் கொடுத்தல் கூடும். ஆனால், இப்படி நடத்துவதனல் ஏற்படுகிற பயன், இந்த அவஸ்தையை அப்போதைக்கு நிறுத்தி வைப்பதாயிருக்குமே யொழிய நிரந்தரமாய்ப் போக்குவதாய் இராது. தவருக நடந்துகொள்ளுகிற ஆடவன் நமக்குத் தெரிந்தவனு யிருந்தால் நியாயத்துக்குச் செவிசாய்ப்பான்; பணிவுக்கும் அன்புக்கும் கட்டுப்படுவான். ஆனால் சைக்கிளில் போகிறபோதே, ஆண் துணையின்றித் தனியாகப் போகிற பெண்களைப் பார்த்துக் கெட்ட வார்த்தை பேசுகிறவனை என்ன செய்வது ? அவனிடம் நியாயத்தை எடுத்துச் சொல்ல நமக்குச் சந்தர்ப்பம் இல்லை. திரும்பவும் அவனைச் சந்திப்பதும் நிச்சயமில்லை. அப்படிச் சந்தித்தாலும் அவனை இனம் தெரிந்துகொள்ள முடியாமலே போகலாம். அவனிருக்கிற இடமும் தெரியாது. இந்த நிலையில் என்ன செய்ய முடியும் ?

" உதாரணமாக, சென்ற 1938-ம் வருடம் அக்டோபர் மாதம் 26-ம் தேதி எனக்கேற்பட்ட அனுபவத்தைச் சொல்லுகிறேன். இரவு ஏழரை மணியிருக்கும். ஒரு விசேஷ வேலையை முன்னிட்டு நான் என் தோழியோடு போய்க்கொண்டிருந்தேன். அப்போது துணை வருவதற்கு ஆடவர் யாருமில்லை. வேலையோ தள்ளிப்போட முடியாதது. நாங்கள் சென்ற பாதையில் ஒரு சீக்கிய இளைஞன் சைக்கிளில் சென்றுகொண் டிருந்தான். அவன் சொல்வது காதில்விழக்கூடிய தூரத்தில் நாங்கள் வரும் வரையில் ஏதோ வாய்க்குள்ளே முனகிக்கொண்டிருந்தான். அவன் எங்களைக் குறிப்பிட்டுத்தான் பேசுகிருன் என்று தெரிந்துகொண்டோம். எங்களுக்கு ரொம்பவும் வேதனையாய் யிருந்தது. அது எங்கள் மன அமைதியைக் குலைத்துவிட்டது. காலையில் கூட்டம் இல்லை. நாங்கள் கொஞ்ச தூரம் சென்றதும், சைக்கிளில் சென்றுகொண் டிருந்த அவன் திரும்பினன். கொஞ்ச தூரத்திலேயே அவனை நாங்கள் உடனே இனம் தெரிந்துகொண்டோம். எங்கள் பக்கமாக வந்து சைக்கிளைத் திருப்பினன். அவன் கீழே இறங்கத்தான் எண்ணினனு அல்லது அப்படியே செல்ல எண்ணினனு என்பதைக் கடவுள்தான் அறிவார். அபாயகரமான நிலையில் இருக்கிருேம் என்று நாங்கள் உணர்ந்தோம். எதிர்த்துப் போராட எங்களிடம்

பலமுண்டு என்று நாங்கள் எண்ணவில்லை. சாதாரணப் பெண்ணைவிட நான் பலவீனமானவள் ஆனால், என் கையில் ஒரு பெரிய புத்தகம் இருந்தது, எப்படியோ தெரியவில்லை, எனக்குத் திடீரென்று தைரியம் பிறந்தது. அந்தச் சைக்கிள் மீது எறிந்துவிட்டு, "அடே, இந்த விளையாட்டுக்களை யெல்லாம் திரும்பவும் செய்ய உனக்குத் தைரியமிருக்கிறதா!" என்று உரக்கக் கத்தினேன். சைக்கிள் சாய்ந்துவிடாமல் கஷ்டத்தோடு சமாளித்துக்கொண்டு, வேகமாகச் சைக்கிளை ஓட்டிக்கொண்டு அவன் போய்விட்டான் அவனுடைய சைக்கிள்மீது நான் புத்தகத்தை எறிந்திராவிட்டால் நாங்கள் போகிறவரையில் அசங்கியமாய்ப் பேசி அவன் எங்களைத் தொந்தரவு செய்திருப்பான். இது சாதாரணமான, ஒரு வேளை முக்கியமில்லாத, சம்பவமா யிருக்கலாம். ஆனால் தாங்கள் லாகூருக்கு வந்து துர்ப்பாக்கியசாலிகளான நாங்கள் படும் கஷ்டத்தை ஒரு தரம் கேட்டுவிட்டுப் போனால் நன்றாய் யிருக்கும். முதன் முதலாக மேலே சொன்னது போன்ற சந்தர்ப்பங்களில், ஒரு பெண் அஹிம்சையைக் கையாண்டு எப்படித் தன்னைக் காத்துக்கொள்ளக் கூடு மென்பதை எனக்குச் சொல்லுங்கள். இரண்டாவதாக, பெண்ணினத்தை அவமானப்படுத்துகிற வெறுக்கத்தகுந்த இளைஞர்களை அவ்விதம் செய்யவொட்டாது தடுக்க வழி என்ன? பெண்மக்களுக்கு மரியாதை கொடுக்க, குழந்தைப் பருவத்திலிருந்தே பழக்கப் படும் புதிய முறை தோன்றும்வரையில் நாங்கள் காத்திருந்து கஷ்டம் அனுபவிக்கத்தான் வேண்டு மென்று சொல்லுவீர்களா? மாட்டீர்கள் என்று நினைக்கிறேன். இக் கேட்டை நீக்க அரசாங்கத்தாருக்கு ஒன்று, முடியவில்லை யென்று சொல்ல வேண்டும்; அல்லது பிரியமில்லை யென்று சொல்ல வேண்டும்; இந்த மாதிரிப் பிரசினைகளைக் கவனிக்கப் பெரிய தலைவர்களுக்கு நேரம் கிடைக்கவில்லை. தவறாக நடந்து இளைஞனை ஒரு பெண் தைரியமாகத் தண்டிப்பதைக் கேட்கும்போது, சபாஷ் இப்படித்தான் எல்லாப் பெண்களும் செய்ய வேண்டும் என்று சொல்லுவார்கள். மாணவர்கள் அவ்விதம் கேவலமாக நடந்துகொள்வதைக் கண்டித்து யாராவது ஒரு தலைவர் சில சமயம் சரமாரியாகப் பிரசங்கம் செய்வதைக் காண்கிறோம். ஆனால் இந்தக் கடுமையான பிரசினையைத் தீர்க்க ஒருவராவது தொடர்ச்சியாக முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. தீபாவளி முதலிய விடுமுறை நாட்களில் பெண்கள் வெளிக் கிளம்பக் கூடாது; தீபாலங்காரத்தைப் பார்க்கக் கூடா தென்று எச்சரித்துப் பத்திரிகைகளில் எழுதுகிறார்கள் என்பதை யறிய, நீங்கள் ஆச்சரியமடைவதோடு துன்பமும் அடைவீர்கள். இந்த ஒரு உண்மையே இப்பகுதியில் வசிக்கும் நாங்கள் என்னென்ன கஷ்டங்களுக்கு உள்ளாகி வருகிறோம் என்பதைக் காட்டப் போதுமானது. இந்த எச்சரிக்கைகளைப் படிப்பவர்களும்,

எழுதுபவர்களும் இத்தகைய எச்சரிக்கைகளையும் செய்ய வேண்டி யிருக்கிறதே யென்று கொஞ்சங்கூட வெட்க மடைவதேயில்லை !''

இந்தக் கடிதத்தைப் படிக்கும்படி இன்னொரு பாஞ்சாலப் பெண்ணிடம் கொடுத்தேன். கல்லூரியில் படித்த காலத்தில் தானும் இம்மாதிரி கஷ்டப்பட்டதாக அவளும் சொன்னாள். இது சரியான வருணனை என்றும் இப் பெண் எழுதியிருக்கும் விஷயம் பெரும்பாலான பெண்களுக்குப் பொதுப்படையான அனுபவம் என்றும் தெரிவித்தாள்.

நல்ல அனுபவம் வாய்ந்த மற்றொரு பெண்ணிடமிருந்து வந்த இன்னொரு கடிதம், லக்ஷ்மணபுரியில் அவளுடைய தோழியர்கள் பட்ட பாட்டைப்பற்றிக் கூறுகிறது. சினிமாக் கொட்டகையில் அவர்களுக்குப் பின் வரிசையில் உட்கார்ந் திருந்த இளைஞர்கள் பேசத்தகாத—அப்படித்தான் நான் சொல்ல முடியும்—பாஷையை யெல்லாம் உபயோகித்து அவர் களைத் துன்பப்படுத்தினார்களாம். குறும்புச் செயல்களைச் செய்தார்க ளென்றும் தெரிகிறது அந்தப் பெண் வருணித் திருக்கும் பகுதியை இங்கே நான் தருவது ஒழுங்கல்ல வென்றே விட்டுவிட்டேன்.

அந்தச் சமயத்துக்கு மட்டும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமென்றால், தனக்குப் பலமில்லை யென்று சொல்லிக்கொள்ளும் அந்தப் பெண் செய்த உபாயம் — அதா வது சைக்கிளோட்டியின்மீது புத்தகத்தை எறிந்தது—மிகவும் சரியானதுதான். அதுவே பழைய உபாயம் ஆகும் ஒரு பெண்ணோ ஆணோ பலத்தைக் கையாள விரும்பும்போது உடலில் ரொம்ப வலிவுடைய எதிரியைக்கூட வென்று விடலாம். இதற்குப் பலவீனம் ஒரு தடையாவதில்லை. இந்த உண்மையை நான் முன்னரே சொல்லியிருக்கிறேன். தற்கால உலகில் உடல் வலியானது எத்தனையோ விதத்தில் உபயோக மாகிற தென்பதை நாம் அறிவோம். இந்த ஆராய்ச்சிகளின் பயனாக, போதுமான அறிவுள்ள ஒரு சிறுமிகூடப் பலரைக் கொல்லவும் அழிக்கவும் செய்யலாம். மேற்சொன்ன பெண் வருணித்தது போன்ற சந்தர்ப்பங்களில் தங்களைப் பாதுகாத் துக்கொள்வதற்குப் பெண்களுக்கு இப்போது பயிற்சி யளிக்கப் படுகிறது. ஆனால் தற்காலிகமாக அந்தப் பெண், கையிலிருந்த புத்தகத்தைப் பாதுகாப்பு ஆயுதமாக்கி நல்ல முறையில் பயன் படுத்திக்கொண்டாலும். இந்தக் கேட்டை ஒழிக்க இது போதியதாகா தென்று அவளே உணர்ந்திருக்கிறாள். இக்கேடு இப்போது அதிகரித்து வருவது உண்மை. ஆண்கள்

முரட்டுத்தனமாகப் பேசும்போது மன அமைதியை இழந்து விடத் தேவையில்லை. ஆனால் அந்த இழிவான செயலை அலட்சியமாகத் தள்ளிவிடவும் கூடாது. இம்மாதிரி விஷயங்களையெல்லாம் பத்திரிகைகளில் பிரசுரிக்க வேண்டும். குற்றம் செய்தவர்களின் பெயர்களைக் கண்டுபிடித்துவிட்டால் அந்தப் பெயர்களைப் பிரசுரம் செய்ய வேண்டும். இந்தக் கேட்டை வெளிப்படுத்துவதில் போலி அடக்கம் கூடவே கூடாது. பொதுவில், தவறாக நடப்பவர்களைத் தண்டிக்கப் பொதுஜன அபிப்பிராயத்தைப்போல் சிறந்த கருவி வேறொன்றும் இல்லை. இப் பெண் சொல்லுவதுபோல் இவ் விஷயங்களில் பொது மக்கள் ஒருவித சிரத்தையும் காட்டாமல் இருக்கிறார்கள் என்பது உண்மைதான்: பொதுமக்களை மட்டும் குற்றம் கூறினால் போதாது. அவ்விதம் முரட்டுத்தனமாகப் பிறர் நடந்து கொள்வதைப் பொதுமக்களுக்குத் தெரிவிக்க வேண்டும். ஓரிடத்தில் நடந்த திருட்டுகளை வெளிப்படுத்தாமலும் அவற்றைத் தொடர்ந்து ஆராயாமலு மிருந்தால், பொதுவாக, திருட்டையே போக்கிவிட முடியுமா? அதுபோல முரட்டுத்தனமாக நடந்துகொண்டவனை அம்பலப்படுத்தாமல் மறைத்து வைத்தால், அவனைத் தண்டிப்பது அசாத்தியமாகும். குற்றமும் கேடும் தீமையை நாடிச் சுற்றித் திரிவதற்குப் பொதுவாக இருட்டை வேண்டுகின்றன. ஒளி அவற்றின்மீது பட்டவுடன் அவை மறைந்துவிடுகின்றன.

ஆனால், தற்காலத்துப் பெண் ஒரு அரை டஜன் காதலர்களுக்குக் காதலியாயிருக்க விரும்புகிறாள் என்றே நான் எண்ணுகிறேன். அவள் துணிகர நிகழ்ச்சிகளை விரும்புகிறாள். எனக்குக் கடிதம் எழுதிய பெண் வழக்கத்திற்கு மாறான ரகத்தைச் சேர்ந்தவளா யிருக்கிறாள். தற்காலப் பெண்ணோ மழை, வெயில், காற்று இவற்றிலிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்வதற்காக ஆடை அணியவில்லை; பார்ப்போரின் கவனத்தைத் தன்வசம் ஈர்க்கும் பொருட்டே ஆடை அணிந்துகொள்கிறாள். முகத்தில் வர்ணமடித்தது போல மாவைப் பூசிக்கொண்டும், மிக்க ஆடம்பரமான முறையில் தன்னை அலங்கரித்துக்கொண்டும், தனக்கு இயல்பாயுள்ள அழகைப் பெருக்குகிறாள். இம்மாதிரிப் பெண்களுக்கல்ல, நான் சொன்ன அஹிம்சா வழி. நம்மிடையே அஹிம்சா உணர்ச்சியை வளர்க்கத் திட்டமான சில நியதிகள் இருக்க வேண்டுமென்பதைப்பற்றி நான் அடிக்கடி குறிப்பிட்டிருக்கிறேன். அது ரொம்பக் கடுமையான முயற்சியாகும். எண்ணத்திலும் வாழ்க்கையிலும் அஹிம்சா முறை ஒரு

புரட்சியை உண்டாக்குகிறது எனக்குக் கடிதம் எழுதிய இப் பெண்ணும், இன்னும் இவளைப்போன்ற மனப்பான்மையுடைய பெண்களும் மேலே சொன்ன முறையில், தங்கள் வாழ்க்கையைப் புரட்சிகரமாக மாற்றிக்கொள்ள வேண்டும்; அப்படி மாற்றி யமைத்துக்கொண்டால் அவர்களோடு தொடர்பு வைத்துக்கொள்ளும் இளைஞர்கள், அவர்களுக்குமரியாதை செலுத்தவும், அவர்கள் முன்னிலையில் மரியாதையோடு பழகவும் கற்றுக்கொள்வார்களென்பதை அவர்கள் காணலாம். ஆனால், ஒருவேளை தங்கள் கற்புக்கே ஆபத்து வந்திருக்கிறதென்று அவர்களுக்கு தெரிந்தால்-அவர்களுக்கு ஒருவேளை தெரியவும் கூடும்-மனிதனிடமுள்ள மிருக சக்திக்கு இணங்குவதைவிட எதிர்த்து நின்று உயிர்விடுவதற்குரிய தைரியத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும். போராடுவதற்கே முடியாதபடி கால் கைகளைக் கட்டி, வாயில் துணிவைத்து அமுக்கி விட்டாலும் அப் பெண், நான் எண்ணுகிறபடி அவ்வளவு எளிதாகச் சாக முடியாது என்று சொல்லுவார்கள். ஒரு பெண் எதிர்த்து நிற்கவேண்டுமென்ற உறுதியான மனத்தை மட்டும் பெற்றுவிட்டால், அவளைத் திமிருதபடி செய்யக்கூடிய எல்லாவிதமான தளைகளையும் அவள் அறுத்தெறிதல் கூடும் என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். இந்தத் திடமான உறுதி உயிர்விடுவதற்குள்ள பலத்தை அவளுக்கு அளிக்கிறது.

ஆனால் இதற்கெனப் பயிற்சி பெற்ற பெண்கள் மட்டுமே இந்த வீரம் காட்ட முடியும். அஹிம்சை நிலையில் நிரந்தர நம்பிக்கையில்லாதவர்கள் சாதாரணத் தற்காப்பு முறையைக் கற்றுக்கொண்டு, பெண்களிடம் இளைஞர்கள் அவமரியாதையாக நடந்துகொள்ளாதபடி பாதுகாத்துக்கொள்வார்கள்.

இருந்தபோதிலும், மரியாதையான பெண்கள் இளைஞர்களைக் கண்டு, தம்மைத் தொல்லை செய்வார்களோ என்று அஞ்சுகிறார்கள். இவர்கள் இப்படி அஞ்சும்படியான வகையில், அடிப்படையான நல்ல பழக்கங்களை யெல்லாம் விட்டு இளைஞர் ஏன் இப்படிக் கேவலமாக நடந்து கொள்கிறார்கள் என்ற பெரிய கேள்வி எழத்தான் செய்கிறது: பெரும்பான்மையான இளைஞர்கள்,பெண்களிடம் மரியாதை காட்டுகிற உணர்ச்சியை இழந்துவிட்டார்களென்பதைக் கண்டு எனக்கு வருத்தமாயிருக்கிறது. ஆனால், அவர்கள் அவ்வளவு பேருமே தங்கள் நற்பெயரைக் காப்பாற்றுவதில் கண்ணுங்கருத்துமா யிருப்பதோடு, தங்கள் தோழர்களுக்குள் யாரேனும் இம்மாதிரி தவருக நடந்துகொள்பவர்கள் இருந்தால் அவர்களையும்

தண்டிக்க வேண்டும். தங்கள் சகோதரிகள், தாய்மார் இவர்களுடைய மானத்தை அவர்கள் எவ்வளவு பெரிதாக எண்ணியிருக்கிறார்களோ, அவ்வளவு பெரிதாக மற்றப் பெண்களின் மானத்தையும் மதிக்க அவர்கள் கற்றுக்கொள்ள வேண்டும். நல்ல முறையில் பழகுவதற்கு அவர்கள் கற்றுக்கொள்ளாவிட்டால், அவர்கள் பெறுகிற படிப்பெல்லாம் ஒன்றுக்கும் உதவாமல் வீணாகிவிடும்.

மேலும், வகுப்புகளுக்கு நிர்ணயிக்கப்பட்ட பாடங்களைச் சொல்லிக்கொடுத்து மாணவர்களைத் தயார் செய்வதுபோல, பெருந்தன்மையாக நடந்துகொள்ளும் பழக்கத்தை மாணவர்களிடம் உண்டுபண்ணுவதும் ஆசிரியர்களுடைய கடமையல்லவா?

# நவநாகரிகப் பெண்

**"நவநாகரிகப் பெண் என்று சொன்னாலே அதற்குத் தனியான பொருளுண்டு...ஆங்கிலம் படித்திருக்கிற பெண்கள் அனைவருமே நவநாகரிகப் பெண்கள் அல்லர். நவநாகரிக வாடையே வீசாத பெண்கள் அனேகரை நான் பார்த்திருக்கிறேன். நவநாகரிகப் பெண்களாக மாறிய சிலரையும் எனக்குத் தெரியும்."**

பதினொரு பெண்களின் சார்பாக எனக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது. அவர்கள் பெயர்களும் விலாசங்களும் அந்தக் கடிதத்தில் இருக்கின்றன. கருத்தில் யாதொரு மாறுதலும் செய்யாமல், படிப்பதற்கு எளிதாகச் சில மாறுதல்களை மட்டும் செய்து, அந்தக் கடிதத்தைக் கீழே தந்திருக்கிறேன்:

"மாணவர்களுக்கு அவமானம்" என்ற தலைப்புடன் மாணவி ஒருத்தி எழுதியிருந்த கடிதத்திற்குத் தாங்கள் அபிப்பிராயம் எழுதியிருக்கிறீர்கள். 31—11—1938 தேதி 'ஹரிஜன்' பத்திரிகையில் அது வெளியாகியிருக்கிறது. அதைக் கூர்ந்து பார்க்க வேண்டியது அவசியம். நவநாகரிகப் பெண்களைத் தங்களுக்குப் பிடிக்கவில்லை போலும், அதனாலேயே தாங்கள் அவர்களை அரை டஸன் காதலர்களுக்குக் காதலியாயிருக்க விரும்புபவர்கள் என்று சொல்லி ஒரேயடியாய் ஒதுக்கித் தள்ளி விட்டீர்கள்; இவ்வளவு கோபம் தங்களுக்கு வரும்படி நவநாகரிகப் பெண்கள் செய்துவிட்டதாகத் தெரிகிறது. பொதுப்படையாகப் பெண்களைப்பற்றித் தாங்கள் கொண்டுள்ள அபிப்பிராயத்தை இக் குறிப்பு தெரிவிக்கிறது; இது உற்சாக மூட்டுவதாயில்லை.

"வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டநஷ்டங்களில் சமபங்கு பெறுவதற்காகவும், ஆடவர்களுக்கு உதவி செய்வதற்காகவும் வீட்டுக்குள்ளேயே அடைப்பட்டுக்கிடவாமல், வெளியே வந்து பெண்கள் செயலில் ஈடுபட்டு வருகிறார்கள். ஆண்கள் பெண்களை அவமதித்து நடத்தியபோதிலும், பெண்மீதே பழி சுமத்துவது உண்மையில் விநோதமா யிருக்கிறது. குற்றம் இரு தரப்பிலும் இருக்கக்கூடிய சந்தர்ப்பங்களும் உண்டு; அரை டஜன் காதலர்களுக்குக் காதலியாயிருக்க விரும்பும் பெண்களும் இருக்கலாம். அப்படியானால் அந்தக் காதலியைத் தெருத் தெருவாய்த் தேடியலையும் அரை டஜன் காதலர்கள் இருந்துதானே ஆக வேண்டும்? நவநாகரிகப் பெண்களனைவருமே அத்தகைய பெண்கள் என்றும், நவநாகரிக இளைஞர் அனைவருமே அத்தகைய ஆடவர் என்றும், திட்டமாகச் சொல்லவதற்கில்லை; சொல்லவும் கூடாது. நவநாகரிகப் பெண்கள்

பலரைத் தாங்கள் கண்டிருக்கக் கூடும். தியாகம், மனவுறுதி, பெண்மையின் வேறு பல சிறந்த பண்புகள் ஆகியவற்றை அவர்களிடம் தாங்கள் கண்டிருப்பீர்கள்.

"தங்களுக்குக் கடிதமெழுதிய பெண் எடுத்துக்காட்டியுள்ள தீயொழுக்கத்தைக் கண்டிக்கும் முறையில் பொதுஜன உணர்ச்சியை எழுப்ப வேண்டியது அவசியமே. இதைப் பெண்களே செய்ய வேண்டு மென்பதில்லை. அவர்கள் செய்ய வெட்கப்படுவார்க ளென்ப தல்ல; அவர்கள் செய்வதனுல் பலன் விளையாது.

"பெண் நரகத்திற்கு வழி" என்ற சொல்லானது கேவலமான கர்நாடகச் சொல். உலகமெல்லாம் போற்றப்படுகின்ற தாங்கள் மேற்சொன்ன விதமாகக் கூறிய அபிப்பிராயமானது, அந்தச் சொல்லுக்குப் புதியதோர் ஆதரவுதருவதாயிருக்கிறது.

"இவற்ருலெல்லாம் நவநாகரிகப் பெண்கள் தங்களை மதிக்கவில்லை என்று தாங்கள் எண்ணிவிட வேண்டாம். இளைஞர்கள் தங்களை எப்படிப் போற்றுகிருர்களோ, அப்படியே பெண்கள் அனைவரும் தங்களைப் போற்றுகிருர்கள். பிறர் தங்களை வெறுப்பதையும் தங்களிடம் அனுதாபம் காட்டுவதையுந்தான் அவர்கள் விரும்பவில்லை. நடத்தையிலேயே உண்மையில் குற்றம் இருக்குமாஞல், அவற்றைத் திருத்திக்கொள்ளப் பெண்கள் தயாராயிருக்கிருர்கள். குற்றம் குறைகள் எவையேனும் அவர்களிடம் காணப்பட்டால், அவற்றை ஐயமற நிரூபித்த பிறகு பெண்களை இகழ்வதுதான் நியாயமாயிருக்கும். "பெண் இனமாகையால் பொறுத்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லித் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளப் பெண்கள் விரும்பவில்லை. இன்னெருவர் தங்களை நடத்தைப்பற்றிக் கண்டித்துத் தீர்ப்புக் கூறுவதையும், அவர்கள் வாயில்லாப் பூச்சிகள்போல் இருந்து கேட்டுக்கொண்டிருக்கவும் மாட்டார்கள். உண்மையை நாம் ஏற்கத் தயாராயிருக்க வேண்டும். தாங்கள் கூறிய மாதிரி வேடிக்கையாகப் பேசிப் பழக விரும்புகிற நவநாகரிகப் பெண்ணுக்கு, உண்மையை ஏற்றுக்கொள்ளப் போதுமான தைரியம் உண்டு."

நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே நான் தென் ஆபிரிக்காவில் இந்தியப் பெண்களுக்குத் தொண்டு செய்ய ஆரம்பித்தேன் என்பதை எனக்குக் கடிதம் எழுதிய இப் பெண்கள் ஒருவேளை அறிய மாட்டார்கள். அப்போது இவர்களில் யாருமே பிறந்திருக்கவும் மாட்டார்கள்! பெண்களை இழிவுபடுத்திக் கூறுவது என்னுல் இயலாத காரியம். பெண்கள் சமுதாயத்தை மிகவும் உயர்வாகக் கருதுகிறவன் நான்; அவர்களை இழிவாக நினைக்க என்னுல் முடியாது, ஆங்கில மொழியில் சொல்வது போல், பெண் சமுதாயத்தை மனித வர்க்கத்திலேயே சிறப்பான பகுதி என்று சொல்லலாம். மாணவர்களின் வெட்கக்கேடான நடத்தையை வெளிப்படுத்த நான் கட்டுரை எழுதி

னேயன்றி, பெண்களின் தவறுகளை விளம்பரப்படுத்தும் நோக்கத்துடன் நான் கட்டுரை எழுதவில்லை. நோய்க்குச் சரியான மருந்தைக் கண்டுபிடிக்க வேண்டுமானல், நோயைப் பரிசீலனை செய்து, அந்த நோய்க்குத் தூண்டுதலாயிருந்த அடிப்படையான காரணங்களை யெல்லாம் எடுத்துக்காட்டியாக வேண்டும். இப்படிச் செய்வது எனது கடமை.

நவநாகரிகப் பெண் என்பதற்குத் தனியான பொருள் உண்டு. எனவே நான் சொல்லிய குறிப்பு சிலரை மட்டும் எண்ணிச் சொல்லியதாகாது. ஆங்கிலம் படித்திருக்கிற பெண்கள் அனைவருமே நவநாகரிகப் பெண்கள் அல்லர். நவநாகரிக வாடையே வீசாத பெண்கள் அனேகரை நான் பார்த்திருக்கிறேன். நவநாகரிகப் பெண்களாக மாறிய சிலரையும் எனக்குத் தெரியும். இந்திய மாணவிகள் நவநாகரிகப் பெண்ணிடத்திலே மோகங்கொண்டு அவளை முற்றிலும் பின்பற்றலாகாதென்று எச்சரிக்கை செய்தேனே யன்றி வேறில்லை; இந்த மோகம் ஆபத்தான பிரசினையாகி வருகிறது. இந்தக் கடிதம் கிடைத்த அதே சமயத்தில், ஆந்திர மாணவி ஒருத்தியிட மிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் ஆந்திர மாணவர்களின் நடத்தையைக் குறித்து அவள் விரிவாக எழுதியிருக்கிருள். படித்துப் பார்க்கும்போது, நிலைமை லாகூர்ப் பெண் எழுதியிருப்பதைக் காட்டிலும் மிகவும் மோசமாய் இருக்கிறதென்று தெரிகிறது; பெண்கள் அணியும் எளிய உடை அவர்களுக்குப் பாதுகாப்பாக இல்லை யென்றும் படிக்கிற பாடசாலைக்கே கெட்ட பெயரை யுண்டாக்கும் இந்த மாணவர்களின் காட்டுமிராண்டித்தனமான நடத்தையை வெளிப் படுத்தக்கூடிய தைரியம் தங்களிடம் இல்லை யென்றும் இப் பெண் சொல்லுகிருள். இந்தக் குற்றச்சாட்டை ஆந்திர சர்வகலாசாலை அதிகாரிகள் கவனிக்க வேண்டும்.

மாணவர்களின் முரட்டுத்தனமான நடத்தையைத் திருத்து இந்தப் பதினெரு பெண்களும் சிரத்தையுடன் கிளர்ச்சி செய்ய வேண்டும். தங்களுக்கு வேண்டியதைத் தாங்களே செய்து கொள்கிறவர்களுக்குத்தான் கடவுள் உதவி செய்கிருர். ஆடவர்களின் முரட்டுத்தனமான நடத்தையினின்றும் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளப் பெண்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.

# சகோதரி ஒருவர் கேட்ட கேள்விகள்

**"பிறருக்குத் தீங்கு செய்யக் கூடா தென்ற உணர்ச்சியும், சதா அஹிம்சையைப்பற்றிய போதனையும் பரவியிருக்கும் இடத்தில் வசிக்கும் பெண் தன்னைச் சுதந்திரமற்றவளாகவோ பலவீனமானவளாகவோ கதியற்றவளாகவோ கருத மாட்டாள். உண்மையாகவே பரிசுத்தமாய் இருக்கிற பெண்ணை, கதியற்றவள் என்று சொல்ல முடியாது. தனது தூய்மையினாலேயே அவள் தன் பலத்தை உணர்ந்துகொள்கிறாள்."**

**கேள்வி :** *பெண்களின் மானத்தை நாம் காப்பாற்றுவது எப்படி?*

**பதில் :** *இரண்டு தலைப்புகளில் இந்தக் கேள்வியை நாம ஆராயலாம்:*

*(1) பெண் தனது மானத்தைத் தானே எவ்விதம் காப்பாற்றிக்கொள்வது.*

*(2) அவளது உறவினர்களான ஆடவர்கள் அதை எவ்விதம் காப்பாற்றுவது?*

*பெண் தன் மானத்தை தானே காப்பாற்றிக்கொள்வதென்ற கேள்வியை முதலில் ஆராய்வோம். பிறருக்குத் தீங்கு செய்யக் கூடா தென்ற உணர்ச்சியும் சதா அஹிம்சையைப்பற்றிய போதனையும் பரவியிருக்கும் இடத்தில் வசிக்கும் பெண், தன்னைச் சுதந்திர மற்றவளாகவோ, பலவீனமானவளாகவே கதியற்றவளாகவோ கருத மாட்டாள். உண்மையாகவே பரிசுத்தமாய் இருக்கிற பெண்ணைக் கதியற்றவளென்று சொல்ல முடியாது. தனது தூய்மையினாலேயே அவள் தன் பலத்தை உணர்ந்துகொள்ளுகிறாள்; பெண்ணை அவளது சம்மதமின்றிக் கற்பழிப்பது இயலாத காரியம் என்பது என் அபிப்பிராயம். பயம் தோன்றினாலோ ஒழுக்கத்தின் வலிமையைத் தான் உணராவிட்டாலோதான் இந்தக் கொடிய செயலுக்குப் பெண் உள்ளாக நேரலாம். தன்னைக் கற்பழிக்க முற்படுகிறவனை எதிர்க்கப் போதிய உடல் வலிமை இல்லாவிட்டாலும், அவன் அந்தக் கொடிய செயலை செய்வதற்கு முன்னர் தன் உயிரையே மாய்த்துக்கொள்ளக் கூடிய மனவலிமை பெண்ணுக்கு வந்துவிடும். சீதையை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். உடல் வலிமையில் ராவணனுக்கு முன் அவள் எம்மாத்திரம்? ஆனால், அவளிடம் காணப்பட்ட ஒழுக்க பலம் அரக்கனுடைய அபார உடல் பலத்தைவிட வன்மைபெற்றதா யிருந்தது. எப்படி யெல்லாமோ ஆசை காட்டி அவன் அவளைத் தன்வசப்படுத்த முயன்றான். ஆனால், அவள் சம்மதமின்றி, காம இச்சையுடன் ராவணனால் சீதை*

யின் உடலைத் தீண்ட முடியவில்லை. இதற்கு மாறாக, ஒரு பெண் தனது உடல் பலத்தை மட்டுமோ, அல்லது தன்னிடமுள்ள ஏதாவது ஒரு ஆயுத பலத்தை மட்டுமோ நம்பியிருந்தால், தனது பலம் தீர்ந்ததும், அவள் படுதோல்வி அடைவது திண்ணம்.

இரண்டாவது கேள்விக்கு எளிதில் பதில் சொல்லிவிடலாம். தகப்பனார், சகோதரன், நண்பன் முதலியோர் அவளைப் பாதுகாக்கும் பொருட்டு, அவளைக் கற்பழிக்க வருபவனைத் தடுக்க முயல்வார்கள். அதன் பிறகு, பாதகமான அந்த எண்ணத்தை விட்டுவிடும்படி அவனுக்குச் சொல்லிப் பார்ப்பார்கள். காரியம் பலிக்காவிட்டால் அந்தப் பாதகச் செயல் நிகழாமல் தடுக்கும் முயற்சியில் தங்களது உயிரையே அர்ப்பணம் செய்யவும் சித்தமா யிருப்பார்கள். தங்கள் உயிரைத் தியாகம் செய்வதன் மூலம் அவர்கள் தங்கள் கடமையை மட்டும் செய்ததோடன்றி, பெண்ணுக்கு ஒரு புதிய ஆத்ம பலத்தையும் மானத்தைப் பாதுகாத்துக்கொள்ளும் திறத்தையும் அளித்தவர்க,ளாவார்கள்.

**கேள்வி** : சிக்கல் இதில்தானே இருக்கிறது? தனது உயிரைத் தானே மாய்த்துக்கொள்ள ஒரு பெண் முன்வருவாளா? இது சாத்தியமானதா?

**பதில்** ; சாவதென்பது சந்தேக மில்லாமல் ஆணைவிடப் பெண்ணுக்கு எளிதான காரியம்தான். இதைவிடச் சாமானியமான விஷயங்களுக்கே பெண்கள் உயிரைத் தியாகம் செய்யும் சக்தியுள்ளவர்களென்பதை நான் அறிவேன். சில தினங்களுக்கு முன்னர்தான் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. இருபது வயதுடைய ஒரு இளம் பெண் சாதாரணக் கல்வி கற்க முடியாதென்று சொன்ன காரணத்திற்காக வீட்டார் தன்னைத் துன்புறுத்துகிறார்களென்று எண்ணிக்கொண்டு, தன்னையே எரித்துக்கொண்டு இறந்துபோனாள்; ஆச்சரியமான தைரியத்தோடும் உறுதியோடும் அவள் உயிரை மாய்த்துக்கொண்டாள். சாதாரண எண்ணெய் விளக்கைக்கொண்டு புடவையில் நெருப்பு வைத்துக்கொண்டாள்; தனது புடவை பற்றியெரியும்போது சிறிது சத்தங்கூட அவள் போடவில்லை. எனவே, காரியம் முடியும்வரையில் பக்கத்து அறையிலிருந்தவர்களுக்கு இந்த நிகழ்ச்சியைப்பற்றி ஒன்றுமே தெரியவில்லை. இந்தப் பெண்ணின் உதாரணத்தை எல்லாரும் பின்பற்ற வேண்டுமென்ற எண்ணத்தில் நான் இதைச் சொல்ல வரவில்லை. பெண்களால் தங்களது உயிரை எவ்வளவு எளிதாக

மாய்த்துக்கொள்ள முடியும் என்பதைக் காட்டவே இதைச் சொன்னேன். எந்த வகையிலும் இந்தப் பெண்ணைப் போலத் துணிந்து செய்வதற்கு எனக்கு மனோதிடம் கிடையாது. ஆயினும் இந்த மாதிரிச் சந்தர்ப்பங்களில் தேவைப்படுகிற விஷயம் வெளியே எரிகிற விளக்கல்ல; மனத்தினுள் ஒளிர்கிற விளக்குத்தான் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்.

**கேள்வி :** குழந்தைகளைத் திருத்தும்போது கோபத்தையும் ஹிம்சையையும் முற்றிலும் எப்படித் தவிர்ப்பது?

**பதில் :** நெடு நாளாய் நம்மிடையே வழங்கும் பழமொழியை நீங்கள் அறிவீர்கள். "ஐந்து வயதுவரையில் குழந்தையோடு விளையாடு; பத்துவயதடையும்போது அடித்துப் புத்தி கற்பி; பதினாறு வயதில் அவனை உனது நண்பனாக நடத்து." ஆனால் நீங்கள் இதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். சில சமயம் நீங்கள் குழந்தைகளின்மீது கோபமடையும்படி நேருகிற தென்றால், அந்தக் கோபம் அஹிம்சையைச் சேர்ந்த கோபமே யாகும். அறிவுள்ள தாய்மார்களைப்பற்றித் தான் நான் பேசுகிறேன்; தாய்மைக்குத் தகுதியற்ற அறிவிலிகளைப்பற்றி நான் இங்குப் பேசவில்லை.

# துறவு

**''மாசுமறுவற்ற இளமை விலைமதிக்க முடியாத ஒரு சொத்து. இன்பம் என்று தவறாக எண்ணும் தற்காலிகமான ஒரு வெறி பிடித்த ஆசைக்காக, ஊதாரித்தனமாகச் செலவழிக்க ஏற்பட்டதல்ல அது. மனோபலம் அற்ற இளம் பெண்கள் குற்ற மற்றவர்களாக இருந்தபோதிலும் காலித்தனத்தினாலோ, என்ன செய்கிறோம் என்பதை அறியாமலேயோ இளைஞர்கள் தங்களை நெருங்கும்போது, அதற்கு அவர்கள் இடங் கொடாமல் எதிர்த்து நிற்குமளவு பலமடைய வேண்டும்.''**

நான் இங்கிலாந்திலிருந்து திரும்பிவந்த பிறகு, 1891-ம் வருஷத்தில், எங்கள் குடும்பத்துக் குழந்தைகளை மேற்பார்த்துக்கொள்ளும் பொறுப்பை அனேகமாக நானே ஏற்றுக் கொண்டேன். அவர்களோடு மாலையில் நான் உலாவச் செல்வதுண்டு. உலாவும்போது அவர்கள்—பையன்கள், பெண்கள் இரு சாராருந்தான்—தோள்மீது கையைப்போட்டுக்கொண்டு போவேன். அவர்கள் என் சகோதரர்களின் குழந்தைகள். அவர்கள் பெரியவர்களான பிறகும் இந்தப் பழக்கம் எனக்கு இருந்து வந்தது. குடும்பம் பெருகப் பெருக, இவ்விதம் தோள் மீது கைபோட்டுக்கொண்டு போவது அதிகரிக்கவே, பிறருடைய கவனத்தை அது கவர்ந்தது.

வயதுவந்த பெண்கள், மாதர்கள் விஷயத்திலும் நான் இந்த வழக்கத்தைக் கையாளுவது, சாதாரணமாய்க் கவனிக்கப்படும் ஒழுங்கு முறைக்கு விரோதமென்று, சபர்மதி ஆசிரம வாசிகளில் ஒருவர் சில வருஷங்களுக்கு முன்னர் என்னிடம் சொல்லும்வரையில், ஏதோ தவறான காரியத்தைச் செய்கிறோம் என்ற எண்ணமே எனக்கு இல்லாதிருந்தது. ஆனால், ஆசிரம வாசிகளோடு இது சம்பந்தமாக விவாதித்து அதன் பிறகும் அப்படியே செய்துவந்தேன். சமீபத்தில், வார்தாவுக்கு வந்த இரண்டு சகாக்கள், இந்தப் பழக்கம் மற்றவர்களையும் அவ் விதம் செய்யத் தூண்டும் என்றும், ஆதலால் நான் அதை நிறுத்திவிட வேண்டும் என்றும் சொன்னார்கள். அவர்கள் சொன்னது எனக்குச் சரி என்று தோன்றவில்லை, இருந்தாலும் நண்பர்களின் எச்சரிக்கையை அசட்டை செய்ய நான் விரும்ப வில்லை. ஆதலால் ஆராய்ந்து உண்மையை அறிவிக்கும்படி ஆசிரமவாசிகள் ஐவரிடம் இந்த விஷயத்தை ஒப்படைத்தேன். அவர்கள் இது விஷயமாய் ஆராய்ந்துகொண்டிருக்கும்போது முடிவை நிர்ணயிக்கும் முறையில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

புத்திசாதுர்யமுள்ள பல்கலைக் கழக மாணவன் ஒருவன், தன்னுடன் நெருங்கிப் பழகிய ஒரு பெண்ணோடு, தனிமையில்

சகல சுதந்திரத்துடனும் நடந்துகொண்டதாக எனக்குச் செய்தி எட்டியது. தன் சொந்தச் சகோதரிபோல் அவளை நேசிப்பதாகவும், அந்த நேச ஈடுபாட்டினால் அவளைத் தொடாமல் தன்னால் பழக முடியவில்லை என்றும், அதில் ஒழுக்க வரம்பிற்கு மீறிய செயல் எதுவுமே இல்லை என்றும், கோபத்தோடு அந்த இளைஞன் சொன்னான். உரிமை பாராட்டி அவன் அந்தப் பெண்ணோடு பழகிய முறைகளைக் கவனித்தால் காம வயப்பட்டே அவன் நடத்துகொண் டிருக்கிறான் என்பதை யாரும் தயக்கமின்றிச் சொல்லிவிடுவார்கள். அந்த இளைஞன் சம்பந்தமான கடிதப் போக்குவரத்தைப் படித்துப் பார்த்த போது, அவன் ஒரு கைதேர்ந்த அயோக்கியனாகவோ, தான் செய்வதே சரி யென்ற மயக்கம் கொண்டவனாகவோ இருத்தல் வேண்டும் என்ற முடிவிற்கு வந்தேன். அந்தக் கடிதப் போக்குவரத்தைப் படித்த பிறரும் இதே முடிவிற்குத்தான்வந்தார்கள்.

அந்த இளைஞன் நடந்துகொண்ட முறை எங்களுக்குத் தெரியவந்ததும், அது என்னைச் சிந்தனையில் ஆழ்த்தியது. இது சம்பந்தமாக அந்த இரண்டு சகாக்கள் செய்த எச்சரிக்கையும் நினைவுக்கு வந்தது, என் பழக்கத்தைத் தனக்கு ஆதரவாக அந்த இளைஞன் உபயோகித்தான் என்று கண்டால் எனக்கு எப்படி இருக்கும் என்று என்னையே நான் கேட்டுக் கொண்டேன். இங்கே அந்தப் பெண் சம்பந்தமான ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டும். அந்த இளைஞனின் மாய வலையில் சிக்கிய அவள் அவனை முற்றிலும் தூய உள்ளம் படைத்தவனாகவும், சகோதரனைப் போலவும் பாவித்திருக்கிறாள் என்றாலும், அவன் தன்னோடு நடந்து கொள்ளுகிற முறையும் செய்கிற காரியங்களும் அவளுக்குப் பிடிக்கவில்லை. அப்படி யெல்லாம் செய்யக் கூடாது என்று கண்டித்தும் சொல்லி யிருக்கிறாள். இருந்தும், அவற்றைச் செய்யாமல் அவனைத் தடுக்கப் போதிய சக்தி அவளிடம் இல்லை. இந்தச் சம்பவம், நான் செய்வது சரியா என்று என் மனத்தையே நான் துருவி ஆராயும்படி செய்தது. அதன் பலனை, இந்தக் கடிதப் போக்குவரத்தைப் படித்துப் பார்த்த இரண்டு மூன்று தினங்களுக்குள் மேலே சொன்ன என்னுடைய பழக்கமும் நின்றது. இந்தப் பழக்கத்தை விட்டுவிட்டேன் என்ற செய்தியை 12உ அன்று வார்தா ஆசிரமவாசிகளுக்கு நான் அறிவித்தேன். இதை விட வேண்டும் என்ற முடிவிற்கு வந்த போது, எனக்கு ரொம்பவும் துன்பமாகத்தான் இருந்தது. இந்தப் பழக்கம் காரணமாகவோ அல்லது அது நடைமுறையில் இருந்துவந்த காலத்திலோ, கேவலமான எண்ணம் எதுவும்

என் இதயத்தில் புகுந்ததில்லை; எப்போதும் வெளிப்படையாகவே இந்தக் காரியத்தைச் செய்துவந்திருக்கிறேன். நான் ஒரு தந்தையைப் போலவே நடந்துகொண்டேன் என்று நம்புகிறேன். அப்படி நடந்துகொண்ட காரணத்தால் என் வழியைப் பின்பற்றுகிற, என் பார்வையின் கீழ் இருக்கிற ஏராளமான பெண்கள், தத்தம் மனதில் இரகசியமாக வைத்திருந்த விஷயங்களை யெல்லாம் என்னிடம் சொன்னார்கள். அவர்கள் நம்பிக்கையை நான் பெற்றதுபோல வேறு யாரும் பெற்றிருக்க மாட்டார்கள் என்று சொல்லலாம். இரு பாலாருக்கு மிடையே ஒரு பாதுகாப்புச் சுவர் இருக்க வேண்டியதை அவசியமாக்கும் பிரமசரியத்திலும், சிறிது ஆசை காட்டினாலும் பிறழ்ந்து போகக் கூடிய பிரமசரியத்திலும் எனக்கு நம்பிக்கை இல்லை. என்றாலும், நான் எடுத்துக்கொண்ட சுதந்திரத்தில் எவ்வளவு ஆபத்து இருக்கிற தென்பதை நான் உணராமல் இல்லை.

எனவே, எனது பழக்கம் தனிப்பட்ட முறையில் பார்க்கும் போது எவ்வளவு தூய்மையானதாக இருந்தாலும், மேலே கண்டுபிடித்ததாகச் சொன்ன உண்மை, அந்தப் பழக்கத்தை விட்டுவிடும்படி என்னைத் தூண்டியது. சதா விழிப்போடிருந்து செய்ய வேண்டிய பரீட்சார்த்தமான ஒரு காரியத்தை நான் செய்துகொண் டிருக்கிறேன். இந்த நிலையில் நான் செய்கிற ஒவ்வொரு செயலையும் ஆயிரக்கணக்கான ஆண்களும் பெண்களும் கூர்ந்து கவனித்துக்கொண் டிருக்கிறார்கள் காரண காரியங்களோடு சமாதானம் சொல்ல முடியாத காரியங்களை நான் செய்யாம லிருக்க வேண்டும். இன்னார்தான் என்று இல்லாமல் எல்லாரும் பின்பற்றுவதற்கு ஏற்பட்டதல்ல என்னுடைய உதாரணம். மேலே சொன்ன இளைஞனின் நடத்தை எனக்கு ஒரு எச்சரிக்கையாக அமைந்திருக்கிறது. என் உதாரணத்தைப் பின்பற்றியோ பின்பற்றாமலோ யாராவது இந்த மாதிரி தவறு செய்திருந்தால், நான் அதை விட்டுவிட்டது அவர்களைத் திருத்தும் என்ற நம்பிக்கையிலேயே நான் அந்த எச்சரிக்கையை ஏற்றுக்கொண்டேன். மாசு மறுவற்ற இளமை, விலை மதிக்க முடியாத ஒரு சொத்து. ன்பம் என்று தவறாக எண்ணும் தற்காலிகமான ஒரு வெறிபிடித்த ஆசைக்காக ஊதாரித்தனமாகச் செலவழிக்க ஏற்பட்டதல்ல அது. மனோபலமற்ற இளம் பெண்கள் குற்றமற்றவர்களாக இருந்தபோதிலும், காலித்தனத்தினாலோ, என்ன செய்கிறோமென்பதை அறியாமலேயோ இளைஞர்கள் தங்களை நெருங்கும் போது, அதற்கு இடங் கொடாமல் எதிர்த்து நிற்குமளவுக்கு அவர்கள் பலமடைய வேண்டும்.

# கருணையுள்ள சகோதரிகள் ஆகுக

"விளையாட்டுப் பொம்மைகள் ஆவதற்காகப் பெற்றோர்கள் உங்களைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பவில்லை. அதற்கு மாறாக, கருணைமிகுந்த சகோதரிகளாக வர வேண்டுமென்று கருதியே இங்கு உங்களை அவர்கள் அனுப்பிவைத்திருக்கிறார்கள்......எவள் தன்னைப்பற்றி அதிகமாக எண்ணாமல் தன்னைக் காட்டிலும் ஏழைகளாயும் துரதிர்ஷ்டம் பிடித்தவர்களாயு மிருப்பவர்களைப்பற்றி அதிகமாக நினைக்கிறாளோ, அவளே கருணையுடைய சகோதரி ஆவாள்."

யாழ்ப்பாணத்திலிருக்கும் உடிவில் பெண்கள் கல்லூரியில் காந்திஜீ பின்வருமாறு பேசினார் :

*இன்று காலை உங்களைச் சந்தித்ததற்கு நான் மிகவும் மகிழ்ச்சி யடைகிறேன்.*

*உங்கள் இதயத்தில் பொங்கி எழுந்த உணர்ச்சி காரணமாக, ஒரு சிறு தொகையை நன்கொடையாக அளித்து, அதைப் பொதுப் பணமுடிப்பில் சேர்த்துவிட்டீர்கள். நீங்கள் தந்த இந்த நன்கொடைக்காக உங்களைப் பாராட்டாது, உங்கள் நன்கொடையைப் பொதுப் பணமுடிப்பில் சேர்த்து விட்ட பெருந்தன்மைக்காக உங்களை நான் பாராட்டுகிறேன். பையன்களைக் காட்டிலும் பெண்கள் அடக்கமுடையவர்கள்; அதனாலேயே நன்கொடை கொடுத்ததைக்கூட என்னிடம் நீங்கள் தெரிவிக்கவில்லை. இந்தியா வெங்கும் ஆயிரக்கணக்கான, பதினாயிரக் கணக்கான பெண்களை நான் சந்தித்திருப்பதால், தாங்கள் செய்கின்ற நல்ல காரியங்களை என்னிடமிருந்து மறைத்து வைப்பது அவர்களுக்கு எப்போதும் மிகவும் கஷ்டமாகும்.*

*இது மட்டுமா? தாங்கள் செய்யும் கெட்ட காரியங்களை என்னிடம் மறைக்காத பெண்களும் சிலர் இருக்கிறார்கள். என் முன்னே இங்குக் கூடியிருக்கிற பெண்களில் கெட்ட காரியங்களைச் செய்கிறவள் ஒருத்திகூட இல்லை என்ற நம்பிக்கை எனக்கு உண்டாகட்டும். குறுக்கு விசாரணை செய்ய அவகாசமின்மையால் கேள்விகளைக் கேட்டு உங்களைத் தொந்தரவு செய்ய மாட்டேன். இங்குள்ள பெண்களில் யாராவது கெட்ட காரியங்களைச் செய்திருந்தால், அவர்களுடைய படிப்பு பயனற்றதே யாகும்.*

*விளையாட்டுப் பொம்மைகள் ஆவதற்காகப் பெற்றோர்கள் உங்களைப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பவில்லை. அதற்கு*

மாருக, கருணை மிகுந்த சகோதரிகளாக வர வேண்டுமென்று கருதியே இங்கு உங்களை அவர்கள் அனுப்பிவைத்திருக்கிறார்கள். குறிப்பிட்டதொரு விதமான உடை அணிந்து கொள்பவர்களே "கருணையுள்ள சகோதரிகள்" என்று தவறுதலாக எண்ணிவிட வேண்டாம். எவள் தன்னைப்பற்றி அதிகமாய் எண்ணுமல் தன்னைக்காட்டிலும் ஏழைகளாயும் துரதிர்ஷ்டம் பிடித்தவர்களாயு மிருப்பவர்களைப்பற்றி அதிகமாக நினைக்கிருளோ, அவளே கருணையுடைய சகோதரி ஆவாள். எனக்குத் தந்த பணமுடிப்பில் நீங்களும் ஒரு தொகையைச் சேர்த்திருக்கிறீர்கள். உங்களைவிடத் துரதிர்ஷ்டமான நிலையிலுள்ள ஏழை எளியவர்களுக்குப் பயன்படும் பொருட்டே அதைக் கொடுத்திருக்கிறீர்கள், எனவே, நீங்கள் கருணையுடைய சகோதரிகள் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்துவிட்டீர்கள் எனலாம்.

கொஞ்சம் பணத்தைக் கொடுத்துவிடுவது எளிதான காரியம். தங்களுக்குத் தாங்களே ஒரு காரியத்தைச் செய்து கொள்வது கடினமானது; நீங்கள் தந்த பணம் எந்த மக்களுக்காகப் பயன்படுத்தப்படுமோ, அந்த மக்களை எண்ணி நீங்கள் தந்தது உண்மையா யிருப்பின், நீங்கள் இன்னும் ஒரு படி மேலே செல்ல வேண்டும். அந்த மக்கள் உற்பத்திசெய்யும் துணியான கதரையே நீங்கள் உடுத்த வேண்டும். கதர் விற்பனைக்கு உங்களிடம் வரும்போது "கதர் முரடாயிருக்கிறது, அதை நாங்கள் உடுத்த முடியாது" என்று சொல்வீர்களாயின், உங்களிடம் தியாக உணர்ச்சியே இல்லை என்றுதான் நான் சொல்ல நேரிடும்.

உயர்ந்த வகுப்பார், தாழ்ந்த வகுப்பார், தீண்டத்தகுந்தவர், தீண்டத்தகாதவர் என்ற பாகுபாட்டை நீங்கள் காட்டாமல் இருப்பது மிகவும் உயர்ந்த காரியம். இதே துறையில் உங்கள் இதயமானது வேலைசெய்து வந்து, மற்ற பெண்களைக் காட்டிலும் நீங்கள் உயர்ந்தவர்கள் என்ற எண்ணத்தை விட்டு விடுவீர்களாயின், உண்மையிலேயே அது மிகவும் உயர்ந்தது.

கடவுள் உங்களை ஆசீர்வதிப்பாராக.

# மாணவிகளுக்கு அறிவுரை

"ஒவ்வொரு பெண்ணும், ஒவ்வொரு இந்தியப் பெண்ணும் கலியாணம் செய்துகொள்வதற்காகவே பிறக்கிறுள் என்று எண்ணுவது சரியன்று. தனி மனிதனுக்குச் சேவை செய்து கொண் டிருப்பதற்குப் பதிலாகப் பொது வாழ்வில் ஈடுபட்டு பொதுச் சேவைக்கென்றே தங்கள் வாழ்க்கையை அர்ப்ப ணம் செய்திருக்கிற பெண்கள் அனேகரை நான் உங்களுக் குக் காட்ட முடியும். சீதையைப்போல், பார்வதியைப்போல் உயர்ந்த பெண்கள் ஹிந்துப் பெண்களிடையே தோன்ற வேண்டும். கூடுமாஞல் சீதைக்கும் பார்வதிக்கும் மேலான பெரும் புகழ்படைத்த பெண்கள் தோன்ற வேண்டும். அதற்கு இதுவே ஏற்ற காலம்."

யாழ்ப்பாணத்திலுள்ள ராமநாதன் பெண்கள் கல்லூரியில் காந்திஜீ பேசிய பேச்சு:

*யாழ்ப்பாணத்திலுள்ள பலவிதமான கல்வி ஸ்தாபனங் களைப் பார்வையிட்ட பின்னர், கடைசியாக, இன்று காலை இங்கு வந்து கலந்துகொள்ள இயன்றமைக்கு உண்மையில் நான் மகிழ்ச்சி யடைகிறேன்.*

*நீங்கள் வாசித்தளித்த வரவேற்புரையில், இன்றைய தினத்தை ஆண்டுவிழாவாகக் கொண்டாடப் போவதாயும், இந்த நாளில் கதருக்காக நிதி திரட்டப் போவதாயும் வாக் களித்திருப்பது என் இதயத்தை உருக்கிவிட்டது. இது சோம் பேறிகளால் சொல்லப்பட்ட வாக்குறுதியல்ல வென்பதும், தெய்வத்தொண்டுபோல் பாவித்து, இதை நீங்கள் நிறைவேற்றி விடுவீர்கள் என்பதும் எனக்குத் தெரியும். பசியாலும் பட்டினி யாலும் வாடி வதங்கும் கோடிக்கணக்கான மக்களின் சார் பாக நான் பிரயாணம் செய்துகொண் டிருக்கிறேன். அந்தக் கோடிக்கணக்கான மக்களுக்கு இந்தச் சகோதரிகள் கொண் டுள்ள உறுதியை அறிந்துகொள்ள வழியேற்பட்டால், அவர் கள் இதயம் சந்தோஷ மடையும் என்பது எனக்குத் தெரியும். ஆனுல் எந்த மக்களின் உதவிக்காக நீங்கள் இந்தப் பணமுடிப் பைத் தந்திருக்கிறீர்களே, அந்த வாயில்லாப் பூச்சிகளான மக்களைப்பற்றி ஒரு விஷயத்தை நான் சொல்லக் கேட்டால் உங்களுக்கு மிகவும் வருத்தமாக யிருக்கும். இலங்கையில் பல இடங்களிலும் அவர்களுக்காகப் பணமுடிப்புத் தந்திருக் கிருர்கள். இத்தகைய விஷயங்களைப்பற்றி அவர்களுக்கு எடுத்*

துரைத்தால் அதைப் புரிந்துகொள்ளக்கூட அவர்களால் முடியாது. அவர்களுடைய துயரம் நிறைந்த கேவலமான நிலைமையைப் புரிந்துகொள்ளும்படி உங்களுக்கு வருணித்துச் செல்வதும் என்னால் இயலாத காரியம்.

இதை நினைத்த. உடனே, இவர்களுக்கும் இவர்களைப் போன்ற மக்களுக்கும் நீங்கள் செய்யப் போவது யாது என்ற கேள்வியே என் முன்னே வந்து நிற்கிறது. இன்னுங் கொஞ்சம் எளிமையாய், இன்னுங் கொஞ்சங் கஷ்டத்தைச் சகித்துக்கொண்டு வாழ்க்கையை நடத்தினால் போது மென்று ஆலோசனை கூறுவது சுலபம். ஆனால் அதனால் பிரசினை தீர்ந்துபோய்விடாது.

இதைப்பற்றி எண்ணி எண்ணித்தான் ராட்டினமே சிறந்தது என்ற முடிவிற்கு நான் வந்திருக்கிறேன். பட்டினியால் வாடும் கோடிக்கணக்கான இந்த மக்களுடன் ஒருவித உயிர்த் தொடர்பு நாம் வைத்துக்கொள்ள வேண்டுமானால் ராட்டினத்தைத் தவிர வேறு வழியில்லை என்று எனக்குள்ளேயே சொல்லிக்கொள்வேன். உங்களுக்கும் இப்போது அதையே சொல்லுகிறேன். ராட்டினத்தைச் சுற்றினால்தான் உலகத்திற்கும் நமக்கும் அவர்களுக்கும் கதிமோட்சம் பிறக்கும் என்ற நம்பிக்கை உண்டாகும்.

இந்தக் கல்லூரியில் சமயக் கல்வி சரியான முறையில் போதிக்கிறார்கள். அழகான, கோயிலும் இருக்கிறது. உங்கள் பாடத்திட்டத்திலிருந்து, இறை வழிபாடு செய்த பின்னரே பாடங்கள் ஆரம்பமாகின்றன என்பதைக் காண்கிறேன். உண்மையில் இவை யாவும் நல்லவை; மனிதன் மேன்மைப் படுத்தக் கூடியவை. இப்படி நீங்கள் செய்கிற வழிபாடு, தினசரி வாழ்க்கையில் ஏதாவது அனுபவபூர்வமான சில காரியங்களில் உங்களை ஈடுபடச் செய்யாவிட்டால், இந்த வழிபாடு வெறும் அழகான சடங்காகவே மாறிவிடும். உங்கள் வழிபாட்டைத் தொடர்ந்து ராட்டினத்தில் ஒரு நாளைக்கு அரை மணி நேரமாவது நூல் நூற்று வாருங்கள். இப்போது நான் வருணித்துச் சொல்லிய கோடிக்கணக்கான மக்கள் எண்ணி" நான் இந்த ஏழை மக்களை எண்ணி நூல் நூற்கின்றேன்" என்று கடவுள் பெயரால் சொல்லுங்கள். இதயபூர்வமாக இதைச் செய்வீர்களாயின், பக்திமேலீட்டினால் செய்யும் தொண்டு பணிவையும் மேன்மையையும் தரும் என்று கருதுவீர்களாயின், வெளிப்பகட்டிற்காக உடை அணிந்துகொள்ளாமல் உடலை மூடிக்கொள்ளும் பொருட்டே உடை உடுத்துவீரர்களாயின், கதர் உடுத்துவதற்கு ஒரு நிமி

ஷம்கூட நீங்கள் தயங்க மாட்டீர்கள். கதர் உடுத்துவதனல் உங்களுக்கும் கோடிக்கணக்கான அவ்வேழை மக்களுக்கும் ஒருவிதத் தொடர்பு ஏற்பட்டுவிடும்.

இந்தப் பள்ளிக்கூடத்தில் படிக்கும் பெண்களுக்கு இவற்றை மட்டுமே நான் சொல்ல எண்ணவில்லை.

சர். ராமநாதன் கவனமாகவும் பத்திரமாகவும் உங்களை மேற்பார்த்து வந்தார்; லேடி ராமநாதனும் கல்லூரியில் அவருடைய மேற்பார்வையி லிருக்கிற மற்ற நிர்வாகிகளும் உங்களிடம் அன்பும் ஆதரவும் காட்டிவருகிறார்கள். இதற்கு உங்களைத் தகுதியாக்கிக்கொள்ள வேண்டுமானல், நீங்கள் இன்னும் அனேக காரியங்களைச் செய்ய வேண்டும், இந்தப் பள்ளிக்கூடத்தில் கல்வி கற்ற பழைய மாணவிகள் என்ன என்ன செய்துகொண் டிருக்கிறார்கள் என்பதை உங்கள் பள்ளிக்கூடப் பத்திரிகையில் பெருமையுடன் சொல்லி யிருக்கிறீர்கள். இப்படி பெருமை பாராட்டுவது சில சமயங்களில் நியாயமாக இருக்கலாம். இன்னார் இன்னார், இன்னார் இன்னாரைக் கலியாணம் செய்துகொண்டார் என்ற சில குறிப்புகளை அதிலே கண்டேன். வயது வந்த பெண்—அதாவது 25 அல்லது 22 வயது நிரம்பிய பெண்—கல்யாணம் செய்துகொள்வதில் தவறு ஒன்றுமில்லை. இதை நான் அறிவேன். ஒரு பெண்ணாவது சேவை செய்வதற் கென்றே தன் வாழ்க்கையை அர்ப்பணம் செய்திருக்கிறாள் என்பதை நான் அதில் காணவில்லை. பெங்களூரில் மேன்மைதங்கிய மகாராஜா கல்லூரியில் படிக்கிற பெண்களுக்கு என்ன சொன்னேனே அதையே உங்களுக்கும் சொல்லப் போகிறேன். தாராளமான நன்கொடையினலும் கல்வித் துறையில் விருப்பமுடையவர்களின் அரிய முயற்சியினலும் நாம் கல்வி பயின்று வருகிறோம், பள்ளிக்கூடத்திலிருந்து வெளிவந்தபோது வாழ்க்கைத்துறையிலிருந்து மறைந்து பொம்மைபோல் ஆகிவிட்டால், அவர்களின் அரிய முயற்சியும் நன்கொடையும் விழலுக்கு இறைத்த நீரேபோல் பயனற்றதாய்விடும்.

பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் படித்து வெளி வந்ததுமே, பெரும்பாலான பெண்கள் பொது வாழ்க்கையில் ஈடுபடாமல் மறைந்துவிடுகிறார்கள். இந்தப் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்தவர்கள் அப்படிச் செய்ய மாட்டார்கள், மிஸ் எமெரி உங்களுக்கெல்லாம் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறார். உங்கள் மேற்பார்வையாளர்களாகவே இருந்துவருகிற அவரும் வேறு பலரும் கன்னிப் பெண்களாகவே—நான்

சொல்வது சரி யென்றெண்ணுகிறேன் — இருந்து சேவை செய்து வருகிருர்கள்.

ஒவ்வொரு பெண்ணும், ஒவ்வொரு இந்தியப் பெண்ணும், கலியாணம் செய்துகொள்வதற்காகவே பிறக்கிருள் என்று எண்ணுவது சரியன்று, தனி மனிதனுக்குச் சேவை செய்துகொண்டிருப்பதற்குப் பதிலாக, பொது வாழ்வில் ஈடுபட்டு, பொதுச் சேவைக்கென்றே தங்கள் வாழ்க்கையை அர்ப்பணஞ் செய்திருக்கிற பெண்கள் அனேகரை நான் உங்களுக்குக் காட்ட முடியும். சீதையைப்போல், பார்வதியைப்போல் உயர்ந்த பெண்கள் ஹிந்துப் பெண்களிடையே தோன்ற வேண்டும். கூடுமானல் சீதைக்கும் பார்வதிக்கும் மேலான பெரும் புகழ்படைத்த பெண்கள் தோன்ற வேண்டும். அதற்கு இதுவே ஏற்ற காலம்.

சைவர்கள் என்று உங்களைச் சொல்லிக்கொள்கிறீர்கள்; பார்வதி அம்மை என்ன செய்தாள் என்பது உங்களுக்குத் தெரியும். கணவன் பொருட்டு அவள் பணம் செலவு செய்யவில்லை; தன்னை விலைக்கு விற்கவும் அவள் சம்மதிக்கவில்லை. ஏழு சதிமார்களில் ஒருத்தியாக, இன்று ஹிந்து சமூகம் அவளைக் கொண்டாடுகிறது. பள்ளிக்கூடப் படிப்பினல் அவளுக்குப் புகழ் கிட்டவில்லை. நாம் கேள்விப்படாத முறையில் தவமிருந்ததன் காரணமாகவே அவளுக்கு இந்தப் புகழ் கிட்டியது.

சீதனம் என்ற கேவலமான ஒரு பழக்கம் இங்கு இருந்து வருவதாகக் கேள்விப்பட்டேன்; இதனல் இளம் பெண்களுக்குத் தகுந்த வரன் கிடைப்பது மிகவும் சிரமமாய் இருக்கிறதாம். வயது வந்த பெண்கள்—சிலர் வயதுவந்தவர்களாகவே காணப்படுகிறீர்கள்—இந்த ஆசைகளை எதிர்த்து நிற்க வேண்டும். இந்தக் கொடிய பழக்கத்தை எதிர்க்கும் பொறுப்பை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களேயானல், சில வருஷங்கள் வரையில் அல்லது ஆயுள் முழுவதுமே, சிலர் கன்னிப் பெண்களாகவே இருக்க நேரிட்டாலும் நேரிடலாம். கல்யாணம் செய்துகொள்ளும் பருவம் வரும்போது—அதாவது வாழ்க்கையில் துணைவன் ஒருவன் இருக்க வேண்டும் என்ற உணர்ச்சி உங்களுக்கு ஏற்படும்போது,—பணம், புகழ், அழகு இவற்றைத் தேடிஅலையாமல், நல்லொழுக்கத்திற்கு ஒப்பற்ற உறுதுணையாய் விளங்கும் குணங்கள் படைத்தவனையே நீங்கள் தேட வேண்டும். பார்வதி அம்மையும் அப்படித்தான் செய்தாள். பார்வதியிடம் சிவனைப்பற்றி நாரதர் எப்படி வருணித்தார் என்பது உங்களுக்குத் தெரியும்: 'உடல் முழுதும் நீறணிந்த ஆண்டி, அழகில்லாதவன், பிரமசாரி!' என்று சொன்னர். 'ஓ

அப்படியா! அவர்தான் என் கணவர்' என்றுள் பார்வதி. பார்வதி தவமிருந்ததைப்போல் ஆயிரக்கணக்கான வருஷங் கள் உங்களால் தவமிருக்க முடியாதுதான். பார்வதியைப் போல் நீங்கள் தவமியற்றுவிட்டால், சிவனைப்போலப் பல மனிதர்களைத் தோற்றுவிப்பது இயலாத காரியம். மனவலி யற்ற மனிதர்களாகிய நாம், பார்வதி தவமிருந்ததைப்போல் அவ்வளவு நீண்ட காலத்திற்கு தவமிருக்க முடியாது போனு லும் ஆயுள் பரியந்தமாவது தவம் இயற்றக் கூடும்.

இந்த நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டால், பொம்மைக் கொலுவுக்குள்ளே ஒளிந்துகொள்வதற்கு நீங்கள் மறுத்துவிடு வீர்கள். சாவித்திரி, சீதை, தமயந்தி, பார்வதியைப்போல் நீங்கள் சதிமார் என்ற இலட்சியத்தை அடைவீர்கள். அப் பொழுதுதான், அந்த இலட்சியத்தை அடையும்போதுதான், இந்தக் கல்லூரியில் படித்ததன் தகுதி உங்களுக்குக் கிட்டும் என்பது என் தாழ்மையான அபிப்பிராயம்.

இந்த ஆர்வத்தைக் கடவுள் உங்களுக்கு ஊட்டுவராக! உங்களுக்கு அதனுல் உணர்ச்சி ஏற்படுமாயின், உங்கள் ஆர்வத்தைப் பூர்த்தி செய்ய அவர் உதவி செய்வார்.

# பால்ய மணத்தின் கேடு

"உடல் சம்பந்தமாகப் பார்த்தாலும் சரி, ஒழுக்க சம்பந்தமாகப் பார்த்தாலும் சரி, பால்ய மணம் ஒரு பெரிய தீமையாகும். ஏனெனில், பால்ய மணம் நமது ஒழுக்கத்தைப் பாதிப்பதோடு, உடலையும் சீர்கேடான நிலைக்குக் கொண்டுவருகிறது. இந்த மாதிரி பழக்கங்களுக்கு இடம் கொடுப்பதால், கடவுளை அடைவதிலிருந்தும். சுயராஜ்யத்தை அடைவதிலிருந்தும் நாம் வெகுதூரம் விலகிப்போய்விடுகிறோம்."

சமீபத்தில் சென்னையில் துன்பகரமான ஒரு நிகழ்ச்சி நடந்திருக்கிறது: அது பால்ய மணத்தினால் ஏற்பட்ட பலனென்று சொல்லி, அதைப்பற்றிய குறிப்புகளை மார்கரெட். இ. கஸின்ஸ் எனக்கு அனுப்பியிருக்கிறார். இந்தத் தம்பதிகளில் பெண்ணுக்கு வயது 13, கணவனுக்கு வயது 26; தம்பதிகள் 13 நாட்கள்கூடக் கூடிவாழவில்லை. அதற்குள் பெண் நெருப்பில் எரிந்து இறந்து போனாள். 'கணவன்' தாங்க முடியாத முறையில் மிருகத்தனமாக நிர்ப்பந்தப்படுத்திய தன் காரணமாகவே அவள் தற்கொலை செய்துகொண்டு இறந்தாள் என்று ஜூரிமார்கள் முடிவு கூறியிருக்கிறார்கள், சாகும்போது பெண் கொடுத்த வாக்கு மூலத்திலிருந்து, 'கணவனே' அவள் ஆடையில் நெருப்பை வைத்தான் என்பது தெளிவாகத் தெரிகிறது. காமத்திற்கு இன்னதுதான் செய்யலாம் என்று தெரியாது. அதற்கு இரக்கமுமில்லை.

பெண் எப்படி இறந்தாள் என்பது வேறு விஷயம். ஆனால் கீழ்வரும் மறுக்க முடியாத உண்மைகளை இதிலிருந்து நாம் அறிகிறோம்.

(1) பெண்ணுக்கு பதின்மூன்று வயதில் கலியாணம் நடந்தது.

(2) "கணவன்" போக இச்சையை விரும்பிக் கட்டாயப் படுத்தியபோது, அதற்கு அவள் இடங் கொடுக்கவில்லை. எனவே அந்த வயதிலேயே அவளுக்குப் போக இச்சை இல்லை என்று தெரிகிறது.

(3) "கணவன்" கொடுமையான முறையில் தன் விருப்பத்திற்கு இசையும்படி கட்டாயப்படுத்தினான்.

(4) அதன் காரணமாகவே அவள் இறந்துபோனாள்.

கொடிய பழக்கவழக்கங்களை அங்கீகரிப்பது மதமன்று, அது மதத்திற்கே முரண்பாடான அதர்மமாகும்அது. ஸ்மிருதிகளில் முரண்பாடுகள் மலிந்துகிடக்கின்றன. ஸ்மிருதிகளில் விதித்திருக்கும் ஒழுக்க விதிகளுக்கு மாறாக அவற்றில் காணப்

பாடங்களை யெல்லாம் இடைச்செருகலாகக் கருதி வேண்டும்; அதுதான் மேலே சொன்ன முரண்பாடுகள் சம்பந்தமாக நாம் கொள்ள வேண்டிய நியாயமான முடிவாகும். மனிதனிடமுள்ள மிருகத்தனத்திற்கு ஊக்க மளித்து எழுதிய பேனு, அதே சமயத்தில் மனக் கட்டுப்பாட்டைப்பற்றி ஆவேச உணர்ச்சியுடன் கூடிய கவிதையையும் எழுதியிருக்க முடியாது. மனக் கட்டுப்பாடின்றித் தீமையில் திளைத்திருக்கும் மனிதன்தான், பக்குவமடையு முன்னரே பெண்ணுக்கு மணம் செய்யாம லிருப்பது பாப மென்று சொல்லுவான். பக்குவமடைந்த பின்னும், பெண்களுக்குச் சில வருஷங்கள்வரையில் கலியாணம் செய்து கொடுத்தல் கூடாது; அப்படிச் செய்துகொடுப்பதைப் பாப மென்றே கருத வேண்டும். இந்த நிலையில், பக்குவமடையு முன்னரே பெண்ணுக்குக் கலியாணம் செய்யலாம் என்று எண்ணுவதற்கே இடமில்லை. முகத்தில் ரோமம் அரும்பியதுமே, குழந்தையைச் சிருஷ்டிக்க ஆற்றல் அற்றவனாய் இளைஞன் எப்படி இருக்கிறானோ, அதேபோல, பக்குவமடைந்த உடனேயே குழந்தை பெறப் பெண்ணும் தகுதியற்றவளாய் இருக்கிறாள்.

உடல் சம்பந்தமாகப் பார்த்தாலும் சரி, ஒழுக்க சம்பந்தமாகப் பார்த்தாலும் சரி, பால்ய மணம் ஒரு பெரிய தீமையாகும். ஏனெனில், பால்ய மணம் நமது ஒழுக்கத்தைப் பாதிப்பதோடு உடலையும் சீர்கேடான நிலைக்குக் கொண்டு வருகிறது. இந்த மாதிரிப் பழக்கங்களுக்கு இடங்கொடுப்பதால் கடவுளை அடைவதிலிருந்தும், சுயராஜ்யத்தை அடைவதிலிருந்தும் நாம் வெகு தூரம் விலகிப் போய்விடுகிறோம். பெண்ணின் பாலப் பருவத்தைப் பற்றிச் சிந்திக்கச் சக்தியற்ற மனிதனுக்குக் கடவுளைப்பற்றிச் சிந்தனை வர நியாயமே இல்லை. தகுந்த வளர்ச்சியில்லாத ஆண் மக்கள் சுதந்திரப் போராட்டங்களை நடத்தவோ சுயராஜ்யத்தையே பெற்றுவிட்டால் அதை வைத்து நிர்வகிக்கவோ ஆற்றல் அற்றவர்களாக இருக்கிறார்கள். சுயராஜ்யத்திற்குப் போராடுவ தென்பது அரசியலில் மட்டும் விழிப்படைவ தன்று; அது எல்லாத் துறையிலுமே- சமூகம், கல்வி, ஒழுக்கம், பொருளாதாரம், அரசியல்—ஆகிய துறைகள் அனைத்திலுமே, விழிப்படைந்து போராடுவதையே குறிப்பிடுகிறது.

கலியாணம் செய்கிற வயதை உயர்த்தச் சட்டம் இயற்றுவதுபற்றி ஊக்கத்தோடு முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. நிர்ணயித்த வயதை மீறிக் கலியாணம் செய்கிறவர்

கள் சொற்பமாகவே இருப்பார்கள். அவர்களைக் கண்டு பிடுத்துத் தண்டிக்க வேண்டியதுதான். பொதுவாகப் பரவி யிருக்கும் ஒரு தீமையைச் சட்டத்தினுல் மட்டும் ஒழித்துவிட முடியாது; அறிவுடைய பொதுஜனங்களின் அபிப்பிராயமே அதைத் திருத்த முடியும். இம்மாதிரி விஷயங்களில் சட்டங் கள் இயற்றுவதை நான் ஆட்சேபிக்கவில்லை; ஆனால் பொது ஜன அபிப்பிராயத்தைப் பண்படுத்தி வளர்ப்பதையே நான் அழுத்திக் கூறுவேன். விழிப்போடுகூடிய பொதுஜன அபிப் பிராயம் பால்ய மணங்களுக்கு விரோதமாக இருந்திருந் தால், மேலே குறிப்பிட்ட சென்னைச் சம்பவம் நிகழ்ந்திருக்க முடியாது. இந்தச் சம்பவத்தில்வரும் இளைஞன் எழுதப்படிக்கத் தெரியாத தொழிலாளியல்ல. கல்விகற்ற புத்திநுட்பமுள்ள டைப்பு அடிக்கும் குமாஸ்தா ஆவான். பெண்களை மணப் பதோ, மணந்த பின்னர் கலந்து வாழ்வதோ பொதுஜன அபிப்பிராயத்திற்கு விரோதமானதாக இருந்திருந்தால், அந்த முறையில் பெண்களை மணப்பதோ, அல்லது அவளைத் தீண்டு வதோ அவனுல் செய்ய முடியாத ஒரு காரியமாக இருந்திருக் கும். சாதாரணமாக 18, வயதிற்குட்பட்ட பெண்களை மணமே செய்துகொடுக்கக் கூடாது.

# பால்ய மணத்திற்கு ஆதரவு

**"நம்மிடையே ஒழுக்க சம்பந்தமான தீமைகள், பொருளாதாரம், அரசியல் சம்பந்தமான தீமைகள், இன்னும் எத்தனையோ தீமைகள் மலிந்து இருக்கின்றன. உண்மைகளைப் பொறுமையோடு அறிந்துகொள்வது, உழைப்போடு ஆராய்ச்சி செய்வது, நிலைமையைக் கவனமாகக் கையாளுவது, சொல்ல வேண்டிய விஷயங்களைத் தவறு இன்றிச் சரியாகச் சொல்வது, தெளிவாகச் சிந்தித்துப் பார்ப்பது, உணர்ச்சி வசப்படாமல் நடுநிலையில் நின்று ஒரு முடிவுக்கு வருவது ஆகிய இவைகள் இந்தத் தீமைகளைப் போக்கத் தேவைப்படுகின்றன"**

"யங் இந்தியா" வாசகர் ஒருவர் கீழ்வருமாறு எழுதுகிறார்:

*"1936-ம் வருஷம், ஆகஸ்ட் மாதம் 26-ந் தேதி வெளிவந்த 'யங் இந்தியா' இதழில் 'பால்ய மணத்தின் கேடு' என்ற தலைப்பில் "மனக்கட்டுப்பாடு இன்றித் தீமையில் திளைத்திருக்கும் மனிதன்தான் பக்குவமடையு முன்னரே பெண்ணுக்கு மணம் செய்யாம லிருப்பது பாபம் என்று சொல்லுவான்" என்று எழுதி யிருக்கிறீர்கள். இதைப் படிக்க எனக்கு ரொம்ப மன வருத்தமா யிருக்கிறது.*

*"தங்களோடு மாறுபடும் அபிப்பிராயமுடையவர்களோடு தாங்கள் தாராளமாக நடந்துகொள்ளவில்லை. இதன் காரணம் என்ன என்பது எனக்குத் தெரியவில்லை. ஹிந்து தர்ம சாஸ்திரத்தை இயற்றியவர் பால்ய மணத்தை விதித்ததில் முற்றும் தவறு செய்துவிட்டார் என்று நிச்சயமாகச் சொல்லலாம். ஆனால், பால்ய மணம்வேண்டுமென்று கட்டாயமாகச் சொல்பவர்கள் தீமையில் ஊறிக்கிடக்கிறவர்கள் என்று சொல்வது சரியல்ல வென்று நினைக்கிறேன். இப்படிச் சொல்வது விவாதத்தின் எல்லையையும் மீறி, மட்டு மரியாதை இல்லாதபடி செய்துவிடுகிறது. வாஸ்தவத்தில், பால்ய மணத்திற்கு விரோதமாக இந்த மாதிரி வாதிப்பதை இப்போதுதான் நான் முதன் முதலாகக் கேட்கிறேன். எனக்குத் தெரிந்தவரையில், ஹிந்து சமூக சீர்திருத்தக்காரர்களோ கிறிஸ்தவப் பாதிரிமார்களோ இப்படி எப்போதும் சொன்னதில்லை. எதிரிகளுடன் விசாலமான மனப்பாங்கோடு நடந்து கொள்கிறவர் மகாத்மாகாந்தி என்று நான் எண்ணி இருந்தேன். அது மட்டு மல்ல, குற்றங் குறைகளற்றவர், பரிபூரணமானவர் என்றும் நான் அவரை எண்ணியிருந்தேன். அப்படி எண்ணி யிருந்த எனக்கு இந்தக் கட்டுரையின் விவாதம் எவ்வளவு திகிலை*

உண்டுபண்ணி இருக்கும் என்பதை நீங்களே எண்ணிப் பாருங்கள்.

"ஹிந்து தர்ம சாஸ்திரத்தை இயற்றியவர்களில் ஒருவர் இருவரை மட்டும் தாங்கள் கண்டிக்கவில்லை; பெரும்பாலும் அனைவரையுமே கண்டித்திருக்கிறீர்கள். எல்லா ஸ்மிருதிக்காரர்களும் பெண்களுக்குப் பால்யத்தில் மணம் செய்ய வேண்டு மென்று வற்புறுத்துகிறார்க ளென்றே எனக்குத் தோன்றுகிறது. பால்ய மணத்தை வற்புறுத்திச் சொல்லியிருக்கும் பகுதிக ளெல்லாம் இடைச்செருகல்கள் என்று தாங்கள் சொல்லி யிருக்கிறீர்கள். அவைகளை இடைச்செருகல்கள் என்று எண்ணுவது சாத்திய மல்ல. ஒரு மாகாணம் அல்லது சமூகத்தின் ஒரு பகுதிக்குள் நடைபெற்று வரும் பழக்கம் அல்ல பால்ய மணம்; அனேகமாக இந்தியா முழுதுமே பரவியிருக்கும் பழக்கம் அது. மேலும், ராமாயணம் தோன்றிய காலத்திலிருந்தே அமலி லிருந்துவரும் மிகப் புராதனமான பழக்கமாகும் அது.

"ஹிந்து தர்ம சாஸ்திரக்காரர்கள் பெண்களுக்குச் சிறுவயதிலேயே மணம் செய்ய வேண்டு மென்று வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார்கள். அவ்விதம் அவர்கள் வற்புறுத்தி யிருப்பதன் காரணங்கள் என்னவாய் இருந்திருக்கலா மென்று கருதுகிறேனோ, அவற்றை இங்கே சுருக்கமாகச் சொல்லுகிறேன். ஒவ்வொரு பெண்ணும் ஒரு புருஷனையே மணந்து வாழ்வது மிகவும் விரும்பத்தக்க காரியம் என்று அவர்கள் கருதினார்கள். பெண்கள் மணம் செய்துகொண்டு தத்தம் கணவர்களோடு வாழ்வது பொதுவாகச் சமூக நலத்திற்கு மட்டும் அவசியம் என்பதல்ல; அந்தப் பெண்கள் சந்தோஷமாகவும் மன நிம்மதியோடும் இருப்பதற்கே அது அவசியமாகிறது. ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு புருஷனையே மணப்பது என்றாகிவிட்டால், அந்தப் புருஷனைத் தேர்ந்தெடுப்பது என்பது பெண்ணின் பெற்றோரைச் சேர்ந்ததாக இருக்க வேண்டுமேயன்றி, பெண்ணைச் சேர்ந்ததாக இருக்கலாகாது. பெண்ணே தேர்ந்தெடுப்ப தென்று ஏற்பட்டுவிட்டால், அதனால் பல பெண்கள் மணமாகாமலே இருக்கும் நிலை ஏற்படலாம். மணமாகாம லிருப்பது அவர்கள் மணத்தை விரும்பவில்லை என்பதனால் அல்ல; தகுதியான கணவன்மார்களைத் தேர்ந்தெடுப்பது மிகவும் கஷ்டமான காரியம் என்ற காரணத்தினாலேதான். பெண்களே தேர்ந்தெடுத்துக்கொள்வ தென்பதில் அபாயம் இருக்கவே இருக்கிறது. வேடிக்கையாகக் காதல் விளையாட்டில் ஈடுபடவும் அதனால் பெண்களின் ஒழுக்கம் குன்றவும் இடம் உண்டாகலாம். ஒழுக்கசீலர்களாகத் தோன்றும் இளைஞர்கள் கபடமற்ற பெண்ணின் ஒழுக்க நடையைப் பாழாக்கி விடுதல் கூடும். மேலும், பெற்றோர்கள்தான் புருஷனைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதை ஒப்புக்கொண்டால், பெண்களைச் சிறு பிராயத்திலேயே மணம் செய்துவிட வேண்டும். அவர்கள் பெரியவர்களாகிவிட்டால், வேறு யாராவது ஒரு இளைஞன்மீது காதல்கொள்ளவும் பெற்றோர்கள் தேர்ந்தெடுத்த மாப்பிள்ளையை

மணக்க மறுக்கவும் செய்யலாம். சிறு வயதிலேயே மணம்செய்து கொள்ளும் பெண் அவள் கணவனோடும், கணவனுடைய குடும்பத்தோடும் ஒன்றாகிவிடுகிறாள். இந்த மணம், வயதுவந்த பிறகு செய்யும் மணத்தைவிட மிகவும் இயல்பான தாகவும் பரிபூரணமான தாகவும் இருக்கிறது. வயதுவந்த பெண்களுக்கு ஸ்திரமான சில கருத்துக்களும் பழக்க வழக்கங்களுஏற்பட்டுவிடுகிறபடியால், தாங்கள் செல்லும் புதிய குடும்பத்திற்குத் தகுந்தவாறு தங்களைச் சரிப்படுத்திக்கொள்வது சில சமயங்களில் அவர்களுக்கு அங்கும் கஷ்டமாகிவிடுகிறது.

"சிறு பிராயத்திலே மணம் செய்வது பெண்ணின் உடல் நலத்தையும் அவளுக்குப் பிறக்கும் குழந்தைகளின் உடல் நலத்தையும் பாதிக்கிறது என்பதே முக்கியமான ஆட்சேபணை. ஆனால், கீழ்க் கண்ட காரணங்களை வைத்துப்பார்க்கும்போது,இந்த ஆட்சேபணை ஏற்றுக்கொள்ளத்தக்கதாய் இல்லை. ஹிந்துக்களிடையே மண வயது இப்போது அதிகப்பட்டுக்கொண்டு வருகிறது. அதனால், ஹிந்து ஜாதி வர வரப் பலவீனமடைந்து வருகிறது. ஐம்பது அல்லது நூறு வருஷங்களுக்கு முன்னர் பொதுவாக இப்போதிருப்பதைவிட ஆண்கள் அதிக பலசாலிகளாகவும், ஆரோக்கியமுள்ளவர்களாகவும், நீடித்த ஆயுள் உடையவர்களாகவும் இருந்தனர். ஆனால் அந்தக் காலத்தில் இளவயது மணந்தான் நடைமுறையில் மிகவும் கௌரவமானது என்று கருதப்பட்டது. படித்து, காலம் தாழ்த்து, மணம் செய்துகொண்ட பெண்களின் உடல் பொதுவாக, சிறு பிராயத்தில் மணம் செய்விக்கப்பெற்ற, சொற்ப,மான கல்வியையுடைய பெண்களின் உடலைவிட உறுதியாக இல்லை. இந்த உண்மைகளிலிருந்து, இளவயது மணம் சிலர் கருவதுபோல, அவ்வளவு உடல் சீர்க்கேட்டை உண்டாக்கிவிடவில்லை யென்று தோன்றுகிறது.

"இந்திய சமூகத்தின் நிலைமைகளையும் ஐரோப்பிய சமூகத்தின் நிலைமைகளையும் தாங்கள் நன்கு அறிவீர்கள். பொதுவாகப் பார்க்கும்போது, ஐரோப்பிய மனைவிகளைவிட இந்திய மனைவிமார்கள் தங்கள் கணவன்மார்களிடம் உண்மையான அன்போடு நடக்கவில்லையா? எளிய நிலையிலுள்ள ஐரோப்பியக் கணவன்மார்களைவிட அதே நிலையிலுள்ள இந்தியக் கணவன்மார்கள் தங்கள் மனைவிமார்களை அதிக அன்பாக நடத்தவில்லையா? ஐரோப்பியர்களைவிட இந்தியர்களிடையே மகிழ்ச்சியற்ற மணங்கள் குறைவாக இல்லையா? ஐரோப்பிய சமூகத்தைவிட இந்திய சமூகத்தில் ஆண் பெண் ஒழுக்கநிலை உயர்வாக இருக்கவில்லையா? என்பன போன்ற கேள்விகளுக்கு உங்களால்தான் சரியான விடையளிக்க முடியும். இந்த விஷயங்களி லெல்லாம் இந்திய மணங்கள் ஐரோப்பிய மணங்களைவிட அதிக வெற்றிகரமாக இருந்தால், இந்திய மணத்தின் மகத்தான அம்சம் என்று கருதும் இளவயது மணத்தைக் கண்டிக்க இடமில்லை.

"ஆண்களும் பெண்களும் உள்பட சமூகத்தின் உண்மையான பொதுநலனை அயாட்டியேஹிந்து தர்மசாஸ்திரக்காரர்கள் பெண்களுக்குச் சிறு பிராயத்தில் மணம் செய்ய வேண்டும் என்று விதித்தார்கள். வேறு காரணங்களால் தூண்டப்பட்டு அவர்கள் அவ்விதம் செய்தார்கள் என்று சொன்னால், அதை என்னால் நம்ப முடியாது. எவ்வளவோ விரோதமான சூழ்நிலைகளுக்கிடையே ஹிந்து சமூகம் சிதைந்து போகாமலிருப்பதோடு, தனது தூய்மையையும் காப்பாற்றி வருகிறது. ஹிந்து சமூகத்திற்கு அந்தச் சக்தியை அளிக்கும் அம்சங்களில், பெண்களை இளம் பிராயத்தில் மணம் செய்து கொடுப்பதும் ஒன்று என்பது எனது நம்பிக்கை. நீங்கள் இதை எல்லாம் நம்பாம லிருக்கலாம். பெண்களுக்கு இளம் பிராயத்தில் மணம் செய்ய வேண்டுமென்று பெரிய பெரிய ஹிந்து தர்மசாஸ்திரக்காரர்களெல்லாம் ரொம்ப அழுத்தமாகச் சொல்லியிருக்கிறார்கள். அவர்களெல்லாம் தன்னடக்க மில்லாதவர்கள் என்பதாகத் தாங்கள் கொண்டிருக்கும் எண்ணத்தை அகற்றிவிட வேண்டு மென்று நாங்கள் எதிர்பார்க்கலா மல்லவா?

"தாங்கள் கூறியிருக்கும் சென்னைச் சம்பவம் ரொம்ப விசித்திரமானதா யிருக்கிறது. ஜூரிமார்கள் பெண் தற்கொலை செய்து கொண்டாள் என்ற முடிவு கட்டினார்கள். ஆனால் பெண்ணோ கணவனே சேலையில் நெருப்பு வைத்தான் என்று சொல்லுகிறாள். இவ்விரண்டு கூற்றுக்களும் இப்படி முரண்பாடான நிலையிலிருக்கும்போது, மறுக்க முடியாதவை என்று தாங்கள் கருதும் உண்மைகள் வாஸ்தவத்திலேயே அப்படித்தானா என்று சொல்லுவது ரொம்பக் கஷ்டம். 13 வயதுக்குக் கீழ்ப்பட்ட மனைவிமார்கள் கோடிக்கணக்காக இருக்கிறார்கள். கணவன் கொடிய முறையில் இளமனைவியைத் தனக்கு இணங்கும்படி வற்புறுத்தினான் என்றும், அதன் காரணமாக, பெண் தற்கொலை செய்துகொண்டு இறந்தாள் என்றும் நாம் இதுவரையில் கேட்டதே இல்லை. அனேகமாக சென்னைச் சம்பவத்தில் விபரீதமான வேறு அம்சங்கள் இருந்திருக்கலாம். எனவே, சாவுக்குப் பிரதானமான காரணம் இள வயது மணம் அல்லவே அல்ல."

ஒரு கவிஞர் ரொம்ப நன்றாகச் சொல்லுகிறார்: "யாருடைய மனச்சாட்சியையும் உள்ளிருந்தே துன்புறுத்தும் முறையில் சில கொடிய உண்மைகள் வாழ்க்கையில் நிகழுகின்றன. அவற்றின் கொடிய தன்மையை மூடி மறைக்கும் பொருட்டுத் தங்களுக்குத் தாங்களே, ஒரு விதமான சித்தாந்தத்தைத் தங்களுக்கு ஏற்றவாறு மிகவும் எளிதாக உண்டுபண்ணிக் கொள்கிறார்கள் மக்கள்" என்பதாக.

"யங் இந்தியா"வைப் படிக்கும் இந்த நேயர் இன்னும் ஒரு படி மேலே சென்றிருக்கிறார். தமக்குப் பொருத்தமான ஒரு சித்தாந்தத்தைச் சிருஷ்டிப்பதோடு மட்டும் நில்லாமல்

உண்மைகளை அலட்சியம் பண்ணித் தள்ளிவிட்டு, ஆதாரமில்லாத கூற்றுகளைச் சொல்லி வாதமும் செய்கிருர்.

தர்ம சாஸ்திரக்காரர்களை நான் குறைகூறவில்லை. ஆனால், தாய்மையின் பளுவைத் தாங்க முடியாத இளம் பிராயத்தில் மணம் செய்ய வேண்டுமென்று வற்புறுத்துபவர்கள் தீயவர் என்று நான் துணிந்து கூறியிருக்கிறேன். இதற்காக நான் எதிரிகளிடம் தாராளம் காட்டவில்லையென்று மேலே சொன்ன நிருபர் என்மீது குற்றம் சாட்டுகிருர். இந்தக் குற்றச் சாட்டை ஒன்றுக்கும் உதவாத குற்றச்சாட்டு என்பதாக ஒதுக்கித் தள்ளிவிட வேண்டியவனுயிருக்கிறேன். உயிரோடிருக்கும் ஒருவரை-நாமாகச் சிருஷ்டித்துக் கொண்ட ஒருவரை அன்று-தூய்மையற்ற நோக்கமுடையவரென்று குற்றம் சாட்டினல் மட்டுமே, தாராளம் காட்டவில்லையென்ற பிரசினை எழுகிறது. மனக்கட்டுப்பாட்டைப் போதிக்கும் ஸ்மிருதிகளை இயற்றிய அந்த ஸ்மிருதிக்காரர்களே, பெண்களுக்கு இளம் பிராயத்திலேயே மணம் செய்ய வேண்டுமென்று வற்புறுத்தும் செய்யுள்களையும் எழுதினர்களென்று இந்த நிருபர் சொல்லுகிருர். இதற்கு என்ன ஆதாரம் இருக்கிறதோ தெரியவில்லை. மனித உடம்பின் வளர்ச்சியைப் பற்றிய அடிப்படையான உண்மைகளை அறியாத கேவலமான அஞ்ஞானிகளாகவும், தூய்மையற்ற உள்ளம் உடையவர்களாகவும் நமது ரிஷிகள் இருந்திருக்க முடியாதென்று நான் எண்ணுகிறேன். இது இந்த நிருபர் சொல்லுவதைவிடத் தாராளமாக நடந்துகொள்வதாகாதா?

ஆனல் இளமை மணத்தினின்றும் வேறுபட்டதான பால்ய மணத்தை — ஏனெனில் இளமை மணம் என்பது 25 வயதிற்கு முன்னதாகச் செய்யும் மணம் என்று பொருள்படும் — அனுமதிக்கும் பகுதிகள் அதிகாரபூர்வமானவை யென்று காணப்பட்டால், நாம் பெற்றிருக்கும் பூரணமான அனுபவத்தையும், விஞ்ஞான அறிவையும் கொண்டு அவைகளை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட வேண்டும். பால்ய மணம் ஹிந்து சமூகம் முழுதும் வழக்கத்திலிருந்து வருகிற ஒரு காரியம் என்று சொல்வது சரியல்லவென்று நான் ஆட்சேபிக்கிறேன். குழந்தைப் பருவத்திலிருக்கும்போதே, "கோடிக்கணக்கான பெண்கள்" மணவாழ்வு நிறைவேறப்பட்டவர்களாக இருக்கிருர்கள், அதாவது மனைவிகளாக இருந்து வாழ்க்கை நடத்துகிருர்கள் என்பது உண்மையானல், அது எனக்கு ரொம்ப வருத்தத்தைத் தரும் விஷயமாகும். "கோடிக்கணக்கான பெண்கள்" சுமார் பதினெரு வயதில் மணந்து, கணவனேடு வாழ்க்

கையும் நடத்தி வந்தார்கள் என்றால், ஹிந்து சமூகம், ஒரு ஜாதி யென்ற அளவில், வெகு காலத்திற்கு முன்னரே மாய்ந்து போயிருக்கும்.

பெற்றோர்களே பெண்களுக்குக் கணவர்களைத் தேர்ந்தெடுப்பதென்ற பழக்கம் தொடர்ந்துநடைபெற்று வர வேண்டும் என்று இருந்தபோதினும், அதனால் சிறு பிராயத்திலேயே மணம் நடந்துவிட வேண்டும், கணவனோடு கூடிப் பெண் வாழ்க்கையும் நடத்த வேண்டும் என்று ஏற்பட மாட்டாது. பெண்கள் தங்கள் கணவர்மார்களைத் தாங்களே தேர்ந்தெடுந்துக்கொள்வதென்றிருந்தால், ஆடவர்களோடு தாராளமாகப் பழகிக் காதலிக்கும் முறையும், வேடிக்கையான சரச விளையாட்டும் இருந்துதான் ஆக வேண்டும் என்பதும் உண்மையல்ல. கடைசியாகப் பார்த்தால் ஆடவர்களோடு தாராளமாகப் பழகிக் காதலிக்கும் முறை, ஐரோப்பா முழுதும் பரவி யிருக்கிறதென்று சொல்வதற்கில்லை. மேலும், ஆயிரக்கணக்கான ஹிந்துப் பெண்களுக்கு 15 வயதிற்குப் பிறகே மணம் நடக்கிறது; எனினும், அவர்கள் பெற்றோர்களே அவர்களுக்கு கணவன்மார்களைத் தேடிவைக்கிறார்கள். முஸ்லிம் பெற்றோர்கள் வயதுவந்த தங்கள் பெண்களுக்கு எப்போதுமே தாங்களே கணவன்மார்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். தேர்ந்தெடுக்கும் காரியத்தைப் பெண் செய்ய வேண்டுமா, பெற்றோர்கள் செய்ய வேண்டுமா என்பது வேறு பிரசினை. அது ஆங்காங்கே யுள்ள மரபிற்கு ஒத்தவாறு நடைபெறுகிற காரியம்.

பால்ய மனைவிகளுக்குப் பிறக்கும் குழந்தைகளைவிட வயதுவந்த மனைவிகளுக்குப் பிறக்கும் குழந்தைகள் பலவீனமாயிருக்கின்றன என்று மேலே கண்ட நிருபர் சொல்லுகிறார். ஆனால், அதற்கு ஆதாரமாக அவர் எவ்விதச் சான்றையும் காட்டவில்லை. இந்திய சமூகத்தையும், ஐரோப்பிய சமூகத்தையும் பற்றி நான் நன்றாக அறிந்திருந்தபோதிலும், அவற்றின் ஒழுக்கநடைகளைப் பற்றி ஒப்பிட்டுச் சீர்தூக்கும் வேலையில் ஈடுபட விரும்பவில்லை. எனினும், வாதத்திற்காக ஐரோப்பிய சமூகத்தின் ஒழுக்க நடை தாழ்ந்தது என்று வைத்துக்கொண்டாலும், அந்தத் தாழ்வு, பருவம் வந்த பிறகு மணம் செய்வதனால்தான் உண்டாயிற்று என்று அதிலிருந்து ஏற்பட்டுவிடுமா?

கடைசியாக, சென்னைச் சம்பவம் நமது நிருபருக்குச் சாதகமாக இல்லை; ஆனால் அவர் அதை உபயோகப்படுத்திக்கொள்கிற முறை, உண்மைகளை யெல்லாம் முற்றிலும்

அலட்சியம் செய்து ஒதுக்கிவிட்டு, அவசரமாக ஒரு முடிவுக்கு வருகிறார் என்பதையே காட்டுகிறது. திரும்பவும் அந்தக் கட்டுரையை அவர் படித்துப் பார்ப்பாரானால், நிரூபிக்கப் பட்ட உண்மைகளிலிருந்தே நான் அந்த முடிவுக்கு வந்தேன் என்பதை அவர் காண்பார். அந்தப் பெண்ணின் மரணம் எதனால் ஏற்பட்டது என்ற கேள்வி, எனது முடிவைப் பாதிக்க வில்லை. (1) பெண் ரொம்ப இள வயது. (2) அவளுக்குப் போக இச்சை இல்லை. (3) "கணவன்" கொடுமையான முறையில் தனக்கு இசையும்படி கட்டாயப்படுத்தினான். (4) அதன் காரணமாகவே அவள் உயிர் நீத்தாள். இவை நிரூபிக்கப்பட்டுவிட்டன. பெண் தற்கொலை செய்துகொண்டாள் என்பதே மோசமான விஷயம்; அதைவிட மோசம் மிருகத் தனமான தனது காமத்தைத் தணிவிக்க உடன்படாததால் கணவன் அவளைக் கொன்றுவிட்டான் என்று சொல்வது. படிக்கவும் விளையாடவும் அந்தப் பெண் தகுதி வாய்ந்தவளாய் இருந்தாளேயன்றி, மனைவியாக இருந்து அவ்வளவு இளம் பருவத்திலேயே குடும்ப பாரத்தை வகிக்கவோ, நாதன் அல்லது எஜமான் பூட்டும் நுகத்தடியைத் தாங்கவோ தகுதி அற்று இருந்தாள்.

இந்த நிருபர் சமூகத்தில் உயர்ந்த அந்தஸ்தில் இருக்கும் மனிதர். பரந்த கல்வி கற்று, பெண்களின் சார்பாகச் சிந்திக்கவும் செயலாற்றவும் கூடியவர்களென்று கருதும் ஆடவர்களிடமிருந்தும் பெண்களிடமிருந்தும் இந்திய சமூகம் இதை விட உயர்ந்த காரியங்களை எதிர்பார்க்கிறது. நம்மிடையே ஒழுக்க சம்பந்தமான தீமைகளும் வேறு பல தீமைகளும் மலிந்து கிடக்கின்றன. உண்மைகளைப் பொறுமையோடு அறிந்துகொள்ளுவது, உழைப்போடு ஆராய்ச்சி செய்வது, நிலைமையைக் கவனமாகக் கையாளுவது, விஷயங்களைத் தவறு இன்றிச் சரியாகச் சொல்வது, தெளிவாகச் சிந்தித்துப் பார்ப்பது, உணர்ச்சி வசப்படாமல் நடுநிலையில் நின்று ஒரு முடிவிற்கு வருவது, ஆகிய இவைகள், இந்தத் தீமைகளைப் போக்கத் தேவைப்படுகின்றன. இந்தக் காரியங்களைச் செய்த பிறகு, தேவையானால், எவ்வளவு வேண்டுமானாலும், நமக்குள் மாறுபட்டுக்கொள்ளலாம். என்னதான் கஷ்ட நஷ்டங்களுக்கு உட்பட்டாலும் உண்மையைக் கண்டுபிடித்து, அதைக் கடைப் பிடிக்க நாம் கடுமையாக உழைக்க வேண்டும். அவ்விதம் உழைக்காவிட்டால், நாட்டுக்கும், நாட்டிலுள்ள பல்வேறு மதங்களுக்கும், தேச விடுதலைக்குமே நாம் நிச்சயமாகத் தீங்கிழைத்தவர்களாவோம்.

# பால்ய மணத்தின் கோரம்

''பால்ய மணம் என்கிற இந்தத் தீமை நகரங்களைப் போலவே கிராமங்களிலும் பரவி இருக்கிறது. இந்தத் தீமையை அகற்றுவது விசேஷமாகப் பெண்களின் வேலையே யாகும். சந்தேகமில்லாமல் ஆடவர்களும் தங்கள் பங்கைச் செய்ய வேண்டியதுதான். ஆனால், ஆடவன் மிருகமாக மாறி விட்டான் என்றால் நியாயத்திற்கு அவன் செவி சாய்ப்பது துர்லபம்.''

பால்ய மணத்தைப்பற்றி நாம் தெரிந்துகொள்ள வேண்டிய உபயோகமான விஷயங்களடங்கிய ஒரு பொது அறிக்கையை, பால்ய மண எதிர்ப்புக் குழுவினர் வெளியிட்டிருக்கிறார்கள்; அதில் காணப்படும் முக்கியமான பகுதியை நான் கீழே கொடுத்திருக்கிறேன்.

''1931-ம் வருஷத்தில் இந்தியாவில் எடுத்த ஜனசங்கியை அறிக்கை, 15—வயது நிறைவேறு முன்னர் மணம் செய்விக்கப் பெற்ற பெண்களின் எண்ணிக்கையை, வயதுக் கிரமமாகக் கொடுத்திருக்கிறது. அந்த எண்ணிக்கை வருமாறு :

| வயதுத் தொகுப்பு | மணமானவர்களின் சதவிகிதம் |
|---|---|
| 0 லிருந்து 1 வரை | .8 |
| 1 ,, 2 , | 1.2 |
| 2 ,, 3 , | 2.0 |
| 3 ,, 4 , | 4.2 |
| 4 ,, 5 , | 6.6 |
| 5 ,, 10 , | 79.3 |
| 10 ,, 15 , | 38.1 |

''எனவே, ஒரு வயதும் முற்றுப்பெறாத பெண் குழந்தைகளுக்கு 100-க்கு ஒருவர் வீதம் மணம் நடந்திருக்கிறது. 15 வயதுக் குட்பட்ட மற்ற எல்லா வயதுத் தொகுப்புகளிலும் திடுக்கிடத் தக்க இந்த உண்மையையே நாம் திரும்பத் திரும்பக் காண்கிறோம்.

இம்மாதிரிப் பால்ய மணங்கள் நடைபெறுவதன் முக்கியமான பலன் என்னவென்றால், அனேகமாக நம்ப முடியாத அளவுக்குப் பால்ய விதவைகள் இருக்கிறார்கள் என்பதாகும். அவர்களின் புள்ளி விவரங்கள் கீழ் வருமாறு :

| வயதுத் தொகுப்பு | விதவையானவர்களின் சரியான எண்ணிக்கை |
|---|---|
| 0 லிருந்து 1 வரை | 1,515 |
| 1 ,, 2 ,, | 1,785 |
| 2 ,, 3 ,, | 3,485 |
| 3 ,, 4 ,, | 9,076 |
| 4 ,, 5 ,, | 15,018 |
| 5 ,, 10 ,, | 1,05,482 |
| 10 ,, 15 ,, | 1,84,338 |

"பால்ய மண மென்கிற இந்தத் தீமை எண்ணிக்கை யளவில் குறை வென்றும், எங்கும் பரவியிருக்கும் ஒரு பழக்கம் அல்ல வென்றும் சொல்வதை அடிக்கடி கேட்கிறோம். ஆனால், இந்தப் புள்ளி விவரங்களின் மூலம் வெளிப்படும் பால்ய விதவைகளின் எண்ணிக்கை உண்மையான எண்ணிக்கையில் நூற்றில் ஒரு பகுதி யாக இருந்தாலும் மனித வர்க்கத்தில் அனுதாபம் காட்டுகிற எந்த மக்களும் அல்லது சர்க்காரும் துன்பத்தை மூலத்திலேயே தடுக்க ஒரு கணங்கூடக் காத்திருக்க மாட்டார்கள். விதவையான இந்தக் குழந்தைகளில் பெரும்பாலோர், மறுமணம் செய்ய முடியாத நிலை யில் இருக்கிறார்கள் என்பதை இங்கே நாம் நினைவுபடுத்திக் கொள்வது அவசியம்.

"பால்ய மணத்தினால் விளையும் இன்னொரு தீமை, பிரசவத் தில் இளந் தாய்மார்களில் பல பேர் இறந்துபோகிறார்கள் என்ப தாகும். இந்தியாவில் வருஷத்துக்குச் சராசரி இரண்டு லட்சம் பேர் பிரசவத்தில் இறக்கிறார்கள். இதன்படி கணக்குப் பார்த் தால், மணிக்கு 20 பேர் இறக்கிறார்கள். இப்படி இறப்பவர்களில் மிகவும் அதிகமான எண்ணிக்கை 18, 19 வயதுக்குட்பட்ட பெண், களிலேயே இருக்கிறது. "இளந் தாய்மார்களில் 1000 பேரில் 100 பேருடைய விதி பிரசவ காலத்தில் குழந்தை பெறு முன்னரே சாவதாக இருக்கிறது' என்று சர் ஜான் மீகா சொல்லு கிறார். பிரசவ காலத்தில் இறக்கும் தாய்மார்களின் எண்ணிக் கையைப்பற்றிய சரியான புள்ளி விபரங்கள் நம்மிடம் இல்லை. இந்தியாவில் 1000க்கு 245 பேரென்றும், இங்கிலாந்தில் 1000-க்கு 45 பேர்தான் என்றும் மதிப்பிடுகிறார்கள்.

"கடைசியாக, பால்ய மணம் தாயை மட்டுமின்றி, குழந்தை யையும், குழந்தைகளின் மூலம், அந்த இனத்தையுமே பாதிக்கிறது. இந்தியாவில் பிறக்கும் குழந்தைகள் 1000-க்கு 181 விகிதம் இறக் கின்றன. இது சராசரி எண்ணிக்கை; இந்தச் சராசரி எண்ணிக்கை 1000 க்கு 400 வரை போகும் இடங்களும் இந்தியாவில் உண்டு. இந்த விஷயத்தில் இந்திய நிலைமை மிகவும் பிற்போக்கானதா யிருக்கிற தென்பது இங்கிலாந்து, ஜப்பான் ஆகிய இவ்விரு தேசங்களில் இறக்கும் குழந்தைகளின் புள்ளி விபரங்களை வைத்து ஒப்பிட்டுப் பார்த்தால் நன்கு விளங்கும்.

இங்கிலாந்தில் 1000க்கு 60 குழந்தைகளும், ஜப்பானில் 1000க்கு 24குழந்தைகளுந்தான் இறக்கின்றன. இது தவிர்க்கக் கூடிய தீமை தான் என நினைக்கும்போது, நமக்கு இன்னும் அதிகமாகத் தூக்கி வாரிப் போடுகிறது. இந்தத் தீமை தடையின்றி வளர முக்கியமாயிருந்த காரணம், போதிய அளவு படிப்பின்மையும் அதைப்பற்றிய உணர்வின்மையும் ஆகும்.

"இதிலெல்லாம் மிக மிக வருந்தத்தக்க காரியம் என்னவென்றால், இந்த அம்சங்களில் முன்னேற்றம் ஏற்படுவதாக வைத்துக்கொண்டாலுங்கூட — ரொம்ப மெதுவாக இருக்கிறது என்பதாகும். உதாரணமாக, 1921-ம் வருஷத்தில் ஒரு வயது முற்றுப்பெறாத மனைவிகள் 9066 பேர் இருந்தனர்; 1931ல் 44 082 பேர் இருந்தனர். அதாவது சுமார் 5 மடங்கு அதிகம். இத்தனைக்கும் இந்தக் கால அளவில் ஜனத்தொகை 10ல் ஒரு மடங்குதான் பெருகி யிருக்கிறது. 1921ல் ஒரு வயது முற்றுப் பெறாத விதவைகள் 759 பேர் இருந்தனர். 1931ல் அவர்கள் எண்ணிக்கை 1515 ஆயிற்று. அதற்குப் பின்னர் எடுத்துவரும் ஜனசங்கியைப் புள்ளி விவரங்கள் வெகு வெகு அற்பமான முன்னேற்றத்தையே காட்டுகின்றன. இந்தத் தீமைகளைத் தடுக்க எடுத்துக்கொள்ளும் நடவடிக்கைகளில் ஏற்படுகிற முன்னேற்றத்தைவிட ஜனங்களின் எண்ணிக்கை அதிக வேகமாகப் பெருகி வருகிறது. ஆதலால், இவைகளை வேரோடு களைந்தெறியப் பலன்தரத்தக்க முறையில் நடவடிக்கை எடுத்துக்கொள்வது இப்போது மிகவும் அவசரமான காரியமாயிருக்கிறது. இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் பெண்களின் இயக்கம், இந்த விஷயத்தில் பொது ஜனங்களின் மனச்சாட்சியையும் சர்க்காரின் மனச்சாட்சியையும் தூண்டி எழுப்புவதைவிட வேறு அவசரமான வேலையையோ உயர்ந்த பணியையோ செய்ய முடியாது."

மேலே தந்திருக்கும் புள்ளி விவரங்கள் நம்மை வெட்கித் தலை குனியச் செய்ய வேண்டும். அதனால் மட்டும் இந்தத் தீமை [illegible] பட்டுவிடாது. பால்யமணம் என்கிற இந்தத் தீமை, நகரங்களைப் போலவே கிராமங்களிலும் பரவியிருக்கிறது. இந்தத் தீமையை அகற்றுவது விசேஷமாகப் பெண்களின் வேலையே யாகும். சந்தேகமில்லாமல், ஆடவர்களும் தங்கள் பங்கைச் செய்ய வேண்டியதுதான். ஆனால், ஆடவன் மிருகமாக மாறிவிட்டான் என்றால், நியாயத்திற்கு அவன் செவி சாய்ப்பது துர்லபம். தங்களுக்கு விசேஷ உரிமையும், மறுக்க வேண்டிய கடமையும் இருக்கிற தென்பதைத் தாய்மார்கள் அறிந்துகொள்ளும் முறையில் கல்வியை அவர்களுக்குப் போதிக்க வேண்டும். பெண்களைத் தவிர வேறு யாரால் இதைப் போதிக்க முடியும். ஆதலால், அகில இந்தியப் பெண்கள்

மகாநாடு, அந்தப் பேருக்குத் தகுந்தபடி, கிராமங்களுக்குச் செல்ல வேண்டும் என்று துணிந்து கூறுகிறேன். அறிக்கைகள் பயனுள்ளவையே. ஆனால் ஆங்கிலம் தெரிந்த நகரவாசிகள் சிலர் கையிலே மட்டுமே அவை போய்ச் சேருகின்றன. கிராமப் பெண்களோடு நேர் முறையில் தொடர்பு வைத்துக் கொள்வது, இப்போது தேவைப்படுகிற காரியமாகும். அப்படியே தொடர்பை ஏற்படுத்திக்கொண்டபோதிலும் - அந்தக் காலம் எப்போது வருமோ தெரியவில்லை—இந்த வேலை எளிதாகி விடாது. ஆயினும், என்றைக்காவது ஒரு நாள் இந்த வழியில் ஒரு ஏற்பாடு செய்தே ஆகவேண்டும். அதன் பிறகே ஏதாவது பயனை எதிர்பார்க்க முடியும். அகில இந்தியப் பெண்கள் மகாநாடு, அகில இந்திய கிராமத் தொழில் சங்கத்தோடு ஒன்று சேர்ந்து வேலை செய்யுமா? கிராமத் தொண்டர்கள், எவ்வளவு திறமைசாலிகளாக இருப்பினும், சமூகச் சீர்திருத்தத்திற்காக மட்டும் கிராம மக்களிடம் செல்ல வேண்டுமென்பதில்லை. கிராம வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலுமே அவர்கள் சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். கிராமத் தொண்டு என்பது, எழுதவும் படிக்கவும் கணக்குப் பார்க்கவும் கற்றுக் கொடுப்பதன்று. அது மட்டும் உண்மையான அறிவல்ல; தாங்களாக எண்ணிப் பார்க்கத் தகுதி வாய்ந்தவர்களென்று கருதும் மனிதர்களின் உண்மையான வாழ்க்கைத் தேவைகளைக் கிராம மக்களுக்கு எடுத்துக்காட்டி, அவைகளின்பால் அவர்கள் கவனத்தை இழுப்பதுதான் உண்மையான கல்வியாகும் என்பதை நான் மறுபடியும் குறிப்பிடுகிறேன்.

# கதியற்ற விதவைகள்

ஆடவனுக்கு மறுமணம் செய்துகொள்ள எவ்வளவு உரிமை இருக்கிறதோ, அவ்வளவு உரிமை ஒவ்வொரு விதவைக்கும் உண்டு என்பதாக நான் பல முறை சொல்லியிருக்கிறேன். ஹிந்து தர்மப்படி, தானாக ஏற்றுக் கொள்ளும் கைம்மை விலை மதிக்க முடியாத ஒரு சிறந்த அணியாகும்; பிறர் வற்புறுத்தலால் ஏற்படும் கைம்மை நிச்சயமாக ஒரு தீமையே யாகும்."

*தன் உறவினர்களை இழந்த ஒருவர், மனதை உருக்கக் கூடிய கடிதம் ஒன்று எனக்கு எழுதி யிருக்கிறார். அதில், குவெட்டா பூகம்பத்தில் கணவன், இரண்டு மாதக் குழந்தை, மாமனார், கணவனின் இளைய சகோதரன்—அதாவது தன் மாமனார் வீட்டிலுள்ள அனைவரையுமே இழந்து பரிதவிக்கும் 17 வயதுப் பெண்ணொருத்தியின் நிலையை வர்ணித்திருக்கிறார். அவள் பலத்த காயம் ஏதுமின்றி, கட்டிய சேலையுடன் திரும்பி வந்து சேர்ந்தாள் என்று எனது நிருபர் எழுதுகிறார். அவள் அவருக்கு மாமன் பெண். அவளது துன்பத்தை எப்படி ஆற்றுவது? அவளை இனி என்ன செய்வது என்று ஒன்றும் தெரியாமல் அவர் கஷ்டப்படுகிறார். அவள் உடம்பிலும் சிறிது காயம் ஏற்பட்டு இருக்கிறது; அவள் காலில் அடி; நல்ல வேளையாக எலும்பு முறியவில்லை. அந்தக் கடிதத்தின் இறுதியில் அவர் கீழ்வருமாறு எழுதுகிறார் :*

*" லாகூரில் தன் தாயாரோடு வாழும்படி அவளை விட்டுவந்திருக்கிறேன். அவள் தாயாரிடமும், இதர பந்துக்களிடமும், இந்தப் பெண்ணுக்கு மறுமணம் செய்தால் நலமா யிருக்குமே யென்று நாசூக்காகக் குறிப்பிட்டேன். சிலர் நான் சொன்னதை அனுதாபத்தோடு கேட்டார்கள்; சிலர் அதைப்பற்றிக் கோபமாகப் பேசினார்கள். எனது மாமன் மகளுக்கு வந்திருக்கும் இந்த விதி எத்தனையோ பெண்களுக்கும் ஏற்பட்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. துர்ப்பாக்கியசாலிகளான இந்த விதவைகளுக்குத் தாங்கள் ஒரு ஆதரவு வார்த்தை சொல்ல மாட்டீர்களா? "*

*புராதன காலத்திலிருந்து வரும் ஒருதலைச் சார்பான இந்த எண்ணங்களை யொட்டிய விஷயங்களில் என்னுடைய பேச்சோ, எழுத்தோ என்ன செய்ய முடியு மென்று எனக்குத் தோன்றவில்லை. மனைவியை இழந்த ஆடவனுக்கு மறு மணம் செய்துகொள்ள எவ்வளவு உரிமை இருக்கிறதோ, அவ்வளவு*

உரிமை ஒவ்வொரு விதவைக்கும் உண்டு என்பதாக நான் பல முறை சொல்லி யிருக்கிறேன். ஹிந்து தர்மப்படி தானாக ஏற்றுக்கொள்ளும் கைம்மை விலை மதிக்கமுடியாத ஒரு சிறந்த அணியாகும். பிறர் வற்புறுத்தலால் ஏற்படும் கைம்மை நிச்சயமாக ஒரு தீமையே யாகும். அனேக இளம் விதவைகள் உடல் கட்டுப்பாட்டுக்குப் பயப்படுவதைவிட ஹிந்து சமூகத்தின் தூற்றுதலுக்குத்தான் அதிகமாகப் பயப்படுகிறார்கள். இந்தப் பயத்தினின்றும் அவர்களுக்கு விடுதலை கிடைத்தால் கொஞ்சகூடத் தயக்கமின்றி அவர்கள் மறுமணம் செய்து கொள்வார்கள். ஆகையால் குவெட்டா பூகம்பத்தில் கணவனை இழந்து தவிக்கும் இச்சகோதரியைப்போல துர்ப்பாக்கிய நிலையிலிருக்கும் இளம் விதவைகள் எல்லோரும் மறுமணம் செய்துகொள்ள எல்லா விதமான ஆதரவையும் அளிக்க வேண்டும். மறு மணம் செய்துகொள்ள முன்வந்தால், அதற்காக அவர்கள் பழிச்சொல்லுக்கு ஆளாக மாட்டார்கள் என்ற நிச்சயமும் இருக்க வேண்டும். மேலும் அவர்களுக்குத் தகுந்த கணவன்மார்களைத் தேர்ந்தெடுக்க எல்லா முயற்சியும் செய்ய வேண்டும். இந்த வேலையை எந்த ஸ்தாபனத்தாலும் செய்ய முடியாது. கணவனை யிழந்த பெண்களின் உறவினர்களான தனிப்பட்ட சீர்திருத்தக்காரர்களே இதைச் செய்ய வேண்டியவர்கள் ஆவர். தங்கள் சொந்த வட்டாரங்களில், ஊக்கத்தோடு பெருந்தன்மைமான முறையில் கட்டுப்பாடான பிரசாரத்தை, இவர்கள் செய்துவர வேண்டும். அந்தப் பிரசாரத்தின் பயனாய் யாராவது விதவைகள் மணம்செய்து கொண்டால் அந்த சம்பவத்திற்கு எவ்வளவு விளம்பரம் கொடுக்க முடியுமோ அவ்வளவு விளம்பரம் கொடுக்க வேண்டும். இப்படிச் செய்தால் மட்டுமே, பூகம்பத்தினால் விதவையான பெண்களுக்கு, உண்மையான உதவி கிடைப்பது சாத்தியமாகும். இந்தத் துன்ப நிகழ்ச்சியின் நினைவு மக்கள் மனதில் அப்படியே பதிந்திருக்கும் காலத்தில் பொதுஜன அனுதாபத்தை எளிதில் திரட்டிவிடலாம். இச் சீர்திருத்தம் விரிவாக நிகழ நிகழ, சாதாரண முறையில் விதவையான பெண்களுங்கூட விரும்பினால், மறுமணம் செய்துகொள்வது எளிதாகிவிடும்.

# கட்டாயக் கைம்மை

**"மணம் என்றால் இன்னது என்று அறியாத பெண்கள்மீது ஹிந்து சமூகம் கைம்மையைப் பலவந்தமாகப் புகுத்துகிறது; ஹிந்து சமூகத்திலிருந்து இந்தத் தீய கொடிய பழக்கம் போக வேண்டுமானால், வெளியிலிருந்துகொண்டு, சட்டம் இயற்றுவதனால் முடியாது. முதலாவது ஹிந்துக்களுக்கிடையே அறிவு சார்ந்த பொதுஜன அபிப்பிராயத்தின் பலத்தினால் சீர்திருத்தம் ஏற்பட வேண்டும். இரண்டாவதாக, விதவைப் பெண்களுக்கு மீண்டும் மணம் செய்வது தங்கள் கடமை என்பதைப் பெற்றோர்கள் அங்கீகரிப்பதன் மூலம் சீர்திருத்தம் ஏற்பட வேண்டும்."**

*ஜூலியஸ் ஸீஸர் காலத்தில் வாழ்ந்தவரும் ஸிஸிலி நாட்டைச் சேர்ந்தவருமான டியோடோரஸ் என்பவர் எழுதியுள்ள "உலக சரித்திரம்" என்ற கட்டுரையில், சதி, கைம்மை இரண்டையும்பற்றி எழுதியிருக்கிறார். நாம் தெரிந்து கொள்ளத்தக்க உபயோகமான இந்தப் பகுதியை பியாரேலால் தேடிக் கண்டுபிடித்துக் கீழே தந்திருக்கிறார்.*

*"இளைஞர்களும் இளம் பெண்களும் கலியாணம் செய்துகொள்ள விரும்பின், தங்கள் விருப்பப்படியே கலியாணம் செய்துகொள்வார்களேயன்றி, பெற்றோரின் சம்மதத்தின்பேரில் கலியாணம் செய்துகொள்வதில்லை. புராதன காலத்தில் இந்தியர்களிடையே வழங்கிவந்த சட்டமாகும் இது. இதன் காரணமாக, நிதானமான யோசனையின்றி, அவசர அவசரமாக இளம் பருவத்திலேயே கலியாணம் நடப்பதுண்டு. அப்படி அடிக்கடி ஏற்படுகிற அவசர முடிவின் காரணமாக, கலியாணமான பிறகு இருவருமே வருந்துவதுண்டு. அனேக பெண்கள் காம வயப்பட்டு, தங்கள் ஒழுக்கத்தையும் விட்டு, வேறு பல ஆடவர்களுடன் கலந்து வாழத் துணிந்துவிடுகிறார்கள். எனவே, இறுதியாக, முதலில் தேர்ந்தெடுத்த கணவன்மாரோடு வாழப் பிரியமின்றி பிரிந்துபோய்விட எண்ணுவார்கள். ஆனால், வெளிப்படையாக அப்படிச் செய்வது கௌரவத்திற்குப் பங்கமல்லவா? ஆதலால் அவர்கள், தங்கள் கணவன்மார்களை, விஷம் வைத்துக் கொல்வதுண்டு. அதற்குத் தேவைப்படும் கொடிய சக்திவாய்ந்த விஷம் அவர்கள் நாட்டிலேயே பல ரகங்களில் அபரிமிதமாகக் கிடைக்கிறது. இவற்றில் சிலவற்றைத் தூளாக்கிப் பானத்திலும், உணவிலும் கலந்து கொடுத்தாலே போதும்; அது உயிரையே வாங்கிவிடும். நஞ்சூட்டிக் கொல்லும் இந்தப் பாதகமான பழக்கம் அதிகம் பரவினமையால், அனேக ஆடவர்களின் உயிர்கள் இதற்கு இரையாயின. இவ்விதப் பாதகமான செயலைச் செய்த*

பெண்களைத் தண்டித்துங்கூட, மற்ற மனைவியர் திருந்தாமையால், ஆடவர்கள் ஒரு சட்டத்தை இயற்றினர்கள். அதன்படி, மனைவி கர்ப்பவதியாகவோ அல்லது ஏற்கனவே குழந்தைகளைப் பெற்றவளாகவோ இருந்தாலன்றி, இறந்த கணவனோடு அவளையும் எரித்துவிட வேண்டும். இந்தச் சட்டத்திற்கு உடன்பட அவள் மறுத்தால் ஆயுள்முழுதும் அவள் விதவையாகவே இருந்து வாழ வேண்டும். பாப ஆத்மா என்ற முறையில் யாகம், மற்ற மதச் சடங்குகள் ஆகியவற்றில், வாழ்நாள் முழுதும் அவள் கலந்துகொள்ளக் கூடாது; சமூகத்தினின்றும் அவளைத் தள்ளி வைத்துவிட வேண்டும்.''

மேலே தந்திருக்கும் குறிப்பு, கொடுந்தன்மை வாய்ந்த இவ்விரண்டு பழக்கங்களும் ஏற்பட்டதன் மூல காரணத்தை உண்மையாகவே விளக்குகிற தென்றால், சட்ட மூலமாகச் சதியை ஒழித்ததற்கு நாம் கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும். மணம் என்றால் இன்னது என்று அறியாத பெண்கள் மீது ஹிந்து சமூகம் கைம்மையைப் பலவந்தமாகப் புகுத்துகிறது. ஹிந்து சமூகத்திலிருந்து இந்தக் கொடிய பழக்கம் போக வேண்டுமானல், வெளியிலிருந்துகொண்டு சட்டம் இயற்றுவதனுல் முடியாது. முதலாவது ஹிந்துக்களுக்கிடையே அறிவு சார்ந்த பொதுஜன அபிப்பிராயத்தின் பலத்தினல் சீர்திருத்தம் ஏற்பட வேண்டும். இரண்டாவதாக விதவைப் பெண்களுக்கு மீண்டும் மணம் செய்வது தங்கள் கடமை யென்பதைப் பெற்றோர்கள் அங்கீகரிப்பதன் மூலம் சீர்திருத்தம் ஏற்பட வேண்டும். பெண் இதற்கு உடன்படாத சந்தர்ப்பங்கள் இருப்பின், மறுமணம் செய்துகொள்வது சரியானதுதான் என்பதை உணருகிற பெற்றோர் பெண்ணுக்குப் போதிக்க வேண்டும். வயது வாராத பெண்களைப்பற்றி இது குறிப்பிடுகிறது என்பது இயல்பாகத் தெரிந்த விஷயம். விதவைகள் என்று நாம் கூறும் பெண்கள் பக்குவமடைந்த பிறகு மணம் செய்துகொள்ள விரும்பவில்லை யென்றால், கன்னிப் பெண்களாகத் தங்களை எண்ணிக்கொண்டு திரும்பவும் மணந்துகொள்ளும் சுதந்திரம் அவர்களுக்கு இருக்கிற தென்பதை எடுத்துக்காட்டுவதைத் தவிர வேறு நாம் செய்ய வேண்டிய காரியம் ஒன்றுமில்லை. வயது சென்ற மாதர்களும் இளம் பெண்களும் வெள்ளிச் சங்கிலிகளையும் தங்கச் சங்கிலிகளையும் மோதிரங்களையும் தடங்கல்கள் எனக் கருதாது ஆபரணங்க ளென்று கருதுகிறார்க ளல்லவா? விலங்கையே ஆபரணம் என்று எண்ணிக்கொண்டு அதை ஆவலோடு அணைத்துக் கொள்ளும் கைதிகளின் தளைகளைத் தகர்த்தெறிவது கஷ்டமான காரியமே.

# உத்தமமான சதித்தன்மை

"சதித்தன்மை தூய்மையின் சிகரம். இந்தத் தூய்மையைச் சாவினால் உணரவோ, அடைந்துவிடவோ முடியாது இலட்சியத்தை நோக்கிச் சதா முயலுவதாலும், நாளுக்கு நாள் ஆத்ம தியாகத்தை வளர்த்துக்கொண்டு போவதாலுமே அதைப் பெற முடியும்."

கணவன் இறந்ததற்காகத் தன் உயிரை ஒரு பெண் மாய்த்துக்கொண்டாள் என்பதாகப் பம்பாய்ப் பத்திரிகை ஒன்றில் செய்தி வெளியாகி இருக்கிறது. அது சம்பந்தமாய் காந்திஜீயின் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படியாக ஒரு பெண் நிருபர் அவரிடம் வேண்டிக்கொண்டார். அந்த வேண்டுகோளுக்கிணங்க, காந்திஜீ, 'நவஜீவன்' பத்திரிகையில் ஒரு கட்டுரை எழுதி, தனது கருத்தை வெளியிட்டார். அந்தக் கட்டுரை வருமாறு:

*பத்திரிகைகளில் வெளிவந்திருப்பது உண்மை யல்லவென்று எண்ணுகிறேன். இந்தச் சம்பவத்தில் சம்பந்தப்பட்ட பெண்மணி, நோய் காரணமாகவோ, அல்லது அகஸ்மாத்தாகவோ இறந்தாரே யன்றி, தற்கொலை செய்துகொள்ளவில்லை யென்று நான் அபிப்பிராயப்படுகிறேன். கணவன் பாலுள்ள காதலிலும் உண்மையான ஈடுபாட்டிலும் என்றும் உறுதியாக நின்று, கணவன் உயிரோடிருக்கும் காலத்திலும், அவன் இறந்த பின்னரும் தன்னலமற்ற சேவையினால் திகழ்ந்து, மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றிலும் பரிபூரணமான கற்போடு விளங்கும் பெண்மணியைச் 'சதி', என்று நம் முன்னோர்கள் குறிப்பிட்டார்கள். 'சதி' என்ற சொல் இன்றும் மேலே குறிப்பிட்ட குணங்களையே குறிக்கிறது. புருஷன் இறந்த காலத்தில் தானும் உயிரை மாய்த்துக்கொள்வது அறிவு வளர்ச்சியின் அறிகுறியாகாது; ஆத்மாவின் இயற்கையை உணராத பெருத்த அறியாமையின் அறிகுறியே யாகும் அது. ஆத்மாவிற்கு அழிவில்லை; மாற்றமுமில்லை. நிரந்தரமாக எங்கும் பரவி இருக்கும் தன்மை உள்ளது அது உடல் அழியும்போது அதோடுகூட ஆத்மாவும் அழிவதில்லை. ஆனால், அழிந்துபோகும் இயல்புடைய ஒரு உடலிலிருந்து அதே இயல்புள்ள மற்றொரு உடலுக்குள் மாறி மாறிப் புகுந்து, கடைசியாக இந்த உலக பந்தத்திலிருந்து அது பூரண விடுதலை அடைகிறது. எண்ணற்ற முனிவர்களும்*

தீர்க்கதரிசிகளும் அடைந்த அனுபவம் இந்த உண்மையை உறுதிப்படுத்துகிறது. இன்றும் இவ் வுண்மையை உணர விரும்புபவர்கள் அதை உணர்ந்து பார்க்கக் கூடும். இந்த உண்மைகளை யெல்லாம் வைத்துப் பார்க்கும்போது, தற்கொலை செய்துகொள்வதை ஆதரிப்பது எவ்வாறு நியாயமாகும் ?

உண்மையான மணம் என்பது, உடல்களின் சேர்க்கையை மட்டும் குறிக்கவில்லை ; ஆன்மாக்கள் ஒன்றுபடுவதையும் அது குறிக்கிறது. உடல் சம்பந்தமான உறவை மட்டுமே மணம் குறிக்கிறதென்றால், கணவனை இழந்த மனைவி அவனுடைய படத்தையோ, மெழுகினால் செய்த உருவத்தையோ வைத்துத் திருப்தியடையலாந்தானே? ஆனால், தன்னையே நாசம் செய்து கொள்வது என்பது, அதாவது, தற்கொலை செய்துகொள்வது மிகவும் வீணான காரியம். இறந்தவரை உயிர்ப்பிப்பதற்குத் தற்கொலை செய்துகொள்வது துணை புரியுமா? அதற்கு மாறாக இன்னொரு உயிரும் இந்த உலகத்தைவிட்டு நீங்குவதுதான் இதனால் ஏற்படும் பலன்.

மணம் என்ற இலட்சியம் உடல் மூலமாக ஆன்மாக்களை ஒருமைப்படுத்துவதாகும். நம்மிடையே இப்படி உருவாகும் காதல், கடவுளிடமும் மற்ற ஜீவராசிகள் யாவற்றினிடமும் நாம் அன்புகொள்ளத் துணைபுரிகிறது. அதனாலேதான் அமரத்துவம் வாய்ந்த மீரா பாடினார்,

"கடவுளே எனது நாயகன், மற்றவரல்ல" என்று.

கேவலம் மிருகப் பசியைத் தணிப்பதற்கு ஏற்பட்ட சாதனமல்ல மணம். ஆனால், ஒரு பெண் தனக்குள்ள தனிப்பட்ட தன்மையைக் கணவனுடைய தனிப்பட்ட தன்மையில் இரண்டறக் கலந்து, தன்னலமும் தான் என்ற எண்ணமுமே யற்ற இலட்சியத்தை அடைய ஏற்பட்ட சாதனம் அது. மணம் என்பதை இவ்விதமே, ஒரு 'சதி' கருதுவாள் என்பது, மேலே சொன்ன விஷயங்களிலிருந்து அறியக்கிடக்கிறது. அவள் தன் சகித்தன்மையை நிரூபிப்பது கணவன் இறந்தவுடன் அவனோடு உடன்கட்டை ஏறுவதனாலன்று. ஆனால், 'சப்த பதி' சடங்கில் வாக்குறுதி கொடுத்த அந்த நிமிஷமுதல், தான் சுவாசிக்கும் ஒவ்வொரு சுவாசத்தின் மூலமும் துறவுணர்ச்சி, தியாகம், சௌகரியங்களை வெறுத்தல், கணவன், குடும்பம், தேசம் ஆகியவற்றின் சேவைக்குத் தன்னை அர்ப்பணம் செய்தல் ஆகிய இவைகளால் அவள் தன் சதித் தன்மையை நிரூபிப்பாள். புலன்களுக்கு இன்பமளிக்கும் விஷயங்களையும் தேக சௌகரியங்களையும் அவள் வெறுத்து

ஒதுக்குவாள். குறுகிய குடும்பக் கவலைகளுக்கும் சிரத்தை களுக்கும் தன்னை அடிமையாக்கிக்கொள்ள அவள் மறுத்துவிடு வாள். ஆனால், தனது அறிவை விருத்தி செய்துகொள்வதிலும் தன்னடக்கத்தையும் துறவுணர்ச்சியையும் மேன்மேலும் பண் படுத்துவதன் மூலம் சேவை செய்வதற்குரிய தனது சக்தியை அதிகப்படுத்துவதிலும், தனக்குக் கிடைக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் உபயோகப்படுத்திக்கொள்வாள்; தன் கண வனோடு இரண்டறக் கலப்பதன் மூலம் உலகம் முழுவதோடும் இரண்டறக் கலக்கவும் அவள் கற்றுக்கொள்வாள்.

இவ்விதப் பண்புகள் வாய்ந்த 'சதி' கணவன் இறந்த காலத்தில் அலறிப் புடைத்துக்கொள்ள மாட்டாள். ஆனால் இறந்த கணவனின் இலட்சியங்களையும் சிறந்த குணங்களை யும் தன் செயல்களில் மீண்டும் உயிர்வாழச் செய்வதற்கு எப் போதும் முயன்றுகொண்டே யிருப்பாள். அதன் மூலம், இறந்த தன் கணவனுக்கு அமரத்துவம் என்ற கிரீடத்தைச் சம்பாதித்துக் கொடுப்பாள். தன்னை மணந்தவனின் ஆன்மா சாகவில்லை, அது இன்னும் உயிரோடு இருக்கிறது என்பதை அவள் அறிவாளாதலால், மறுமணம் செய்துகொள்ளும் எண் ணமே அவளுக்கு ஒருபோதும் இருக்க மாட்டாது.

இந்த இடத்தில், வாசகர்களுக்கு ஒரு வேளை ஒரு சந்தே கம் தோன்றலாம்: 'நீங்கள் வருணிக்கும் 'சதி' காம இச்சை யாலோ, மிருகத்தனமான பசியாலோ தீண்ட முடியாதவளாய் இருக்கிறாள். குழந்தை வேண்டுமென்ற விருப்பம் அவளுக்கு இருக்க முடியாது. பிறகு அவள் ஏன் மணம் செய்துகொள்ள வேண்டும்?'' என்பதாக. நமது தற்கால ஹிந்து சமூகத்தில், ஏராளமான பெண்களைப் பொறுத்தவரையில் மணம் அவர்கள் சம்மதத்தின் பேரில் நிகழுகிற காரியமாய் இல்லை. இதுதான் அதற்குப் பதில். மீண்டும், ஒரு நிலையில் நில்லாத இந்த நமது சகாப்தத்தில் கற்புக்குக் கவசமாகவும், மனக்கட்டுபாட்டுக்கு உதவியாகவும் இருக்க மணம் அவசியம் என்று சிலர் நம்பு கிறார்கள். மணம் செய்யும் காலத்தில் காம இச்சையினின்றும் விடுபடாமல்இருந்த பலர்,மணமான சில காலத்தில்பூரணமான கற்பின் இலட்சியம் தோயப் பெற்றவர்களாக, அந்த இலட்சி யத்தை யடைய, மணவாழ்க்கை சக்திவாய்ந்தசாதனமாயிருப் பதைக் கண்டிருக்கிறார்கள். வாஸ்தவத்தில் இவ்விதம் மாறி யவர்களில் அனேகரை நான் நேர்முகமாக அறிவேன். நான் வர்ணித்திருக்கும் சதி'யின் இலட்சியம் கொள்கை அளவோடு நின்று, எல்லாரையும் கட்டுப்படுத்த முடியாத வெறும் திட்டம் அல்ல; பரிபூரணமான ஆலோசனையுமல்ல; கண்டதே காட்சி

யென்றிருக்கும் இன்றைய உலகத்திலேயே வாழ்வில் பெற வேண்டிய ஒரு விஷயம் என்பதை உணர்த்தவே இந்த உதாரணங்களை எடுத்துக்காட்டினேன்.

ஆனால் 'சதி'யின் இலட்சியத்தை யடைய முயலும் சராசரி மனைவி, தாயாகவும் இருப்பாள் என்பதை நான் தாராளமாக ஒப்புக்கொள்கிறேன். ஆகையால், மேலே குறிப்பிட்ட பல வகையான குணங்களோடு, உண்மையான தேசத் தொண்டர்களாக வாழ்வதற்குரிய முறையில் குழந்தைகளுக்குக் கல்வி கற்பித்து, அவர்களை வளர்க்கிற அறிவையும் அவள் பெற வேண்டும்.

மனைவியைப்பற்றி நான் மேலே சொன்ன விஷயங்கள் அத்தனையும் கணவனுக்கும் பொருந்தும். மனைவி கணவனிடம் குறையாத அன்பு பூண்டு அவனுக்கு உண்மையாக நடந்து கொள்வதை நிரூபிக்க வேண்டுமென்றால், கணவனும் மனைவியிடம் தனக்குள்ள அன்பையும் அவளிடம் தான் உண்மையாக நடந்துகொள்வதையும் நிரூபிக்க வேண்டுவது அவசியம். ஒரு பக்கத்திற்கு ஒரு முறையான அளவைகளையும், இன்னொரு பக்கத்திற்கு வேறு விதமான அளவைகளையும் வைத்து நிறுப்பது சரியன்று. எனினும், இறந்த மனைவியோடு உடன்கட்டையேறிய கணவனைப்பற்றி நாம் கேட்டதில்லை. ஆதலால், கணவன் இறந்த காலத்தில் மனைவி தன்னுயிரையும் மாய்த்துக் கொள்ளுகிற பழக்கம் மூட நம்பிக்கையில் ஆழ்ந்த மனிதனது மடமையிலிருந்தும், அவனுடைய குருட்டுத்தனமான அகங்காரத்திலிருந்தும் ஏற்பட்ட காரியம் ஆகும் என்பதை நாம் ஒப்புக்கொள்ளலாம்; இந்தப் பழக்கம் ஒரு காலத்தில் பொருளுள்ளதாக இருந்ததென்று நிரூபிக்கக் கூடுமானாலும், இந்தக் காலத்தில் அநாகரிகமான செயலாகவே அதைக் கருத வேண்டும். மனைவி கணவனது அடிமை அல்லள்; உடலிற் செம்பாதியென்றும் அவனுடைய தோழியும் உடனிருந்து காரியங்களையாற்றும் துணைவியும் ஆவாள் என்றும் கூறலாம்; அவனுக்குள்ள உரிமைகளையும் கடமைகளையும் சமத்துவமாகப் பங்கிட்டுக் கொள்ளுகிறாள் அவள். ஆதலால் அவர்கள் ஒருவருக்கொருவர் ஆற்ற வேண்டிய கடமைகளும், அவர்கள் இருவரும் சேர்ந்து உலகத்திற்கு ஆற்ற வேண்டிய கடமைகளும் ஒரே மாதிரியாகவும் பரஸ்பரமாகவுமே இருக்கின்றன.

எனவே, மேலே குறிப்பிட்ட சகோதரி தனது உயிரைத் தியாகம் செய்துகொண்டது வீண் என்றே நான் கருதுகிறேன். எல்லாரும் பின்பற்றும் உதாரணமாக நிச்சயமாக இதைக் கொள்ள முடியாது. "சாவதற்கு அவளுக்கு ஏற்பட்டுள்ள

தைரியத்தையாவது நீங்கள் போற்றவில்லையா?" என்று ஒரு வேளை நீங்கள் என்னைக் கேட்கலாம். "இல்லை" என்பதுதான் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் நான் கூறும் பதிலாகும். தீமையாளர்கள் இம்மாதிரி தைரியத்தைக் காட்டுவதை நாம் பார்த்திருக்கிறோம்; எனினும், அதற்காக அவர்களைப் போற்ற வேண்டும் என்று ஒருவரும் நினைப்பது இல்லை. தற்கொலையைப் பாராட்டும் எனது அறிவற்ற புகழுரையால் ஒன்று மறியாத சகோதரிகளை எனக்குத் தெரியாமலேயே தவறான வழியில் செலுத்துகிற பாபத்தை நான் ஏன் ஏற்றுக் கொள்ள வேண்டும்? சதித்தன்மை தூய்மையின் சிகரம். இந்தத் 'தூய்மையைச் சாவினால் அடையவோ, உணரவோ முடியாது. இலட்சியத்தை நோக்கிச் சதா முயலுவதாலும், நாளுக்கு நாள் ஆத்ம தியாகத்தை வளர்ப்பதாலுமே அதை அடைய முடியும்.

# இலட்சிய விபசாரம்

**முதுமை மேலீட்டால் ஏதாவது பிதற்றிக்கொண் டிருக்கும் கிழவனுக்கோ, பருவமடையாத இளம் பையனுக்கோ, குழந்தைப் பருவத்திலுள்ள தன் மகளை மணம் செய்து கொடுக்கிற தந்தை, தன்னிடம் நம்பி வைத்த பொருளைத் தவறாக உபயோகித்தவனாகிறான். இந்தப் பாபத்தினின்றும் தன்னை மீட்டுக் கொள்ள, குறைந்தது அவன் செய்ய வேண்டிய பிராயச்சித்தம், பெண் விதவையாகும்போது அவளுக்கு மறுமணம் செய்விப்பதாகும்.''**

பால்ய விதவைகளின் மறுமணம்பற்றி வந்திருக்கும் ஒரு கடிதத்திலிருந்து முக்கியமான பகுதியைக் கீழே கொடுத்திருக்கிறேன்:

"1923-ம் வருடம் செப்டம்பர் மாதம் 23-ம் தேதி வெளிவந்த 'யங் இந்தியா'வில், பி. அக்ராவுக்குத் தாங்கள் அளித்திருக்கும் பதிலில் பெற்றோர்களே பால்ய விதவைகளுக்கு மறுமணம் செய்ய வேண்டு மென்று சொல்லுகிறீர்கள். கன்யாதானம் செய்து கொடுக்கிற, அதாவது சாஸ்திர விதிப்படி பெண்களை மணம் செய்துகொடுக்கிற, பெற்றோரால் இதை எப்படிச் செய்ய முடியும்? பெண்ணைப் பொறுத்தவரையில் தங்களுக்கு இருக்கிற உரிமைகள் யாவற்றையும் தெய்வ சாட்சியாக, மதச் சடங்குகளின் மூலமாக, பெற்றோர் மாப்பிள்ளைக்குத் தானம் கொடுக்கிறார்கள்; இதற்குப் பின் மாப்பிள்ளை இறந்துவிடுவாரேயானால் இன்னொருவனுக்குப் பெண்ணை மீண்டும் மணம் செய்துகொடுப்பதற்குப் பெற்றோருக்கு நிச்சயமாக அதிகாரம் இல்லை. விரும்பினால், பெண் தானாகவே மறுமணம் செய்துகொள்ளலாம். அவளை ஒரு நன்கொடையாக, அதாவது, தானமாகக் கணவனுக்கு வழங்கிய பின்னர், கணவன் இறந்துவிடுவாரேயானால், அவளை வேறொருவருக்கு மீண்டும் மணம் செய்து கொடுக்கிற உரிமை இந்த உலகில் உள்ள பெற்றோர் யாருக்குமே கிடையாது. அதே காரணத்தினாலே, கணவன் இறக்கும் சமயத்தில் தெளிவாக அவன் சம்மதியைப் பெறாமல் மறுமணம் செய்து கொள்ளும் மனைவி, இறந்த கணவனுக்கு உண்மையற்றவளாகவும், துரோகமாக நடந்துகொண்டவளாகவும் ஆவாள். பெரும்பாலான சநாதனிகளுக்கிடையே பழக்கமாக இருக்கும் கன்யாதான முறைப்படி மணம் செய்து கொடுக்கப்பட்ட பெண், விதவையானால், அவள் குழந்தையாக இருப்பினும் சரி, இளம் பெண் அல்லது வயதானவளாக யிருப்பினும் சரி, கணவன் அனுமதி அளித்திருந்தா லன்றிமறுமணம் செய்து

கொள்வது முடியாத காரியம். எனினும், உண்மையான சநா தனியாய் இருக்கும் கணவன் இவ்விதம் அனுமதி கொடுக்க வேண்டுமென்பதைப் பொறுக்க மாட்டான். முடியுமானல், அவள் தன்னுடன் உடன்கட்டை ஏறுவதையே விரும்புவான். அப்படியில்லையென்ருல், எஞ்சிய அவளது வாழ்நாள் முழுவதை யும், தன்னை நினைந்துகொண்டே அல்லது கடவுள் பக்தியிலே— இரண்டும் ஒன்றுதான் — போக்குதலையே அவன் விரும்புவான். ஹிந்து மணமும் கைம்மையும் ஒன்றுக்கொன்று உதவியாக இருப்பன. எனவே, அந்த உயர்ந்த இலட்சியங்களைச் சிதையா மற் காப்பது தனது கடமை என்ற எண்ணமும் காக்க வேண்டு மென்ற தனது விருப்பமே அவனுடைய உள்ளத்தில் குடி கொண்டிருக்கும்.''

உயர்ந்த ஒரு இலட்சியத்தை விபசாரம் செய்கிற வாதம் என்றே இதைக் கருதுகிறேன். மேலே சொன்ன நிருபர் இவ் விதம் உண்மையாகவே எண்ணுகிருர் என்பதில் சந்தேக மில்லை; ஆனால், பெண்கள் புனிதமாக இருக்க வேண்டும் என் பதில் அவருக்குள்ள அளவு கடந்த ஆத்திரம் அடிப்படை யான நியாயத்தை மறந்துவிடச் செய்கிறது. சிறு குழந்தை கள் விஷயத்தில் கன்யாதானம் என்ருல் என்ன? சொத்தைப் போல, குழந்தைகளின்மீது ஆதிக்கம் செலுத்தத் தந்தைக்கு என்ன உரிமை இருக்கிறது? அவர் அந்தக் குழந்தைகளின் பாதுகாப்பாளரே தவிர அவர்களின்மீது பாத்தியத்தை கொண்டாடத்தக்க உரிமை அவருக்கு இல்லை. அவர் தனது பாதுகாப்பிலுள்ளவர்களின் சுதந்திரத்தை விற்பனை செய்ய எண்ணுவதன் மூலம் பாதுகாப்பாளன் என்ற தனது உரிமை யையும் இழந்துவிடுகிருர். மேலும், நன்கொடை பெறத்தகுந்த பக்குவம் இல்லாத நிலையில் நன்கொடையென்பது எங்கிருந்து வருகிறது? கன்யாதானம் என்பது உண்மையில் ஆன்மாவின் சிறப்பை எடுத்துக்காட்டக் கூடிய மறைமுகமான ஒரு மதச் சடங்கே. இந்தப் பதங்களை அவை குறிக்கும் வெளிப்படை யான பொருளில் உபயோகிப்பது, பாஷையையும் மதத்தை யும் தவருன முறையில் உபயோகப்படுத்துவதாகும். அவை களை அப்படி அர்த்தம் செய்துகொள்வதென்ருல் அப்புறம் உட்பொருளோடு கூடிய புராணங்களின் பாஷையையும் வெளிப்படையாக அர்த்தம் செய்துகொண்டு, ஆயிரம் தலை களையுடைய பாம்பின் படத்தின்மீது மேடு பள்ளமில்லாத தட்டுப் போன்ற பூமி நின்றுகொண்டிருக்கிற தென்றும், கடவுள் பால் கடலில் சௌக்கியமாகப் பள்ளிகொண்டிருக்கிருர் என்றும் நம்பலா மல்லவா?

முதுமை மேலீட்டால் ஏதாவது பிதற்றிக்கொண் டிருக்கும் கிழவனுக்கோ, பருவமடையாத இளம் பையனுக்கோ, குழந்தைப் பருவத்திலுள்ள தன் மகளை மணம் செய்து கொடுக்கிற தந்தை, தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட பொருளைத் தவருக உபயோகித்தவனுகிறுன். இந்தப் பாபத்தினின்றும் தன்னை மீட்டுக்கொள்ள, குறைந்த பக்ஷம் அவன் செய்ய வேண்டிய பிராயச்சித்தம், பெண் விதவையாகும்போது அவளுக்கு மறுமணம் செய்விப்பதாகும்: நான் முன்பு ஒரு இடத்தில் சொல்லியிருப்பது போல, ஆரம்பத்திலிருந்தே இம் மாதிரி மணங்களை செல்லுபடியாகாத மணங்களாகவே அறிவித்துவிட வேண்டும்.

# விதவைகளுக்கு மறுமணம்

**"குழந்தைப் பருவத்திலிருந்தே வேண்டு மென்றே மிகுந்த கவனத்தோடு நம்மிடையே அடிமை மனப்பான்மையை வளர்க்கிறார்கள். சுதந்திரமாக நம்மால் எண்ண முடியா விட்டால், எப்படி நம்மால் சுதந்திரமாகச் செயலாற்ற முடியும்? சாதிக்கும் அன்னியக் கல்விக்கும் அன்னிய அரசாங் கத்திற்கும் நாம் ஒருங்கே அடிமைகளாக இருக்கிறோம்."**

நண்பர் ஒருவர் தம் மனதிலுள்ளதைக் களங்கமின்றிக் கீழ்வருமாறு வெளியிட்டிருக்கிறார் :

*"பரிதாபகரமான நிலையிலிருக்கும் நமது விதவைகளைப்பற்றித் தாங்கள் ஏன் உறுதியாக ஒன்றும் சொல்லா திருக்கிறீர்கள்? பண்டைப் பழக்க வழக்கங்களில் ஊறிப்போயிருக்கும் பெற்றோர்களும் ஆதரவாளர்களும் நியாயத்திற்கு ஒருகாலும் செவி சாய்க்கப் போவதில்லை. விதவைகள், தாமாக முன்வந்து மறு மணம் செய்துகொள்ளும் முறையில் தாங்கள் அவர்களுக்கு ஏன் ஊக்கமளித்தல் கூடாது?*

*"மேலும் நம்மிடையே கேவலமான சீதன முறை, சாந்தி முகூர்த் தத்திலும், சாவிலும் நடத்தும் விருந்துகள் முதலிய கணக்கற்ற தீய பழக்கங்களும், கொடிய ஊழல்களும் இருக்கத்தானே செய்கின்றன ?"*

ஓரளவுக்கு விதவை மறுமணம் நடைபெற வேண்டுவது அவசியந்தான். நமது இளைஞர்கள் தங்களைத் தூய்மைப் படுத்திக் கொண்டால்தான் இந்தச் சீர்திருத்தத்தைக் கொண்டுவர முடியும். உண்மையிலேயே அவர்களிடம் தூய தன்மை உண்டா? கற்ற கல்வியினால் அவர்கள் பயனடை கிறார்களா? இல்லாவிட்டால் அந்தக் கல்வியைக் குறைகூறிப் பயன் என்ன? குழந்தைப் பருவத்திலிருந்தே வேண்டு மென்றே மிகுந்த கவனத்தோடு நம்மிடையே அடிமை மனப்பான்மையை வளர்க்கிறார்கள். சுதந்திரமாக நம்மால் எண்ண முடியாவிட்டால், எப்படி நம்மால் சுதந்திரமாகச் செய லாற்ற முடியும்? சாதிக்கும், அன்னியக் கல்விக்கும், அன்னிய அரசாங்கத்துக்கும் நாம் ஒருங்கே அடிமைகளாக இருக்கிறோம். நமக்கு அளித்திருக்கும் ஒவ்வொரு வசதியும் நம்மைப் பிணிக் கும் தளையாக மாறியிருக்கிறது. நம் மத்தியிலேயே எத்தனை யோ படித்த இளைஞர்கள் இருக்கிறார்கள்; தங்கள் சொந்த வீடுகளிலுள்ள விதவைகளின் பரிதபிக்கத்தக்க நிலையைப் பற்றி அவர்களில் ஒருசிலராவது எண்ணிப் பார்த்திருக்கிறார் களா? பண ஆசையினால் அவர்களது மனம் நடுநிலைமையி லிருந்து தடுமாற்றம் அடையாமல் இருக்கிறதா? எத்தனை இளைஞர்கள் விதவைப் பெண்களைத் தங்கள் சொந்த

சகோதரிகளாகவும் தாய்மார்களாகவும் மதித்து அவர்களின் கண்ணியத்தைக் காப்பாற்ற முன்வந்திருக்கிறார்கள்? எத்தனை பேர், தாங்கள் சரி என்று உணர்ந்தவற்றை ஆதாரமாகக்கொண்டு தைரியமாகத் தங்கள் தங்கள் ஜாதிகளிடையே காணப்படும் ஊழல்களை எதிர்த்து நின்றிருக்கிறார்கள்? பாவம் விதவை உதவிக்கு யாரிடம் போவாள்? அவளுக்கு என்னால் என்ன ஆறுதல் சொல்ல முடியும்? 'நவஜீவ'னை படிக்கிறவர்கள் விதவைகளில் சிலராவது உண்டா? அப்படிப் படிப்பவர்களில் சிலராவது தங்களுக்கு நியாயம் என்று உணர்ந்தவற்றைச் செயலில் காட்ட முடியுமா? இருப்பினும், 'நவஜீவன்' பத்திரிகையில் சந்தர்ப்பம் வாய்க்கும்போது, விதவைகளின் துயரத்தை எடுத்துக்காட்டச் சில பகுதிகளைப் பயன்படுத்தியிருக்கிறேன். அப்படியே இனி மேலும் சந்தர்ப்பம் வாய்க்கும்போதெல்லாம் செய்வேனென்று நம்புகிறேன். அதற்கிடையில், தன் பார்வையின்கீழ் பால்ய விதவையை வைத்திருக்கும் ஒவ்வொருவரையும், அவளை மணம் செய்து கொடுப்பது தம் கடமையென்று கருதும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்.

மேலே சொன்ன நிருபர் நமது சமூகப் பழக்கங்களின் பயங்கரமான தன்மையை வெளிப்படுத்தியிருக்கிறார். ஆனால் உடல் முழுதுமே அழுகி நாற்றம் எடுக்கும்போது, இங்கே ஒன்றும் அங்கே ஒன்றுமாகச் சில ஓட்டை உடைசல்களைச் சீர்ப்படுத்துவதன் மூலம், நாம் எப்படித் திருப்தி யடைய முடியும்? சாவுக்குப் பின் நடத்தும் விருந்துகள் காட்டுமிராண்டித்தனமானவை. சாந்திமுகூர்த்த விருந்துகள் அவைகளுக்கு எவ்வகையிலும் குறைந்தவையல்ல; சாந்திமுகூர்த்த விருந்துகள் சாவு விருந்துகளைப்போல அவ்வளவு அநாகரிகமானவையல்லவென்று நாம் கருதலாம். ஏனென்றால் உலக முழுதும் மணத்தின்போது செய்யும் மதச்சடங்கு அனேகமாகச் செலவை உண்டுபண்ணுகிற காரியமாகவே இருக்கிறது. ஆனால், இழவு விருந்துகள் ஹிந்துகளுக்கே ஏகபோக உரிமையாக இருக்கின்றன. இவையும் இவை போன்ற இதர விஷயங்களும் நாம் கட்டாயமாகக் கவனிக்க வேண்டியவையாகும். ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்ற விழிப்பு மக்களுக்கு ஏற்படும்போதும், அவர்களது எண்ணம் விடுதலையடையும்போதும் சீர்திருத்தம் என்பது தானாகவே வந்துவிடும். நமது எண்ணமும் செயலும் விடுதலை பெறாமல் இருக்கும்வரையில், ஒட்டுவேலையால் ஒரு பயனும் ஏற்படாது.

# ஒடுக்கப்பட்ட மக்கள்

**"இரண்டு குழந்தைகளை ஒன்று சேர்க்கிற காரியத்தை மணம் என்று சொல்லி, அதன் பிறகு 'கணவன்' இறந்ததும் அந் தப் பெண்ணின்மீது கைம்மையைப் புகுத்துவது, கடவுளுக் கும் மனித வர்க்கத்திற்கும் செய்யும் பாதகச் செயலாகும."**

**தீ**ண்டத்தகாதார் என்போர் மட்டும் ஒடுக்கப்பட்ட மக்கள் அல்லர்; ஹிந்து சமூகத்திலுள்ள இளம் விதவைகளும் அவர்களைப்போல் ஒடுக்கப்பட்ட மக்களே ஆவர். வங்காளத்தி லிருந்து ஒரு நிருபர் எழுதுகிறார் :

"முஸ்லிம்களிடையே விதவை மறுமணத்தைப்பற்றி எவ்விதக் கட்டுப்பாடுமில்லை ஆனால், ஒரு ஆண்பிள்ளை நான்கு மனைவிகள் வரையில் மணம் செய்துகொள்ளலாம் என்ற ஏற்பாடு அவர் களிடையே வழக்கத்தில் இருக்கிறது; அதனால் அனேக முஸ் லிம்கள் பல முறை மணம் செய்துகொண்டு, பல மனைவியர் களுடன் வாழ்க்கை நடத்துகிறார்கள். எனவே, முஸ்லிம் ஆண் மக்களில் ஒருவர்கூட மணமாகாமல் இருப்பதில்லை. ஆதலால், விதவை மறுமணத்திற்குத் தடையில்லாமல் இருக்கும்போது ஆண்களைவிடப் பெண்களின் எண்ணிக்கை மிக அதிகமாக இருக்கிறதென்பது உண்மையல்லவா? வேறு விதமாகச் சொன்னால் விதவை மறுமணத்தை அனுமதிக்கும் சமூகங்களில் பல தார மணத்தையும் அனுமதிக்க வேண்டியதுதானே?

"ஹிந்துக்களிடையே விதவை மறுமணம் நடக்க வேண்டுமென்றால், இளம் விதவைகள் தங்களை மணக்கும்படி இளைஞர்களைத் தூண்ட மாட்டார்களா? அதன் மூலம் மணமேயாகாத பெண்களுக்கு மாப்பிள்ளைகள் கிடைப்பது அரிதாகிவிடுமல்லவா?

"ஒரு ஹிந்து ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகளை மணக்கலாம் என்ற ஏற்பாடு இராவிட்டால் இப்போது விதவைகள் செய் கிற அல்லது செய்வதாகக் கருதுகிற பாவங்களை யெல்லாம் மணமாகாத பெண்களும் செய்ய மாட்டார்களா?

"விதவை மறுமணத்தை நீங்கள் சிபாரிசு செய்யுமுன் காதல், புனிதமான இல்லற வாழ்க்கை, பதிவிரதா தர்மம் இன்னும் இவைபோன்ற விஷயங்களையும் எண்ணிப் பார்க்க வேண்டு மென்று தங்களுக்கு ஞாபகமூட்டலாமா?"

விதவைகள் மறுமணம் செய்துகொள்வதைத் தடுக்க வேண்டுமென்ற உத்ஸாகத்தில் மேலே கண்ட நிருபர் பல விஷயங்களைக் கவனிக்காமல் விட்டுவிட்டார். ஒரு மனைவிக்கு மேல் மணந்துகொள்ளும் உரிமை முஸ்லிம்களுக்கு இருக்கிற தென்பது வாஸ்தவமே. ஆனால், அவர்களில் மிகப் பெரும்

பான்மையோர் ஒரு மனைவியோடேயே வாழ்க்கை நடத்துகிறார்கள். துர்பாக்கியவசமாக ஹிந்து சமூகத்தில் பலதார மணத்திற்குத் தடை எதுவும் இல்லை என்பது இந்த நிருபருக்குத் தெரியாது போலும். உயர்ந்த வட்டாரங்களிலுள்ள ஹிந்துக்கள்தான் ஒரு மனைவிக்கு மேல் மணம் செய்துகொள்ளுகிறார்களென்று தெரிகிறது. அனேக சுதேச மன்னர்கள், எண்ணற்ற மனைவிகளை மணந்து வாழ்க்கை நடத்துகிறார்கள். உயர்ந்த வகுப்பினர் என்று சொல்லும் மக்களிடையேதான் விதவை மறுமணத்திற்குத் தடை இருக்கிறதென்ற உண்மையையும் நமது நிருபர் மறந்துவிடுகிறார். நான்காவது வருணத்தைச் சேர்ந்த மக்களில் மிகப் பெரும்பாலோரிடையே விதவைகள் தாராளமாக மறுமணம் செய்துகொள்ளுகிறார்கள்; அதனால் எதிர்மாறான விளைவுகள் ஒன்றும் ஏற்படவில்லை. ஒரே சமயத்தில் ஒரு மனைவிக்கு மேல் மணந்துகொள்ளத் தடையில்லாவிட்டாலும், பெரும்பாலோர் ஒரே வாழ்க்கைத் துணைவியோடு வாழ்க்கை நடத்துவதுதான் திருப்தி தரும் என்று எண்ணுகிறார்கள்.

இளம் விதவைகள் எல்லா இளைஞர்களையும் மணந்துகொண்டுவிடுவார்கள்; மணமாகாத கன்னிப் பெண்களுக்கு ஒரு இளைஞனைக்கூட விட்டுவைக்க மாட்டார்கள் என்று சொல்வது, விஷயத்தை சீர்தூக்கிப் பார்க்கிற அறிவு சிறிதுகூட அவருக்கு இல்லை என்பதைக் காட்டுகிறது. இளம் பெண்கள் பதிவிரதைகளாக இருக்க வேண்டுமென்பதில் அளவுக்கு மிஞ்சி ஆத்திரம் காட்டுவது மனசு சுத்தமற்று இருக்கிறதென்பதையே வெளியிடுகிறது. ஏதோ சில விதவைகள் மறுமணம் செய்துகொள்வதால் ஏராளமான இளம் பெண்கள் மணமாகாமல் இருக்கும் நிலைமை ஒரு நாளும் ஏற்பட முடியாது. எப்போதாவது இந்தப் பிரசினை எழுந்தது என்றால், இன்று நடைபெற்று வரும் சிறு பிராய மணம்தான் அதற்குக் காரணம் என்பதைக் கண்டுகொள்வோம். அதற்குப் பரிகாரம் அந்த நிலையை எதிர்பார்த்து முன்கூட்டியே சிறுபிராய மணங்களைத் தடை செய்வதேயாகும்.

இளம் பிராயத்திலுள்ள பெண் விதவையாயிருக்கும் இடத்தில், காதல், இல்லற வாழ்க்கையின் புனிதம் முதலியவைகளைப்பற்றி எவ்வளவுக்குப் பேசாமல் இருக்கிறோமோ அவ்வளவுக்கு நல்லது.

ஆனால் இந்த நிருபர் நான் சொல்லுகிற விஷயத்தை அப்படியே விட்டுவிட்டார். விதவைகள் என்று சொல்லுபவர்

கள் அனைவருக்குமே மறுமணம் செய்துவிடத்தான் வேண்டுமென்று நான் ஒருபோதும் சொன்னது கிடையாது. ஸர் கங்கா ராம் அவர்கள் திரட்டிய இப்புத்தகத்தில் சுருக்கமாகக் கொடுத்திருக்கும் புள்ளிவிவரங்கள் 15 வயது வரையிலுள்ள விதவைகளை மட்டுமே குறிக்கின்றன. பல கஷ்டங்களுக்குள்ளாக்கப்பட்டிருக்கும், பரிதாபகரமான நிலையிலிருக்கும் இந்த ஜீவன்களுக்குப் பதிவிரதா தர்மத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாது. காதல் என்பதை அவர்கள் கண்டதேயில்லை. இந்தப் பெண்கள் மணமே செய்துகொள்ளவில்லை யென்று சொல்லுவதுதான் உண்மையாக இருக்கும். மணம் என்பது அந்தராத்மாவின் அறிகுறியாக இருக்கும் ஒரு மதச்சடங்கு, புதிய வாழ்க்கைக்குள் கொண்டு செல்லும் ஒரு காரியம், என்று இருக்குமானால்—அப்படித்தான் இருக்க வேண்டும்—மணம் செய்யப்போகும் பெண்கள் பூரண வளர்ச்சியடைந்து வாழ்க்கைத் துணைவனாக இருக்கப்போகும் கணவனைத் தேர்ந்தெடுப்பதிலும் பங்கு பெற்று, தாங்கள் செய்யும் காரியத்தின் பலாபலன்களையும் உணர்ந்திருக்க வேண்டும். இரண்டு குழந்தைகளை ஒன்றுசேர்க்கிற காரியத்தை மணம் என்று சொல்லி, அதன் பிறகு 'கணவன்' இறந்தவுடன் அந்தப் பெண்ணின் மீது கைம்மையைப் புகுத்துவது கடவுளுக்கும் மனித வர்க்கத்துக்கும் இழைக்கும் பாதகச் செயலாகும்.

உண்மையான ஹிந்து விதவை ஒரு பொக்கிஷம் என்று நான் நம்புகிறேன். மனித வர்க்கத்திற்கு ஹிந்து தர்மம் அளித்த நன்கொடைகளில் ஹிந்து விதவையும் ஒன்று. ரமாபாய் ரானடே ஹிந்து சமூகம் அளித்த நன்கொடையாகவே விளங்கினார். ஆனால், இளம் பெண்கள் விதவைகளாயிருப்பது ஹிந்து தர்மத்துக்கே ஒரு களங்கமாகும். ரமாபாய் ரானடே இருந்தார் என்பது, இந்தக் கறையைப் போக்குவதற்குரிய பரிகாரமாகாது.

ஆளவும் தகுதியுள்ள ஆண்பிள்ளைகள் — 30 கோடி மக்கள் நிறைந்த நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கத் தகுதியுள்ளவர்கள் — என்று நாம் நம்மை, சொல்லிக்கொள்ள முடியுமா? இப்படித் தடுப்பது மதமன்று. மதத்திற்கே மாறுபட்ட ஒரு காரியமாகும். ஹிந்து மதத்தின் உணர்ச்சியில் ஊறித் திளைத்திருப்பவன் நான். இருப்பினும் இதை நான் சொல்லத்தான் செய்கிறேன். என்னிடம் மறைந்திருக்கும் மேலை நாட்டு உணர்ச்சி இப்படிப் பேசத் தூண்டுகிறதென்று தவறாக நினைத்துக்கொள்ளாதீர்கள். இந்தியன் என்ற புனிதமான உணர்ச்சி என் மனதில் அப்படியே பொங்கிக்கொண்டிருக்கிறது; இதை உரிமை பாராட்டிச் சொல்ல முடியும். மேலை நாட்டிலிருந்து நான் பலவற்றை எடுத்துக்கொண்டிருக்கிறேன். ஆனால், இதை நான் எடுத்துக்கொள்ளவில்லை. இம்மாதிரியான கைம்மைக்கு ஹிந்து தர்மத்தில் ஆதாரமில்லை.

பால்ய விதவைகளைப்பற்றி நான் சொன்னவை யாவும், பால்ய மனைவிகள் விஷயத்திலும் பொருந்தவே செய்கின்றன. 16 வயதுக்கு உட்பட்ட பெண்ணை மணப்பதில்லையென்று உறுதிசெய்துகொள்ளும் அளவுக்காவது காமத்தைக் கட்டுப்படுத்தும் சக்தி நிச்சயம் உங்களிடம் இருக்கவேண்டும். முடியுமானால், 20 வயதுக்குக் குறையாத பெண்ணையே மணக்க வேண்டும் என்று சொல்லுவேன். இந்தியாவில் 20 வயது என்பது சிறு பிராயம்தான். பெண்கள் ரொம்பச் சிறு பிராயத்திலேயே மண வாழ்க்கையைப் பற்றிச் சிந்தனை செய்கிறார்களென்றால் அதற்குக் காரணம் நாமே ஒழிய இந்திய சீதோஷ்ண நிலையன்று. 20 வயதுள்ள பெண்கள் பலர் புனிதத்தன்மையைப் பாதிக்காமல் பரிசுத்தமாக இருப்பதையும், தங்களைச் சுற்றிலும் சுழன்றடித்துக்கொண்டிருக்கும் சூறைக்காற்றையும் சமாளிக்கும் சக்தி வாய்ந்திருப்பதையும் நான் அறிவேன். பெண்கள் பால்ய வயதில் பக்குவமடைகிறார்களென்ற இந்த எண்ணத்தை நாம் போற்றி வளர்க்க வேண்டியதில்லை. சில பிராமண மாணவர்கள் இந்தக் கொள்கையைப் பின்பற்ற முடியாமலிருப்பதாக என்னிடம் சொல்லுகிறார்கள். 16 வயதுள்ள பிராமணப் பெண்கள் கிடைக்க மாட்டார்கள் என்றும், பிராமணர்களில் வெகு சிலரே 16 வயது வரை தங்கள் பெண்களை மணம் செய்யாமல் வைத்திருப்பார்கள் என்றும். 11, 12, 13 வயதுக்கு முன்பே பிராமணப் பெண்களுக்கு மணமாகிவிடுகிறதென்றும், அவர்கள் சொல்லுகிறார்கள். அப்படியானால், பிராமண இளைஞனுக்கு நான் சொல்லுகிறேன். உன்னால் உன்னையே கட்டுப்படுத்திக்கொள்ள முடிய

வில்லையென்றால், பிராமணனாக இருப்பதை விட்டுவிடு. பாலியத்திலேயே விதவையான பக்குவமடைந்த 16 வயதுள்ள பெண்ணொருத்தியைத் தேர்ந்தெடுத்துக்கொள். 16 வயதான பிராமண விதவை கிடைக்கவில்லையென்றால், உனக்குப் பிடித்த எந்த சாதிப் பெண்ணையாவது மணந்துகொள். 12 வயதுப் பெண்ணைப் பலவந்தமாகப் புணர்வதைவிட வேறு சாதியில் மணம் செய்துகொள்வதே உத்தமம் என்று கருதும் இளைஞனை ஹிந்துக்களின் கடவுள் மன்னித்துவிடுவார் என்று நான் சொல்லுவேன். உங்கள் இதயம் பரிசுத்தமாக இல்லை. உங்களால் காம இச்சைகளைக் கட்டுப்படுத்த முடியவில்லையென்றால், படித்தவர்கள் என்று உங்களைச் சொல்ல முடியாது. உங்கள் ஸ்தாபனம் முதன்மையானது என்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள். அப்படிப்பட்ட முதன்மையான ஸ்தாபனம் சீலத்தில் சிறந்து முன்னணியில் நிற்கும் இளைஞர்களை உற்பத்தி செய்ய வேண்டும். இந்த ஸ்தாபனத்தின் பெயருக்குப் பொருத்தமான முறையில் நீங்கள் வாழ்க்கை நடத்த வேண்டுமென்று நான் விரும்புகிறேன். சீலமில்லாத கல்வி எதற்கு? சொந்த வாழ்க்கையில் ஓரளவுகூடப் பரிசுத்தமில்லாத சீலத்தினால் என்ன பயன்? பிராமணத்துவத்தை நான் ஆதரிக்கிறவன்தான். வர்ணாச்சிரம தர்மம் நியாயமானதென்று நான் வாதாடியிருக்கிறேன். ஆனால், தீண்டாமை, கன்னிக் கைம்மை, கன்னியரை வலிந்து புணர்வது ஆகிய இவைகளை ஆதரிக்கிற பிராமணத்துவத்தை என்னால் சகித்துக்கொள்ள முடியாது. அது பிராமணத்துவம் அல்ல, பிராமணத்துவத்தை இழிவுபடுத்தி ஏளனம் செய்கிற ஒரு காரியம் இது. இதில் பிரமத்தை அறிவதற்கு இடமேயில்லை. இது ஸ்மிருதியின்படி நடப்பதாகாது. கலப்பில்லாத மிருகத்தனம் இது. பிராமணத்துவம் இதைவிடச் சிறந்த பொருளால் ஆக்கப்பட்டிருக்கிறது. உங்கள் இதயத்தில் இந்த விஷயங்கள் பதிய வேண்டுமென்பது எனது விருப்பம். நான் பேசுகிறபோதே மாணவர்களையும் கவனித்துக்கொண்டு வருகிறேன். எனது இதயத்திலுள்ள உணர்ச்சிகளைக் கொட்டிக்கொண்டிருக்கிறேன், தன்னையே தாங்க முடியாமல் ஒருவர் சிரிக்கிற சப்தத்தைக்கேட்க எனக்குத் துன்பமாஇருக்கிறது. உங்களது அறிவினிடமல்ல, இதயத்தினிம் சொல்லிக்கொள்ளவே நான் இங்கு வந்திருக்கிறேன். இந்த நாடு உங்களை நம்பியிருக்கிறது, நான் இங்கே சொன்ன விஷயங்கள் உங்களுக்கு ரொம்ப முக்கியமானவை யாகும்.

# ஆத்திரமானதொரு கண்டனம்

**“ விதவைகள் பிரமசரிய விரதத்தை அனுஷ்டித்தால் முத்தி பெற வார்களென்று கூறுவதற்கு அனுபவபூர்வமான ஆதாரம் எதுவு மில்லை. முத்தி பெறுவதற்குப் பிரமசரிய விரதம் மட்டும் போதாது; வேறு எத்தனையோ வேண்டும்,”**

*வங்காளப் பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர் ஒருவர் கீழ் வருமாறு எழுதுகிறார் :*

*“ நீங்கள் சென்னை மாணவர்களிடையே பேசியபோது அவர்கள் கைம்பெண்களை மணக்க வேண்டுமென்று அவர்களுக்குச் சொன்ன கருத்தையும் அறிவுரையையும் கேட்டு நாங்கள் அச்ச மும் அருவருப்பும் அடைந்தோம். அதையொட்டி எனது தாழ் மையான, ஆனால் ஆத்திரமான. இந்தக் கண்டனத்தைத் தங்க ளுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.*

*‘ வாழ்க்கை முழுவதும் காம இன்பத்தைத் துறந்து, வாழ்க்கை நடத்தும் விரதத்தை விதவைகள் அனுஷ்டிக்கிறார்கள். இந்த மனப்பான்மை இந்தியப் பெண்குலத்துக்கு உலகத்திலேயேமிக உன்னதமான நிலையை அளித்திருக்கிறது. நீங்கள் கூறும் இந்த அறிவுரையானது அந்த மனப்பான்மையை அழித்துவிடத் தான் ஏதுவாயிருக்கும்; தவிர அவ்விரதத்தை மேற்கொண்டு அதன் மூலம் அவர்கள் ஒரே பிறவியில் முத்தி பெறுவதற்குள்ள சந்தர்ப்பங்களையும் அழித்து, அவர்களை உலக இன்பமென்ற நாற்றம் நிறைந்த படுகுழியில் வீழ்த்துகிறது. எனவே, விதவை களிடம் காட்டும் இம்மாதிரியான அநீத அனுதாபம் அவர் களுக்கே பெரிய தீமை புரிவதாகும்; அதனோடு மணமாகாமல் இருக்கிற பெண்களுக்கு மணமுடிப்பதென்பது தற்போது ரொம்பக் கஷ்டமானதாகவும் சிக்கலானதாகவும் இருக்கிறது; மேற்சொன்னபடி அனுதாபம் காட்டுவது இப்பெண்களுக்கும் அநியாயம் செய்வதாகும். மணம் சம்மந்தமாக நீங்கள் கொண் டிருக்கும் கோட்பாடானது, ஆன்மா ஒரு உடம்பைவிட்டு இன் னொரு உடம்பைப் பெறுகிறது என்ற கொள்கை, மறுபிறப்பு, முத்தி ஆகிய ஹிந்து மதக் கோட்பாடுகளையும் தலை கீழாக்கி விடுகிறது. சில சமூகங்களின் சமய நிலை நமக்குப் பிடிப்ப தில்லை; உங்களுடைய கோட்பாடானது நமது சமுதாயத்தை யும் அந்தச் சமூகங்களின் நிலைக்குக் கொண்டுவந்துவிடும். நமது சமுதாயமும் கேவலமான நிலைக்கு வந்துவிட்டதென்பது உண் மைதான். ஆனால் நாம் ஹிந்து மத இலட்சியங்களை உள்ளத் திலே நிறுத்தி அவற்றையடைய நம்மால் முடிந்தவரையில் மேல் நோக்கிச்செல்ல முயல வேண்டுமேயன்றி இதர சமு தாயங்களையும், அவற்றின் இலட்சியங்களையும் உதாரணமாகக்*

கொண்டு, அவற்றைப் பின்பற்றக் கூடாது. அகல்யா பாய், ராணி பவானி, சீதை, சாவித்திரி, தமயந்தி போன்றோரின் செயல்களே ஹிந்து சமுதாயத்திற்கு வழிகாட்டும். அவர்களின் இலட்சியங்களுக்கு ஏற்ப, நாம் நமது சமுதாயத்தை நடத்த வேண்டும். ஆகையால், சிக்கலான இந்தப் பிரசினைகளைப்பற்றித் தாங்கள் அபிப்பிராயம் தெரிவிப்பதை நிறுத்திக்கொண்டு, எப்படி நடப்பது நல்லதென்று நம் சமூகம் கருதுகிறதோ, அப்படியே நடந்துகொள்ளும்படி சமூகத்தை விட்டுவிடுமாறு, தங்களை மிகத் தாழ்மையோடு கேட்டுக் கொள்கிறேன்.''

ஆத்திரம் நிறைந்த இந்தக் கண்டனமானது எனது அபிப்பிராயத்தை மாற்றவும் இல்லை, நான் செய்த காரியத்திற்காக எனக்கு வருத்தம் அளிக்கவும் இல்லை. எனது ஆலோசனையானது, மன உறுதி பெற்றுள்ள விதவையையும், பிரமசரியம் என்பது என்ன என்று தெரிந்து அதை அனுஷ்டிப்பதில் கண்ணுங் கருத்துமாயுள்ள விதவையையும் தம் நோக்கத்திலிருந்து வழுவும்படி செய்துவிடாது. ஆனால் மணவினை நடைபெற்றபோது மணம் என்பதன் கருத்தே என்னவென்று அறியாத இளவயதுப் பெண்கள் பலர் இருந்திருக்கிறார்கள். அவர்களுக்கு என் ஆலோசனை நிச்சயமாக ஒரு பெரிய ஆறுதலளிக்கும்; இப்படிப்பட்ட சிறுமிகளை 'விதவை' என்று அழைப்பது, புனிதமான தொடர்பு அமைந்த அச் சொல்லைப் பலவந்தமாகக் கெட்ட முறையில் உபயோகிப்பதாகும். மேற்சொன்ன ஆசிரியர் எந்த நோக்கத்தோடு எழுதியிருக்கிறாரோ அதே நோக்கத்தோடுதான், இந் நாட்டு இளைஞர்கள் மணந்தால் விதவைகளை மணக்க வேண்டும். இல்லையெனில் மணம் செய்துகொள்ளக் கூடாது என்று நான் அவர்களுக்கு அறிவுறுத்துகிறேன். கைம்மையின் புனிதத்தன்மையைக் காப்பாற்ற வேண்டுமென்றால், குழந்தைப் பருவத்திலேயே கைம்மை நேருவதென்ற தீமையைச் சமூகத்திலிருந்து களைந்துதான் ஆக வேண்டும்.

விதவைகள் பிரமசரிய விரதத்தை அனுஷ்டித்தால் முத்தி பெறுவார்கள் என்று கூறுவதற்கு அனுபவபூர்வமான ஆதாரம் எதுவும் இல்லை. முத்தி பெறுவதற்குப் பிரமசரிய விரதம் மட்டும் போதாது; வேறு எத்தனையோ வேண்டும். மேலும் பலவந்தமாகச் சுமத்தப்படும் பிரமசரியத்தினால் ஒரு பயனும் இல்லை. அது இரகசியமாகத் தீய வழியிலே ஒழுகுவதற்கு இடங்கொடுக்கிறது. மறைவான தீய ஒழுக்கமானது ஒரு சமுதாயத்திலே இருந்தால், அந்தச் சமுதாயத்தின் நன்ன

டத்தையையே அது போக்கிவிடுகிறது. எனது சொந்த அனுபவத்திலிருந்தே இதை நான் எழுதுகிறேன் என்பதை இந்த ஆசிரியர் அறிய வேண்டும்.

நான் கூறிய ஆலோசனையின் பயனாக, கணவரோடு கூடி வாழாத விதவைகளுக்கு அடிப்படையான நியாயம் வழங்கப் பெற்றால், எனக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாகும். இந்த விதவைகளுக்கு நியாயம் வழங்குவதன் மூலம் சரியான பக்குவமடைவதற்கு முன்னரே மனிதனுடைய காம வெறிக்கு இரையாக்கிவிடாமல், நல்ல வயதும் அறிவும் வந்து பக்குவமடைவதற்கான காலம்வரையில் மணமாகாத மற்ற பெண்கள் காத்திருப்பதற்குரிய சந்தர்ப்பத்தையும் அளித்தவர்களாவோம்.

ஓருயிர் மற்றோர் உடம்பில் புகுவது, மறுபிறப்பு, முத்தி போன்ற நம்பிக்கைகளுக்கு முரண்பட்ட மணசம்பந்தமான சித்தாந்தம் ஒன்றையும் நான் போதிக்கவில்லை. கோடிக் கணக்கான ஹிந்துக்கள் விதவா விவாகத்தைத் தடை செய்யவில்லையென்பதை வாசகர்கள் அறிய வேண்டும். இவர்களையெல்லாம் தாழ்ந்த ரகத்தைச் சேர்ந்தவர்களென்று அவ்வாசிரியர் அகம்பாவத்தோடு வருணிக்கிறார். மனைவியை யிழந்த கிழவர்கள் மறுமணம் செய்துகொள்வது அந்த நம்பிக்கைக்கு மாறுபடவில்லையென்றால், 'விதவை' யென்று நாம் தவறாகச் சொல்லுகிற இளம் பெண்கள் செய்துகொள்ளும் உண்மையான மணம் எப்படி இந்த உயர்ந்த நம்பிக்கைக்கு மாறாக இருக்க முடியும் என்பது எனக்கு விளங்கவில்லை. ஓருயிர் மற்றோர் உடலில் புகுதலும் மறுபிறப்பும் எனக்கு வெறும் கொள்கைகள் மட்டும் அல்ல; நாள்தோறும் சூரியன் உதிப்பது எவ்வளவு வெளிப்படையான உண்மையோ, அவ்வளவு அக் கொள்கைகளும் எனக்கு உண்மையான விஷயங்கள் ஆகும்! இதை இந்த ஆசிரியர் அறிய வேண்டும். முத்தி என்பது ஓர் உண்மை; அதை உணர்வதற்கு என்னால் இயன்றவரை நான் முயன்றுவருகிறேன். முத்தி யென்ற உண்மை நிலையைச் சிந்திக்குந்தோறும், நாயகனோடு கூடி வாழாத இளம் விதவைகளுக்கு நாம் செய்துவருகிற கேட்டையும் நான் மிகத் தெளிவாக உணர்ந்து வருகிறேன்; ஆண்மையற்ற நிலையில் இருக்கிற நாம் கொடுமைக்குள்ளான இந்த இளம் விதவைகளையும் தெய்வத்தன்மை பெற்ற சீதை போன்ற உத்தமிகள் பெயரையும் ஒன்றாய்ச் சேர்த்துப் பேசலாகாது.

கடைசியாக ஒரு வார்த்தை; ஹிந்து மதத்தில் உண்மையான கைம்மை பெரிதும் பாராட்டப் பெற்றிருக்கிறது; இது

நியாயமே. ஆனால், எனக்குத் தெரிந்தவரையில், விதவைகள் மறுமணம் செய்துகொள்வதை முற்றிலும் தடைசெய்யும்படியான கட்டுப்பாடு எதுவும் வேத காலத்தில் இருந்ததாக எண்ணச் சான்றே இல்லை. ஆனால், நான் போர் தொடுப்பது உண்மைக் கைம்மை நிலையைப் பின்பற்றுவோர் மீதன்று; அந்தக் கைம்மை நிலையின் கோரமான போலி உருவத்தைக் கண்டுதான் நான் அதனோடு சண்டைபோடுகிறேன். நான் சொல்லிய இந்த இளம் பெண்களை விதவைகளென்று கருதாமலிருப்பதுதான் மேலானது. பெண்களிடம் மரியாதை காட்டுகிற இயல்பு ஒருசிறிதேனும் அமைந்துள்ள ஒவ்வொரு ஹிந்துவும், விதவைப் பெண்ணின் மேல் சுமத்தியுள்ள சமுதாயக் கொடுமையை நீக்கக் கடமைப்பட்டவராவர். ஆதலால், ஹிந்துவாய்ப் பிறந்த ஒவ்வொரு இளைஞனும் விதவைகளென்று தவறாகச் சொல்லப்படுகிற மணமாகாத இந்தப் பெண்களைத் தவிர, வேறு பெண்களை மணக்க மறுத்துவிட வேண்டும். இதையே நான் அவர்களுக்குத் தாழ்மையோடு மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறேன்.

# மணத்தை ஒழித்துவிடுங்கள்

**"மணம், வேலிபோல இருந்து மதத்தைப் பாதுகாக்கிறது என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். வேலியை அழித்துவிட்டால், மதம் சிதைந்து சின்னுபின்னப்பட்டுவிடும். மதத்தின் ஆணி வேர் கட்டுப்பாடு; மணம் என்பது கட்டுப்பாடே யன்றி வேறல்ல."**

எனக்கு நன்கு அறிமுகமான நிருபர் ஒருவர் ஒரு வாதத்தை எழுப்புகிருர். சொல் அளவோடு மட்டும் நான் அந்த வாதத்தில் கலந்துகொள்கிறேன். ஏனெனில் அவர் கூறியிருக்கும் கருத்துக்கள் அவருடையவை யல்ல வென்பது எனக்குத் தெரியும். "இப்போது நாம் அனுஷ்டிக்கிற ஒழுக்க நடை இயற்கைக்கு மாறுபட்டதாக இல்லையா?" என்று அவர் கேட்கிருர். "அது இயற்கையை ஒட்டியதாக இருந்தால், எல்லாக் காலங்களிலும் எங்கும் அது ஒரே மாதிரியாகத்தானே இருக்க வேண்டும்? ஆனல், ஒவ்வொரு சாதியும் ஒவ்வொரு சமூகமும் தத்தமக்கென விசேஷமான சில மண விதிகளை அனுஷ்டிக்கின்றனவே? மணம் சம்பந்தமான இவ்விதிகளை அமுலுக்குக் கொண்டுவர முயன்று மிருகத்தைவிடக் கீழான நிலைக்கு இறங்கி, மனிதர்கள் தங்களைத் தாங்களே கெடுத்துக்கொண்டார்கள். ஏனெனில், மிருகங்களிடையே காணமுடியாத நோய்நொடிகளை மக்களிடையே சர்வ சாதாரணமாய்க் காண்கிருேம். சிசுஹத்தி, கர்ப்பச் சிதைவு, குழந்தை மணம் போன்ற காரியங்களை மிருகங்களிடையே நாம் காண முடியுமா? மணம் என்பதையே ஒரு மதச் சடங்காகக் கொண்டுள்ள சமூகத்திலேதான் இந்த விதமான தீமைகள் மலிந்து கிடக்கின்றன. ஒழுக்கம் ஒழுக்கம் என்று சொல்லுகிற விதிகளிலிருந்து கிளம்பும் இந்தத் தீமைகளுக்கு இன்று ஒரு எல்லையே இல்லை. இன்று ஹிந்து விதவைகளின் பரிதபிக்கத்தக்க நிலைக்குக் காரணம் எது என்று நினைக்கிறீர்கள்? தற்போதுள்ள மணம் சம்பந்தமான சட்டதிட்டங்கள் தான். இயற்கையை ஒட்டி வாழ்க்கை நடத்தி, மிருகங்களிடம் காணப்படும் சில நல்ல குணங்களை நாம் ஏன் பின்பற்றக் கூடாது?"

மேலைநாட்டில் சுதந்திரமான காதல் வேண்டு மென்று சொல்லுகிற கூட்டத்தார் மேலே சுருக்கமாகச் சொல்லியிருக்கும் விஷயங்களைத்தான் சொல்லுகிருர்களா அல்லது இதைவிட அழுத்தமாக வேறு வகையில் சொல்லுகிருர்களா என்பது எனக்குத் தெரியாது. ஆனல் மணம் என்பதே பந்தம், அது அநாகரிகமானது என்ற கொள்கை சந்தேகத்திற்கு இட

மின்றி மேலைநாட்டினருக்குச் சொந்தமானதுதான். அவர் மேலே சொல்லியிருக்கிற விவாதமும் மேலைநாட்டாரிடமிருந்து கடன் வாங்கிய சரக்காய் இருக்குமானால் அதற்கும் மறுமொழி கூறுவது சிரமமன்று.

மனிதனையும் மிருகத்தையும் ஒப்பிட்டுப் பார்ப்பது தவறு. அது அவர் மேலே சொன்ன வாதத்தையே தலைகுப்புறக் கவிழ்த்துவிடும். மனிதன் விலங்கினும் மேம்பட்டவன். ஏனெனில், மனிதனிடத்தில் ஒழுக்க சம்பந்தமான உணர்ச்சிகள் இயல்பாகவே அமைந்து கிடக்கின்றன. அதனாலேதான் மனிதன் ஒழுக்க சம்பந்தமான ஸ்தாபனங்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறான். மனிதனைப்பற்றிக் கூறும்போது குறிப்பிடும் இயற்கை விதிகள் வேறு. மிருகத்தைப்பற்றிக் கூறும்போது குறிப்பிடும் இயற்கை விதிகள் வேறு. காரண காரியங்களை உய்த்தறியும் ஆற்றல், பகுத்தறியும் தன்மை, சுதந்திரமாக எண்ணுகிற தன்மை இவை யாவும் மனிதனுக்கு இருக்கின்றன. மிருகத்தினிடம் இவைகளைப் பார்க்க முடியாது. சுதந்திரமாக ஒரு காரியத்தைச் செய்யும் தன்மையும், நன்மை, தீமை, நற்குணம், தீய குணம் என்று பாகுபடுத்தி அறியும் ஆற்றலும் விலங்கினிடம் இல்லை. தானாகக் காரியங்களைச் செய்யும் ஆற்றல் படைத்தவன் என்கிற முறையில் மனிதன் இந்த வித்தியாசங்களை உணருகிறான். தன்னிடமுள்ள இயற்கையான உயர்ந்த குணங்களைப் பின்பற்றும்போது மனிதன் மிருகத்தைவிட எவ்வளவோ உயர்ந்தவன் என்பதைக் காட்டிவிடுகிறான். ஆனால், தன்னிடமுள்ள இயல்பான கீழான குணங்களைப் பின்பற்றும்போது அவன் மிருகத்தையும்விடக் கேவலமான நிலைக்கு வந்துவிடுகிறான். உலகத்தில் மிகவும் அநாகரிகமாகக் கருதும் ஜாதியார்கள்கூடக் காம சம்பந்தமான விஷயங்களில் சில கட்டுப்பாடுகளை ஒப்புக் கொள்ளுகிறார்கள். கட்டுப்பாடு என்பதே அநாகரிகம் என்று சொன்னால், எவ்விதமான கட்டுப்பாட்டையும் வைத்துக் கொள்ளாமல் சுதந்திரமாக இருப்பதே மனிதனின் விஷயத்தில் சட்டமாகப் போய்விடும். சட்ட வரம்பிற்கு முரண்பட்டதான இந்தச் சட்டத்தை—அதாவது கட்டுப்பாடுகளை ஏற்படுத்திக்கொண்டு வாழ்வது வேண்டாம் என்று சொல்லும் சட்டத்தை—நடைமுறைக்குக் கொண்டுவந்தால், இருபத்து நான்கு மணி நேரத்திற்குள்ளேயே உலகில் பெருங் குழப்பம் தலைவிரித்துத் தாண்டவமாடத் தொடங்கிவிடும். இயற்கையிலேயே மிருகத்தைவிட மனிதன் அதிகமாக உணர்ச்சிவயப்பட்டவன். கட்டுப்பாடுகளை எல்லாம் நீக்கிய அந்தக்

கணத்திலேயே, அவனுடைய கட்டுக்கடங்காத காமம், உலக முழுவதிலும் 'தலைவிரித்தாடி, மனித வர்க்கத்தையே அழித்து விடும். தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்வதிலும் தியாகம் செய்வதிலும் மிருகத்துக்கு இல்லாத சக்தி, மனிதனிடம் இருப்பதாலேதான், அவன் மிருகத்தைவிட உயர்ந்த நிலையில் இருக்கிறான்.

தற்காலம் சாதாரணமாகக் காணப்படுகிற சில வியாதி கள், மண விதிகளை மீறுவதனாலேதான் உண்டாகின்றன. விவாக பந்தத்தின் கட்டுப்பாட்டை ஒருசிறிதும் மீறாமல் நடந்துகொண் டிருக்கும் எந்த ஆண்மகனாவது இந்த நிருபர் மனதில் வைத்துக்கொண்டிருக்கிற வியாதிகளினால் கஷ்டப் பட்டான் என்று எடுத்துக்காட்ட முடியுமா என்று கேட் கிறேன். சிசுஹத்தி, பால்ய மணம் போன்ற செயல்கள் மண விதிகளை மீறிநடப்பதன் விளைவேயாகும். ஏனெனில் ஆடவனோ பெண்ணோ பக்குவமான வயது வந்து, நல்ல ஆரோக்கியமும் தன்னடக்கமும் பெற்று, சந்ததியைப் பெற விரும்புகிறபோதுதான் வாழ்க்கைத் துணைவியையோ அல்லது வாழ்க்கைத் துணைவனையோ தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும் என்று சட்டம் விதிக்கிறது. ஒரு சிறிதும் பிறழாமல் இந்தச் சட்டத்திற்குக் கீழ்ப்படிந்து, மணத்தைப் புனிதமான ஒரு மதச் சடங்காகக் கருதுபவர் களுக்கு, சந்தோஷமின்மையோ துன்பமோ இருக்க முடியாது. மணம் புனிதமான மதச் சடங்காக இருக்கும்போது, அது உடல்களின் சேர்க்கையைக் குறிக்காமல், ஆன்மாக்களின் சேர்க்கையைக் குறிக்கிறது. தம்பதிகளில் ஒருவர் இறந்து போயினும், அந்த மரணம் ஆன்ம பந்தத்தை அழித்து விடாது. ஆன்மாக்கள் உண்மையாகவே ஒன்றுபட்டிருக்கும் மணங்களில், விதவையோ, மனைவியை இழந்த கணவனோ மறு மணம் செய்துகொள்வதென்பது நினைக்க முடியாத விஷயம். மேலும், அது ஒழுங்கற்ற தவறான காரியமுமாகும். உண்மை யான மண விதியைப் புறக்கணித்து நடக்கிற மணங்கள், மணம் என்ற பெயரால் அழைக்கத் தகுதியற்றவை. இன்று உண்மையான மணங்கள் அருகிப் போயிருக்கின்றன வென்றால், அதற்குக் காரணம் மணத்தின் குற்றமன்று; இப்போது நாம் மணத்தை நடத்துகிற முறையில்தான் குற்றம் இருக்கிறது; இந்த முறை சீர்திருந்த வேண்டும்.

மணம் என்பது மதத்திற்கும் ஒழுக்கத்திற்கும் மாறான ஒரு வழக்கமேயாகும்; ஒழுக்கத்தினாலோ மதத்தினாலோ உண்டாகிற பந்தம் அன்று அது. ஆதலால் மணத்தை

ஒழித்துவிடுவதுதான் சரி என்று இந்த நிருபர் வாதாடுகிறார். ஒரு வேலிபோல இருந்து, மணம் மதத்தைப் பாதுகாக்கிறது என்று நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். வேலியை அழித்துவிட்டால், மதம் சிதைந்து சின்னபின்னப்பட்டு விடும். மதத்தின் ஆணிவேர் கட்டுப்பாடு. மணம் என்பது கட்டுப்பாடே யன்றி வேறல்ல. கட்டுப்பாடேயில்லாத மனிதனால் தன்னை அறிந்துகொள்ள முடியாது. நாஸ்திகனுக்கோ உலகியல்வாதிக்கோ கட்டுப்பாட்டின் அவசியத்தை நிருபித்துக் காட்டுவது கஷ்டமான காரியம் என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் அழியாத இயல்பையுடைய ஆன்மாவிலிருந்து அழியும் தன்மையுள்ள உடலை அறிபவன் தன்னடக்கம், தன்னையே கட்டுப்படுத்திக்கொள்வது என்பன இல்லாவிட்டால், தன்னையே உணருகிற காரியமும் இல்லை என்பதைத் தானாகவே அறிந்துகொள்ளுகிறான். உடல், ஆசைகள் கூடிக் கும்மாளம் போடுகிற இடமாக இருக்கலாம்; அல்லது தன்னைத் தானே அறிந்துகொள்ளுகிற கோயிலாகவும் இருக்கலாம்; அது தன்னையே உணர்ந்துகொள்ளுகிற கோயிலாக இருப்பின், எதை வேண்டுமானாலும் செய்யலாம் என்று சொல்லுகிற கொள்கைக்கு அங்கே இடமில்லை. அப்போது ஆன்மா ஒவ்வொரு கணமும் உடலின் போக்கைக் கட்டுப்படுத்தியே தீர வேண்டும்; வேறு வழியில்லை.

விவாக பந்தம் தளர்ந்துபோயின், கட்டுப்பாடு அற்ற நிலை ஏற்படுமாயின், ஒரு பெண்ணை அடையப் பலர் சண்டை போட்டுக்கொள்ளுகிற நிலைமை ஏற்படும். மிருகங்களைப் போல ஆண்களும் கட்டுப்பாடேயின்றித் திரிவது என்று ஏற்பட்டுவிட்டால், அவர்கள் நேரே அழிவை நாடியே செல்லுவார்கள். இந்த நிருபர் குறைகூறுகிற தீமைகள் யாவற்றையும் மணத்தை ஒழித்துவிடுவதனால் வேரோடு களைந்துவிட முடியாது. மண விதியை ஒழுங்காக உணர்ந்து பின்பற்றுவதனாலேதான் அவைகளைப் போக்க முடியும் என்பது எனது உறுதியான அபிப்பிராயம்.

சில சமூகத்தாரிடையே நெருங்கிய பந்துக்களுக்குள் மணம் செய்துகொள்ளலாம் என்றும், சில சமூகத்தாரிடையே அப்படிச் செய்யக் கூடாதென்றும் இருக்கிறது. சில சமூகத்தினர் பலதார மணம் கூடாது என்று தடை செய்கிறார்கள்; சில சமூகத்தினர் அதை அனுமதிக்கிறார்கள். இவைகளையெல்லாம் நான் ஒப்புக்கொள்ளுகிறேன்; எல்லாச் சமூகத்தினரும் ஒரே விதமான ஒழுக்க விதிகளை ஏற்படுத்திக் கொள்வது பெரிதும் விரும்பத்தக்க விஷயமே. ஆனால்,

ஒழுக்க விதிகள் பல மாதிரியாக இருக்கின்றன என்பது கட்டுப்பாட்டையே ஒழித்துவிடுவதன் அவசியத்தைக் குறிக்க வில்லை; நாம் அனுபவத்தில் முதிர்ச்சியடைய அடைய, நமது ஒழுக்கமுறையும் ஒரே வழிப்பட்டு வந்துவிடும். இன்றும், ஏக பத்தினி விரதந்தான் உயர்வான இலட்சியம் என்று உலக மக்களின் ஒழுங்குணர்ச்சி கூறுகிறது. பலதார மணம் இருக்க வேண்டுமென்று ஒரு மதமும் கட்டாயப்படுத்த வில்லை. காலத்தை யொட்டியும், இடத்தை யொட்டியும் நடைமுறையைத் தளர்த்திக்கொண்டாலும், அது இலட்சியத்தைப் பாதிக்கவில்லை. இலட்சியம் எப்போதும் உள்ள படியேதான் இருக்கிறது.

விதைவைகள் மறுமணம் செய்துகொள்வதைப்பற்றிய எனது நோக்கங்களைத் திரும்பவும் சொல்லத் தேவையில்லை. ஏனெனில், கன்னி விதவைகள் மறுமணம் செய்துகொள்வது விரும்பத்தக்க காரியம் என்பது மட்டும் அல்ல; இம்மாதிரி விதவைப் பெண்களை வைத்திருக்கும் பெற்றோர் செய்ய வேண்டிய முக்கியமான கடமையும் அதுவே யாகும் என்பது எனது கருத்து.

# சிந்தனையில் சோர்வு

**"அறிவில்லாத இரக்கமற்ற பெற்றோர்கள் தங்கள் சிறு பெண்ணை, அவள் நன்மையைக் கருதாமலும், அவளுக்குத் தெரியாமலும் அவளுடைய சம்மதத்தைப் பெறாமலுமே யாருக்காவது மணம்செய்து கொடுப்பார்களாயின், அது மணமே யாகாது. நிச்சயமாக, அது புனிதமான மதச் சடங்கும் அல்ல. ஆதலால், அந்தப் பெண்ணை மறு மணம் செய்துகொடுப்பது ஒரு கடமையாகிறது."**

ஒரு நிருபர் எழுதுகிறார் :

"மணத்தை ஒழித்துவிடுங்கள்" என்ற உங்களது கட்டுரையில் ஓர் இடத்தில் கீழ்வருமாறு சொல்லியிருக்கிறீர்கள்: 'மணம் புனிதமான மதச் சடங்காக இருக்கும்போது, அது உடல்களின் சேர்க்கையைக் குறிக்காமல், ஆன்மாக்களின் சேர்க்கையைக் குறிக்கிறது. தம்பதிகளில் ஒருவர் இறந்துபோயினும் அந்த மரணம் ஆன்ம பந்தத்தை அழித்துவிடாது. ஆன்மாக்கள் உண்மையாகவே ஒன்றுபட்டிருக்கும் மணங்களில் விதவையோ மனைவியை இழந்த கணவனோ மறுமணம் செய்து கொள்வதென்பது நினைக்க முடியாத ஒரு விஷயமாகும்; மேலும் அது ஒழுங்கற்ற, தவறான காரியமுமாகும்.'

அதே கட்டுரையில் இன்னொரு இடத்தில், நீங்கள் சொல்லுகிறீர்கள்: 'கன்னி விதவைகள் மறுமணம் செய்துகொள்வது விரும்பத்தக்க காரியம் என்பது மட்டுமல்ல; இம்மாதிரி விதவைப் பெண்களை வைத்திருக்கும் பெற்றோர் செய்ய வேண்டிய முக்கியமான கடமையும் அதுவேயாகும் என்பது எனது கருத்து.'

"இவ்விரண்டு நோக்கங்களையும் நீங்கள் எவ்விதம் பொருத்துகிறீர்கள் என்பது தெரியவில்லையே?"

இவ்விரண்டு நோக்கங்களையும் பொருத்துவதில் கஷ்டம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அறிவில்லாத இரக்கமற்ற பெற்றோர்கள் தங்கள் சிறு பெண்ணை, அவள் நன்மையைக் கருதாமலும் அவளுக்குத் தெரியாமலும், அவள் சம்மதத்தைப் பெறாமலுமே யாருக்காவது மணம் செய்து கொடுப்பார்களாயின், அது மணமே ஆகாது; நிச்சயமாக அது புனித

மான மதச் சடங்குமல்ல. ஆதலால் அந்தப் பெண்ணை மறு மணம் செய்து கொடுப்பது ஒரு கடமையாகிறது. வாஸ்தவ மாக இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் மறுமணம் என்ற வார்த் தையை உபயோகிப்பது தவறுதலாகவே உபயோகிப்ப தாகும். உண்மையாகப் பார்த்தால், ஒரு பெண் கன்னியாக இருக்கிறவரையில் அவளுக்கு மணமாவில்லையென்றுதான் கொள்ள வேண்டும். கணவன் என்று கருதுகிற மனிதன் இறந்துவிட்டால் அவளுக்குப் பொருத்தமான ஒரு வாழ்க் கைத் துணைவனைத் தேடிக்கொடுப்பது இயற்கையாகப் பெற் றோர்கள் செய்ய வேண்டிய காரியமாகிறது; அது அவர்களின் கடமையுமாகும்.

# ஒரு இளம் விதவையின் பேட்டி

**"மறுமணம் செய்துகொள்ளத் துடித்துக்கொண் டிருக்கும் விதவை, கொடிய பழக்கத்திற்கு அஞ்சி, அவ்விதம் செய்யத் துணியாமல் இருக்கிருள். ஹிந்து சமூகம் அவளுக்கு விலங்கிட்டு வைத்திருக்கிறது. மன்னிக்க முடியாத இந்தச் செயலை ஹிந்து சமூகம் செய்கிறவரையிலும், அந்த விதவையின் சாபம் ஹிந்து சமூகத்தைப் பீடித்தே தீரும்."**

பெஜவாடாவிலிருந்து எல்லூருக்குப் போய்க்கொண்டிருந்தோம். அப்போது, சமீபத்தில் விதவையான ஒரு பெண் 1400 ரூபாய் மதிப்புள்ள தனது நகைகளையெல்லாம் என்னிடம் தர விரும்புவதாகவும், கிராமத்திலுள்ள தன் வீட்டில் அவள் என்னைக் காண விரும்புவதாகவும் எனக்குத் தெரிவித்தார்கள். இந்தக் கிராமம் நாங்கள் செல்ல வேண்டிய பெடபாடு என்ற இடத்திற்கு இரண்டு மைல் தூரத்தில்தான் இருந்தது; அவளது சாதியினர் கோஷாமுறையைப்பின்பற்றுகிறவர்கள். ஆகையால் சமீபத்தில் விதவையான பெண் வெளியே எப்படி வர முடியும்? அதிலும் பொதுக்கூட்டத்திற்கு வருவது என்பது நிச்சயமாக முடியாத காரியம். அவள் நகையைத் தருகிருள் என்பதற்காக நான் அங்கு செல்லவில்லை; வாஸ்தவத்தில், அந்த விதவைப் பெண் தனது விலையுள்ள நகைகளையெல்லாம் கொடுத்துவிட விரும்பக்கூடும் என்பதை என்னுல் நம்பமுடியவில்லை. ஆனுல் அவளோ இளம் பெண், சமீபத்தில் விதவையானவள் (அவள் கன்னி விதவை என்று எனக்குச் சொன்னுர்கள்.) என்பதே என்னை அவளிடம் செல்லும்படி தூண்டப் போதுமானதாயிருந்தது. போனதில் எனக்குச் சந்தோஷமே. பெண்ணின் பெயர் சத்யவதி தேவி. அவளுக்கு இன்னும் வயது நிரம்பவில்லை. அவள் கணவன் நன்ருகப் படித்தவர்; தேசியவாதி. தெலுங்கு அவளுக்கு நன்ருகத் தெரியும். அவள் தைரியமும் உறுதியும் உள்ள பெண் என்று தெரிந்துகொண்டேன். அவள் பெற்ருேர் இருவரும் உயிரோடு இருக்கிருர்கள். பெரும்பாலும் அவளுடைய நகைகள் யாவற்றையும் அவள் என்னிடம் தந்துவிட்டாள். அந்த நகைகள் 1,400 ரூபாய் மதிப்புள்ளவைகளாகவே எனக்குத் தோன்றிற்று. தன்னை ஆசிரமத்திற்கு அழைத்துக்கொண்டு போகும்படி எழுதியிருந்த ஒரு குறிப்பையும் அவள் என்னிடம் தந்தாள். சத்யவதி

தேவியை நான் சந்தித்தபோது அவள் பெற்றேர்களும் அங்கே இருந்தார்கள். கதர் இயக்கத்திற்காக அவள் நகைகளைத் தந்தது அவர்களுக்கும் சம்மதமே. அவளை வீட்டுக்குள்ளேயே அடைத்துவைக்கக் கூடாதென்றும் குடும்பத்திலுள்ள மற்ற பெண்களைப் போலவே அவளையும் நடத்த வேண்டும் என்றும் அவர்களிடம் சொன்னேன். விதவையான காரணத்திற்காக நகைகளை யெல்லாம் துறக்க வேண்டிய அவசியமில்லை யென்றும் அவளிடம் தெரிவித்தேன். ஆனல், அவள் உறுதியாக இருந்தாள். அந்த நகைகள் அவளுக்கு இனி உபயோகமில்லை யென்று தெரிவித்தாள். பெற்றேர்கள் ஒப்புக்கொண்டால் அவளை ஆசிரமத்திற்கு மகிழ்ச்சியோடு அழைத்துக்கொண்டு போவதாகச் சொன்னேன். அவள் பெற்றேர்கள் அவளை அனுப்புவதுபற்றி யோசித்துச் சொல்வதாக வாக்களித் தார்கள். சுற்றுப்பிரயாணம் முடிந்து நான் திரும்பும்போது என்னேடு அனுப்புவதாக அந்தப் பெண்ணுக்கும் நம்பிக்கை யளித்திருக்கிறார்கள். அவள் தகப்பனர் முன்னெச்சரிக்கை யோடு நடந்துகொள்பவராகவும், நிதானமாகப் பேசுகிறவ ராகவும் இருந்தபோதிலும், மகள் விஷயத்தில் பெருந்தன்மை யுடன் நடந்துகொள்வதாக எனக்குத் தோன்றியது. அந்த விதவைப் பெண்ணுக்கு என்னல் போதுமான அளவு ஆறுதல் அளிக்க முடியவில்லை. இது எனக்கு வருத்தத்தைக் கொடுத் தது; அவளைவிட்டுப் பிரியும்போது நான் அடைந்த வருத்தம் கொஞ்சமல்ல.

ஆதலால், பெடபாடுவில் சத்தியவதி தேவியைப் பற்றியே நான் பேசினேன். கோஷா வழக்கத்தை உடைத் தெறிவதும், அவளுக்குப் பிரியம் இருக்குமானல், அவளை மறு மணம்செய்து கொடுப்பதில் அவள் பெற்றேர்களுக்கு உதவி செய்வதும் அவர்கள் கடமை யென்று சபையோரைப் பார்த் துச் சொன்னேன். மனைவியை இழந்த 18வயதுள்ள இளைஞன் மறுமணம் செய்கொள்ள வசதி இருக்கும்போது அதே வயது ள்ள விதவைக்கு ஏன் அந்த உரிமை இருக்கக் கூடாது? விஷயங்களையறிந்து தானகவே ஏற்றுக்கொள்ளும் கைம்மை எந்த நாட்டிற்கும் ஒரு அரிய பொக்கிஷமாகும். அதே போன்று, உண்மையை யறியத் திறனற்ற பருவத்தில் அவர் களின்மீது கைம்மையைப் புகுத்துவது வெட்கக்கேடான காரியமாகும். சபையோர் பயபக்தியோடும், ரொம்பக் கவனத் தோடும் என் பேச்சைக் கேட்டார்கள். விதவையின் தகப்ப னரும் கூட்டத்துக்கு வந்திருந்தார். நகைகளைக் கொடுத்து விடுவதென்ற எண்ணம் அவளாகவே முடிவுகட்டிய தென்றும்,

மறுமணம் செய்துகொள்ளும் விருப்பமே அவளுக்குக் கிடையாதென்றும் பிறகு எனக்குத் தெரியவந்தது. இறுதியாகத் தன் வாழ்க்கையைத் தேச சேவைக்கு அர்ப்பணம் செய்யும் நோக்கத்தோடு படிப்பதில் தன்னை முற்றிலும் ஈடுபடுத்திக்கொள்ள வேண்டுமென்பது அவளது முக்கியமான ஆசை என்றும் எனக்குச் சொன்னார்கள். சத்தியவதி தேவியின் முடிவான தீர்மானம் உண்மையில் இதுவே என்றால், எல்லாக் கௌரவமும் அவளுக்கு உரியதாகும். விதவைகள் விரும்பினால் மறுமணம் செய்துகொள்ள எவ்வித தடையுமில்லாமல் வழியைத் திறந்து வைப்பது ஹிந்து சமூகத்தின் கடமை. நாள்தோறும் நூற்றுக்கணக்கான ஹிந்துக்களின் வீடுகளில் சத்தியவதியின் கதை நடந்துகொண்டிருக்கிறது; மறுமணம் செய்துகொள்ளத் துடித்துக்கொண்டிருக்கும் விதவை கொடுமையான வழக்கத்திற்கு அஞ்சி அவ்விதம் செய்யத் துணியாமல் இருக்கிறாள். ஹிந்து சமூகம் அவளை விலங்கிட்டு வைத்திருக்கிறது. மன்னிக்க முடியாத இச்செயலை ஹிந்து சமூகம் செய்கிறவரையில் அந்த விதவையின் சாபம் ஹிந்து சமூகத்தைப் பீடித்தே தீரும்.

# பெண்களுக்கு விடுதலை

**''பெண்களை அலட்சியம் செய்வது, இல்லை, அவர்களைக் கேவலமாக நடத்துவது என்கிற குற்றம் சந்தேக மில்லாமல் ஆண்மக்களுடையதுதான். இந்தக் குற்றத்திற்கு அவர்கள் போதிய பரிகாரம் செய்துதான் ஆக வேண்டும். ஆனால், மூட நம்பிக்கையை ஒழித்து ஆண்கள் செய்கிற குற்றத்தை உணருகிற பெண்களே உருப்படியான இந்தச் சீர்திருத்த வேலையைச் செய்ய வேண்டும்.''**

*சமூக சேவை செய்வதில் ஈடுபட்டுள்ள, பிரபலமான சென்னைவாசி, டாக்டர் எஸ். முத்து லட்சுமி ரெட்டி நீண்ட தொரு கடிதம் எழுதி யிருக்கிறார்; ஆந்திர தேசத்தில் நான் பேசிய பேச்சுக்களில் ஒன்றை அடிப்படையாகக் கொண்டு அந்தக் கடிதம் எழுதப்பட்டிருக்கிறது. அதில் காணப்படும் ரசமான சில பகுதிகளைக் கீழே தந்திருக்கிறேன்.*

*''பெஜவாடாவிலிருந்து குண்டூருக்குத் தாங்கள் சென்றுகொண்டிருந்தபோது, நமது ஜனங்களின் பழக்க வழக்கங்களில் சீர்திருத்தங்கள் செய்வதும் மாற்றத்தை ஏற்படுத்துவதும், அவசர அவசரமாகத் தேவைப்படுகிற காரியம் என்று சொல்லி யிருக்கிறீர்கள். அது எனக்கு ரொம்பப் பிடித்திருந்தது.*

*''பெண் டாக்டர் என்ற ஹோதாவில், நீங்கள் சொல்வதை நான் பூரணமாக ஒப்புக்கொள்கிறேன் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஒரு விஷயத்தைச் சொல்ல எனக்கு அனுமதியளிக்க வேண்டும். சமூக சீர்திருத்தம், இப்போதிருப்பதைவிட ஆரோக்கியமான வாழ்க்கை, பொது ஜன சுகாதாரத்தில் அபிவிருத்தி ஆகியவை, கல்வி கற்பதன் மூலம் உண்மையாகவே ஏற்படுமென்றால், இதன் விளைவு நமது பெண்கள் பெறும் கல்வியைப் பொறுத்தே இருக்கிறது.*

*''இப்போது இருக்கிற சமூக அமைப்பில் பெண்களுக்குக் கல்வி பெறும் வசதி குறைவாக இருக்கிறது. உள்ளத்தையும் உடலையும் அபிவிருத்தி செய்துகொள்ளவும் எண்ணிய எண்ணத்தை வெளியிட்டுச் சொல்லவும் போதிய வசதிகள் அவர்களுக்கு இல்லை. இது தங்களுக்குத் தெரியாதா?*

*''அவர்களிடம் காணப்படும் சிறப்பு இயல்புகளை முன்பின் யோசியாமல் பழக்க வழக்கங்கள் வந்து தாக்கி, நொறுக்கி விடுகின்றன அல்லவா?*

*''சிறு பிராயத்திலே மணம்செய்வதனால் உடல் வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, ஆன்ம வளர்ச்சியுங்கூட அடிப்படையிலேயே தாக்குண்டு போகவில்லையா?*

"பால்ய மனைவிகளும் பால்யத் தாய்மார்களும் படும் சகிக்க முடியாத துன்பமும், விதவைகளும் கைவிடப்பட்ட மனைவிமார்களும் அனுபவிக்கிற கடுமையான கவலைகளும், உடனே அவைகளுக்கு ஏதாவது ஒருவழி செய்ய வேண்டுமென்பதைக் காட்டவில்லையா?

"மதத்தின் பெயரால் ஒன்று மறியாத இளம் பெண்களைத் தீங்கு பயக்கும் கீழான வாழ்க்கைக்கு உட்படுத்துகிற ஒரு வழக்கத்தைச் சகித்துக்கொண்டு போவதும், அதோடு சேர்ந்து சூழ்ச்சி செய்வதும் ஹிந்து சமுதாயத்திற்கு நியாய மாகுமா?

"சமூகம் இழைக்கும் கொடுமையினுல் இந்தியப் பெண்கள்—சிலரைத் தவிர—தைரியம், ஆக்கம், சுதந்திரமாக எண்ணுகிற சக்தி, தானுக ஒரு காரியத்தைச் செய்கிற ஆற்றல், இவற்றையெல்லாம் இழந்துவிட்டார்கள். இந்தக் குணங்கள்தான் மைத்ரேயி, கார்கி, சாவித்திரி போன்ற புராதன இந்தியப் பெண்களை இயக்கிக்கொண் டிருந்தன. இவைதான் இன்றும் பிரம சமாஜம், ஆரிய சமாஜம், தியாசபி போன்ற பரந்த நோக்கமுடைய கொள்கைகளைச் சேர்ந்திருக்கும் பெரும்பாலான நமது பெண்களையும் இயக்குகின்றன. பிரம சமாஜம், ஆரிய சமாஜம், தியாசபி என்பவை அர்த்தமற்ற பழக்க வழக்கங்களிலிருந்தும் சடங்குகளிலிருந்தும் விடுபட்ட ஹிந்து மதமே யன்றி வேறல்ல.

"இந்தச் சமூகக் கேடுகளே, நமது தேசம் பலவீனமாக இருப்பதற்கும் நாம் இன்று வீழ்ச்சியடைந்திருப்பதற்கும் மூல காரணங்களாக இருக்கின்றன. இவைகளை ஒழிப்பதற்குத் தேசியக் கட்சியின் அங்கத்தினர்கள்—காங்கிரஸைத்தான் குறிப்பிடுகிறேன்—உடனே ஒரு வழி கண்டுபிடிக்க ஊக்கமும் அக்கறையும் காட்ட வேண்டாமா? பெண்களை அடிமைத் தளையினின்றும் விடுதலை செய்யும் வண்ணம் பொதுமக்களுக்குக் கல்வியளிப்பதிலாவது அவர்கள் சிரத்தை காட்ட வேண்டாமா? அப்போதுதானே பெண்கள் உடலிலும், அறிவிலும், ஒழுக்கத்திலும், ஆன்மீக வழியிலும் பூரண வளர்ச்சியடைய ஏதுவா யிருக்கும்? அப்போதுதானே தைரியத்துக்கும், புத்தி சாதுரியத்துக்கும் அவர்கள் எடுத்துக்காட்டாக விளங்க முடியும்? இதையெல்லாம்விட மனைவிகள், தாய்மார்கள் என்ற முறையில் எதிர்கால இந்திய அரசியலை வகிக்கப்போகிற மக்களுக்கு வழிகாட்டியாக இருந்து நல்ல பயிற்சி யளிக்கிறதும் அவர்களுடைய தினசரிப் பழக்கங்களையும் குணத்தையும் உருவாக்குகிறதுமான புனிதமான வேலையை உரிமையோடும் உண்மையோடும் அப்போதுதானே அவர்களால் செய்ய முடியும்?

"சுதந்திரம், ஒவ்வொரு நாட்டுக்கும் ஒவ்வொரு தனி மனிதனுக்கும் உள்ள பிறப்புரிமை என்று காங்கிரஸ் அங்கத்தினர்கள் நம்புகிறுர்கள் என்றுல், அந்தப் பிறப்புரிமையை எப்படியும்

அடைந்தே தீருவது என்று அவர்கள் தீர்மானித்திருக்கிறார்களென்றால், பெண்களின் பொதுப்படையான அபிவிருத்திக்குத் தடையாயிருக்கும் தீய பழக்க வழக்கங்களிலிருந்தும் சம்பிரதாயங்களிலிருந்தும் பெண்களை விடுதலை செய்வது அவர்களது முதல் கடமை யல்லவா? இந்தக் காரியம் அவர்கள் கையில் தானே இருக்கிறது?

"நமது கவிஞர்கள், துறவிகள், பெரியோர்கள் யாவரும் இதே முறையில்தான் பாடியும் எழுதியும் இருக்கிறார்கள். பெண்களுக்கு மரியாதை செலுத்தாத தேசமும் சமூகமும் மக்களும் எப்போதும் பெருமையடைந்ததில்லை; எதிர்காலத்தில் என்றும் பெருமையடையப் போவதும் இல்லை. நம் சாதி இவ்வளவு கீழான நிலைமைக்கு வந்ததற்கு முக்கிய காரணம் நடமாடும் சக்தி சொரூபங்களாகிய பெண்களுக்கு மரியாதை செலுத்தாததுதான். 'லோக மாதாவின் பிரதிபிம்பங்களான பெண்களை நீங்கள் உயர்த்தாவிட்டால், நீங்கள் உயர்வதற்கும் வேறு வழி இல்லை' என்று சுவாமி விவேகானந்தர் சொல்லியிருக்கிறார்.

"சிறந்த தமிழ்க் கவிஞரான காலஞ்சென்ற சுப்பிரமணிய பாரதியாரும் இதையேதான் கூறியிருக்கிறார்.

"எனவே உங்களது சுற்றுப் பிரயாணத்தின்போது சுதந்திரம் பெறுவதற்குள்ள நிச்சயமான, சரியான இந்த வழியைப் பின்பற்றும்வண்ணம் நமது ஆண்மக்களுக்கு அறிவுறுத்துவீர்களா?"

காங்கிரஸ்காரர்கள் இந்தப் பொறுப்பை ஏற்று நடத்த வேண்டுமென்று எதிர்பார்க்க டாக்டர் முத்துலட்சுமி ரெட்டிக்குப் பூரண உரிமையிருக்கிறது. தனியாகவும் சேர்ந்தும் காங்கிரஸ்காரர்களில் பலர் இந்தத் துறையில் தொண்டாற்றி வருகிறார்கள். என்றாலும், இந்தத் தீமையின் வேர் மேல்பார்வைக்குத் தெரிவதைவிட ரொம்ப ஆழமாகப் போயிருக்கிறது. பெண் கல்வி மட்டுமே குறைகூறத்தக்கதாய் இருக்கிறது என்று சொல்வதற்கு இல்லை. நமது கல்வித் திட்டம் முழுதுமே க்ஷீணித்துப் போயிருக்கிறது. மேலும், ஒரு குறிப்பிட்ட வழக்கத்தை மட்டும் கண்டனம் செய்து பயன் இல்லை. கேடு பயக்கிறது என்று ஒப்புக்கொண்ட பிறகும், அந்தக் கேட்டை நீக்க முயலாமலிருக்கும் நமது அசமந்தத்தை முதலில் அகற்ற வேண்டும். அதையே நாம் கண்டிக்க வேண்டும். கடைசியாக, இந்தக் கண்டனம் இடைத்தர வகுப்பைச் சேர்ந்த நகரவாசிகள் விஷயத்தில் மட்டும் — அதாவது இந்தியப் பொது மக்களில் 100-க்கு 15 பேர் விஷயத்தில் மட்டுமே—உண்மையாயிருக்கிறது. கிராமங்களில் வசிக்கும் மக்களிடையே பால்ய மணமும் இல்லை, விதவை மறுமணத்திற்குத் தடையும்

இல்லை; அவர்களது வளர்ச்சியைத் தடை செய்வதற்கு வேறு பல தீமைகள் இருக்கின்றனவென்பது உண்மையே. அசமந்தம் இவ் விரண்டு ரக மக்களும் பொதுவா யிருக்கிறது. எனினும் இப்போது அவசியமாகச் செய்யவேண்டிய காரியம் கல்வித் திட்டத்தை முற்றும் பரிசீலனை செய்து, பொதுமக்களுக்குத் தேவையான ஒரு புதுத் திட்டத்தை அமைக்க வேண்டும் என்பதாகும். குழந்தைகளுக்கும் வயது வந்தவர்களுக்கும் கல்வி கற்பிக்க வேண்டுமென்று அழுத்திச் சொல்லாத எந்தக் கல்வித் திட்டமும் ஏற்றுக்கொள்ளத்தக்க தல்ல. மேலும், தாய் மொழிக்கு உரிய உயர்வை யளிக்காத எந்தத் திட்டமும் கல்விப் பிரசினையைத் தொடக்கூட மாட்டாது. இப்போதிருக்கிற படித்த வர்க்கத்தார் மூலமாகவேதான் இந்த வேலையைச் செய்ய முடியும். ஆகையால், பெரிய முறையில் சீர்திருத்தம் ஏற்படுவதற்கு முன்னர், இந்தப் படித்த வர்க்கத்தாரின் மனப்பாங்கில் மாறுதல் ஏற்பட வேண்டும். இந்தியாவில் படித்தவர்களா யிருக்கும் பெண்கள் சிலரே. இவர்கள் மேலைநாட்டின் மலையுச்சிகளிலிருந்து இறங்கி இந்தியாவின் சமவெளிகளுக்கு வர வேண்டுமென்று நான் டாக்டர் முத்துலட்சுமி ரெட்டியிடம் தெரிவித்துக்கொள்ளலாமா? பெண்களை அலட்சியம் செய்வது, இல்லை, அவர்களைக் கேவலமாக நடத்துவது என்கிற குற்றம் சந்தேகமில்லாமல் ஆண்மக்களுடையதுதான். இந்தக் குற்றத்திற்கு அவர்கள் போதிய பரிகாரம் செய்துதான் ஆக வேண்டும். ஆனால் மூடநம்பிக்கையை ஒழித்து, ஆண்கள் செய்கிற குற்றத்தை உணருகிற பெண்களே உருப்படியான இந்தச் சீர்திருத்த வேலையைச் செய்ய வேண்டும். பெண்களின் விடுதலை, தீண்டாமையை ஒழிப்பது, பொதுமக்களின் பொருளாதார நிலையை அபிவிருத்தி செய்வது, இன்னும் இவைபோன்ற பிரசினைகள் யாவும் இந்தியாவில் கிராமந்தோறும் சென்று கிராம வாழ்க்கையைத் திருத்தியமைப்பது, அதைவிட அடிப்படையான சீர்திருத்தங்களைச் செய்வது என்கிற காரியத்திலேதான் கடைசியில் வந்து முடிகின்றன.

# நெறிதவறிய சகோதரிகள்

**''மனிதன் எத்தனையோ கேடுகளுக்குப் பொறுப்பாளியா யிருந்திருக்கிறான். ஆனால் அவன் செய்திருக்கும் கேடு களிலே, மனித சமுதாயத்தின் செம்பாதியாகிய பெண் குலத்துக்கு—அவர்களை மெல்லியலார் என்று சொல்ல மாட் டேன்—இழைத்திருக்கும் இந்த அநியாயத்தைபோல திடுக் கிடத்தக்கதும் நீசத்தனமானதும், மிருகத்தனமானது மான செயல் வேறெதுவும் இல்லை.''**

*மானத்தை விற்று வயிறு வளர்க்கிற பெண்களை நான் முதன் முதலாக ஆந்திர மாகாணத்தில் காக்கிநாடாவில் சந்திக்க நேர்ந்தது. அங்கே ஒரு டஜன் பெண்களோடு நான் சில நிமிஷ நேரந்தான் பேசிக்கொண் டிருந்தேன். அவர்களில் நூறு பேருக்கு அதிகமானவர்கள் முன்னதாக ஏற்பாடு செய்துகொண்டு என்னை வந்து பார்த்தார்கள். எனக்கு ஒரு கடிதமும் முன்னதாக அனுப்பியிருந்தார்கள். அந்தக் கடிதத் தில் என்னைப் பேட்டி காண வேண்டு மென்ற விருப்பத்தைத் தெரிவித்துக்கொண்டதோடு, தாங்கள் காங்கிரஸில் அங்கத் தினர்களாகச் சேர்ந்துவிட்டதாகவும், திலகர் நிதிக்குப் பணம் உதவியிருப்பதாகவும், ஆனால் காங்கிரஸ் கமிட்டிகளில் அவர் கள் பதவி பெற விரும்பக் கூடா தென்று நான் கூறியிருப்பது தங்களுக்கு விளங்கவில்லை யென்றும் எழுதியிருந்தார்கள். அந்தக் கடிதத்தின் முடிவில் அவர்களது எதிர்கால நலனைக் கோரி எனது புத்திமதியைப் பெற விரும்புவதாகக் குறிப்பிட் டிருந்தார்கள். இந்தக் கடிதத்தைக் கொண்டுவந்தவர் ரொம்பத் தயக்கத்தோடு அதை என் கையில் கொடுத்தார். அந்தக் கடிதத்தைப் பெற்றுக்கொள்வதில் எனக்கு வருத்தம் நேருமோ, சந்தோஷம் உண்டாகுமோ என்ற தயக்கம் அவருக்கு இருந்தது போலும். இந்தப் பெண்களுக்கு எந்த வழியிலாவது என்னால் சேவை செய்யக் கூடுமானால், அதைச் செய்வது எனது கடமை என்று உறுதி சொல்லி, அவருடைய தயக்கத்தைத் தீர்த்துவைத்தேன்.*

*இந்தச் சகோதரிகளோடு நான் கழித்த இரண்டு மணி நேரத்தையும் நான் ஒரு பொக்கிஷமாகக் கருதுகிறேன். ஆண், பெண், குழந்தைகள் அடங்கிய 20,000 மக்களுக் கிடையே தாங்கள் 350 பேருக்கு மேலிருப்பதாக அவர்கள் என்னிடம் சொன்னார்கள். பாரிஸால் ஆண்களின் வெட்கக் கேட்டுக்கு அறிகுறியாக அவர்கள் விளங்கினார்கள். நாணத்*

தகுந்த இச் செயலைப் பாரிஸால் எவ்வளவு விரைவில் ஒழிக்கிறதோ, அவ்வளவு அதனுடைய பெருமைக்கு நல்லதாகும். பாரிஸாலைப் போலவே மற்ற நகரங்களுக்கும் இந்த உண்மை பொருந்தும். ஆகையால் பாரிஸாலை நான் உதாரணமாக எடுத்துக்கொள்கிறேன். இந்தச் சகோதரிகளுக்குச் சேவை செய்ய எண்ணியுள்ள சில பாரிஸால் இளைஞர்களுக்கே இந்தக் கௌரவம் உரியதாகும். இந்தக் கேட்டை வேரோடு களைந்தெறிந்த கௌரவத்தையும் பாரிஸால் விரைவில் தேடிக் கொள்ளும் என்று நம்புகிறேன்.

மனிதன் எத்தனையோ கேடுகளுக்குப் பொறுப்பாளியாயிருந்திருக்கிறான். ஆனால் அவன் செய்திருக்கும் கேடுகளிலே மனித சமுதாயத்தின் செம்பாதியாகிய பெண்குலத்துக்கு—அவர்களை மெல்லியலார் என்று சொல்ல மாட்டேன்—இழைத்திருக்கும் இந்த அநியாயத்தைப் போலத் திடுக்கிடத்தக்கதும் நீசத்தனமானதும் மிருகத்தனமானதுமான செயல் வேறெதுவும் இல்லை. பெண்குலம் ஆண்குலத்தைவிடப் பெருந்தன்மை வாய்ந்தது; ஏனெனில் தியாகம், துன்பங்களை வெளியே காட்டாமல் பொறுத்துக்கொள்ளும் பொறை, அடக்கம், நம்பிக்கை, அறிவு ஆகிய குணங்களே உருவெடுத்து வந்ததுபோல இருப்பது பெண்குலமே யல்லவா? ஆண்மகன் தனக்கு இருப்பதாக அகங்காரங் கொண் டிருக்கும் உயர்ந்த அறிவைக் காட்டிலும் பெண்ணின் உள்ளுணர்வு உண்மையானது என்பது அடிக்கடி நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ராமனுக்கு முன் சீதையின் பெயரையும் கிருஷ்ணனுக்கு முன் ராதையின் பெயரையும் சொல்வதில் ஒரு ஒழுங்கு இருக்கிறது. தீமையைக் கருவியாகக் கொண்டு நடந்தும் இச் சூதாட்டம் நாகரிகமான ஐரோப்பாவில் தடையில்லாமல் பரவி வருகிறது. சில இடங்களில் அரசாங்கமே அதை ஒழுங்குபெற நடத்துகிறது. ஆதலால் மனித வளர்ச்சியில் அதற்கும் ஒரு இடம் உண்டு என்று நம்பி நாம் மோசம் போக வேண்டாம். இந்தியாவில் இதற்கு முன்னும் இத் தீமை இருந்திருக்கிறது என்பதை வைத்துக் கொண்டு நாம் இதை நிலைநிறுத்த வேண்டியதுமில்லை. நன்மை எது, தீமை எது என்று பகுத்தறியாமல், நமக்குப் பூரணமாகத் தெரியாத பழமையை அடிமைத்தனமாக நாம் பின்பற்ற ஆரம்பிக்கும் அந்தக் கணத்திலேயே நமது வளர்ச்சியும் நின்றுவிடுகிறது. ஆதி காலத்திலே சிறந்தும் உயர்ந்தும் விளங்கிய எல்லாவற்றிற்கும் நாம் வார்சுதார்கள் என்று பெருமை யடைவோம். சென்ற காலப் பிழைகளை நாம் வளர்த்துக்கொண்டே போவோமே யானால், பூர்வீகச் சிறப்பை

நாம் அவமதித்தவர்களாவோம். இந்தியாவில் தன் மரியாதை யுள்ள ஒவ்வொரு ஆண்மகனுக்கும் ஒவ்வொரு பெண்ணின் ஒழுக்கமும் தனது சகோதரியின் ஒழுக்கத்தைப் போல முக்கியமான தில்லையா? இந்தியாவில் வசிக்கிற எவரையும் நமது சொந்தச் சகோதரனாகவோ சகோதரியாகவோ கருதுகிற தன்மைக்குத்தான் சுயராஜ்யம் என்று பெயர்.

எனவே ஆண்மகன் என்கிற முறையில் இந்த நூறு சகோதரிகளுக்கு முன்பு நான் வெட்கித் தலைகுனிந்து நின் றேன். அவர்களில் சிலர் வயதுசென்றவர்களா யிருந்தனர். பெரும்பான்மையோர், இருபதுக்கும் முப்பதுக்கும் இடைப் பட்டவர்கள். இரண்டு மூன்று பெண்கள் 12 வயதுக்குட் பட்டவர்கள்; அவர்க ளெல்லாருக்கும் மொத்தத்தில் ஆறு பெண்களும் நான்கு பிள்ளைகளும் இருப்பதாக அவர்கள் சொன்னார்கள். இந்த ஆறு பெண்களில் மூத்தவளைத் தங்கள் இனத்துக்குள்ளேயே ஒருவனுக்கு மணம் செய்து கொடுத் திருக்கிறார்கள். வேறு ஏதாவது வழியிருந்தா லொழிய இந்தப் பெண்களையும் தங்கள் வாழ்க்கை முறையிலேயே தான் வளர்க்க வேண்டு மென்று சொன்னார்கள். இந்தப் பெண்கள் தங்களுக்குக் கதிமோட்சம் இல்லை யென்று நினைக்கும்படி இருப்பது உயிருள்ள உடலிலே கத்தியைப் பாய்ச்சியது போலிருந்தது. எனினும், அவர்கள் புத்தி நுட்பமுள்ளவர் களாயும் அடக்கமாயும் இருந்தனர். அவர்கள் பேச்சு மரியாதையாக இருந்தது. அவர்கள் அளித்த பதில் நேராக வும் தெளிவாகவும் இருந்தது அந்தச் சமயத்தில் அவர்களது உறுதியும் ஒரு சத்தியாக்கிரகியின் உறுதியைப் போல இருந் தது. உதவி கிடைத்தால் அவர்களில் பதினொரு பேர் அந்த வாழ்க்கையைவிட்டு, மறு நாளே நூல்நூற்கும் வேலையிலும் துணி நெய்யும் வேலையிலும் இறங்குவதாக வாக்களித்தார்கள். மற்றவர்கள் நினைத்துப் பார்க்கப் போதிய அவகாசம் வேண்டு மென்றார்கள். ஏனென்றால், என்னை ஏமாற்றும் எண்ணம் அவர்களுக்கு இல்லை.

பாரிஸால் நகரவாசிகள் செய்வதற்கு இதோ நல்ல வேலை யிருக்கிறது. ஆண்களும் பெண்களும் உள்பட இந்தியாவின் உண்மையான தொண்டர்கள் என்று சொல்லும் எல்லோருக் கும் இது ஒரு நல்ல வேலையேயாகும். 20,000 பேருள்ள ஜனத் தொகையில் அபாக்கியவதிகளான சகோதரிகள் 350 பேர் இருந்தால், இந்தியா முழுவதிலும், அவர்கள் தொகை 5,250,000 இருக்கலாம். ஆனால், இந்திய ஜனத்தொகையில் முழுக்க முழுக்க விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் ஐந்தில் நாலு

பங்கினரான கிராமவாசிகளை இந்தத் தீமை தீண்டவில்லை யென்று நம்பிப் பெருமை யடைகிறேன். ஆகையால் இந்தியா முழுவதிலும் தங்கள் மானத்தை விற்று வயிறு வளர்க்கும் பெண்களின் தொகை குறைந்தது 1,050,000 ஆக இருக்கும். தாங்கள் எய்தியிருக்கும் கீழான நிலையிலிருந்து இந்தச் சகோதரிகளை இதமாக மேலேற்றக் கூடும் என்றால், அதற்கு முன்னர் இரண்டு காரியங்களை நிறைவேற்றியாக வேண்டும். ஆண்களாகிய நாம் காமத்தை அடக்கத் தெரிந்துகொள்ள வேண்டும். இந்தப் பெண்கள் கௌரவமாக ஜீவனம் நடத்தக் கூடிய வழியைக் காட்ட வேண்டும். ஒத்துழையாமை இயக்கம் நம்மைப் பரிசுத்தப்படுத்தி, நமது தீய ஆசைகளைக் கட்டுப்படுத்தவில்லை யென்றால், அந்த இயக்கத்தினால் ஒரு பயனுமில்லை. நூல் நூற்பது, துணி நெய்வது போன்று, ஒரே யிடத்தில் அதிக நெருக்கடியின்றி எல்லாரும் செய்யக் கூடிய வேலை, வேறு எதுவும் இல்லை. இந்தச் சகோதரிகளில் மிகப் பெரும்பாலோர் மணம் செய்துகொள்வதைப்பற்றி எண்ண வேண்டியதில்லை. மணத்தைப்பற்றி எண்ண முடியாதென்று அவர்களே ஒப்புக் கொண்டார்கள். ஆகையால் அவர்கள் இந்தியாவின் உண்மையான சந்நியாசினிகளாக ஆகவேண்டும். தொண்டு செய்வதைத் தவிர வேறு கவலைகள் இல்லாதபடியால், மனம் திருப்தி யடைகிறவரையில் அவர்கள் நூற்கவும் நெய்யவும் செய்யலாம். பத்தரை லட்சம் பெண்கள் நாள்தோறும் எட்டு மணி நேரம் ஆர்வத்தோடு, நெசவில் ஈடுபட்டால் வறுமையுற்றுக் கிடக்கும் இந்தியாவுக்கு ஒரு நாளைக்குப் பத்தரை லட்சம் ரூபாய் கிடைக்கும். இந்தச் சகோதரிகள் நாள் ஒன்றுக்கு இரண்டு ரூபாய் வரை சம்பாதிப்பதாகச் சொன்னார்கள். ஆண்களுக்குக் காமத்தை ஊட்டுவதற்கு என்னென்னவோ சாமான்கள் தேவைபடுகின்றனவென்றும் இயல்பான வாழ்க்கைக்குத் திரும்பி, நூற்பதையும் நெய்வதையும் மேற்கொண்டால், இந்தச் செலவுகளை நீக்கிவிடலாம் என்றும் அவர்கள் ஒப்புக்கொண்டார்கள். இந்தப் பாபச் செயலைக் கைவிடாதவரையில் காங்கிரஸ் கமிட்டிகளில் அவர்கள் ஏன் பதவி வகிக்க முடியாதென்பதை என்னோடு பேசி முடிவதற்குள் நான் சொல்லாமல் அவர்களே தெரிந்து கொண்டார்கள். பரிசுத்தமான கையோடும், பரிசுத்தமான இதயத்தோடும் செல்லாதவர்கள் யாரும் சுயராஜ்யம் என்கிற பலி பீடத்தில் பூஜை நடத்த அருகர்களாக மாட்டார்கள்.

# அபாக்கியவதிகளான நமது சகோதரிகள்

**“ஆண்களின் தந்திர வலையிலிருந்து விடுபட்ட பெண்கள் பூரண வளர்ச்சியடைந்து, ஆண்கள் செய்த சட்டதிட்டங்களையும், அவர்கள் உண்டாக்கிக்கொண்ட ஸ்தாபனங்களையும் எதிர்த்துக் கலகம் செய்யும்போது. அந்தக் கலகம், சந்தேக மில்லாமல் அஹிம்சா வழியில் இருக்கும் என்றாலும், மிகவும் பயன் தரத்தக்கதாக இருக்கும்.''**

*தென்னாட்டில் எனக்களித்த உபசாரப் பத்திரங்களிலெல்லாம் எனது இதயத்தை அதிகமாக நெகிழ வைத்தது தேவதாசிகள்—வேசிகள் என்பதற்கு இது ஒரு மங்கலச் சொல்—சார்பாக எனக்கு அளிக்கப்பட்ட உபசாரப் பத்திரமேயாகும், அபாக்கியவதிகளான இந்தச் சகோதரிகளின் குலத்தைச் சேர்ந்தவர்களே உபசாரப் பத்திரத்தைத் தயாரித்து என்னிடம் கொண்டுவந்தவர்கள். இப் பத்திரத்தை கொண்டுவந்த அவர்கள் பிரதிநிதிகளின் மூலம் அவர்களுக்குள் சீர்திருத்தம் நடைபெற்று வருகிறதென்றும், ஆனால் அதன் போக்கு இன்னும் மிகவும் மந்தமாக இருக்கிறதென்றும் தெரிந்துகொண்டேன். இந்தச் சீர்த்திருத்தத்தில் பொதுவாக ஜனங்கள் அசிரத்தையாக இருக்கிறார்கள் என்று அந்தப் பிரதிநிதிகளின் தலைவர் சொன்னார். நான் முதலில் திடுக்கிட்டது காக்கனடாவில். அந்த ஊர் ஆண்மக்களிடையே பேசும்போது ஒன்றையும் மறைத்து வைக்காமல் எல்லாவற்றையும் வெளிப்படையாகவே சொன்னேன். இந்த அபாக்கியவதிகளைப் பாரிஸாலில் சந்தித்தபோது, நான் இரண்டாவது தரமாகத் திடுக்கிட்டுப் போனேன். அவர்களைத் தேவதாசிகள் என்றாலும், வேறு என்ன பெயரால் அழைத்தாலும், பிரசினை ஒன்றுதான். ஆண்களின் காமத்தைத் தணிக்க ஏராளமான பெண்கள் தங்கள் கற்பையும் விற்க வேண்டியிருக்கிறது என்பது வெட்கத்திற்கும் வருத்தத்திற்கும் ஆழ்ந்த அவமானத்திற்கும் உரிய காரியமாகும். சட்டங்களை இயற்றுகிற ஆண்கள், அபலைகள் என்று கருதப்படும் பெண்களை இந்தக் கீழான நிலைக்குக் கொண்டு வந்திருப்பதற்குப் பயங்கரமான அபராதத்தைச் செலுத்த வேண்டிவரும். ஆண்களின் தந்திர வலையிலிருந்து விடுபட்ட பெண்கள் பூரண வளர்ச்சியடைந்து ஆண்கள் செய்த சட்டதிட்டங்களையும், அவர்கள் உண்டாக்கிக்கொண்ட ஸ்தாபனங்களையும் எதிர்த்துக் கலகம் செய்யும்போது, அந்தக் கலகம், சந்தேகமில்லாமல் அஹிம்சை வழியிலிருக்கும் என்றாலும்,*

மிகவும் பயன் தரத்தக்கதா யிருக்கும். சட்டத்திற்கு அப்பாற் பட்ட ஒழுங்கீனமான முறையில் தாங்கள் இன்பம் துய்ப்பதற் காக வெட்கக்கேடான வாழ்க்கை வாழ வேண்டி யிருக்கும் ஆயிரக்கணக்கான சகோதரிகளின் விதியைப்பற்றி இந்திய ஆடவர்கள் சிந்தித்துப் பார்க்கட்டும். இதில் பெரிதும் வருந் தத்தக்க விஷயம் என்னவென்றால், ஒழுங்கீனத்திற்கே நிலைக் கலன்களாகவுள்ள இந்த இடங்களுக்குப் போகும் ஆண்மக்க ளில் மிகப் பெரும்பான்மையோர் மணமானவர்களாக இருக்கி ருர்க ளென்ப தாகும். ஆதலால், இவர்கள் இரண்டு வகையில் பாபம் செய்பவர்கள் ஆவர். அவர்கள் தாங்கள் சத்தியம் செய்து வரித்த மனைவிமாருக்கு விரோதமாகவும் பாபம் செய் கிருர்கள்; தங்கள் சொந்தச் சகோதரிகளின் புனிதத்தன்மை யைப் போலவே ஆர்வத்தோடு பாதுகாக்கப்பட வேண்டிய புனிதத்தன்மையுடைய இதர பெண்களுக்கு விரோதமாகவும் பாபம் செய்கிருர்கள். மான உணர்ச்சி இந்திய ஆண்களாகிய நமக்கு ஏற்படுமாஞல் இந்தத் தீமை இனி ஒரு நாள்கூட நீடிக்காது.

நம்மிடையே அதிக கௌரவம் பொருந்தியவர்களாக இருப்பவர்களில் அனேகர் இந்தத் தீமையில் ஆழ்ந்துபோயிருக் கிருர்கள். அப்படி யில்லாவிட்டால் பசியோடிருப்பவன் வாழைப் பழத்தைத் திருடுவது அல்லது பணத்தேவையுள்ள இளைஞன் தெரியாமல் ஒருவர் பையில் கையிட்டுப் பணத்தை திருடுவதைவிடப் பெரிய குற்றம் என்று இந்தக் காம நுகர்ச்சி யைக் கருத மாட்டார்களா? இவ்விரண்டில் எது மோசமானது? சமூகத்திற்கு எது அதிகமான தீங்கை விளைவிப்பது? சொத் தைத் திருடுவதா, பெண்ணின் மானத்தைத் திருடுவதா? தன் மானத்தை விற்கும் பெண் தானும் அதற்கு உடந்தையா யிருக்கிருள்; குதிரைப் பந்தய மைதானத்திலே கைதேர்ந்த சேப்படித் திருடனிடம் பணத்தைப் பறிகொடுக்கும் கோடீஸ் வரன் விஷயம் அப்படியல்ல என்று என்னிடம் சொல்ல வேண்டாம். சேபியிலிருந்து திருடும் பையன் மோசமான வஞ? தன் கையில் சிக்கியவனுக்கு மயக்க மருந்து கொடுத்து அவனுடைய சொத்து முழுவதையுமே எழுதி வாங்கிக்கொள்ளும் அயோக்கியன் மோசமானவஞ? மனச் சாட்சிக்கு விரோதமான நுட்பமான வழிகளின் மூலம் முதலில் பெண்ணின் உயர்ந்த உள்ளுணர்வைத் திருடிய பிறகு அவளுக்கு விரோதமாகச் செய்யும் குற்றத்தில் ஆண்களும் பங்குகொண்டவர்களே ஆவர். அப்படியில்லாவிட்டால் சில பெண்கள், பஞ்சமர்களைப்போல, கீழான வாழ்க்கைக்கென்றே

பிறந்திருக்கிறார்களா, என்ன? மணமாகி இருப்பினும் சரி இல்லாவிடினும் சரி ஒவ்வொரு இளைஞனும், நான் எழுதியிருப் பவற்றின் பொருள்களை யெல்லாம் சிந்தனை செய்து பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தச் சமூக வியா தியைப்பற்றி—இந்த ஆன்மீகக் குஷ்டத்தைப்பற்றி—நான் தெரிந்துகொண்ட எல்லா விஷயங்களையும் இங்கே எழுத முடி யாது. இளைஞர்களே தங்கள் கற்பனை சக்தியைக் கொண்டு இட்டு நிரப்பிக்கொள்ளட்டும். இந்தப் பாவத்தைத் தாங்களே செய்திருந்தால், வெட்கத்தாலும், பயத்தாலும் அதிலிருந்து அவர்கள் விடுபடட்டும். பரிசுத்தமான ஆண்கள், அவர்கள் எங்கே யிருந்தாலும் சரி, தங்களுக்குப் பக்கத்திலுள்ள இடங் களை இவ் விஷயத்தில் புனிதமாகச் செய்யட்டும். புனிதம் செய்கிற தென்று சொல்வது எளிது; அதைச் செய்வது கஷ்டம். அது ரொம்பச் சங்கடமான காரியம். சங்கடமாயிருக் கிற காரணத்தினாலேயேதான், சிந்திக்கும் சக்தியுடைய எல்லா ஆண்களும் அதில் கவனம் செலுத்த வேண்டியது அவ சியமாக இருக்கிறது. அபாக்கியவதிகளான இந்தச் சகோதரி களுக்கிடையே தொண்டு செய்வதை, எல்லா இடங்களிலும், நிபுணர்களிடம் விட்டுவிட வேண்டும். அவதூறுக்கு இருப்பிட மான இந்த வீடுகளுக்குப் போகிறவர்களிடையே செய்கிற வேலையையுந்தான் நான் குறிப்பிடுகிறேன்.

# இந்தியப்பெண்களுக்கு ஒருவேண்டுகோள்

"இந்தியாவின் எதிர்காலம் உங்கள் மடியில் இருக்கிறது. வரப்போகிற தலைமுறையை நீங்கள் அல்லவா ஊட்டி வளர்க்கப் போகிறீர்கள்? இந்தியக் குழந்தைகளை, நேர்மையான தெய்வபக்தியுள்ள, வீரபுருஷர்களாகவும், வீர மங்கைகளாகவும் வளர்க்கக் கூடியவர்கள் நீங்கள்தான்; அவர்களைச் செல்லமாக வளர்த்து, வாழ்க்கைப் புயல்களை எதிர்த்து நின்று சமாளிக்கச் சக்தியற்ற பலவீனர்களாகவும் வாழ்க்கையின் பிற்பகுதியில் விலக்கித் தள்ள முடியாத அளவு அன்னியநாட்டு அலங்காரச் சாமான்களில் முழுகிப் போன மக்களாகவும் அவர்களை வளர்க்கக் கூடியவர்களும் நீங்கள்தான்."

அன்னியத் துணிப் பகிஷ்கார இயக்கத்தைக் காந்திஜீ நடத்தியபோது, அது சம்பந்தமாய் இந்தியப் பெண்களுக்குக் கீழ்வரும் வேண்டுகோளை விடுத்தார்:

*அன்பு மிக்க சகோதரிகளே!*

*லோகமானிய திலகரின் ஞாபகார்த்தமாக ஜூலை மாதம் 31உ பம்பாயில், தியாக உணர்ச்சியோடு தீ மூட்டி அன்னியத் துணிப் பகிஷ்காரத்தை ஆரம்பித்தோம். இந்தப் பகிஷ்கார இயக்கத்தை நடத்துவதற்கு வருகிற செம்டம்பர் மாதம் 30உயைக் கடைசி நாளாக அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியார் முடிவு செய்திருக்கிறார்கள். காலத்திற்கேற்ற முக்கியமான முடிவாகும் இது. இதுவரையில் அருமையானவை, அழகானவை என்று நீங்கள் கருதிவந்த விலை மதிப்புள்ள சேலைகளையும், இதர துணிமணிகளையும் ஒரே குவியலாகக் குவித்து, அதில் நெருப்பு வைக்கிற கௌரவம் எனக்கு அளிக்கப்பட்டது. விலையுயர்ந்த துணிமணிகளைக் கொடுத்த சகோதரிகள் சரியான, அறிவுள்ள காரியத்தையே செய்தார்களென்று நான் நினைக்கிறேன். இந்தத் துணிகளை அழிப்பதே அவைகளை மிகவும் லாபகரமாக உபயோகிப்பதாகும். பிளேக் நோய் தொற்றிய சாமான்களை அழிப்பதுதானே அவற்றை மிகவும் லாபகரமாய் உபயோகிப்பது! இந்த ஜன சமுதாயத்தை இப்போதிருப்பதைவிடக் கடுமையான வியாதிகள் வந்து தாக்காதபடி பாதுகாப்பதற்காக அவசியமாகச் செய்ய வேண்டிய ரண சிகிச்சை இது.*

*சென்ற 12 மாதங்களில் தாய் நாட்டுக்காக இந்தியப் பெண்கள் அற்புதமான காரியங்களைச் செய்திருக்கிறார்கள்.*

கருணைத் தேவதைகளாக விளங்கி, வெளியே தெரியாமல் அமைதியாக நீங்கள் தொண்டு செய்திருக்கிறீர்கள். அருமையான நகைகளையும், கையிலுள்ள ரொக்கப் பணத்தையும் கொடுத்திருக்கிறீர்கள்; நிதி சேர்க்கும்பொருட்டு வீடுவீடாக அலைந்திருக்கிறீர்கள்; மறியல் செய்வதிலும் சிலர் உதவி செய்திருக்கிறீர்கள். நாளைக்குப் பல தடவை வண்ணவண்ணமாய் நாசூக்கான ஆடையுடுத்திப் பழகிய உங்களில் சிலர் அவற்றை உதறி எறிந்துவிட்டு இப்போது வெண்மையான, மாசுமறுவற்ற, தடித்த கதர்ச் சேலையைக் கட்ட ஆரம்பித்திருக்கிறீர்கள். இந்தத் தடித்த கதர்ச் சேலை, பெண்களின் மாசுமறுவற்ற மனநிலையை எடுத்துக் காட்டுகிறது. இந்தியாவுக்காக, கிலாபத் இயக்கத்திற்காக, பாஞ்சாலத்திற்காக, நீங்கள் இதைச் செய்திருக்கிறீர்கள். நீங்கள் சொல்லுகிற சொல்லிலும், செய்கிற சேவையிலும் ஏமாற்றமோ தந்திரமோ ஏதும் இல்லை. நீங்கள் செய்கிற புனிதமான இந்தத் தியாகத்தில் கோபமும் இல்லை, வெறுப்பும் இல்லை, இந்தியா வெங்கணும் தானாக மனமுவந்து நீங்கள் செய்துள்ள இந்த அன்புப் பணியைப் பார்த்த பின் கடவுள் நம் பக்கமே இருக்கிறார் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டிருக்கிற தென்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். லட்சக் கணக்கான இந்தியப் பெண்கள் இந்தப் போராட்டத்தில் நேரடியாகக் கலந்துகொண்டு உதவி செய்கிறார்கள். ஆத்ம பரிசுத்தத்திற்காகவே இந்தப் போராட்டம் நடைபெறுகிற தென்பதற்கு இதைவிட வேறு சான்று வேண்டியதே இல்லை.

நீங்கள் கொடுத்திருப்பது ஏராளம். ஆனால், இன்னும் ஏராளமாக உங்களிடம் எதிர்பார்க்கிறோம். திலகர் சுயராஜ்ய நிதிக்குக் கிடைத்த நன்கொடைகளில் முக்கியமான பகுதி ஆண்களுடையது. ஆனால் எல்லாவற்றிலும் பெரும் பங்கை நீங்கள் கொடுத்தால்தான் சுதேசித் திட்டம் பூரணமாக நிறைவேறுவது சாத்தியமாகும். அன்னியத் துணி அணிவதை முற்றிலும் நீங்கள் விட்டொழித்தாலன்றி, பகிஷ்காரம் சாத்தியமில்லை. ஒரு பொருள்மீது ஆசை இருந்துகொண்டிருக்கிற வரையில், அதைப் பூரணமாகத் துறப்ப தென்பது சாத்தியமற்றதாகவே இருக்கும். பூரணமாகத் துறப்பதைத்தான் பகிஷ்காரம் என்கிறோம். கடவுள் நமக்கு கொடுக்கிற குழந்தைகள் எப்படி இருப்பினும் நன்றியோடு திருப்தியடைகிறோமல்லவா? அதேபோல, இந்தியாவில் உற்பத்தி செய்யக்கூடிய துணியைக்கொண்டு நாம் திருப்தியடையத் தயாராக இருக்க வேண்டும். பிறருக்கு அவலட்சணமாய்த் தோன்றுகிறது

என்பதற்காகத்தான் பெற்ற குழந்தையைத் தூக்கி எறிந்த தாயை நான் பார்த்ததில்லை. இந்தியாவில் உற்பத்தியாகும் சாமான்கள் விஷயத்திலும் தேசப்பற்றுள்ள இந்தியப் பெண்கள் அதேபோலத்தான் நடந்துகொள்ள வேண்டும். கையால் நூற்று, கையால் நெய்த ஆடைகளையே நீங்கள் சுதேசிச் சாமான்களாகக் கொள்ள வேண்டும். உள்ள நிலையிலிருந்து மாறும்போது கரடுமுரடான கதர்த் துணிதான் உங்களுக்கு ஏராளமாகக் கிடைக்கும். சில மாதங்கள்வரை கரடுமுரடான கதரைக் கொண்டு நீங்கள் திருப்தியடைவீர்களானால் அப்புறம், உங்கள் மனதுக்குப் பிடித்தமான விதத்தில் அதிலே எவ்வளவு அழகு வேண்டுமானாலும் புகுத்திக்கொள்ளலாம். ஒரு காலத்தில் உலகத்தாரெல்லாரும் பார்த்துப் பொறாமைப் பட்டு ஏங்கும்படியிருந்த அழகான, விலையுயர்ந்த பல வர்ண ஆடைகள் மீண்டும் உற்பத்தியாகுமா என்று நீங்கள் ஏங்க வேண்டியதில்லை. ஆறு மாத காலம் அன்னிய ஆடையை அணியாமலிருந்தால், அப்போது கலைப்பண்பு பொருந்தியதென்று நாம் இன்று கருதுகிற பொருள்கள் யாவும் உண்மையில் அப்படிப்பட்டவையல்ல; வேறொரு அம்சமும் அதில் மறைந்து கிடக்கிறது என்பதை உணர்வீர்கள். உண்மையான கலைக்கு வெளித் தோற்றம் மட்டும் போதாது; உயிர் ஊட்டு கலையும் உண்டு; உயிரைக் கொல்லும் கலையும் உண்டு; மேலை நாட்டிலிருந்தும், கீழ்க்கோடியிலிருந்தும் நாம் இறக்குமதி செய்யும் மெல்லிய துணி, நமது சகோதர சகோதரிகளில் லட்சக்கணக்கானவர்களை, வாஸ்தவத்திலேயே கொன்றிருக்கிறது; ஆயிரக்கணக்கான நமது அருமைச் சகோதரிகளை வெட்கக்கேடான வாழ்க்கை வாழும்படி செய்திருக்கிறது. உண்மையான கலைகள் அவற்றைச் சிருஷ்டித்த கலைஞர்களின் மகிழ்ச்சிக்கும், திருப்திக்கும், பரிசுத்தத்திற்கும் ஒரு அத்தாட்சியாக விளங்க வேண்டும். இவ்விதமான கலை மீண்டும் நம்மிடையே தோன்றவேண்டுமானால், உங்களில் மிகவும் உயர்ந்தவர்கள் என்று சொல்லக்கூடியவர்களுங்கூடக் கதரை அவசியம் இப்போதிருந்தே அணிய வேண்டும். அணிய வேண்டுவது அவர்களுடைய கடமையாகும்.

சுதேசித் திட்டம் வெற்றியடைவதற்கு, கதரை உடுப்பது மட்டும் போதாது; ஒய்வு நேரங்களில் ஒவ்வொருவரும் நூற்க வேண்டியதும் அத்தியாவசியமாகும். சிறுவர்களுக்கும் ஆண்மக்களுக்கும் கட்டாயம் நூற்க வேண்டுமென்ற ஆலோசனையை நான் கூறியிருக்கிறேன். நாள்தோறும் அவர்களில் ஆயிரக்கணக்கான பேர்

நூற்கிறார்களென்பதை நான் அறிவேன். ஆனால் பண்டைக் காலத்தில்போல, நூல் நூற்பதில் முக்கியமான பங்கு உங்களைச் சார்ந்ததாகவே இருக்க வேண்டும். இரு நூறு வருஷங்களுக்கு முன்பு இந்தியப் பெண்கள் உள்நாட்டுத் தேவைக்கே மட்டுமின்றி வெளிநாட்டுத் தேவைகளைப் பூர்த்தி செய்யவும் நூற்றார்கள். அவர்கள் கரடுமுரடான நூலை மட்டும் நூற்கவில்லை; உலகத்திலேயே மெல்லியதான நூலையும் நூற்றார்கள். நமது முன்னோர்கள் நூற்றதைப் போன்று நுட்பமாக நூற்கும் திறனை இதுவரையில் ஒரு இயந்திரங்கூட அடையவில்லை. எனவே, இரண்டு மாதங்களுக்கும், அதற்குப் பிறகும் கதருக்கு ஏற்படும் தேவையை நாம் சமாளிக்க வேண்டுமென்றால், நீங்கள் எல்லாரும் நூற்போர் சங்கங்களை அமைக்க வேண்டும். நூற்புப் போட்டிப் பந்தயங்களை நடத்த வேண்டும். இந்திய மார்க்கட்டில் நூல் குவியும்படி செய்ய வேண்டும். அதன் பொருட்டு, நூற்பது, சுற்றுவது ராட்டையைச் சரிப்படுத்துவது, ஆகிய காரியங்களில் உங்களில் சிலர் நிபுணத்துவம் பெற வேண்டும். இதற்கு இடை விடாத உழைப்புத் தேவை. நூற்பதன் மூலம் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு ஜீவிக்க வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்க்க மாட்டீர்கள். மத்திய வகுப்பினர் குடும்பங்களின் குடும்ப வருமானத்தோடுகூட இது உதவும். அதிக ஏழைகளான பெண்களுக்குச் சந்தேகமின்றி இது ஒரு ஜீவனோபாயமாக உதவும். முன்னிருந்தது போல, ராட்டை விதவையின் அன்பான தோழியாக இருக்க வேண்டும். ஆனால் இந்த வேண்டுகோளைப் படிக்கும் உங்களுக்கு, இதை ஒரு கடமை, தர்மம் என்கிற முறையிலேதான் நான் சொல்லியிருக்கிறேன். செல்வ மிக்க இந்தியப் பெண்கள் அனைவரும் நாள்தோறும் ஒரு அளவுக்கு நூல் நூற்பார்களானால், நூலின் விலையைக் குறைப்பதோடு, வெகுவிரைவிலே தேவையான அளவு நுண்ணியதாக நூற்கவும் துணை செய்தவர்கள் ஆவார்கள்.

எனவே, பொருளாதாரத்திலும், ஆன்மீகத் துறையிலும் இந்தியாவின் கதிமோட்சம் முக்கியமாக உங்களைப் பொறுத்திருக்கிறது. இந்தியாவின் எதிர்காலம் உங்கள் மடியில் இருக்கிறது. வரப்போகிற தலைமுறையை நீங்கள் அல்லவா ஊட்டி வளர்க்கப்போகிறீர்கள்? இந்தியக் குழந்தைகளை நேர்மையான, தெய்வபக்தியுள்ள, வீரபுருஷர்களாகவும் வீர மங்கைகளாகவும் வளர்க்கக் கூடியவர்கள் நீங்கள்தான். அவர்களைச் செல்வமாக வளர்த்து, வாழ்க்கையின் புயல்களை எதிர்த்து நின்று சமாளிக்கச் சக்தியற்ற பலவீனர்களாகவும்,

வாழ்க்கையின் பிற் பகுதியில் விலக்கித்தள்ள முடியாதபடி அன்னியநாட்டு அலங்காரச் சாமான்களில் முழுகிப்போன மக்களாக அவர்களை வளர்க்கக் கூடியவர்களும் நீங்கள்தான். அடுத்து வரும் சில வாரங்களில் இந்தியப் பெண்கள் எந்த ரகத்தைச் சேர்ந்தவர்கள் என்பது விளங்கிவிடும். நீங்கள் இவ்விரண்டில் எதைத் தேர்ந்தெடுப்பீர்கள் என்பதைப்பற்றி எனக்குக் கொஞ்சங்கூடச் சந்தேகமில்லை. இந்தியாவின் எதிர்காலம், அது தன்மீதே நம்பிக்கை யிழக்கும்படி செய்து, அதன் செல்வங்களைச் சுரண்டிவருகிற ஒரு அரசாங்கத்தினிட மிருப்பதைவிட, உங்கள் கையில் இருப்பது எவ்வளவோ மேலாகும். பெண்கள் கூடும் ஒவ்வொரு கூட்டத்திலும் தேசத்தின் முயற்சி வெற்றி பெற ஆசீர்வாதம் செய்யும்படி நான் கேட்பதுண்டு. பலிக்கும்படி ஆசீர்வாதம் செய்வதற்கு வேண்டிய தெய்வீகத்தன்மை, புனிதத்துவம், நேர்மை உங்களிடம் இருக்கிற தென்ற நம்பிக்கையிலேதான் ஆசீர்வதிக்கும்படி உங்களைக் கேட்கிறேன். அன்னிய ஆடைகளை ஒழிப்பதன் மூலமும், ஓய்வு நேரங்களில் இடைவிடாமல் நாட்டிற்காக நூற்பதன் மூலமும் உங்கள் ஆசீர்வாதங்கள் பலிக்கும்படி நீங்கள் செய்ய வேண்டும்.

உங்கள் அன்புமிக்க சகோதரன்,

**மோ. க. காந்தி**

# பெண்களுக்குரிய வேலைத்திட்டம்

**" பெண்களைக் பாதுகாப்பது, ஆண்களின் விசேஷ உரிமை யாக இருக்கட்டும்; ஆனால் ஆண்கள் இல்லாதபோதும், தங்களைக் காப்பாற்றுகிற புனிதமான கடமையை ஆண் கள் செய்யத் தவறுகிறபோதும் இந்தியப் பெண்கள் உதவி யற்ற நிலையில் இருக்கிறோமே யென்று கவலைப்பட வேண் டாம்."**

கல்கத்தாவைச் சேர்ந்த பெண்கள், கதர் விற்பனை செய் யப் புறப்பட்டு, ஆண்களைக் கதர் வாங்கும்படி வற்புறுத்தி மறியல் செய்தார்கள். அதன் காரணமாக அவர்கள் கைது செய்யப்பட்டிருப்பதாகப் பத்திரிகையில் வெளிவந்திருக்கும் தந்திச் செய்தி அறிவிக்கிறது. இவ்வருடத்திற்குத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் தேசபந்து சி. ஆர். தாஸி னுடைய அன்புள்ள மனைவியாரும், விதவைச் சகோதரியும், சகோதரியின் புத்திரியும் கைது செய்யப்பட்ட பெண் களில் இருக்கிறார்கள். எப்படியும் ஆரம்ப நிலையில் சிறை செல் லுகிற கௌரவத்தை வங்காள சர்க்கார் பெண்களுக்கு அளிக்க மாட்டார்களென்று நம்பியிருந்தேன்; பெண்கள் கடு மையான சத்தியாக்கிரகிகளாக வேண்டுமென்பது நமது நோக்கமல்ல. ஆனால் ஆண் பெண் என்ற வேற்றுமைக்கு இடங்கொடாமல், எல்லோரையுமே பாரபட்சமின்றி நடத்த வேண்டுமென்ற உற்சாகத்தில், வங்காள சர்க்கார் இந்தக் கௌரவத்தை மூன்று கல்கத்தாப் பெண்களுக்கு அளித்திருக் கிறார்கள். இந்தப் புதிய போக்கை நாடு முழுவதும் வரவேற்கு மென்று நம்புகிறேன். சுயராஜ்யத்தைப் பெறுவதில் இந்திய ஆண்களைப் போலவே இந்தியப் பெண்களுக்கும் சம பாகம் உண்டு. அமைதியான இப் போராட்டத்தில் ஒரு வேளை பெண்கள், ஆண்களைவிட எத்தனையோ மைல் முன்னே செல் லுதலும் கூடும். சமய ஈடுபாட்டில் பெண் ஆணைவிட எந்தக் காலத்திலும் உயர்ந்தவள் என்பதை நாம் அறிவோம். வெளியே சொல்லாமலும், பெருந்தன்மையோடும் துன்பத் தைச் சகிக்கிற ஆற்றல் பெண்களுக்குத்தானே சிறப்பாக உண்டு. இப்போது வங்காள சர்க்கார் பெண்களையும் போருக்கு இழுத்து அறைகூவி அழைத்திருக்கிறபடியால், இந்தியா முழுவதிலுமுள்ள பெண்கள் இந்த அறைகூவலை ஏற் றுக்கொண்டு, அதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்வார்க ளென்று நம்புகிறேன். போதிய அளவு ஆண்கள் சிறை

சென்ற பிறகு, அந்த இடங்களில் வந்து அமர்ந்து, ஆண்கள் செய்த வேலையைப் பெண்கள் செய்ய வேண்டுவது அவசியம். இதுவே அவர்கள் குலத்திற்குப் பெருமை. இப்போதிருந்தே சிறை வாழ்க்கையின் கஷ்ட நஷ்டங்களில் ஆண்களோடு பெண்களும் பங்குகொள்ளட்டும். அவர்கள் கௌரவத்தை கடவுள் காப்பாற்றுவார். திரௌபதியின் மானத்தைக் காப்பாற்றக் கடமைப்பட்ட ஆண்கள் கடைசித் துகில் உரிபடும் வரையில் உதவியற்றவர்களாய் அப்படியே இருந்துவிட்டார்கள். திரௌபதியின் கற்பின் பலமே அன்று அவளுடைய மானத்தைக் காப்பாற்றியது. இந்த நிகழ்ச்சி ஆண்களை நகையாடுவதெற் கென்றே ஏற்பட்டது போலும். காலத்தின் இறுதி வரையிலும் அது மறையாது. உடலில் வலிமையற்றவர்களுக்கும் தங்கள் மானத்தை காப்பாற்றிக்கொள்ளுகிற சக்தி கொடுக்கப்பட்டிருக்கிறது. பெண்களைப் பாதுகாப்பது ஆண்களின் விசேஷ உரிமையாக இருக்கட்டும். ஆனல் ஆண்கள் இல்லாதபோதும், தங்களைக் காப்பாற்றுகிற புனிதமான கடமையை ஆண்கள் செய்யத் தவறுகிறபோதும், இந்தியப் பெண்கள் உதவியற்ற நிலையில் இருக்கிறோமே யென்று கவலைப்பட வேண்டாம். மரணத்திற்கு வழியை அறிந்திருக்கும் பெண்கள், தங்களது கற்புக்கோ அல்லது தங்கள் கணவனுடைய கௌரவத்திற்கோ பங்கம் வருமென்று கவலைப்பட மாட்டார்கள்.

அமைதியாக, ஆனல் காலம் தாழ்த்தாமல் போருக்கு வரத் தயாராயிருப்பவர்களின் பெயர்களைச் சேகரிக்கும்படி இந்தியப் பெண்களுக்கு நான் சொல்ல விரும்புகிறேன். போருக்குத் தாங்கள் தயார் என்பதை வங்காளத்துப் பெண்களுக்கு அவர்கள் அறிவிக்கட்டும். அதன் மூலம் மற்றப் பகுதிகளிலுள்ள சகோதரிகளும் தாங்கள் சிறப்பான உதாரணத்தைப் பின்பற்ற தயாரா யிருக்கிறூர்க ளென்று வங்காளப் பெண்கள் எண்ணட்டும். சிறைவாழ்க்கையின் கஷ்ட நஷ்டங்களையும், சிறை வாழ்க்கையில் நேரக்கூடிய பல இன்னல்களையும் தைரியமாகச் சகித்துக்கொள்ளும் தன்மை பெண்கள் பலருக்கு முதலில் ஏற்பட மாட்டாதுதான். முதலில் ஒரு சிலரே தியாகத்திற்கு முன்வந்தார்க ளென்பதற்காக நாட்டு மக்கள் வெட்கமடைய வேண்டியதில்லை.

# பெண்கள் மூலம் சுயராஜ்யம்

**"ஆணும் பெண்ணும் சமம் என்பது அவரவர்கள் செய்ய வேண்டிய தொழில்களிலும் சமத்வம் உண்டு என்பதைக் குறிக்கவில்லை. வேட்டையாடுவதற்கோ ஈட்டியைச் சுற்றி சுழற்றுவதற்கோ பெண்ணுக்குச் சட்டரீதியான தடைகள் இல்லாதிருக்கலாம். ஆடவனுக்குச் சொந்தமான அந்த வேலையைச் செய்வதினின்றும் ஒரு உள்ளுணர்ச்சி பெண்ணைப் பின்னுக்கு இழுக்கிறது; பரிபூரண நிலை எய்த ஒருவர்க்கொருவர் அவசியம் என்கிற முறையில் இயற்கை ஆணையும் பெண்ணையும் படைத்திருக்கிறது. அவர்களது உருவங்களைப்போலவே அவர்கள் தொழில்களும் வரையறுக்கப் பட்டிருக்கின்றன."**

*நூற்பது சத்தியாக்கிரகத்திற்கு இன்றியமையாத நிபந்தனை என்பதைக் காரியக் கமிட்டி இப்போது ஒப்புக்கொண்டிருக்கிறது. எனவே தேச சேவை செய்ய இந்தியப் பெண்களுக்கு ஒரு அருமையான சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. தனியாக ஒதுங்கியிருந்த பெண்களை உப்பு சத்தியாக்கிரகம் பதினையிரக் கணக்கில் முன்னணிக்குக் கொண்டுவந்து, ஆண்களுக்கும் சமமாக அவர்களும் நாட்டுக்குச் சேவை செய்ய முடியும் என்பதைக் காட்டிவிட்டது. கிராமப் பெண்ணுக்கு அவள் இதற்குமுன் அடையாத ஒரு கௌரவத்தை அது அளித்தது. ஏகாதிபத்தியப் பிடிப்பிலிருந்து விடுதலை பெறுவதற்கு, இந்தியா ஆரம்பித்திருக்கும் அமைதியான போராட்டத்தில், நூற்பது நடுநாயகமாக விளங்குகிறது; அதற்குரிய ஸ்தானத்தைத் தேடிக் கொடுத்ததனல் இந்தியப் பெண்களுக்கே தனியான ஒரு அந்தஸ்து ஏற்பட்டிருக்கிறது. நூர்பதில் ஆண்களைவிடப் பெண்களுக்கு இயற்கையாகவே ஒரு வசதியிருக்கிறது,*

*ஆரம்ப முதலே ஆண்களுக்கும் பெண்களுக்கு மிடையில் தொழிற் பாகுபாடு ஏற்பட்டிருக்கிறது. (முதல் மனிதனை) ஆதம் நெய்தான். (முதல் பெண்ணை) ஈவாள் நூற்றுள். இவ் வேறுபாடு இன்றுவரையில் இருந்து வருகிறது. நூற்கிற ஆண்கள் விதிவிலக்காவார்கள். பாஞ்சாலத்தில் 1920-21ல் நூற்கும்படி ஆண்களை நான் கேட்டுக்கொண்டபோது, நூற்கிறது தங்கள் கௌரவத்திற்கு குறைவு என்றும் அது பெண்களையே சேர்ந்த வேலை யென்றும் அவர்கள் என்னிடம்*

சொல்லி வந்தார்கள். இன்று அகௌரவம் என்ற காரணத்தைச் சொல்லி ஆண்கள் நூற்க ஆட்சேபிக்கிறதில்லை. தியாகத்திற்காக நூற்கிறவர்கள் ஆயிரக்கணக்கில் இருக்கிறார்கள். தேசாபிமானம் என்ற எண்ணத்தில் ஆண்கள் நூற்க ஆரம்பித்த பிறகே நூற்பது விஞ்ஞானத் துறையாயிற்று; அப்புறந் தான் மற்ற துறைகளைப்போல அதிலும் பெரிய பெரிய உண்மைகளைக் கண்டுபிடிக்கத் தலைப்பட்டார்கள். என்றாலும், நூற்பது பெண்களின் விசேஷக் கலையாகவே இருக்கும் என்று அனுபவ மூலம் அறிகிறோம். இந்த அனுபவத்திற்கு நல்ல காரணமும் இருக்கிறதென்று நம்புகிறேன். நூற்பது இயற்கையிலேயே, நிதானமான தொழில்; மற்ற தொழில்களைவிட அமைதியான வேலை. பெண் தியாகத்தின் உருவம்; ஆகையால் அவளை அஹிம்சையின் உருவம் என்று சொல்லிவிடலாம். இந்தக் காரணத்தினால், அவள் ஈடுபடும் தொழில்களும், போரைவிட அமைதியையே அதிகமாக நாடுவதாக இருக்க வேண்டும். ஹிம்சைக்கேதுவான போரின் காரியங்களுக்கு பெண்ணை இன்றைய நாகரிகம் இழுத்துச் செல்லுகிறது. தற்கால நாகரிகத்திற்கு இது பெருமை அல்ல; அவளது அடிப்படையான இயற்கைக்கு விரோதமாகச் செல்லும் ஹிம்சையை அவள் கூடியவரையில் எதிர்த்து நிற்பாள் என்பதில் சந்தேகமில்லை. ஹிம்சை என்பது அவ்வளவு தூரம் பெண்களுக்குப் பொருந்தாத விஷயம். மனிதன் தனது அறிவின்மைக்காக வருந்துவான் என்றே எனக்குத் தோன்றுகிறது. ஆணும் பெண்ணும் சமம் என்பது, அவரவர்கள் செய்ய வேண்டிய தொழில்களிலும் சமத்துவம் உண்டு என்பதைக் குறிக்கவில்லை. வேட்டையாடுவதற்கோ, ஈட்டியைச் சுற்றிச் சுழற்றுவதற்கோ பெண்ணுக்குச் சட்டரீதியான தடைகள் இல்லாதிருக்கலாம். ஆடவனுக்குச் சொந்தமான அந்த வேலையைச் செய்வதினின்றும், ஒரு உள்ளுணர்ச்சி பெண்ணைப் பின்னுக்கு இழுக்கிறது. பரிபூரண நிலை எய்த ஒருவர்க்கொருவர் அவசியம் என்கிற முறையில் இயற்கை ஆணையும் பெண்ணையும் படைத்திருக்கிறது. அவர்களது உருவங்களைப்போலவே அவர்களது தொழில்களும் வரையறுக்கப்பட்டிருக்கின்றன.

ஆனால் ஆணுக்கும் பெண்ணுக்கும் •உள்ள தொழில் வேறுபாடுகளை நிரூபிப்பது நான் இப்போது சொல்லுகிற காரியத்திற்குத் தேவையில்லை. எது எப்படிப்போனாலும், கோடிக்கணக்கான பெண்கள் நூற்பதையே தங்களுக்கு இயற்கையான தொழிலாகக் கருதுகிறார்களென்பது இந்தியா வரையில் உண்மையாக இருக்கிறது, காரியக் கமிட்டியின்

தீர்மானம் தானகவே பாரத்தை ஆண்களிடமிருந்து பெண்களுக்கு மாற்றுவதோடு, அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதைக் காட்டவும் ஒரு சந்தர்ப்பத்தை அளிக்கிறது. எனது வருங்கால சைன்யத்தில் ஆண்களைவிடப் பெண்கள் மிக மிக அதிகமாக இருப்பதையே நான் விரும்புவேன். அப்போது போராட்டம் வந்தால், ஆண்கள் அதிகமாயிருக்கும் போது ஏற்படுகிற நம்பிக்கையைவிட அதிகமான நம்பிக்கையோடு பொருதுவதற்கு நான் தயாராவேன். ஆண்களின் ஹிம்சையைக் கண்டு நான் அஞ்சுவேன். அம்மாதிரி நிகழ்ச்சி ஏற்படாதென்ற உறுதி பெண்களாலேயே எனக்குக் கிடைக்கும்.

# ராட்டும் பெண்களும்

**"நாள் ஒன்றுக்கு ஒரு அணுவுக்குக்கூட வழியில்லாத எண்ணற்ற இந்தியப் பெண்களின் சார்பாகவே, கைராட்டையும் பிச்சை ஓட்டையும் தூக்கிக்கொண்டு நான் நாடு முழுதும் சுற்றித் திரிகிறேன்."**

பீஹாரில் கதரைப்பற்றிப் பேசும்போது, உலகத்தில் பல நாடுகளிலும் உள்ள மக்களுக்கு வருமானம் நாள் ஒன்றுக்குத் தலா எவ்வளவு கிடைக்கிறது என்று காட்டுகிற படங்களைக் கவனித்துப் பார்க்கும்படி சபையோரைக் கேட்டுக்கொண்டு, காந்திஜீ பேசியதாவது :

சிவப்பாக இருக்கும் இந்த நீளப் பட்டையைப் பாருங்கள்! ஐக்கிய அமெரிக்காவில், தலா வருமானம் எவ்வளவு என்பதை இது காட்டுகிறது. இதோடு இந்திய வருமானத்தைக் காட்டுகிற அந்தச் சிறு புள்ளியை ஒப்பிட்டுப் பாருங்கள். ஒன்று, நாள் ஒன்றுக்கு பதிநான்கு ரூபா; இன்னொன்று, நாள் ஒன்றுக்கு ஒன்றரை அணா. இங்கிலாந்து, பிரான்ஸ், ஜப்பான் ஆகிய இந்த நாடுகளின் வருமானத்தை ஒப்பிட்டுப் பாருங்கள். இவை முறையே நாள் ஒன்றுக்கு ரூ. 7, 6, 5 ஆக இருக்கின்றன. இந்த ஒன்றரை அணாவும் சராசரிதான். சம்பளம் வாங்குகிற மந்திரிகள், உத்தியோகஸ்தர்களாகவுள்ள கௌன்சிலர்கள், ஒரு சில லாயர்கள், இன்னும் சொற்பமான கோடீஸ்வரர்கள் ஆகிய இவர்களின் வருமானத்தை நீக்கிவிட்டுப் பார்த்தால், பெரும்பாலான நமது ஏழை மக்களுக்குக் கிடைக்கும் உண்மையான வருமானம் இதைவிடக் குறைவாக இருக்கும். ரொம்பக் குறைவாயிருக்கிற இந்த வருமானத்தை அதிகப்படுத்துவதற்கு ஏதாவது வழியிருந்தால் சொல்லும்படி உங்களைத் தாழ்மையோடு கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தக் கேள்வியை எல்லாரிடமும் நான் கேட்டுக்கொண்டுதான் வருகிறேன். ஆனால் பயன் ஒன்றும் இல்லை. ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்ததன் பயனாகவும், சென்ற சில வருஷங்களில் கோடிக்கணக்கான நமது மக்களோடு தொடர்பு வைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்தியதன் பயனாகவும், இந்த வருமானத்தை அதிகப்படுத்துவதற்கு ராட்டு ஒன்றே வழி என்று கண்டு, அதையே சொல்லிவருகிறேன்.

அதன் பிறகு, கதர் உற்பத்தி விற்பனை சம்பந்தமாக உள்ள புள்ளி விவரம் அடங்கிய படங்களைக் காந்திஜி எடுத்துக்

கொண்டார். பீஹாரில் படிப்படியாய்த் துரிதமாய் உயர்ந்திருக்கும் கதர் உற்பத்தியைக் காட்டி, விற்பனை மந்தமாக இருக்கிற தென்பதை அவர்கள் கவனத்துக்குக் கொண்டு வந்தார்.

இந்த உற்பத்தி 30,000 மதிப்புள்ளது; பீஹார் ஏழைப் பெண்கள் 30,000 பேர்களுக்குரியது. தர்பங்காவிலுள்ள கதர் நிலையங்களுக்கு நீங்கள் என்னோடு வாருங்கள். அங்கே முஸ்லிம் பெண்களுக்கும் ஹிந்துப் பெண்களுக்கும் சர்க்காவினுல் ஏற்பட்டிருக்கும் மகிழ்ச்சியையும் பூரிப்பையும் பாருங்கள். இது அதிகமான பேருக்கு வேலை கொடுக்க முடியவில்லை யென்ருல், அது என் குற்றமல்ல; உங்களுடையதே. அவர்கள் உற்பத்தி செய்த சரக்குகளை நீங்கள் வாங்கவில்லை யென்ருல், வேலையில் அபிவிருத்தி ஏற்பட மார்க்கமில்லை. நீங்கள் வாங்குகிற ஒவ்வொரு கஜம் கதர்த் துணியும், அந்தப் பெண்களின் கையில் சில காசுகள் போய்ச் சேரும்படி செய்கிறது. சில காசுகள்தாம்; அதிகமில்லை. ஆனல் இதுவரை ஒரு காசுமே போய் எட்டாத இடத்திற்கு இப்போது சில காசுகள் போய் சேருகின்றன அல்லவா? ராஜமந்திரியிலும் சில நெறி தவறிய சகோதரிகளைப் பார்த்தேன். ஒரு இளம் பெண் என்னிடம் வந்து. "காந்தி, உங்கள் சர்க்கா எங்களுக்கு என்ன தரும்? எங்களிடம் வருகிற ஆண் பிள்ளைகள் ஒரு சில நிமிஷங்களுக்கு ஐந்து பத்து தருகிருர்களே?" என்று கேட்டாள். அந்த மாதிரி வருமானத்தைச் சர்க்கா கொடுக்க முடியாதுதான். ஆனல் வெட்கக்கேடான இந்த வாழ்க்கையை அவர்கள் விட்டுவிட்டால், நூற்கவும் நெய்யவும் அவர்களுக்குக் கற்றுக்கொடுத்து, மரியாதையான வாழ்க்கையை நடத்துவதற்கு உதவி செய்ய முடியும் என்று அவளுக்குத் தெரிவித்தேன். அந்தப் பெண் சொன்ன சொற்கள் எனது இதயத்தில் இல்லாத துன்பத்தை உண்டாக்கின. என்னையும் ஒரு பெண்ணுக எேன் படைக்கவில்லை என்று கடவுளை நொந்து கொண்டேன். ஆனல் நான் பெண்ணுகப் பிறக்கவில்லை யென்ருலும், நான் ஒரு பெண் ஆக முடியும். இந்தியப் பெண்களுக்காகவே, நாள் ஒன்றுக்கு ஒரு அணுவுக்குக்கூட வழியில்லாத எண்ணற்ற இந்தியப் பெண்களின் சார்பாகவே, கைராட்டையும் பிச்சை ஓட்டையும் தூக்கிக்கொண்டு நான் நாடு முழுதும் சுற்றித் திரிகிறேன்.

# எழுபத்தைந்தில் இளமை

" வயது 75 ஆகியும் தனது கைத்தொழில் சம்பந்தப்பட்ட வரையில் இந்த மூதாட்டியார் இளமையாகவே இருக்கிறார். வாழ்க்கை வருமானத்திற்காக ராட்டையும் தறியையும் நம்பியிராவிட்டாலும் இவற்றில் இவர் மனம் ஆறுதலைக் காணுகிறது. நமது நாட்டில் 75 வயதிற்கு ஜீவித்திருக்கும் பெண்கள் மிகக் குறைவு. பெரும்பான்மையான பெண்கள் அவசியமின்றியே 50 வயதில் கிழவியாகிவிடுகிறார்கள். இங்கே லட்சக்கணக்கான பெண்கள் மன ஆறுதலுக்காக ஓய்வு நேரங்களில் தீமையற்ற கிராமக் கைத்தொழிலில் ஈடுபடுவதோடன்றி, பசிக்கொடுமை தங்களை வந்து தாக்காமல் ஜீவனோபாயத்திற்கும் அதையே நம்பியிருக்கிறார்கள்; ஸ்விட்ஜர்லாந்து அம்மையாரைவிட நமது பெண்களுக்கு இந்தக் கைத்தொழில் எத்தனையோ பங்கு அதிகமாகத் தேவைபடுகிற காரியம் அல்லவா?''

*ஆங்கில நண்பர் ஒருவர் எழுதுகிறார் :*

" *ஸ்விட்ஜர்லாந்தைச் சேர்ந்த குடியானவ மூதாட்டியொருவர் வில்லினுவ் ஊருக்கு மேலே மலையில் வசிக்கிறார். 70 வயதுக்கு மேலாகியும் இந்த அம்மையார் நூற்பதிலும் நெய்வதிலுமே தமது பொழுதைப்போக்கி வருகிறார். இவரிடமிருந்து எனக்கு வந்திருக்கிற ஒரு கடிதத்தையும், போட்டோக்களையும் பற்றி உங்களுக்கு இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஏனது கடிதங்களுக்குப் பதில் எழுதும் முறையில், கீழ்க்கண்டவாறு (பிரஞ்சு மொழியில்) எழுதி இருக்கிறார் : குளிர்காலம் தொடங்கிவிட்டது; பல மாதங்கள்வரை எங்களோடு கூடி வசிக்க விரும்புவது போலக் பனிக் கட்டிகள் பொலபொல வென்று உதிர ஆரம்பித்திருக்கின்றன. நெசவு வேலையில் ஈடுபட எனக்கு இனி வேண்டிய அவகாசம் கிடைக்கும். இப்போது 50 மீட்டர் நீளத்தில் இரண்டு துணிகள் வேண்டுமென்று என்னை ஒருவர் கேட்டிருக்கிறார். ஆகையாம் எனக்கு இந்த அவகாசம் தேவையானதுதான். ஏனெனில், இப்போதெல்லாம் (75 வயதில்) சீக்கிரம் களைப்பு ஏற்பட்டுவிடுகிறது. அமைதியும் திருப்தியும் வாய்ந்த குடியானவர்களின் வாழ்க்கைக்கு இந்த அம்மையாருடைய வாழ்க்கை, பரிபூரணமானதொரு எடுத்துக்காட்டாகும். கோடை காலத்தில், இவர் வயலில் வேலை பார்க்கிறார்; தரை சதுப்பாக இருக்கிறபோது இடையிடையே சில மணி நேரம் நூற்பதிலும் நெய்வதிலும் ஈடுபடுகிறார். குளிர் காலத்தில் நிலம் பனியால் மூடப்பட்டிருக்கும். அப்போது இவர் தறி, ராட்டு இரண்டையும் கொண்டு, நூற்பதிலும் நெய்வதிலும் நாள் முழுவதையும்*

கழிக்கிறார். இந்தக் கைத்தொழிலை மூதாட்டியிடமிருந்து பிடுங்கிவிட்டால், இவர் வாழ்க்கை ஒரே துன்ப மயமாகிவிடும்; இப்போது அந்த மலைப் பக்கத்தில் இருக்கிறவர்களெல்லாம் இவர்தான் ரொம்பச் சந்தோஷமாகவும் யாவரும் விரும்பத் தக்க இனிய குணம் வாய்ந்தவராகவும் இருக்கிறார். ஏனெனில், அங்கேயுள்ள குடியானவர்களுள் இவர் மட்டுந்தான் இந்தக் கைத்தொழிலை விடாமல் செய்துவருகிறார். ஆதலால் இவர் தான் பூரணமான உண்மை நிரம்பிய வாழ்க்கையை நடத்துகிறார். தமது ஆட்டுக்குட்டிகளில் ஒன்றைத் தழுவிக்கொண்டு ஒரு மரக்கட்டைமீது இவர் உட்கார்ந்திருக்கிற சிறிய படங்களில் ஒன்றை உங்களுக்கு இத்துடன் அனுப்புகிறேன். அன்பு ததும்பும் அந்த முதிர்ந்த முகம் எப்படி இருக்கிற தென்பதைப் பார்த்து நீங்கள் ஒருவாறு தெரிந்துகொள்ளலாம். படத்திலிருக்கும் இளம் பெண் இவருடைய மருமகள்.''

இந்த அழகான படம் என்னிடம் இருக்கிறது. அதை 'யங் இந்தியாவில்' பிரசுரிக்க முடியவில்லையென்றாலும், கற்பனாசக்தியுள்ள நேயர்களுக்கு மனத்தில் அந்தப் படத்தை வரைந்து கொள்வதில் கஷ்டமிராது. இயந்திரத்திற்கு அடிமையான அந்த நாட்டிலும்கூட, ஒரு காலத்தில் ஒவ்வொரு வீட்டிலும் பரவியிருந்த ராட்டிலும் தறியிலும் உண்மையான சாந்தியைக் காணும் மக்கள் இன்னும் இருக்கிறார்கள் என்பதே இந்தக் கடிதத்தின் குறிப்பு. வயது 75 ஆகியும் கைத்தொழில் சம்பந்தப்பட்டவரையில் இந்த மூதாட்டியார் இளமையாகவே இருக்கிறார். வாழ்க்கை வருமானத்திற்காக ராட்டையும் தறியையும் நம்பியிராவிட்டாலும், இவற்றில் இவர் மனம் ஆறுதலைக் காண்கிறது. நமது நாட்டில் 75 வயது ஜீவித்திருக்கும் பெண்கள் மிகக் குறைவு. பெரும்பான்மையான பெண்கள் வீணில் 50 வயதிலேயே கிழவியாகிவிடுகிறார்கள். இங்கே லட்சக்கணக்கான பெண்கள் மன ஆறுதலுக்காக ஓய்வு நேரங்களில் தீமையற்ற கிராமக் கைத்தொழிலில் ஈடுபடுவதோடன்றி, பசிக்கொடுமை தங்களை வந்து தாக்காமல், ஜீவனோபாயத்திற்கும் அதையே நம்பியிருக்கிறார்கள். ஸ்விட்ஜர்லாந்து அம்மையாரைவிட நமது பெண்களுக்கு இந்தக் கைத்தொழில் எத்தனையோ பங்கு அதிகமாகத் தேவைப்படுகிற காரியமல்லவா?

விஷயமறியாதவர்கள், "நீங்கள் சொல்லுவது உண்மையானால் அருமை மிக்க ஸ்விட்ஜர்லாந்து அம்மையாரைப் போல, கோடிக்கணக்கான உங்கள் மக்களும் இந்தக் கைத் தொழிலைச் செய்து, ஆறுதலையும் உணவையும் ஏன் பெறக்

கூடாது? அவர்களை யார் தடுக்கிறார்கள்?" என்று கேலியாக் கேட்கிறார்கள். 1889-இலோ, 1890-இலோ, ஆங்கிலேயர் கூடியிருந்த ஒரு கூட்டத்தில் சுரேந்திரநாத் பானர்ஜி சண்டப் பிரசண்டமாய்ப் பிரசங்கமாரி பொழிந்துகொண் டிருக்கையில், ஒரு முரட்டு ஆங்கிலேயர் எழுந்திருந்து, இதே மாதிரி ஒரு கேள்வியைத்தான் அவரிடம் கேட்டார். ஜான் புல் அண்ட் கம்பெனியின் சிறந்த அங்கத்தினரான அந்த ஆங்கிலேயர் வங்காளத்தின் முடிசூடா மன்னனைப் பார்த்துக் கேட்டார்: "இந்தியா சுதந்திரத்தை விரும்புகிறதென்று நீர் சொல்வது உண்மையானால், அந்தச் சுதந்திரத்தை யடையாதபடி அதை யார் தடுக்கிறார்கள்? சக்தி வாய்ந்த எங்கள் கம்பெனியின் அங்கத்தினர்கள் விரும்பிய காரியம் கைகூடி வராவிட்டால் மண்டையை உடைத்துக்கொள்வார்கள். நீங்கள் மண்டையை உடைத்துக்கொள்வது கிடக்கட்டும். 'ஜன்னல் கதவை உடைத்ததாகக்கூட எங்கள் காதில் விழக்காணோமே" என்று. அந்தக் கேள்விக்குப் பிரசங்கி என்ன பதில் சொன்னார் என்ற குறிப்பு பத்திரிகைகளில் இல்லை என்பதாக எனக்கு ஞாபகம். சபையோரிடமிருந்து "கேளுங்கள்," என்ற தொனி மட்டும் எழுந்தது. ஆனால் சுரேந்திரநாதரிடம் உண்மையை மறைக்காமல் அந்த ஆங்கிலேயர் கேட்ட கேள்வியை இன்றும் கேட்கலாம். இம்மாதிரி கேள்வி, சுதந்திரம் வேண்டுமென்று கேட்பதற்கு, தக்க பதிலாகிவிடாது என்பதை நாம் அறிகிறோம். அதை அடையும் வழிகள் நமக்குத் தெரியாமலிருக்கலாம். வழி தெரிந்த பின்னரும் அதைப் பின்பற்றத்தக்க சக்தியும் மன உறுதியும் இல்லாதிருக்கலாம். இருப்பினும், சுதந்திரம் வேண்டுமென்று கேட்பது நியாயமான, இயல்பான விஷயமே. அது பயனளிக்கக் கூடாததாயிருப்பினும் பாதகமில்லை. அது தான் சுதந்திரத்திற்கு முதல் படி.

பசியால் வாடும் கோடிக்கணக்கான மக்களுக்கு வேலை கொடுங்கள், அல்லது உணவு கொடுங்கள் என்று சொல்லிக் கதறுவதற்குக்கூட விருப்பமில்லை. அறியாமையின் காரணமாக, இந்த உண்மையை, ஏளனம் செய்பவர்கள் மறந்துவிடுகிறார்கள். எனவே ஆங்கிலேய சரித்திராசிரியருடன் சேர்ந்து கொண்டு. நாமும் இவர்களை வாயில்லாப் பூச்சிகள் என்று அழைக்கிறோம். நாம் (ஏளனம் செய்பவர்கள் உள்பட) அவர்களின் குரலாக இருக்க வேண்டும். வாயில்லாப் பூச்சிகளான இந்த மக்களுக்கு முதல் பாடத்தை நாம் சொல்லியே தீர வேண்டும். இது நமது கடமை. பயங்கரமான இந்த வறுமைக்கும் அறியாமைக்கும் காரணம் நாமே, அவர்கள் அல்ல.

தங்களுக்கு வேண்டியது என்ன, தங்கள் தேவை என்ன என்பதே அவர்களுக்கு தெரியாது. நடமாடும் பிணங்களைப் போலிருக்கிறார்கள் அவர்கள்.

தீண்டத்தகாதவர்கள் சுதந்திரத்தை விரும்பினால், அதை அடையாதபடி அவர்களை யார் தடுக்கிறார்கள் என்று தீண்டத் தகாதவர்களிடம் கேட்க யாருக்குத் துணிச்சல் வரும்? கடவுள் பொறுமையுடையவர்; நீண்ட காலம் சகித்துக்கொள்பவர். இடையிடையே குறிப்பிட்ட காலங்களில் கடுமையாக எச்சரிக்கை மாத்திரம் செய்துவிட்டு, கொடியவர்கள் தங்களைத் தாங்களே குழி தோண்டிக்கொள்ளும்படி அவர் விட்டு விடுகிறார்.

ஆதலால் அந்த ஆங்கிலேயர் கேட்ட ஏளமான கேள்வி, கொள்கை யளவில் நியாயமானதாய் இருப்பினும், வழி தெரியாமல் தவித்துக்கொண்டிருப்பினும், சுதந்திரம் வேண்டுமென்ற வேட்கையை வெளியிட்டுக்கொண்டு இருப்பவரிடம் அப்படிக் கண்மூடித்தனமாகப் பேசுவது ஆங்கிலேயருக்கு ஏற்றதல்ல என்று நாம் நியாயத்தோடு எடுத்துத்தான் சொல்லுவோம். அப்படியே கோடிக் கணக்கான மக்களின் அடிப்படையான தேவை விஷயத்திலும், மேலே நான் சொன்ன ஆசாமி கேட்ட ஏளனக் கேள்வியை, மத்திய வர்க்கத்தைச் சேர்ந்த ஆண்களும் பெண்களும் அலட்சியமாகக் கேட்பதென்பது நாம் செய்யத் தகுந்த காரியம் ஆகாதுதானே? கோடிக் கணக்கான மக்கள் தங்கள் தேவையை உணராவிட்டாலும், அவர்களுக்காக நம்மில் சிலராவது உணருகிறோ மல்லவா? இந்தத் தேவைக்கு நாம் சரியாகப் பதில் சொல்லியாக வேண்டுமானால், வாயில்லாத மக்களுக்கு வாயாக இருக்கும் பிரதிநிதிகளின் எண்ணிக்கையைப் பெருக்க வேண்டும். அவர்கள், பேசுவதோடு நில்லாமல் ராட்டை சுற்றுவது, அன்னிய நாட்டு அலங்காரப் பொருள்களை வீசி யெறிவது, கதர் அணிவது ஆகிய காரியங்களைத் தாங்களே செய்ய வேண்டும்; வீணாய்ப் போகும் நாட்டின் ஒவ்வொரு மணி நேரமும் உபயோகமான முறையில் செலவாகும் வரையில் நாம் சும்மா இருக்கக் கூடாது. அதன் பிறகுதான் இந்தியப் பெண்களும் அந்த ஸ்விட்ஜர்லாந்து சகோதரியைப்போல 75 வயதில் இளமையாகவும், சந்தோஷமாகவும், கடவுளிடம் பயபக்தியுள்ளவர்களாகவும் இருக்க முடியும்.

# ஒரு சகோதரியின் சங்கடம்

சுதேசி என்பதற்குப் பொருள் தங்களுக்குச் சொந்தமான குட்டையிலே மூழ்கிக்கிடப்பது என்பதல்ல; தேசமாகிய கடலுக்குள் அது கலக்கும்படி செய்வதென்பதுதான் அதற்குப் பொருள். குட்டை நீர் சுத்தமாக இருப்பதோடு, அசுத்தம் சேராமலும் பார்த்துக்கொண்டால்தான், கடலுக்குத் தானும் உதவுவதாக அது பெருமைகொள்ள முடியும்.''

சகோதரி ஒருவர் எழுதுகிறார்:

"ஒரு வருஷத்திற்கு முன்பு, நாம் எல்லோரும் கதர் உடுத்துவது ரொம்ப அவசியமான காரியம் என்று தாங்கள் பேசியதைக் கேட்டேன்; அதன்படியே கதர்க் கட்டுவதென முடிவு செய்தேன். எங்கள் குடும்பமோ ஏழைக் குடும்பம். கதர் விலை அதிகம் என்று என் கணவர் சொல்லுகிறார். நான் மகாராஷ்டிரப் பெண்ணுகையால் 9 கெஜம் புடவையைத் தரிக்கிறேன். எனது புடவையின் நீளத்தை ஆறு கெஜமாகக் குறைத்தால், ரொம்ப மிச்சமாகும்; ஆனால் பெரியவர்கள் இதை ஒப்புக்கொள்ள மறுக்கிறார்கள். நீளம், உடுத்திக்கொள்ளும் முறை, இவற்றை விட, கதர்க் கட்டுவது ரொம்ப முக்கியமான காரியம் என்று நான் அவர்களோடு வாதாடியும் பயனில்லை. எனது இளமைதான் புதுமையான எண்ணங்களையெல்லாம் எண்ணும்படி செய்கிறதென்று அவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால், வழக்கமாக ஆடையணிகிற முறையையும் கவனியாமல் கதரையே கட்ட வேண்டும் என்று தாங்கள் எனக்கு எழுதுவீர்களானால், 6 கெஜத்திற்கு அவர்கள் உடன்படுவார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.''

இந்தச் சகோதரிக்கு அவர் விரும்பியபடி ப[illegible] யனுப்பியிருக்கிறேன். ஆனால், இவருக்கு உள்ள சிரமத்தை உணருகிறேன். இவர் மட்டு மல்ல, இவரைப்போலவே இதே கஷ்டத்தை அனுபவிக்கிற சகோதரிகள் பலர் இருக்கிறார்கள்.

இங்கே குறிப்பிட்ட கடிதம் அதை எழுதியவரின் பலமான தேசப் பற்றுக்குச் சான்றாக இருக்கிறது. ஏனெனில், இவரைப் போன்று பழைய முறைகளையும் வழக்கங்களையும் தாங்களாகவே கைவிடத் தயாராயிருக்கும் சகோதரிகள் அதிகமாக இருக்க மாட்டார்கள். ஒரு சௌகரியத்தைக்கூட விட்டுக்கொடுக்காமல், செலவின்றி சுயராஜ்யம் வரவேண்டும்; நியாயமா அநியாயமா என்பதைக்கூடப் பொருட்படுத்தாமல் தாங்கள் பழைய பழக்க வழக்கங்களைக் குரங்குப் பிடியாகப் பிடித்துக்கொண் டிருந்தாலும் சுயராஜ்யம் வர

வேண்டும். இப்படியெல்லாம் சுயராஜ்யம் வருவதானால், அதை மகிழ்ச்சியோடு அடையவிரும்புகிற சகோதர சகோதரிகள் கோடிக்கணக்கா யிருப்பார்கள். ஆனால் சுயராஜ்யம் அவ்வளவு மலிவான சரக்கல்ல. சுயராஜ்யத்தை அடைவதென்றால் மாகாணப் பற்று உள்படத் தன்னலப்பற்றைத் துறந்த தியாக உணர்ச்சியை வளர்த்தாக வேண்டும்.

மாகாண உணர்ச்சி, நாடு சுதந்திரம் அடைவதற்கு மட்டும் தடையாக இருக்கவில்லை; மாகாண சுயஆட்சியைப் பெறுவதற்கே தடையாக நிற்கிறது. ஒரு வேளை, இந்தக் குறுகிய உணர்ச்சிக்கு ஆண்களைவிடப் பெண்களே அதிக பொறுப்புள்ளவர்களாக இருக்கலாம். குறிப்பிட்ட ஒரு அளவுக்குப் பல ரகங்களைப் போற்றி வளர்ப்பது பயனுடையதே. ஆனால் அளவுகடந்த வசதிகளும், வழக்கங்களும் தேசியத்தை ஒழிக்கப் பார்க்கின்றன. தக்காணத்துச் சேலை ரொம்ப அழகானதுதான். ஆனால் தேசத்தையே தியாகம் செய்து, அந்த அழகுள்ள சேலையை வாங்கிக் கட்ட வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அதை வேண்டாமென்று விட்டொழிப்பதுதான் நலம். குட்டையான கட்ச் புடவையையோ, 'ஓதனி' என்னும் பாஞ்சாலப் புடவையையோ அணிந்துகொள்வதன் மூலம், கதர் அணியும் செலவு குறைகிறது, சௌகரியமாகவும் இருக்கிறது என்று ஏற்பட்டால் அந்த ரகங்கள் உண்மையில் அழகானவை என்று நாம் கருத வேண்டும். தக்காணம், கூர்ஜரம் வங்காளம், கட்ச் ஆகிய இடங்களில் சேலை கட்டுகிற விதங்களெல்லாம் பல ரகப்பட்ட தேசிய மோஸ்தர்களே யாகும். ஒவ்வொரு மோஸ்தரும் மற்ற மோஸ்தர்களைப் போல தேசியமானதே. நிலைமை இப்படி யிருக்கும்போது நாகரிகத்திற்குப் பொருத்தமான முறையில், துணி குறைவாகத் தேவைபடுகிற மோஸ்தருக்குத்தான் நாம் முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டும். கட்ச் மோஸ்தர் இம்மாதிரியானது; இதற்கு மூன்று கஜம் துணி, அதாவது குஜராத் சேலையின் நீளத்தின் பாதிதான் தேவை. நீளம் குறைந்தால், கனமும் குறைந்து, சுமப்பது சுலபமாய் இருக்கும். தூக்கிக்கொண்டு திரிவதிலுள்ள கஷ்டமும் இதில் இல்லை என்று சொல்லாமலே தெரியும். பசேடோவும் பெண்கள் ரவிக்கையும் ஒரே நிறமாக இருப்பின், அது பசேடோவா அல்லது பெரிய சேலைதானா என்று முதலில் பார்த்தவுடன் சொல்ல முடியாது. இத்தகைய ஆடை முறைகளை ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொள்வதும், ஒருவருடைய ஆடையை ஒருவர் பின்பற்றுவதும் சிறப்பாக விரும்பத்தக்க செயலாகும்.

செல்வந்தர்கள் எல்லா மாகாணங்களின் ஆடைகளையும் தங்கள் அலமாரியில் வைத்துக்கொள்ளலாம். கூர்ஜரத் தம்பதிகள் வங்காளத்தைச் சேர்ந்தவர்களுக்கு விருந்தளிக்கும்போது அவர்கள் வங்காள ஆடையை அணிந்துகொள்வதும் வங்காளிகள் அதே மாதிரி சந்தர்ப்பத்தில் கூர்ஜர ஆடையை அணிந்துகொள்வதும் மரியாதையாகவும், தேசாபிமானத்தைக் காட்டுவதாகவும் இருக்கும். ஆனால், இந்த வழியைப் பணக்காரராகவுள்ள தேசாபிமானிகளே பின்பற்ற முடியும். தேசாபிமானமுள்ள மத்திய வர்க்கத்தைச் சேர்ந்த மக்களும் அவர்களைவிட ஏழைகளாக இருக்கும் மக்களும் குறைந்த செலவில் சௌகரியமாகக் கதர் அணிவதற்கு எந்த மாகாண ஆடை சாதகமாக இருக்கிறதோ, அந்த ஆடையைப் பின்பற்றுவதில் பெருமைகொள்ள வேண்டும். அதிலும், மிக மிக ஏழைகளாக இருப்பவர்கள் ஆடை அணிகிற விதத்தைப் பின்பற்றியே அவர்கள் ஆடை உடுத்த வேண்டும்.

சுதேசி என்பதற்குப் பொருள் தங்களுக்குச் சொந்தமான குட்டையிலே மூழ்கிக்கிடப்பது என்பதல்ல; தேசமாகிய கடலுக்குள் அது கலக்கும்படி செய்வதென்பதுதான் அதற்குப் பொருள். குட்டை நீர் சுத்தமாக இருப்பதோடு, அசுத்தம் சேராமலும் பார்த்துக்கொண்டால்தான் கடலுக்குத் தானும் உதவுவதாக அது பெருமை கொள்ள முடியும். ஆதலால், தூய்மைக் குறைவோ ஒழுக்க ஈனமோ இல்லாத, பிரதேச அல்லது மாகாண வழக்கங்களே தேச முழுதும் அனுசரிக்கக் கூடியனவாக இருக்க வேண்டும்; இந்த உண்மையை அறிந்து அதைக் கடைப்பிடிக்க முயன்றவுடனேயே தேசியம் மனித சமுதாயத்தின் உத்ஸாகமாக மாறிவிடும்.

ஆடையைப்பற்றிச் சொன்னது பாஷை, உணவு முதலிய விஷயங்களுக்கும் பொருந்தும். தகுந்த சந்தர்ப்பம் வாய்க்கும்போது இதர மாகாணத்தாரின் ஆடை முறையை நாம் எப்படிப் பின்பற்றலாமோ, அதே போல பாஷை முதலிய இதர விஷயங்களையும் உபயோகித்துக்கொள்ளலாம். ஆனால் நமது தாய்மொழியையும், அதைவிட, இதர மாகாண மொழிகளையும், உணர்ந்தோ உணராமலோ அலட்சியம் செய்து ஆங்கிலமொழிக்குக் கௌரவ ஸ்தானத்தை, அளிக்க வேண்டுமென்கிற உபயோக மற்ற, சாத்திய மல்லாத அபாயகரமான முயற்சியால் நமது சக்தி முழுவதையும் தற்போது வீண் விரையம் செய்து வருகிறோம்.

# தமிழ்ப் பெண்கள்

**"பளபளப்பாயுள்ள ஆடைகளை அணிகிறவர்களைவிட, பரிசுத்தமான உள்ளத்திற்கு அறிகுறியாக விளங்கும் மாசு மறுவற்ற கதரை அணிகிறவர்களைக் கண்டு, கடவுள் நிச்சயமாக அதிக மகிழ்ச்சி கொள்கிருர்."**

*திருப்பதியிலிருந்து ஒரு நண்பர் எழுதுகிருர் :*

*"சென்னையில் நமது இயக்கம்* வெற்றிபெறுவதற்குப் பெருந் தடையாக இருப்பவர்கள் நமது பெண்களே ஆவர். சில பெண்கள் மிகவும் பிற்போக்கான நிலையிலிருக்கிருர்கள்; உயர்ந்த வர்க்கத்தைச் சேர்ந்த பிராமணப் பெண்களில் மிகப் பெரும்பான்மையோர் மேலைநாட்டுத் தீமைகளை விடாப்பிடியாய்ப் பிடித்துக்கொண் டிருக்கிருர்கள். ஒரு நாளைக்குக் குறைந்தது மூன்று தரமாவது அவர்கள் காப்பி குடிக்கிருர்கள். இன்னும் அதிகமாகக் காப்பி குடிப்பது ரொம்ப மதிப்பான விஷயம் என்றும் கருதுகிருர்கள். உடை விஷயத்திலும் இதே கதைதான். உள்நாட்டில் உற்பத்தியாகும் மலிவான துணியைவிட அதிக விலையுள்ள அன்னிய நாட்டுத் துணியை வாங்குவதிலேதான் அவர்களுக்குப் பிரிய மதிகம். நகைகள் விஷயத்திலும், பிராமணப் பெண்கள் மற்றப் பெண்களைத் தூக்கியடிக்கிருர்கள். பிராமணர்களுக்குள்ளும், ஸ்ரீ வைஷ்ணவப் பெண்களே இதில் ஒரேயடியாய் மூழ்கிக் கிடக்கிருர்கள். ஆண்கள் பரிசுத்தமான வாழ்க்கைக்குத் திரும்ப முயற்சிக்கும் போது பெண்கள் ஊதாரித்தனத்தில் மூழ்கிக்கொண்டு வருகிருர்கள்; கடவுளை வணங்கக் கோயிலுக்குச் செல்லுகிறபோது, எளிமையான சாமானிய ஆடைகளை உடுத்திக்கொள்வது நல்லது என்ற எண்ணம் அவர்களுக்கு இருப்பதில்லை. அப்போது கைவசமுள்ள மிக விலையுயர்ந்த நகைகளையும், அதைவிட உயர்ந்த பட்டு ரகங்களையுமே அவர்கள் அணிந்து கொள்ள ஆசைப்படுகிருர்கள். எத்தனையோ நேர்மையான பெண்கள், விலையுயர்ந்த வஸ்திரங்களும் நகைகளும் தங்களிடம் இல்லாமையால் கோயிலுக்குப் போவதற்கே விருப்பம் கொள்வதில்லை என்பது எனக்குத் தெரியும்."*

ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டிருக்கும் வைஷ்ணவ வக்கீலாகிய இந்த நண்பர் சொல்லுவதெல்லாம் சரிதான் என்று என்ஞல் ஒப்புக்கொள்ள முடியாது. வெறும் பளபளப்பான ஆடம்பரத்தில் மற்ற பெண்களைவிடத் தமிழ்ப்

---

*ஒத்துழையாமை இயக்கம்.

பெண்களுக்குப் பிரியம் அதிகம் என்று சொல்வதையும் நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன். ஆனாலும் இந்தக் கடிதத்தில் அடங்கியுள்ள விஷயம் தமிழ்ச் சகோதரிகளுக்கு ஒரு எச்சரிக்கையாக இருக்க வேண்டும். பழைய எளிய வாழ்வையே அவர்கள் திரும்ப மேற்கொள்ள வேண்டும். பளபளப்பாயுள்ள ஆடைகளை அணிகிறவர்களைவிடப் பரிசுத்தமான உள்ளத்திற்கு அறிகுறியாக விளங்கும் மாசுமறுவற்ற கதர் அணிகிறவர்களைக் கண்டு கடவுள் நிச்சயமாக அதிக மகிழ்ச்சி கொள்கிறார். நமது கோயில்கள் பக்தி வயப்பட்டவர்களின் தாழ்மையையும் எளிமையையும் வெளியிடுவதற்காக ஏற்பட்டிருக்கின்றனவேயன்றி, கண்காட்சிக்காக ஏற்பட்டவையல்ல; இந்தத் தீமையை ஒழிக்க, சென்னையில் பெண்களிடையே தொடர்ந்தாற்போல் பிரசாரம் நடைபெற வேண்டும்.

# மீண்டும் தமிழ்ச் சகோதரிகள்

**"கொதித்துக்கொண் டிருக்கும் சமவெளிகளையுடைய சென்னையிலும் ஆந்திர நாட்டிலும் அமைதியோடு இயங்கு கிற கைராட்டைப்போல உதவிசெய்யும் இன்னொரு கைத் தொழிலை என்னால் எண்ணிப் பார்க்க முடியவில்லை."**

தென்னிந்திய வக்கீல் ஒருவர் கீழ்வரும் குறிப்பை எனக்கு அனுப்பி யிருக்கிறார்:

"இதர மாகாணங்களைப் போலத் தமிழ் மாகாணத்தில் கதரை அவ்வளவு அதிகமாக உபயோகிப்பதில்லை. முக்கிய காரணம் பெண்மக்கள் கதர் அணியாததுதான். இதுகாரணமாகவே ராட்டை அதிகமாய் புழக்கத்தில் இல்லை. மணமான பெண்கள் சுத்த வெண்மையான ஆடையை உடுத்துவது இங்கு கூடாது. வர்ணச் சேலைகளையே அவர்கள் கட்ட வேண்டும். முற்காலங்களில், பஞ்சினால் நெய்த ஆடைகளைப் பெண்கள் உடுத்தினார்கள். இப்போதோ பரம ஏழைகளைத் தவிர, எல்லாரும் பஞ்சாலான சேலைகளைப் புறக்கணித்துவிட்டு, பட்டுச் சேலைகளையே தினந்தோறும் கட்டுகிறார்கள். பட்டுச் சேலைகள், முதலில் மாயவரத்திற்குச் சமீபத்தில் கொரநாடு என்ற இடத்திலும் பிறகு காஞ்சீபுரத்திலும் உற்பத்தி செய்யப்பட்டன. இவைகளுக்கு இந்தியச் சாயங்கள் உபயோகிப்பட்டன. இந்தச் சேலைகளின் விலை பத்திலிருந்து முப்பது ரூபாய்வரை இருந்தது. இவைகளை விசேஷ காலங்களில்தான் உபயோகிப்பது வழக்கம். சமீப காலத்தில், இந்த மார்க்கட் பங்களூர் சேலை மயமாகி வேறு சேலைக்கே இடமில்லாதபடி ஆகிவிட்டது; பங்களூர் சேலைகளுக்கு ஜெர்மன் அல்லது இங்கிலீஷ் சாயங்கள் உபயோகிக்கப்படுகின்றன. இந்தச் சேலைகளில் மிகக் குறைந்த தன் விலை ரூ. 50. குடும்பத்தில் இருக்கிற ஒரு பிராமணருக்கு இந்த விலை தாங்கமுடியாததொரு சுமையாய் இருக்கிறது. ஏனெனில், விசேஷமாக இந்தச் சேலைகளையே குடும்பப் பெண்களுக்கு அவர் வாங்கிக் கொடுக்கவேண்டி யிருக்கிறது. நாள் தோறும் கட்டுகிற சேலையும் இதே சேலையாகிறபோது பல சேலைகள் அவர்கள் வாங்க வேண்டியிருக்கிறது. கலியாண காலத்தில், அன்பளிப்பாகக் கொடுக்கிற சேலைக்கு ரூ. 100க்கு மேலே விலையாகும். இந்தக் காரணத்திலேயே நியாயமாய் வருவாயுள்ள குடும்பங்கள் எத்தனையோ கலியாணத்தால் நசித்துப் போயின. பிராமணர்களுக்குள்ளேயே இருந்த இந்த நாசகரமான பழக்கம் இதர வகுப்பினரிடையும் பரவி வருகிறது.

"செலவு ஒரு பக்கமிருக்க, சௌகரியத்தையும் சுகத்தையும் நாம் கவனிக்கத்தானே வேண்டும்? நீரை இழுத்துக்கொள்கிற சக்தி பட்டுப் புடவைக்கு இல்லை; கனமாக வேறு இருக்கிறது; பட்டுப் புடவையைக் கட்டிக்கொண்டு வேலை செய்வதோ, சமையல் செய்வதோ சித்திரவதைக் கொப்பான காரியம். வருஷத்தில் இரண்டொரு மாதங்களைத் தவிர்த்து மற்ற மாதங்களெல்லாம் இங்கே எப்போதும் உஷ்ணமாகவே

இருக்கும். கசக்கினுல் சாயம் போய்விடும் என்று அஞ்சி விலையுயர்ந்த சேலைகளை அதிகமாகத் தோய்த்துச் சுத்தம் செய்யாத விபரீதமான ஆரோக்கியக் கேடான பழக்கமும் இங்கே இருந்து வருகிறது. அந்தச் சேலையிலிருந்து வரும் வியர்வை நாற்றமே சகிக்க முடியாததாய் இருக்கிறது.

"பழமைபோல் செட்டு, எளிமை, சௌகரியம் ஆகியவற்றை மீண்டும் மேற்கொள்ளும்படி நீங்கள் செய்வீர்களானுல் அழிந்துபோகக் கூடிய நிலையிலிருக்கிற எத்தனையோ குடும்பஸ்தர்கள் உங்களுக்கு ரொம்ப நன்றி பாராட்டுவார்கள்."

தமிழ்ப் பெண்ணுக்குப் பட்டுப் புடவையில் அளவுக்கு மிஞ்சிய மோகம் என்று இந்த நிருபர் சொல்லுவதை நானும் ஒப்புக்கொள்ளுகிறேன். உஷ்ணப் பிரதேசமான சென்னை போன்ற இடங்களுக்குப் பட்டைப்போல ஆரோக்கியக் குறைவான ஆடை வேறு எதுவும் இல்லை. வறுமை தாண்டவமாடும் இந்தியாவைப்போன்ற நாட்டில், ஒரு சேலைக்கு ரூ. 100 கொடுத்து வாங்குவது பணத்தைக் குற்றமான வழியில் செலவு செய்வதாகும். பெண்களைவிட ஆண்கள் ஒரு சிறந்த காரியத்தையும் செய்து விடவில்லை. கைநெசவாலான தங்கள் தலைப்பாகை, வேட்டி, துப்பட்டாக்களைப்பற்றி அவர்கள் பெருமையடித்துக்கொள்கிருர்கள். இவைகளுக்கு உபயோகிக்கும் நூல் அந்நிய நாட்டிலிருந்துதான் வருகிறதென்ற எண்ணம் அவர்களுக்கு இருப்பதே இல்லை. சொன்னுல் புதுமையாகத் தெரியும்; என்றுலும் நீரை இழுத்துக் கொள்ளக் கூடிய கதர் ஆண்கள் போற்றுகிற அந்த அருமையான ஆடைகளை விட எவ்வளவோ குளிர்ச்சியானது. எனினும் சுதேசிச் சாமான்களையே உபயோகிக்கிறதென்கிற கஷ்டமான காரியத்திலும் தமிழர்கள் ஆத்மீக சக்தியைக் கொண்டு வெற்றியடைவார்கள் என்றும் அன்னியத் துணியைப் பரிபூரணமாகத் துறந்து சர்க்காவுக்குத் திரும்புகிற காரியம் ஆத்மீகத் தேவை என்பதை அவர்கள் கண்டுகொள்வார்கள் என்றும் நம்புகிறேன். கொதித்துக்கொண் டிருக்கும் சமவெளிகளையுடைய சென்னையிலும் ஆந்திர நாட்டிலும் அமைதியோடு இயங்குகிற சர்க்காவைப் போன்று உதவி செய்யும் இன்னொரு கைத்தொழிலை என்னுல் எண்ணிப் பார்க்க முடிவதில்லை. நாடு கடத்தப்பட்டவர்களைப் போலவும் அடிமைகளைப் போலவும் ஏரானமான மக்களை வேறு நாடுகளுக்கு அனுப்பி அங்கு வாழும்படி செய்கிற பொறுப்பு திராவிடதேசத்தைச் சேர்ந்ததாய் இருக்கிறது. சர்க்காவைத் திரும்பவும் உபயோகத்துக்குக் கொண்டு வருவது கட்டயாத்தினுல் இப்படி வெளி நாட்டில் குடிபுகுகிற கஷ்டமான பிரசினையைச் சுலபமாகத் தீர்த்துவிடும். நிலத்திற்கு வரிகட்ட வேண்டுவதில்லை யென்றுலும்கூட ஏழை இந்தியக் குடியானவர்களின் வாழ்விற்கு நிலம் மட்டுமே போதாது.

# நல்ல தொண்டர் ஒருவர் மறைந்தார்

**" புராதன காலத்தில் இந்தியா புனிதமாகவும் சுதந்திரமாகவும் இருந்ததாகக் கோடிக்கணக்கான மக்கள் நம்புகிறார்கள். இந்தியா திரும்பவும் அந்த நிலையை அடையு முன்னர் அநேக இளைஞர்களும், பெண்களும் இந்த நல்ல பெண்களைப் பின்பற்றி, கடமையைச் செய்வதிலேயே வாழ்க்கையை அர்ப்பணம் செய்ய வேண்டிய நிலை ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை."**

பெஜவாடாவில் 1921-ம் வருடத்தில் நடந்த சம்பவம் பெண்கள் கூடியிருந்த ஒரு பெரிய கூட்டத்தில் ஒரே ஒரு பெண் மட்டும் கதர் உடுத்திக்கொண்டு வந்திருந்தார். அவரே கூட்டத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, ஒழுங்கை நாட்டுவதற்கு ஊக்கத்தோடும் உறுதியோடும் அங்குமிங்கும் சென்று கொண்டிருந்தார். விலையுயர்ந்த தமது ஆபரணங்களையும், வளையல்களையும், கனமான தங்கச் சங்கிலியையும் கழற்றி முதன்முதலாகத் தந்தவர் அந்தப் பெண்ணேயாகும். நகைகளை அவர் என் கையில் தந்த சமயத்தில், " உனது பெற்றோரின் அனுமதியைப் பெற்றுவிட்டாயா ?" என்று நான் அவரைக் கேட்டேன். " எனது பெற்றோர்கள் என் விஷயத்தில் தலையிடுவதில்லை, என் விருப்பப்படியே விட்டு விடுவார்கள் " என்று அவர் பதில் சொன்னார். அன்னபூரணாதேவி ஆங்கிலம் தடங்கலின்றிச் சரளமாய்ப் பேசினார். கல்கத்தா பெத்யூன் கல்லூரியில் கல்வி பயின்றவர் அவர். பணம் திரட்டுவதற்காக வெளிக்கிளம்பிய பெண்களின் பெருங்கூட்டத்தோடு அவரும் சென்று நகைகளும் ரொக்கப் பணமும் கொண்டு வந்தார். அந்தக் காலத்திலிருந்தே அவர் இந்த இயக்கத்தில் தொடர்பு கொண்டிருந்தார்; உண்மையில் இந்த இயக்கத்திற்கே தம்மை அர்ப்பணம் செய்துவிட்டார். காகிநாடாவில் பெண் சாரணர்களுக்கு அவர் தலைவியாக இருந்தார். அப்போது அவர் செய்த அற்புதமான வேலையைப்பற்றி ரொம்பப் புகழ்ந்து, பல பெண்கள் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள். துர்ப்பாக்கியவசமாக, அந்தக் காலத்திலேயே நல்ல விறுவிறுப்பான உடல் நலம் அவருக்கு இல்லை. பி. எஸ். ஸி. பட்டதாரியான திரு மாகண்டி பாபிநீடு என்பவரை அவர் மணந்துகொண்டார். நான் கோயம்புத்தூரில் இருந்தபோது அவர் இறந்து போனார் என்று, அவர் இறந்த பல தினங்களுக்குப் பிறகு திடீரென்று எனக்கு ஒரு தந்தி வந்தது.

இப்பொழுது திரு. நீடு எனக்கு ஒரு கடிதம் எழுதி யிருக்கிறார். அதிலிருந்து சில பகுதிகளைக் கீழே தருகிறேன் :

“நாங்கள் பயந்தபடியே நடந்துவிட்டது. நான் தங்களுக்கு எழுதுகிற முதல் கடிதம் தங்களுக்கு ரொம்பப் பிடித்த சேவகி யும், எனது வாழ்க்கைத் துணைவியுமான அன்னபூரணா அகால மரணமடைந்த திடுக்கிடும் செய்தியைப்பற்றி யிருப்பது எனது துர்ப்பாக்கியமே யாகும். சென்ற தடவை தாங்கள் சென்னை வந்திருந்தபோது சீனிவாச அய்யங்கார் வீட்டில் தங்களைப் பார்த்து எங்கள் வணக்கத்தைச் செலுத்திக்கொள்ள நாங்கள் இருவரும் வந்திருந்தோம். அப்போது அவளுடைய உடல் நலனைப்பற்றி அடிக்கடி கடிதம் எழுதும்படி தாங்கள் சொன்ன தும், வியாதியைக் குணப்படுத்திக்கொள்ள ஆமதாபாதுக்கு அவளை அனுப்பிவைக்கும்படி தாங்கள் ஆலோசனை கூறியதும் எனக்குத் தெளிவாக ஞாபகம் இருக்கிறது. ஆனால், அவள் தேகநலனைப்பற்றித் தங்களைத் தொந்தரவு செய்ய விருப்ப மில்லை. ஒரு நர்சு போல இருந்து அவளைப் பார்த்துக்கொள் ளும்படி எனக்கும், தைரியத்தை இழக்காமல் தேகநலனைக் கவனித்துக்கொள்ளும்படி அவளுக்கும் தாங்கள் சொன்னீர் கள். அதன்படியே நாங்களும் நடந்துகொண்டோம். என்றால் இயன்றவரை நான் முயற்சிசெய்து பார்த்தேன். முயற்சி வீணானதைத் தவிர வேறு பலன் ஏற்படவில்லை.

தங்களது ஒத்துழையாமை இயக்கத்தினால் வாழ்வு சிதறிப் போனவர்களுக்கு அவள் ஒரு நல்ல எடுத்துக்காட்டாவாள். நகைகள், நான் திரும்பிவந்ததும் அவளுக்கு அன்பளிப்பாகக் கொடுத்த கலியாண மோதிரம், கலியாண காலத்தில் கிடைத்த சொத்து, அருமையான வஸ்திரங்கள், நாகரிகமான வாழ்க்கை முறைகள், இலக்கியப் பயிற்சி, உடல்நலம் ஆகிய எல்லாவற்றையுமே தேசத்திற்காக அவள் கொடுத்தாள். இப்போது அவளுடைய உயிரே தேசத்திற்கு அர்ப்பணமாகி

தங்கள் மேலுள்ள அபார நம்பிக்கையால், தாங்கள் வெளி யிட்ட “ஆரோக்கிய வழி” என்ற புத்தகத்தைக் கண்ணை மூடிக் கொண்டு அவள் பின்பற்ற ஆரம்பித்தாள். பொருத்த மில்லாத தங்கள் பழ உணவு முறையை ஆறு மாத காலம் கடுமையாகப் பின்பற்றிய காரணத்தால், ஆரோக்கியமா யிருந்த அவளுடைய தேகம் குலைய ஆரம்பித்தது ; அந்த நிலையிலிருந்து அவள் மீண்டும் தேறவேயில்லை.

மகாத்மாஜி, தங்கள்மீது குற்றம் சாட்டுகிற அளவு நான் கொடியவன் அல்லன். ஆயினும், நடந்த விஷயத்தைச் சொல்லித்தானே தீர வேண்டும்? ஒத்துழையாமை இயக்கத் தின்போது, பிரசாரம் செய்துவந்த காலத்தில் உடல் நிலை யைப்பற்றி அவள் அலட்சியமாக இருந்துவிட்டாள். அவள்

உயிருக்கே ஹானி விளைத்த அந்தப் பாபத்தை அவள் காலம் தாழ்ந்தே உணர்ந்தாள். அதற்குள் காரியம் மிஞ்சிவிட்டது. அவளுக்கு ஒரு கடிதத்தில் நீங்கள் எழுதியிருக்கிறீர்கள்: "கதருக்காக நீ உற்சாகத்தோடு வேலை செய்வாய் என்று எனக்கு முன்னமே தெரியும்" என்று. " நான் அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்ததும், முதல்முதல் அவள் செய்த காரியம், நான் கதர் அணிவதாக வாக்குறுதி தர வேண்டுமென்று என் காலில் விழுந்து என்னை வேண்டிக்கொண்டதுதான். அதனால், எனது கோட்டு, கால் சட்டை, சட்டை, உள் சட்டை முதலியவற்றையும் இன்னும் பல அன்னியநாட்டு ஆடைகளையும் இனிமேல் எனக்கு வேண்டாமென்பதாக ஒதுக்கிவிட்டேன். எல்லூரில் அவள் வீட்டில் அவைகளை வைக்கக்கூட எனக்கு அவள் அனுமதி தரவில்லை. அமெரிக்காவில் நான் இருந்தபோது எழுதிய ஒரு கடிதத்தில், தான் அன்னியத் துணியைப் பகிஷ்கரிப்பதாகச் சபதம் செய்திருப்பதாகவும் எழுதியிருந்தாள். சபதத்தை நிறைவேற்றுகிற பொறுப்பு என்னைச் சேர்ந்திருக்கிறது. எலும்பும் தோலுமாகப் போய், கனத்த கதர்ச் சேலை உராய்ந்து உடம்பில் பல இடங்களில் புண் ஏற்பட்ட காலத்திலும் அவள் கதர் கட்டுவதை நிறுத்தவில்லை. கட்டிய கதர்ச் சேலையோடே—இது எங்கள் ஜாதி வழக்கம்—நாங்கள் அவளைத் தகனம் செய்தோம். அந்த வழியிலும் அவளை ஒரு அதிர்ஷ்டசாலி என்று சொல்ல வேண்டும். ஒரு வேளை மறு உலகத்திலுமே கதர் உடுத்தும் பழக்கத்தை நடைமுறையில் கொணர அவளுக்கு ஆவல் இருந்தது போலும்.

நான் அமெரிக்காவுக்குப் புறப்பட்ட சமயத்தில், அவள் எனக்களித்த செய்தி இதுவாகும்: "நீங்கள் என்னை மறந்தாலும் பாதகமில்லை; ஆனால் உங்கள் தாய்நாட்டை மட்டும் ஒரு நாளும் மறவாதீர்கள்." கணவனுக்குச் சேவை செய்யும் பொருட்டு அல்ல, தேசத்திற்குச் சேவை செய்யும் பொருட்டே தன் உடலோடு ஒட்டிய நோய் அடியோடு ஒழிந்துவிட வேண்டுமென்று ஆசைப்பட்டதாக அவள் ஒரு முறை என்னிடம் கூறினாள். இந்த ஆசைதான், நாங்கள் நம்பிக்கையைக் கைவிட்ட பிறகும், பல மாதங்கள்வரை உயிர்வாழ்வதற்கு அவளுக்கு மனோபலத்தை யளித்தது. கடைசிவரையில் அவள் நம்பிக்கையாக இருந்தாள்; சாகப் போகிற அந்த நிமிஷத்திலும், ஊசியின் மூலம் மருந்து ஏற்றியதும் ஞாபகம் வந்து, நான் ஒரு நாளும் சாக மாட்டேன், உயிரோடிருப்பேன் என்று அவள் டாக்டரிடம் சபதமிட்டாள். ஆமாம், நாட்டுக்காக உயிர் கொடுக்கத்தான் அவள் உயிர் வாழ்ந்தாள்; நாட்டுக்காக வாழ வென்றே அவள் உயிரை நீத்தாள்.

பெண்களைப்பற்றி அவள் எழுதி, இதுவரை வெளியிடாமலிருக்கும் புத்தகங்கள், வங்க மொழியிலிருந்து அவள் மொழி பெயர்த்த ராமகிருஷ்ணரின் உபதேசங்கள், அவள் எழுதிய

சில கடிதங்கள் எல்லாவற்றையும் வெளியிடுவ தென்று நாங்கள் எண்ணி யிருக்கிறோம்.

"எங்களுக்கு அருமையாக ஒரு சிறு பெண்குழந்தை இருக்கிறாள்; ஜான்ஜி லட்சுமி பாயின் ஞாபகார்த்தமாக அவளை நாங்கள் குட்டி ஜான்ஜி என்று கூப்பிடுகிறோம். இந்தச் சிறு குழந்தை தான் எங்களுக்கு மன ஆறுதலையும் நம்பிக்கையையும் ஊட்டுகிறாள். குழந்தை பிறந்ததும் உடல்நலம் சீர்அடைந்துவிடுமென்று அன்னபூரணா நம்பினாள். அந்த நம்பிக்கை கடைசியில் சாவாகவே முடிந்தது.

"நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு சிஷ்யையைத் தாங்கள் இழந்துவிட்டீர்கள். எல்லாருக்கும் எடுத்துக்காட்டாக இருக்கும் ஒரு வாழ்க்கைத் துணைவியை நான் இழந்துவிட்டேன். கவலைக்கும் துன்பத்திற்கும் தனிமைக்கும் என்னை இருப்பிடமாக்கிவிட்டு எனது வாழ்க்கைத் துணைவி மறைந்துவிட்டாள். அவளுடைய மறைவால், அவள் விட்டுவிட்டுப் போன, செய்து முடிக்க வேண்டிய அரைகுறையான வேலைகளை நான் செய்ய முடியாமல் தவித்துக்கொண்டு இருக்கிறேன். ஒரு பாதி சென்றுவிட்டது. மற்றொரு பாதி கவலையில் மூழ்கிக் கிடக்கிறது."

பக்தி சிரத்தையுள்ள சிஷ்யையை மட்டும் நான் இழக்கவில்லை; இந்தியா முழுதும் எனது சொந்தப் புதல்விகளைப் போல பாவிக்கக் கூடிய பெண்கள் அனேகரைப் பெற்றிருக்கும் பாக்கியம் எனக்கு உண்டு. அவர்களிலே அன்னபூரணா தேவி மிகவும் சிறந்து விளங்கினாள். அப்படிப்பட்ட ஒரு புதல்வியை இழந்து நான் வருகிறேன். தன்னுடைய நம்பிக்கையில் அவளுக்கு மனச் சஞ்சலம் ஏற்பட்டதே இல்லை. புகழையும் வெகுமதியையும் நாடி அவள் தொண்டு புரியவில்லை. இவையே கணவனிடம் அவள் பெற்ற செல்வாக்குக் காரணங்களாக விளங்கின. அன்னபூரணா தேவியைப் பின்பற்றி மற்ற மனைவியர்களும் நடந்துகொள்ள வேண்டுமென்பது எனது விருப்பம். தாய்நாட்டுக்கு விடாமல் சேவை செய்து அன்னபூரணா தேவி இளைத்துத் துரும்பாகி, ஆவி நீத்ததற்கு அவர் கணவன் லேசாகக் கடிந்துகொண்டிருக்கிறார். அவருடைய உணர்ச்சியை நான் மதிக்கிறேன். புராதன காலத்தில் இந்தியா புனிதமாகவும், சுதந்திரமாகவும் இருந்த தென்று கோடிக்கணக்கான மக்கள் நம்புகிறார்கள். இந்தியா திரும்பவும் அந்த நிலையை யடையுமுன்னர், அனேக இளைஞர்களும் பெண்களும் இந்தப் பெண் திலகத்தைப் பின்பற்றிக் கடமையைச் செய்வதிலேயே தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்யவேண்டிய நிலை ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை.

# பெண்களும் நகையும்

"வேலை கிடைக்காத குறையால், கோடிக்கணக்கான ஆண்களும் பெண்களும் இந்நாட்டில் சாப்பாட்டுக்கு வழியின்றித் தவித்துக்கொண்டிருக்கிறவரையில் இந்திய சகோதரிகள் தங்கள் உடம்பை அலங்கரித்துக்கொள்வதற்காக, அல்லது பெரும்பாலும் நகைகள் தம்மிடம் இருக்கின்றன என்று எண்ணித் திருப்திகொள்வதற்காக, விலையுயர்ந்த நகைகளை வைத்திருப்பதற்கு நியாயமேயில்லை; இதை உணர்வது நிச்சயமாக எளிதான காரியமே."

தமிழ் நாட்டில் டாக்டராக இருக்கும் பெண்மணி ஒருவர் நன்கொடை தந்து அதைப்பற்றிய விவரங்களடங்கிய ஒரு கடிதமும் அனுப்பியிருக்கிறார். கடிதத்தில் அடங்கியுள்ள விஷயத்தால் நன்கொடையின் மதிப்பையே அது உயர்த்துவதாயிருக்கிறது; மற்றவர்களும் பின்பற்றக்கூடிய ஒரு உதாரணமாக அந்த நன்கொடை விளங்குகிறபடியால், நன்கொடையாளரின் பெயரையும், இடத்தின் பெயரையும் நீக்கிவிட்டு, கடிதத்தைச் சுருக்கிக் கீழே தருகிறேன் :

"வைர மோதிரம் ஒன்றும், ஒரு ஜோடி தோடும் நேற்றுத் தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். அதன் பொருட்டே இந்தக் கடிதமும் எழுதியுள்ளேன். பன்னிரண்டு வருஷத்திற்கு முன்னர், ராஜாவுக்கு ஆண் குழந்தை பிறந்தபோது, அரண்மனையில் நான் செய்த சேவையின் விளைவிற்கு அறிகுறிகளாக இந்த மோதிரமும், தோடும் எனக்கு அளிக்கப்பட்டன. தாங்கள் அந்த வழியாகச் சென்றபோது, தனது ஊருக்கு வரும்படி தங்களை வரவேற்கிற தைரியம்கூட அந்த ராஜாவுக்கு இல்லை என்பதை அறிந்து எனக்கு ரொம்ப வருத்தமாயிருந்தது. அரசாங்கத்துக்குப் பயந்து அவர் அப்படியிருந்தாராம். இந்த நகைகளை நான் எங்கு போனாலும் எடுத்துச் செல்வது வழக்கம்; தாங்கள் வந்து போன பிறகு அவைகளைப் பார்க்க எனக்கு எப்படியிருந்ததென்பதைத் தாங்களே யோசித்துக்கொள்ளுங்கள். இந்த நகைகளைப் பார்க்கும்போதெல்லாம் என் நெஞ்சில் கசப்பும் வெறுப்பும் தோன்றுகின்றன. இந்தக் கசப்பு, தாங்கள் இங்கு வந்தபோது குறிப்பிட்ட, பசியால் வாடும் கோடிக்கணக்கான மக்களின்பால் ஆழ்ந்த அனுதாபமாக மாறியது. நான் எனக்குள்ளே சொல்லிக்கொண்டேன்: 'இந்த நகைகளையெல்லாம் ஜனங்களின் பணத்தைக்கொண்டுதானே செய்திருக்கிறார்கள்? என்னுடையவை என்று அவைகளை நான் எப்படி வைத்

துக்கொள்ள முடியும்? அதன் பிறகு அவைகளைத் தங்களுக்கு அனுப்புவதென்று முடிவு செய்தேன். கதரின் சேவைக்கும், பசியால் வாடும் கோடிக்கணக்கான மக்களில் சிலருக்கும் தாங்கள் இந்த நகைகளின் மூலம் உதவி செய்ய முடியும். அவைகள் எனது பெட்டியின் மூலையில் இருப்பதைவிட இப்படி அவைகளை உபயோகிப்பது எவ்வளவோ நல்லதென்று எண்ணுகிறேன். அவை ஐந்நூறு ரூபாய்வரை போகும் என்று ஒரு நண்பர் மதிப்பிட்டிருக்கிறார். ஆகையால் அந்தத் தொகைக்கு இன்சூர் செய்து அனுப்பியிருக்கிறேன். நான் அனுப்பியிருக்கும் காரணத்தையும் நோக்கத்தையும் அறிந்த தாராள சிந்தையுள்ள யாராவது இவைகளுக்கு அதிகமான விலை கொடுத்தாலும் கொடுத்துவிடக் கூடும். இந்தக் கடிதத்தைத் தாங்கள் விரும்புகிற வண்ணம் உபயோகித்துக்கொள்ளலாம்."

காரணமேயில்லாமல் நாமாக எப்படிப் பயத்தைக் கற்பனை செய்துகொள்ளுகிறோம் என்பது விசித்திரமாயிருக்கிறது. எத்தனையோ ராஜாக்கள் வெளிப்படையாகவும், விருப்பத்தோடும் கதரையும், அதன்மூலம் ஏழைகளின் கட்சியையும் ஆதரிக்கிறார்கள். பார்க்கப்போனால் எனது நிருபர் சரியாகச் சொல்லியிருப்பதுபோல, ஏழைகளின் மூலமாகத் தானே ராஜாக்களுக்குப் பணம் வருகிறது. கதரில் அரசியல் இருக்கிறதென்பது உண்மையே. ஆனால் கதரை ஆதரிப்பது சட்ட விரோதமானதென்று அரசாங்கம் தயக்கமின்றி அறிவிக்கிற அளவுக்கு நாம் இன்னும் வந்துவிடவில்லை. பொது நன்மைக்காக நடக்கிற எந்த இயக்கத்தையும் அரசியலோடு சேர்த்துப் பின்னிவிடலாம். ஆனால், அந்தக் காரணத்தை முன்னிட்டு அதிலிருக்கிற பொது நன்மையான அம்சத்தையுங்கூடப் பகிஷ்காரம் செய்கிறதென்று ஆரம்பித்தால், அப்படி ஆரம்பிக்கிற நாள் தீய நாளேயாகும். ஆனால் இந்தப் பெண் டாக்டர் குறிப்பிட்டிருக்கும் ராஜா விஷயத்தில் நான் நியாயத்தைச் சொல்ல வேண்டும். இவர் மட்டுமல்ல, இன்னும் எத்தனையோ ராஜாக்கள், கதரை ஆதரிப்பதற்கும் என்னைப் போலுள்ள பொதுஜனத் தொண்டர்களிடம் சாதாரண வினயங் காட்டுவதற்கும் அஞ்சுகிறார்கள். எனினும் அந்த ராஜா என்னைப் பகிஷ்கரித்தது ஒரு பெண்ணை எனக்கு நன்கொடையை அளிக்கும்படி தூண்டியிருக்கிறது நல்ல காரியமே. இந்தக் குறிப்பைப் படிக்கிற சகோதரிகள் யாவருக்கும் நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். பசியால் வாடும் கோடிக் கணக்கான மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமை பெண்களுக்கும் உண்டு. அதற்கு வேண்டிய சந்தர்ப்பத்திற்காக இந்தப் பெண் நன்கொடையாளரைப்போல், பிறரும்

காத்துக்கொண்டிருக்க வேண்டியதில்லை. வேலை கிடைக்காத குறையால் கோடிக்கணக்கான ஆண்களும் பெண்களும் இந் நாட்டில் சாப்பாட்டுக்கு வழியின்றித் தவித்துக்கொண்டிருக் கிற வரையில், இந்திய சகோதரிகள் தங்கள் உடம்பை அலங்கரித்துக்கொள்வதற்காக, அல்லது பெரும்பாலும் நகை கள் தம்மிடம் இருக்கின்றன என்று எண்ணித் திருப்திகொள் வதற்காக விலையுயர்ந்த நகைகளை வைத்திருப்பதற்கு நியா யமே இல்லை. இதை உணர்வது நிச்சயமாக எளிதான காரியமே. இதற்கு முன்னுல் நான் சொல்லியிருப்பதுபோல, பணக்கார வர்க்கத்தைச் சேர்ந்த இந்தியப் பெண்கள் மட்டும் அவசியமில்லாத இந்த நகைகளை வெறுத்து ஒதுக்கி, கதர் கொடுக்கிற அலங்காரத்தோடு திருப்தியடைந்தால், கதர் இயக்கம் முழுவதற்கும் வேண்டிய நிதி யளித்து உதவுவது சாத்தியமாய்விடும். பணக்கார இந்தியப் பெண்கள் இம்மாதிரி நடந்துகொள்வதனுல், நாட்டிலும், சிறப்பாகப் பசியால் வாடும் மக்களுடையிலும் ஒழுக்க நடையில் ஏற்படும் அபிவிருத்தியைப் பற்றியே சொல்ல வேண்டியதில்லை.

# பெண்களும் நகையும்

**"கோடிக் கணக்கான மக்கள் அரை வயிறு உணவுகூடக் கிடைக்காமலும், சுத்தமாக நூற்றுக்கு எண்பது பேர் போதிய ஊட்டமில்லாமலும் இருக்கிற இந்த நாட்டில் நகைகளை யணிவது, கண்களையே உறுத்தும் ஒரு அவமானம் நிறைந்த செயலாகும்."**

நகைகளை நன்கொடையாகத் தரும்படி பெண்களை நான் கேட்பதும், நன்கொடையாகத் தந்தவைகளை ஏலத்திற்கு விடுவதும் சரியான காரியம் இல்லையென்று கண்டித்து, ஒரு பத்திரிகையில் ஒரு பத்தி எழுதியிருந்ததைப் படித்துப் பார்த்தேன். வாஸ்தவத்தில் நான் பேசுகிற கூட்டங்களுக்கு வருகிற ஆயிரக் கணக்கான சகோதரிகள் தாங்கள் அணிந்துள்ள நகைகள் யாவற்றையும் தராவிட்டாலும், பெரும் பகுதியைத் தர வேண்டுமென்று நான் விரும்புகிறேன். கோடிக்கணக்கான மக்கள் அரை வயிறு உணவுகூடக் கிடைக்காமலும், நூற்றுக்கு எண்பது பேர் போதிய ஊட்டம் இல்லாமலுமிருக்கிற இந்த நாட்டில் நகைகளை யணிவது, கண்களையே உறுத்தும் ஒரு அவமானம் நிறைந்த செயலாகும். தங்களது என்று உரிமை பாராட்டும் அளவில் இந்தியப் பெண்களிடம் ரொக்கப் பணம் இருப்பது ரொம்ப அரிது. ஆனால் அவர்கள் அணிந்துள்ள நகைகள் அவர்களுக்கே சொந்தமானவை. ஆயினும் தன் எஜமானனை கணவனின் சம்மதமின்றி அவற்றை ஒருத்தியும் கொடுக்கத் துணிய மாட்டாள்தான். தனக்குச் சொந்தமென்று சொல்லுகிற ஒரு பொருளை ஒரு நல்ல காரியத்திற்குக் கொடுப்பது அவளுக்கு ஒரு உயர்வை அளிக்கிறது. மேலும், அவள் அணிகிற நகைகளில் பெரும்பாலானவை கலைப்பண்பு வாய்ந்தவை யல்ல; அவற்றில் சில அவலட்சணமானவையாயும், அழுக்கு அடைவதற்கு ஏற்றவையாயும் இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. காப்பு, கழுத்தில் அணியும் ஆரம், மயிரை ஒழுங்குபடுத்துவதற்கன்றி, தண்ணீரைக் கண்டறியாமல் சிக்குப் பிடித்து துர்நாற்றம் வீசும் தலை மயிரில் அழகுக்காக அணிந்துகொள்ளும் சடை நாகம், கணுக்கையிலிருந்து முழங்கை வரையில் வரிசை வரிசையாக அணியும் வளையல்கள் முதலியன இந்த ரகத்தைச் சேர்ந்தவையே. விலையுயர்ந்த நகைகளை யணிவது தேசத்திற்கு நிச்சயமாய் நஷ்டம் என்பது கருத்து. நகைகளில் எவ்வளவு

பணம் போடுகிறேமோ அவ்வளவு மூலதனம் வீணுய்த் தேங்கிக் கிடக்கிறதென்றுதான் அர்த்தம். அது மட்டு மல்ல, சிறிது சிறிதாக அது தேய்ந்தும் போய்விடுகிறது. ஆத்ம பரிசுத்தத்திற்காக ஏற்பட்ட இந்த இயக்கத்திற்குப் பெண்களோ, ஆண்களோ நகைகளைக் கொடுப்பது சந்தேகமில்லாமல் சமூகத்திற்கு நன்மை பயக்கும் காரியம் என்று நான் எண்ணுகிறேன். கொடுப்பவர்கள் மகிழ்ச்சியோடுதான் கொடுக்கிருர்கள். நன்கொடையாகக் கொடுத்த நகைக்குப் பதில் நகை செய்துகொள்ளக் கூடாதென்று நான் எல்லோருக்கும் நிபந்தனை போடுவதுண்டு. வாஸ்தவத்தில், தங்களை அடிமைகள் ஆக்கிய நகைகளை ஒழித்துவிட நான் தூண்டுகோலா யிருந்ததற்காக, என்னைப் பல பெண்கள் வாழ்த்தியிருக்கிருர்கள். தங்கள் வீடுகளில் எளிய வாழ்வு ஏற்படக் காரணமாயிருந்தற்காக எத்தனையோ ஆண்களும் எனக்கு நன்றி கூறியிருக்கிருர்கள்.

# சிங்களப் பெண்களுக்கு

**“ உலக விஷயங்களில் நீங்களும் உங்கள் பகுதியைச் செய்ய விரும்புகிறீர்கள் என்றால், ஆணைத் திருப்திப்படுத்தும் பொருட்டு நகைகளால் உங்களை அலங்கரித்துக்கொள்ள நீங்கள் மறுத்துவிட வேண்டும். நான் ஒரு பெண்ணாகப் பிறந்திருப்பேனாகில் பெண்ணைத் தனது விளையாட்டுக் கருவி யென்று ஆண் சிறிதாவது நினைக்கிறான் என்று தெரிந் தாலே அவனுக்கு விரோதமாகக் கலகம் செய்ய நான் கிளம்பிவிடுவேன்.”**

*கொழும்பில், நவீன நாகரிகத்தில் தோய்ந்த சிங்களப் பெண் கள் கூடியிருந்த கூட்டத்தில் பசியால் வாடும் இந்திய மக்களின் நிலைமையை அப்படியே படம் பிடித்துக் காட்டுவது போல வரு ணித்து, காந்திஜி கீழ்வருமாறு சொன்னார் :*

*மகேந்திரர் இலங்கைக்கு வந்தபோது, அவருடைய நாட் டின் குழந்தைகள் செல்வத் துறையிலும், ஆன்மீகத் துறை யிலும் சிறப்புற்று விளங்கினார்கள். அப்போது எங்கள் கிரகம் உச்ச நிலையில் இருந்தது. அந்தக் காலத்தில் எங்கள் புகழில் நீங்களும் பங்குகொண்டீர்கள். இன்று அவருடைய நாட்டின் குழந்தைகள் பசியால் துன்புறுகிறார்கள். அவர்கள் சார் பாகவே, பிச்சைப் பாத்திரத்தை ஏந்திக்கொண்டு, நான் உங்களிடம் வந்திருக்கிறேன். அவர்களுக்கும் உங்களுக்கும் உள்ள உறவை நீங்கள் மறுக்கவில்லை யென்றால், அப்படி உறவு கொண்டாடுவதை நீங்கள் ஒரு பெருமையாக எண்ணு கிறீர்கள் என்றால்நீங்கள்பணம் கொடுப்பது மட்டும்போதாது; மற்ற இடங்களில் சகோதரிமார்கள் செய்ததுபோல, உங்கள் நகைகளையும் நீங்கள் தர வேண்டும். சகோதரிகள் உடம்பு முழுதும் நகைகளைப் பூட்டிக்கொண் டிருப்பதைப் பார்க்கும் போது, அந்த நகைகளை யெல்லாம் கைப்பற்றிக்கொள்ள வேண்டு மென்ற ஆவல் என் மனதில் குடிகொண்டுவிடுகிறது. நான் நகைகளைக் கேட்பதற்கு இன்னொரு விசேஷ காரண மும் உண்டு. நகைகளை அணிந்து அலங்காரம் செய்து கொள்ளுகிற மோகத்தைப் பெண்கள் மனத்திலிருந்து அகற்றிவிட வேண்டும் என்பதுதான் அது. இதர சகோதரிக ளோடு உரிமைபாராட்டிப்பேசுவதுபோல, உங்களிடமும் நான்*

பேசலாம் என்றால், உங்களை ஒன்று கேட்கிறேன். ஆணைக் காட்டிலும் அதிகமாகத் தன்னை அலங்கரித்துக்கொள்ளும்படி பெண்ணைத் தூண்டுகிறது எது? ஆணைத் திருப்திப்படுத்து வதற்காகத்தான் பெண் நகை அணிந்துகொள்கிறாள் என்று எனக்கு நண்பர்களான சில பெண்கள் சொல்லுகிறார்கள். நல்லது, உலக விவகாரங்களில் நீங்களும் உங்கள் பகுதியைச் செய்ய விரும்புகிறீர்கள் என்றால் ஆணைத் திருப்திப்படுத்தும் பொருட்டு நகைகளால் உங்களை அலங்கரித்துக்கொள்ள நீங்கள் மறுத்துவிட வேண்டும். நான் ஒரு பெண்ணைகப் பிறந் திருப்பேனாகில், பெண்ணைத் தனது விளையாட்டுக் கருவி யென்று ஆண் சிறிதாவது நினைக்கிறான் என்று தெரிந்தாலே அவனுக்கு விரோதமாகக் கலகம் செய்ய நான் கிளம்பிவிடு வேன். பெண்ணின் இதயத்தில் புகுந்து உண்மைகளை அறிந்துகொள்வதற்காக, எனக்கும் பெண்மை மனப்பாங்கு ஏற்பட வேண்டுமென்று நான் ஆசைப்படுகிறேன். என் மனை வியை, வழக்கமாக நடத்திவந்த முறைக்கு மாறாக நடத்துவ தென்று நான் முடிவு செய்வதற்கு முன்பு, அவளுடைய இதயத்திற்குள் என்னால் புகமுடியவில்லை. ஆகையால் அவ ளுடைய கணவன் என்கிற முறையில் என்னுடைய உரிமைக ளென்று சொல்லுகிறவைகள் அனைத்தையும் துறந்து, அவற் றைத் திரும்பவும் அவளுக்கே உரிமையாகும்படி செய்தேன். இதன் பயனை, இன்று என்னைப்போலவே அவளும் எளிமை யாயிருப்பதைக் காணலாம். அவள் கழுத்தில் கண்டசரம் இல்லை; உடலில் நவநாகரிகச் சின்னங்கள் எவையும் இல்லை. நீங்களும் அப்படி இருக்க வேண்டுமென்று நான் விரும்பு கிறேன். வெறும் மோகத்திற்கும் ஆசைக்கும் அடிமையாய் இராதீர்கள். அதே போல ஆண்களுக்கும் அடிமையாக இருக்க மறுத்துவிடுங்கள். உங்களை அலங்கரித்துக் கொள்ளவும் மறுத்துவிடுங்கள். செண்டு, லாவண்டர் போன்ற வாசனைத் திரவியங்களை வாங்காதீர்கள். உங்களிடமிருந்து சரியான மணம் வீச வேண்டுமென்று நீங்கள் விரும்பினால், அது உங் கள் இதயத்திலிருந்தே வர வேண்டும். அப்போது, நீங்கள் ஆணை மட்டு மல்ல, மனித சமுதாயம் அனைத்தையுமே அடிமையாக்கிக்கொள்வீர்கள். அவ்விதம் செய்வது உங்கள் பிறப்புரிமை. மனிதன் பெண்ணின் வயிற்றிலிருந்து பிறக்கி றான். அவன் அவளுடைய உடம்பிலே ஒரு பகுதி. கௌரவ மான உங்கள் நிலையை மீண்டும் பெற்று உபதேசம் செய்ய முற்படுங்கள்.

அதன் பிறகு தனது புனிதத்தன்மையைக் காப்பாற்றிக்கொள்வதற்காகப் போராடிய சீதையின் உதாரணத்தையும், ஷ்லேசின் என்ற பெண்ணையும் காந்திஜி உதாரணமாக எடுத்துக் காட்டினுர். ஷ்லேசின் யாரையும் எதிர்க்கவல்ல புனிதத்தன்மையையும், இயல்பாகவே அஞ்சாநெஞ்சத்தையும் படைத்திருந்தார். இவர் தென்னுப்பிரிக்காவில் முரட்டுத்தனமான பட்டாணியர்கள், திருடர்கள் ஒழுக்கக் குறைவுள்ளவர்கள் ஆகியவர்கள் உட்பட ஆயிரக்கணக்கான மக்கள் தன்னைப் போற்றும்படியாக நடந்துகொண்டார்; கடைசியாக உண்மையான கௌரவம் எங்கே இருக்கிறது என்று சொல்லி, காந்திஜி பேச்சை முடித்தார்.

தோட்டங்களில் வேலை பார்க்கும் உங்கள் சகோதரிகளின் பயங்கரமான நிலைமையை அறிவீர்களா? அவர்களை உங்கள் சகோதரிகளாகப் பாவியுங்கள்; அவர்களிடையே சென்று ஆரோக்கிய வசதிகளைப்பற்றி நீங்கள் அறிந்திருக்கும் விஷயங்களை அவர்களுக்குப் புகட்டுங்கள். உங்கள் திறமையை உதவியாகக் கொண்டு அவர்களுக்குச் சேவை செய்யுங்கள்; அவர்களுக்குத் தொண்டு செய்வதே கௌரவமான காரியம் என்று எண்ணுங்கள். வீட்டுக்குப் பக்கத்திலேயே சேவை செய்ய இடமா இல்லை? ஆண்களில் எத்தனையோ பேர் அயோக்கியர்களாக இருக்கிருர்கள். மதத்தைப் பரப்புவதற்காக ஏற்பட்ட சால்வேஷன் ஆர்மி என்னும் ரக்ஷக சேனையைச் சேர்ந்த சில பெண்கள், திருடர்களும், சூதாடிகளும் குடிகாரர்களும் கூடும் இடங்களுக்குச் சென்று, கெஞ்சியும் பணிவாகவும் வேண்டிக்கொண்டு, அவர்களை நல்வழிக்குத் திருப்பி யிருக்கிருர்கள். அயோக்கியர்களாகவுள்ள ஆண்மக்களிடையே இந்தப் பெண்களைப்போல் நீங்களும் சென்று அவர்களை அந்தத் தீமையினின்றும் விலக்குங்கள். நீங்கள் இப்போது அணிந்திருக்கிற அருமையான பொருள்களைவிட இந்தச் சேவை உங்களை அதிகமாக அலங்கரிக்கும். அப்போது நீங்கள் சேமித்து வைக்கிற பணத்திற் கெல்லாம் நான் பொறுப்பாளியாக இருந்து, ஏழைகளிடையே அவைகளை விநியோகம் செய்வேன்.

தொடர்பின்றி மனம் போன போக்கில் நான் சொன்ன நல்வார்த்தைகள் உங்கள் இதயத்தில் இடம் பெறுமாறு கடவுளை இறைஞ்சுகிறேன்.

# திட்டமான தியாகம் செய்க

**"ஹரிஜன இயக்கம் நெருப்பைப்போன்றது; நெய்யைச் சொரியச் சொரிய, இன்னும் அதிகமான நெய்யை நெருப்புப் கேட்கிறது. அதேபோலவே, ஹரிஜன் இயக்கத்திற்கு நீங்கள் அதிகமாகக் கொடுக்க அது இன்னும் அதிகமாகக் கேட்கிறது. இந்த இயக்கத்திற்குக் கொடுப்பவர்கள் லாப மடைகிறார்கள்; அவர்கள் ஒரு நாளும் நஷ்ட மடைவதில்லை; இதற்குக் கொடுக்காதவர்கள் சந்தேகமின்றி நஷ்ட மடைகிறார்கள்; கொடுப்பதன் மூலம் நீங்கள் அடைகிற லாபம் கௌரவம்; கொடுக்காததன் மூலம் நீங்களே உங்களை நஷ்டமாக்கிக்கொள்கிறீர்கள்."**

*சென்னையில் ஹரிஜன இயக்கத்தை யொட்டிச் சுற்றுப் பிரயாணம் செய்த காலத்தில், ஒரு பெண் காந்தியின் கையெழுத்தைப் பெறுவதற்கு ஐந்து ரூபாய் கொடுத்தாள்.*

*"ரூபாய் வேண்டாம்; எனக்கு ஒரு வளையல்" என்று காந்திஜி சொன்னார்: அந்தப் பெண் இரண்டு கைவளையல்களையும் கழற்றி அவற்றோடு ஐந்து ரூபாய் நோட்டையும் சேர்த்து, காந்திஜியிடம் கொடுத்தாள்.*

*"வளையல்களைக் கொடுக்கப் பெற்றோரின் அனுமதி உனக்கு கிடைக்கிறதா? வேண்டுமென்றால் இவைகளைத் திரும்பவும் எடுத்துக்கொள்" என்றார் காந்திஜி.*

*அந்தப் பெண் ஒரு வளையலைத் திருப்பி எடுத்துக் கொண்டு, "அதை ஞாபகார்த்தமாக வைத்துக்கொள்வேன்" என்றாள்.*

*"புது வளையல் வேண்டுமென்று உன் பெற்றோரைக் கேட்க மாட்டாய் அல்லவா?"*

*"கேட்க மாட்டேன்" என்று அந்தப் பெண் உறுதியாக மறுமொழி கூறினாள்.*

*"அப்படியானால் அதை நானே வைத்துக்கொள்ளுகிறேன்" என்று சொன்னார் காந்திஜி. அந்தப் பெண் சிரித்துக்கொண்டே போய்விட்டாள்.*

*இன்னொரு பெண் சொன்னாள்: "எனது தகப்பனாரின் அனுமதியில்லாமல் நான் எப்படி கொடுக்க முடியும்?"*

*"தகப்பனார் அனுமதியின்றி நீ ஒன்றையும் கொடுக்க முடியாமல் இருக்கலாம்; ஆனால் சுதந்திரம் எல்லாம் எனக்குத்தான், உனக்கு ஒன்றுமில்லை யென்று உன் தகப்பனார் சொல்லுகிறாரா?" என்று காந்திஜி கேட்டார்.*

புதிதாக மணமான ஒரு பெண் சொன்னாள்: "பணம் வேண்டுமானால் தருகிறேன்; ஆனால் நான் நகைகளைக் கொடுக்க முடியாது. ஏதாவது ஒரு நகையை நான் கொடுத்தால் அதற்குப் பதிலாகப் புது நகை வந்துவிடும். இது உங்களுக்குப் பிடிக்காது. எனவே நன்மையைக் கருதி என் நகைகளைத் தர நான் சித்தமாயிருக்கும்போது அவைகளைத் தருகிறேன்."

காந்திஜி சொன்னார்: "நீ சொல்வது ரொம்ப சரி; பணத்தை உன்னிடம் நான் விரும்பவில்லை. பணம் வேண்டுமென்றால் உன் தகப்பனாரைக் கேட்டாலே தந்துவிடுவார். உனது நகைகளே எனக்கு வேண்டும். திரும்பவும் புது நகைகளைச் செய்து அணியலாகாது என்பது நிபந்தனை. நீயாக வந்து என் கையில் உன் நகைகளைத் தருவதற்குக் காலம் வரும்வரை உனக்காகப் பொறுமையோடு நான் காத்துக் கொண்டிருப்பேன்."

விசாகப்பட்டணத்தில் தயக்கமின்றித் தியாகம் செய்ய முன்வரும்படி அவர் பெண்களை அழைத்தபோது, அவருடைய வார்த்தைகள் ஆழ்ந்த உணர்ச்சியில் ஊறி வந்தன. அவர் சொன்னார்:

"ஹரிஜன இயக்கம் நெருப்பைப் போன்றது. நெய்யைச் சொரிய சொரிய இன்னும் அதிகமான நெய்யை நெருப்பு கேட்கிறது. அதேபோலவே, ஹரிஜன இயக்கத்திற்கு நீங்கள் அதிகமாகக் கொடுக்கக் கொடுக்க, அது இன்னும் அதிகமாகக் கேட்கிறது. இந்த இயக்கத்திற்குக் கொடுப்பவர்கள் லாபமடைகிறார்கள்; அவர்கள் ஒரு நாளும் நஷ்டமடைவதில்லை. இதற்குக் கொடுக்காதவர்கள், சந்தேகமில்லாமல் நஷ்டமடைகிறார்கள். கொடுப்பதன் மூலம் நீங்கள் அடைகிற லாபம் கௌரவம்; கொடுக்காததன் மூலம் நீங்கள் உங்களையே நஷ்டமாக்கிக்கொள்கிறீர்கள். ஏனெனில், உயர்ந்த ஜாதியைச் சேர்ந்த ஆண்களும் பெண்களும் நூற்றுக்கணக்கான வருஷங்களாக ஹரிஜனங்களைத் தொல்லைப்படுத்தி வருகிறார்கள். இன்று நாம் கெட்ட காலத்தை அனுபவிக்கிறோம் என்றால், அதற்கு ஹரிஜனங்களை நாம் நடத்திய முறையும் ஒரு முக்கியமான காரணம் என்று நான் நிச்சயமாக எண்ணுகிறேன். ஆகையால் தங்கள் இதயத்திலிருந்து தீண்டாமை என்கிற பேயை விரட்டியடிக்கும்படி நான் இந்தியப் பெண்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறேன். சில மக்களை நம்மைவிடத் தாழ்ந்தவர்கள் என்று நினைப்பது தவறான செயலாகும்,

பாபமான காரியமாகும். கடவுள் படைத்த இந்தப் பூமியில் யாரும் தாழ்வானவர்களில்லை, யாரும் உயர்வானவர்களில்லை. நாம் யாவரும் அவருடைய படைப்பு; பெற்றோருக்குத் தங்கள் குழந்தைகள் யாவரும் சமமாக இருப்பதுபோல, கடவுளுக்கும் அவருடைய குழந்தைகள் யாவரும் சமமே. ஆதலால் தீண்டாமைக்கு மத சம்பந்தமான ஆதாரம் இல்லையென்று நான் சொல்லுவதை நம்புங்கள். எனவே, உங்களைச் சுற்றியுள்ள ஹரிஜனங்களுக்கும் உங்கள் இதயத்திலே ஒரு இடமளிக்கும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஹரிஜனக் குழந்தைகளை உங்கள் வீடுகளுக்கு அழைத்துச் செல்லுங்கள். ஹரிஜனங்கள் இருக்கும் இடங்களுக்குச் சென்று, அவர்கள் குழந்தைகளையும் வீடுகளையும் கவனித்து, வேண்டிய உதவியைச் செய்யுங்கள். உங்கள் சொந்தச் சகோதரிகளோடு பேசுவது போல ஹரிஜனப் பெண்களோடு பேசிப் பழகுங்கள்.

ஹரிஜன இயக்கம் முக்கியமாக இந்தியப் பெண்கள் கவனித்துக்கொள்ள வேண்டிய ஒரு காரியம். இங்கேயுள்ள ஹிந்துப் பெண்களாகிய நீங்கள், உங்கள் கடமையைச் செய்வீர்களென்று நம்புகிறேன். உங்களில் நகைகள் முழுவதையுமோ, அல்லது சிலவற்றையோ கொடுக்கப் பிரியப்படுபவர்கள் அவ்வண்ணமே செய்வீர்களென்று நம்புகிறேன். ஆனால் இந்த நன்கொடைக்கு ஒரு நிபந்தனை இருக்கிறது. நீங்கள் கொடுக்கிற நகைகளைத் திரும்பவும் செய்து போட்டுக்கொள்ளக் கூடாது. நீங்கள் சொந்தமாக இந்த இயக்கத்திற்கு ஏதோ செய்தீர்கள் என்று இருக்க வேண்டுமென்பது எனன விருப்பம். ரூபாயையும் நோட்டையும் கொடுக்கும்போது நீங்கள் அப்படிச் செய்ய முடியாது. ஏனென்றால் அவை உங்கள், பெற்றோரிடமிருந்தோ, கணவன்மார்களிடமிருந்தோ வருகின்றன. நகைகளோ உங்கள் சொந்தச் சொத்து, பெற்றோர் மூலமாகவோ, கணவன் மூலமாகவோ திரும்பவும் செய்து போட்டுக்கொண்டுவிடலாம் என்ற எண்ணமில்லாமல் நீங்கள் நகைகளைக் கொடுக்கும்போது, சந்தேகத்திற்கு இடமின்றி, அது நீங்கள் செய்த தியாகமாகிறது. நான் விடுத்த செய்தியின் கருத்தைத் தெரிந்துகொண்டவர் எல்லாரும், இந்தத் தீர்மானமான தியாகத்தைச் செய்ய வேண்டுமென்று விரும்புகிறேன்.''

# பெண்ணின் உண்மையான ஆபரணம்

**"பெண்ணின் உண்மையான ஆபரணம் புனிதமான ஒழுக்கமே யாகும். உலோகமும் கல்லும் உண்மையான ஆபரணங்கள் ஆக மாட்டா; சீதை, தமயந்தி என்கிற பெயர்கள் அவர்கள் மாசுமறுவற்ற கற்பையுடையவர்கள் என்கிற முறையில் நம்மிடையே புனிதத்தன்மையைப் பெற்றுயிருக்கின்றன. நாம் புனிதமாகக் கருதுவது அவர்கள் நகைகள் அணிந்துகொண்டார்கள் என்பதற்காக அன்று."**

*ஹரிஜன சுற்றுப்பிரயாணத்தின்போது மைசூரில் பெண்கள் கூட்டம் ஒன்றில் பேசும்போது காந்திஜி, கீழ்வருமாறு சொன்னார் :*

*"பெண்ணின் உண்மையான ஆபரணம் அவளது புனிதமான ஒழுக்கமே யாகும். உலோகமும் கல்லும் உண்மையான ஆபரணங்கள் ஆக மாட்டா. சீதை, தமயந்தி என்கிற பெயர்கள், அவர்கள் மாசுவறுவற்ற கற்பையுடைவர்கள் என்கிற முறையில் நம்மிடையே புனிதத்தன்மையைப் பெற்றிருக்கின்றன. நாம் புனிதமாகக் கருதுவது அவர்கள் நகைகள் அணிந்துகொண்டார்கள் என்பதற்காக அன்று. நகைகளைத் தரும்படி நான் உங்களிடம் கேட்பதில் அதைவிடப் பரந்த நோக்கம் ஒன்று இருக்கிறது. நகைகளை ஒழித்த பிறகு, தங்களுக்கு மிகவும் சௌகரியமா யிருக்கிற தென்று பல சகோதரிகள் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள்." இன்னொரு கூட்டத்தில் பேசும்போது காந்திஜி சொன்னார் ; "பல வழிகளில் தகுதிவாய்ந்த செயல் என்று இதை நான் சொல்லியிருக்கிறேன். ஏழைகளுக்கு உதவியற்றவர்களுக்கும் தங்கள் செல்வத்தில் நியாயமான பகுதியைக் கொடுத்தாலன்றி, எந்த ஆண்மகனும், எந்தப் பெண்ணும் அந்தச் செல்வத்தைத் தனது என்று உரிமை பாராட்ட இடமில்லை. இது சமூகத்திற்கும் மதத்திற்கும் செய்யவேண்டிய கடமை; பகவத் கீதை இதை ஒரு யக்ஞம் என்று சொல்லுகிறது. இந்த யக்ஞத்தைச் செய்யாதவனைத் திருடன் என்றும் பகவத்கீதை சொல்லுகிறது. பலவிதமான யக்ஞங்கள் கீதையில் சொல்லப்பட்டிருக்கின்றன; ஆனால், ஏழைகளுக்கும் தேவை யுடையவர்களுக்கும் உதவுவதைவிடப் பெரிய யக்ஞம் என்ன இருக்க முடியும்? தாழ்ந்தவன், உயர்ந்தவன் என்ற பாகுபாடுகளை மறந்து, மக்கள் எல்லாரும் சமம் என்று உணர்வதைவிட, இன்று நாம் செய்யக்கூடிய பெரிய யக்ஞம் வேறொன்றும்*

இல்லை. உண்மையாக அலங்கரித்துக்கொள்வதென்பது உடம்பு முழுதும் உலோகத்தையும் கற்களையும் சுமந்து கொண்டு திரிவதன்று. இதயத்தைத் தூய்மைப்படுத்தி ஆன்மாவின் அழகை அபிவிருத்தி செய்வதிலேதான் உண்மையான அழகு இருக்கிறது என்பதைப் பெண்கள் மனதில் பதியும்படி செய்ய விரும்புகிறேன்."

ஒரு சமயத்தில் முதன்முதலாக ஆந்திர நாட்டில் தியாகத்திற்கும் தொண்டிற்கும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கிய, காலஞ்சென்ற திருமதி அன்னபூரணா தேவியின் தியாகத்தையும் மேன்மையையும் பெண்களுக்கு எடுத்துகாட்டி, காந்திஜி ஞாபகப்படுத்தினார். அப்போது அவர் சொன்னார்: "என்னைச் சந்தித்த முதல் நாளே அவர் தமது நகைகளை, ஒரு நகையை யல்ல, தாம் அணிந்திருந்த நகைகள் அனைத்தையுமே கழற்றி என்னிடம் தந்தார். அவர் செய்த காரியத்தைப் பார்த்துக்கொண்டிருந்த பெண்கள் அப்படியே பிரமித்துப் போய்விட்டார்கள். அதன் பிறகு நகைகள் மழைபோல வந்து விழ ஆரம்பித்தன. தம் நகைகளைக் கொடுத்ததினால் அவர் அழகு குறைந்துவிட்டது என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அதற்கு மாறாக, அவர் எனக்கு முன்னிருந்ததைவிட அழகாகத் தோன்றினார். பெருந்தன்மையோடு செய்கிற காரியத்திலே தான் அழகு நிலவுகிறது என்று ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு."

—மகாதேவ தேசாய்

# கோமதியின் துறவு

**"நீ வேண்டாம் என்று ஒதுக்கிய அணிகளைவிட உன் துறவே உண்மையான ஆபரணமாகும்."**

*பல ரகமான அனுபவங்கள் அடங்கிய ஜோலி நிறைந்த எனது வாழ்க்கையில், இதயத்தைத் தொடக் கூடியவையும் ஆத்ம சிந்தனையைத் தூண்டுபவையுமான பல காட்சிகளைப் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது. ஆனால் இதை எழுதுகிற காலத்தில் ஹரிஜன இயக்கத்தைவிட இதயத்தைத் தொடக்கூடிய ஒருவிஷயத்தை என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. படகராவில் அப்போதுதான் பேசி முடித்தேன். அந்தப் பேச்சில் நியாயத்தை எடுத்துக்காட்டி நகைகளைத் தரும்படி பெண்களிடம் வேண்டிக்கொண்டேன். பேச்சு முடிந்து, வந்த நன்கொடைகளை விற்றுக்கொண்டிருந்த சமயத்தில், கோமதி என்ற பதினாறு வயதுள்ள ஒரு பெண் மெதுவாக மேடையை நோக்கி வந்தாள். தன் வளையல்களில் ஒன்றை என்னிடம் தந்து, எனது கையொப்பம் வேண்டும் என்று கேட்டாள். கையொப்பம் போட்டுக் கொடுக்க ஆரம்பித்தேன். அதற்குள் இன்னொரு வளையலையும் கழற்றிவிட்டாள். கைக்கு ஒரு வளையலே அவள் அணிந்திருந்தாள். "இரண்டையும் நீ தர வேண்டாம்; ஒரு வளையலுக்கே நான் கையொப்பம் போட்டுத் தருகிறேன்" என்றேன் நான்.*

*கழுத்தி லணிந்திருந்த தங்கச் சங்கிலியைக் கழற்றித் தந்ததுதான் அவள் அதற்கு அளித்த பதில். கழுத்துச் சங்கிலியைக் கழற்றிவிடுவ தென்பது சாமானியமான காரியமில்லை. அவளுடைய நீண்ட மயிரில் அது பின்னிக்கொண்டு கிடந்தது. அந்தச் சிக்கலிருந்து அதை விடுவிக்க வேண்டியதாயிற்று. அந்த மலையாளப் பெண் தன்னை ஆச்சரியத்தோடு பார்த்துக்கொண் டிருக்கும் ஆயிரக்கணக்கான ஆண்களும் பெண்களும் கூடியிருக்கும் அந்தக் கூட்டத்திற்கு முன்பாக, சங்கிலியை மயிர்ப்பிடிப்புகளிலிருந்து எடுத்துத் தர வெட்கப் படவில்லை. மலையாளப் பெண்ணல்லவா அவள்? அதனால் அவளுக்குப் பொய்யான அடக்கம் இல்லை. "உன் பெற்றோர்களின் அனுமதியைப் பெற்றுவிட்டாயா?" என்று நான் கேட்*

டேன். பதில் இல்லை. தர வேண்டியவைகளை யெல்லாம் இன்னும் தந்து முடிக்கவில்லையே அவள்! கைகள் தாமாகவே அவள் காதுப் பக்கம் சென்றன. காதுத் தோடுகளையும் கழற்றினுள். இதைப் பார்த்துக்கொண்டிருந்த ஜனங்கள் ஒரே ஆரவாரம் செய்து, அடக்க முடியாத தங்கள் ஆனந்தத்தைத் தெரிவித்துக்கொண்டார்கள். "இப்படி நகைகளைக் கொடுப்பதற்குப் பெற்ருேரின் சம்மதியைப் பெற்றுவிட்டாயா?" என்று திரும்பவும் அவளைக் கேட்டேன். நாணங்கொண்ட இந்தச் சிறு பெண்ணிடமிருந்து நான் பதில் பெறு முன்னர், அவள் தகப்பனுரும் கூட்டத்தில் இருக்கிருர் என்றும், நான் ஏலம் போட்ட உபசாரப் பத்திரங்களுக்கு விலை கேட்டு எனக்கு அவர் உதவி செய்தார் என்றும் தகுதியான காரியங்களுக்குக் கொடுப்பதில் மகளைப்போலவே அவரும் தாராள சிந்தையுள்ளவர் என்றும் அங்கே இருந்த ஒருவர் என்னிடம் சொன்னுர். கொடுத்த நகைகளைத் திரும்பவும் செய்து போட்டுக்கொள்ளக் கூடாதென்று கோமதிக்கு நான் ஞாபகப் படுத்தினேன். அந்த நிபந்தனைப்படியே நடப்பதாக அவள் உறுதி கூறினுள்; கையொப்பம் போட்டு அவளிடம் கொடுத்தபோது கீழேவரும் வார்த்தைகளை அந்தக் கையொப்பத்திற்கு முன்னுரை போல என்னுல் எழுதாமல் இருக்க முடியவில்லை. "நீ வேண்டாம் என்று ஒதுக்கிய அணிகளைக் காட்டிலும் உன் துறவே உண்மையான ஆபரணமாகும்." அவள் செய்த இந்தத் துறவு பிற்காலத்தில் உண்மையான ஹரிஜன சேவகியாக அவள் விளங்குவதற்கு ஒரு அறிகுறியாக விளங்கட்டும்.

# கோமதியின் உன்னதத் தீர்மானம்

**"நகை போட்டுக்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தாத கணவனைப் பார்த்து நான் மணம் செய்துகொள்வேன்."**

பதினாறு வயதுள்ள மலையாளச் சிறுமியாகிய கோமதியின் துறவைப்பற்றிக் காந்திஜி எழுதியிருக்கிறார். காந்திஜி கள்ளிக் கோட்டையில் தங்கிய கடைசி நாளன்று, கோமதி, தகப்பனாரோடு காந்திஜியைப் பார்க்க வந்தாள். படகராவுக்குக் காந்திஜியுடன் செல்லாதபடியால், கோமதியை முதன் முதலாக அப்போதுதான் நான் சந்தித்தேன். மிகவும் சாந்தமாகப் பேசினாள்; அதிகமாகப் பேசுகிற குணம் அவளிடம் இல்லை. இண்டர்மீடியெட் வகுப்புவரையில் படித்திருந்தபடியால், சம்பாஷணையில் கலந்துகொள்ள முடிந்தது. அவள் செய்த துறவைப் பற்றிக் காந்திஜி இன்னும் அதிகமாகத் தெரிந்துக்கொள்ள விரும்பினார். நகைகளைக் கொடுத்துவிடுவதென்று உறுதி செய்துகொண்டே கூட்டத்திற்கு வந்தாளா, அல்லது திடீரென்றுதான் அந்த முடிவுக்கு வந்தாளா என்று காந்திஜி அவளைக் கேட்டார்.

'வீட்டிலேயே முடிவுசெய்துவிட்டாள்; எங்கள் அனுமதியையும் பெற்றுவிட்டாள்" என்று அவள் தகப்பனார் பதில் சொன்னார்.

" எவ்வித நகையுமின்றி உன்னைப் பார்ப்பதற்கு உன் தாயாருக்கு வருத்தமாயிராதா ?"

" வருத்தமாகத்தான் இருக்கும். ஆனால் திரும்பவும் நகைகளைப் போட வேண்டுமென்று அவள் என்னை வற்புறுத்தமாட்டாள் என்பது நிச்சயம்" என்று கோமதி சொன்னாள்.

" காலக்கிரமத்தில் உனக்குக் கலியாணம் நடந்த பிறகு நீ நகைகள் போட்டுக்கொள்ளாமல் இருந்தால் அது உன் கணவனுக்குப் பிரியமாக இருக்குமா? அப்போது நீ என்ன செய்வாய்? இதிலேதான் எனக்கு ஒரு தர்ம சங்கடமான நிலை ஏற்படுகிறது; உண்மையில் நீ செய்த தியாகம் அற்புதமானது, அதைப்பற்றி ஹரிஜனன் பத்திரிகையில் ஒரு கட்டுரை எழுதி இருக்கிறேன். அக் கட்டுரையில் இனிமேல் நீ நகையே போட்டுக்கொள்ள மாட்டாய் என்று எழுதியிருக்கிறேன். அதற்கு நீ தயாராயில்லை என்றால், கட்டுரையின் அந்தப் பாகத்தை மாற்றி எழுத வேண்டிய நிலை ஏற்படும்; அல்லது

உனக்கு வரப்போகிற கணவன் விருப்பத்திற்கு ஒருசிறிதும் விட்டுக் கொடுக்காமல் நீ உறுதியாக இருக்க வேண்டும். நீ மலையாளப் பெண். ஆதலால், இதைச் செய்யும் ஆற்றல் உனக்கு இருக்கலாம். அல்லது நகைகளின்றியே உன்னை மணக்கச் சித்தமாய் இருக்கும் கணவனைப் பார்த்து நீ தேர்ந் தெடுத்துக்கொள்ள வேண்டும். மனதைத் திறந்து உன் விருப் பத்தை என்னிடம் நீ தாராளமாகச் சொல்லலாம்'' என்று காந்திஜி சொன்னார்.

காந்திஜி சொன்னதை, கோமதி மெதுவாகப் பூரணமாக மனதில் வாங்கிக்கொண்டாள். ஒரு பெரிய காரியத்தை யல்லவா அவளைச் செய்யும்படி கேட்கிறார். முக்கியமான தீர் மானத்தை அவள் செய்ய வேண்டியிருந்தது. சிறிது நேரம் ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தாள். அதன் பிறகு ஒரே ஒரு வாக்கியத்தைத்தான் சொன்னாள்: "நகை போட்டுக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தாத கணவனைப் பார்த்து நான் மணம் செய்துகொள்வேன்'' என்றாள்.

காந்திஜியின் கண்கள் மகிழ்ச்சியால் மின்னின. "அன்ன பூரணை என்ற பெயருடன் ஒரு பெண் இருந்தாள். அவளை நான் அறிவேன். மணம் செய்துகொண்ட பின்னரும் நகைகளை அவள் வேண்டாமென்று வெறுத்து ஒதுக்கித் தள்ளினாள். சாகும் வரையில் உறுதியாக நின்று தனது வாக்குறுதியை அன்னபூரணை நிறைவேற்றினாள். இப்போது நீ வந்திருக் கிறாய்'' என்று காந்திஜி சொன்னார். அன்று முதல் கோமதியின் உத்தமமான தியாகத்தைப்பற்றிப் பெண்களிடம் பேசுவதில் காந்திஜி சலிப்படைவதே இல்லை.

**மகாதேவ தேசாய்.**

# மற்றுமொரு பெருந் தியாகம்

**"எல்லாப் பெண்களையுமே நகைகளைக் கொடுத்துவிடும்படி நான் தூண்டுவதுண்டு. இது பெண்களுக்குக் கஷ்டமாகத் தோன்றலாம். இன்று சமூக அமைப்பில் பலவிதமான நாகரிகப் போக்குகள் ஏற்பட்டுவிட்டன. பெருந்தன்மையோடு செய்கிற காரியத்திலேதான் அழகு நிலவுகிறது."**

*சில பலர் காந்திஜியைப் பார்க்க வந்தார்கள். பதினேழு வயதுள்ள பெண்ணொருத்தியும் பார்க்க வந்தாள். அவள் காந்திஜிக்கு முன்பாக வந்து நின்றபோது "நீ யாரம்மா?" என்று காந்திஜி அவளைக் கேட்டார்.*

*"நான் ஒரு சிறு பெண்" என்று அவள் பதில் சொன்னாள்.*

*"ஒரு சிறு பெண்ணுக்கும் நகைக்கும் என்ன அம்மா சம்பந்தம்?" என்றார் காந்திஜி. காரணம், அவள் அணிந்திருந்த நகைகளைக் காந்திஜி பார்த்துவிட்டார்.*

*"நான் ஒரு பெண்ணாக இருக்க விரும்புவதுதான்" என்று மீனாட்சி பதில் சொன்னாள்.*

*"அப்படியானால் நீ நகைகளை அணியக் கூடாது" என்று சொல்லி, கோமதி செய்த தியாகத்தைப்பற்றிக் காந்திஜி அவளுக்கு எடுத்துச் சொன்னார்:*

*"கோமதிக்கு வயது பதினாறு. உன்னைவிட ஒரு வயது சிறியவள். அப்படியிருந்தும் அவளுடைய நகைகளையெல்லாம் அவள் வேண்டாம் என்று ஒதுக்கிவிட்டாள்."*

*மீனாட்சியின் கண்கள் பிரகாசித்தன. "எனக்கும் நகைகளைக் கொடுக்கப் பிரியந்தான்."*

*"பெற்றோரிடமிருந்து அனுமதி பெற்றுவிட்டாயா?"*

*"அனுமதி நிச்சயமாகப் பெற்றுக்கொண்டு வருகிறேன்."*

*"மலையாளப் பெண்களுக்குச் சுதந்திரம் உண்டு என்பதை நான் அறிவேன்."*

*"என் நகைகளை நான் உங்களுக்குத் தரலாமா?"*

*"ஆம், ஹரிஜனங்களுக்காக நீ தரலாம்."*

*"என் விருப்பமும் அதுதான்."*

*"உண்மையான ஒரு ஹரிஜனாக என்னை நீ எண்ணினால், உன் நகைகளை என்னிடம் தரலாம். வெறும் வேஷதாரி*

என்று என்னை எண்ணினால் நகைகளை நீ தர வேண்டியதில்லை. எல்லாப் பெண்களையுமே நகைகளைக் கொடுத்துவிடும்படி நான் தூண்டுவதுண்டு. பெண்களுக்கு இது கஷ்டமாகத் தோன்றலாம். இன்று சமூக அமைப்பில் பலவிதமான நாகரிகப் போக்குகள் ஏற்பட்டுவிட்டன. பெருந்தன்மையோடு செய்கிற காரியத்திலேதான் அழகு நிலவுகிறது.

"என்னையே உங்களுக்குக் கொடுத்தேன் என்றால்?"

"ஏற்கனவே ஒரு சகோதரி உன்னைப்போலவே என்னுடன் சேவையில் ஈடுபட்டிருக்கிறாள். இப்போது நீயும் அதில் சேர்ந்துவிட்டாய்."

"சரி, உங்களிஷ்டம் போல் நான் நடக்கச் சித்தமாய் இருக்கிறேன்

இருந்தாலும், இதைச் சிந்தித்துப் பார்க்க உனக்கு ஒரு இரவு தருகிறேன்."

மறு நாள் காலையில் மீனாட்சியை நான் பார்த்தபோது என்னால் அவளை எளிதில் அறிய முடியவில்லை. அவள் அணிந்திருந்த நகைகள் யாவும் எங்கோ மறைந்துவிட்டன.

"உனது நகைகள் எங்கே?" என்று நான் அவளைக் கேட்டேன்.

"இனி நகை யணிகிறதில்லை யென்று அவைகளைக் கொடுத்துவிட்டேன்."

"காந்திஜிக்கா?"

"இல்லை, என் தகப்பனாருக்குக் கடன் இருக்கிறபடியால் நான் தங்களிடம் என் நகைகளைத் தர இயலவில்லை. ஆனால் மறுபடியும் அவைகளை அணிகிறதில்லை யென்று சபதம் செய்திருக்கிறேன்" என்று அவள் சொன்னாள்.

"நீ செய்த சபதத்தை உனது பெற்றோரும் ஒப்புக் கொண்டார்களா?"

"தகப்பனார் ஏதோ சரியென்று சொல்லி விட்டுவிட்டார். ஆனால், தாயாருக்கோ இது பிடிக்கவில்லை."

சிறிது நேரம் சென்று மீனாட்சி தன் பெற்றோரோடு காந்திஜியிடம் வந்து, ஹரிஜன இயக்கத்திற்கு ஒரு தங்க வளையலையும் தங்கச் சங்கிலியையும் கொடுத்தாள். கடனைப் பற்றிக் காந்திஜி முன்னமேயே தெரிந்துகொண்டிருந்தார். ஆகையால் காந்திஜி அவளது பெற்றோரிடம் சொன்னார்:

"இவைகளை நீங்கள் கொடுக்க வேண்டாம். மீனாட்சி வேண்டாம் என்று ஒதுக்கிவிட்ட நகைகளைகொண்டு, எவ்வளவுக்கு முடியுமோ அவ்வளவுக்குக் கடனை அடையுங்கள். அவள் நகை வேண்டுமென்று இனிக் கேட்கவே மாட்டாள்."

"மீனாட்சியின் கன்னங்களில் கண்ணீர் மள மளவென்று கொட்டியது. உணர்ச்சி வயப்பட்டு இருந்தபடியால் அவளால் ஒன்றுமே பேச முடியவில்லை. வாழ்நாள் முழுதுமே நிறைவேற்ற வேண்டிய ஒரு சபதத்தைச் செய்ய அவள் உறுதி கொண்டாள்.

அதன் பிறகு, இவ்வளவு மேலான ஒரு முடிவைச் செய்து கொண்ட மகளை ஏன் நீங்கள் வாழ்த்தக் கூடாதென்று அவளுடைய தாயாரைக் காந்திஜி கேட்டார்

"இவளைக் கலியாணம் செய்து கொடுக்க வேண்டும். நகையில்லாமல் இவளை மணந்துகொள்ளும் புருஷனைக் கண்டு பிடிப்பது மிகவும் கஷ்டம்" என்று அந்த அம்மையார் பதில் சொன்னார்.

"இந்த விஷயத்தைப் பற்றி நீங்கள் கவலை கொள்ள வேண்டாம். அதற்குரிய காலம் வருகிறபோது, மீனாட்சிக்கு ஒரு வரன் அல்ல; ஐம்பது வரன்களை நான் கொண்டுவருகிறேன்; அவர்களில் ஒரு மணமகனை நீங்கள் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம்" என்று அந்த அம்மையாரின் பயத்தைப் போக்கடிக்கிற முறையில் காந்திஜி பதில் சொன்னார்.

மீனாட்சியின் தாயார் அவள் செய்த முடிவுக்காக அவளை வாழ்த்தினாள். அது இதயத்தை உருக்கக்கூடிய ஒரு காட்சியாக இருந்தது. எடுத்துக்காட்டத் தகுந்த இவ்விதமான மேலான தியாகங்களே வாழ்க்கைக்கு ஒரு ஆதரவாக நின்று அதைத் தாங்குவதுடன் சோதனைக் காலங்களிடையிலும் வாழ்க்கையை வாழத் தகுந்ததாகச் செய்கின்றன. தீண்டாமை என்ற கொடிய பாபத்தை நசுக்காமல் உயிரோடு வைத்திருக்கக் காரணமாயிருக்கும் மடமையை ஒழிப்பதற்கு, கோமதியும் மீனாட்சியும் புரிந்த தியாகச் செயல்கள் உற்சாகமும் உதவியும் அளிக்கட்டும்.

# பெண்களும் தீண்டாமையும்

**"துன்பத்தைக் கண்டு உருகிற கருணையுள்ளம் பெண்களுக்கு உண்டு. எனவே ஹரிஜனங்களின் துன்பம் உங்கள் இதயத்தை உருக்கிவிடும். தீண்டாமையும் அதோடு உயர்வு தாழ்வு என்ற வேறுபாடுகளையும் நீங்கள் அகற்றிவிடுவீர்களாயின், ஹிந்து சமயம் பரிசுத்தமடைந்து விடும்; ஆன்மிகத் துறையில் ஹிந்து சமூகம் வெகு தூரம் முன்னேறிச் செல்லும்."**

*ஹரிஜன சுற்றுப்பிரயாணத்தின்போது, பெண்களின் கூட்டங்கள் பலவற்றில் காந்திஜி பேசிய பேச்சுக்களிலிருந்து, முக்கியமான சில பகுதிகள் கீழே தரப்பட்டிருக்கின்றன.*

## பிலாஸ்பூரில்

*சகோதரிகளே, ஹரிஜன இயக்கத்திற்கு உங்களால் முடிந்ததைக் கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். எனக்கு அளித்த உபசாரப்பத்திரத்தில், ஹரிஜனங்களுக்கு எவ்விதம் சேவை செய்யலாம் என்று கேட்டிருக்கிறீர்கள். எல்லாவற்றையும்விட, தீண்டாமையை உங்கள் உள்ளத்திலிருந்து வேருடு ஒழித்துவிட்டு, உங்கள் சொந்தக் குழந்தைகளுக்குத் தொண்டு செய்வது போல ஹரிஜன சிறுவர்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும். இதுவே எனது விருப்பம். உங்கள் பந்துக்களைப் போலவும் உங்கள் சொந்த சகோதர சகோதரிகளைப் போலவும், இந்தியத் தாயின் குழந்தைகளாகிய ஹரிஜனங்கள்மீது நீங்கள் அன்பு செலுத்த வேண்டும். தொண்டு, தியாகம் இவற்றின் வடிவே பெண்கள் என்று சொல்லி நான் அவர்களை வணங்குவதுண்டு. தன்னலமற்ற தியாக உணர்ச்சியை இயற்கை உங்களுக்கு அதிகமாக அளிக்கிறது. இந்த உணர்ச்சியில் ஆண்கள் உங்களுக்கு நிகராக மாட்டார்கள். துன்பத்தை கண்டு உருகுகிற கருணை உள்ளம் பெண்களுக்கு உண்டு. எனவே ஹரிஜனங்களின் துன்பம் உங்கள் இதயத்தை உருக்கிவிடும். தீண்டாமையையும் அதோடு உயர்வு தாழ்வு என்ற வேறுபாடுகளையும் நீங்கள் அகற்றிவிடுவீர்களாயின், ஹிந்து சமயம் பரிசுத்தமடைந்துவிடும்; ஆன்மீகத் துறையில் ஹிந்து சமூகம் வெகு தூரம் முன்னேறிச் செல்லும். அதனால் முடிவில் அகில இந்தியாவுக்குமே அதாவது 35 கோடி மக்களுக்குமே நன்மை*

ஏற்படும். உலக மக்களின் தொகையில் ஐந்தில் ஒரு பங்கு மக்கள் பரிசுத்தம் அடையும் இந்த அற்புதமான காரியம் மனிதவர்க்கம் மொத்தத்தையுமே தூய்மைப் படுத்தத்தான் செய்யும். இந்த இயக்கத்தினல் எதிர்காலத்தில் பிரமாத மான பலன்கள் ஏற்படும். ஆத்ம பரிசுத்தத்திற்காக ஏற்பட்ட பெரிய இயக்கம் இது; இப்போது நடக்கும் இயக்கங்களை யெல்லாம்விடப் பெரியது என்றுகூட இதைச் சொல்லி விடலாம். இதற்கு உங்களால் ஆனவரை உதவி செய்ய முன்வருவீர்க ளென்று எதிர்பார்க்கிறேன்.

## டெல்லியில்

கடவுளின் படைப்பில் எல்லாரும் சமமே. மனிதனுக்குள் ளேயே உயர்வு தாழ்வு என்ற வேறுபாடுகளை அவர் செய் திருந்தால், அந்த வேறுபாடுகள் யானைக்கும் எறும்புக்கும் உள்ள வேறுபாட்டைப்போல அவ்வளவு நன்ருகத் தெரியக் கூடியதா யிருந்திருக்கும். ஆனல், தாரதம்மியமின்றி எல்லா மக்களுக்கும் ஒரே மாதிரியான வடிவத்தையும் ஒரே மாதிரி யான இயற்கைத் தேவைகளையும் அவர் அளித்திருக்கிருர். சுகாதார அபிவிருத்திக்கான தொண்டு செய்வதில் ஹரி ஜனங்கள் ஈடுபட்டுள்ளார்கள் என்பதற்காக, அவர்களைத் தீண்டத்தகாதவர்க ளென்று நீங்கள் கருதுகிறீர்கள். தன் குழந்தையின் சுகாதார அபிவிருத்தியை எண்ணி, இவ்வித மான சேவையில் ஈடுபடாத தாயும் உண்டோ? சமூகத்திற்கு எல்லாரையும்விட உபயோகமா யிருக்கும் தொண்டர்களாகிய ஹரிஜனங்களை, தீண்டத்தகாதவர்க ளென்றும் பஞ்சமர்கள் என்றும் கருதுவது, பெரிய அநியாயம். இந்தப் பாபத்தை ஹிந்து சகோதரிகள் உணரும்படி செய்யவே இச்சுற்றுப் பிர யாணத்தை ஏற்றுக்கொண் டிருக்கிறேன். மனிதனுகப் பிறந்த யாரையும் நமக்குக் கீழானவர்க ளென்று எண்ணி அவமதிப் பது, ஒருபோதும் பெருமை தரத்தக்க விஷயமல்ல. ஒரே கட வுளைப் பல பெயர்களைச் சொல்லி நாம் எல்லோரும் வணங்கு கிருேம், ஆகையால் நம்மிடையேயுள்ள முக்கியமான ஒற்று மையை உணர்ந்து, தீண்டாமையையும் மக்களில் ஒருவர் உயர்ந்தவர் ஒருவர் தாழ்ந்தவர் என்ற உணர்ச்சியையும் ஒழிக்க வேண்டும்.

## சென்னையில்

ஒரு காரியத்தை நீங்கள் செய்ய வேண்டு மென்று சொல்லுவதற்காக நான் இங்கே வந்திருக்கிறேன். சிலர்

உயர்ந்தவர்கள், சிலர் தாழ்ந்தவர்கள் என்பதை அறவே மறந்துவிடுங்கள். சிலர் தீண்டத்தக்கவர்கள் சிலர் தீண்டத்தகாதவர்கள் என்பதையும் அறவே மறந்துவிடுங்கள். என்னைப்போல நீங்கள் யாவரும் கடவுள் நம்பிக்கையுடையவர்களென்று எனக்குத் தெரியும்; ஆணுக்கு ஆணும் பெண்ணுக்குப் பெண்ணும் உயர்வு தாழ்வு கற்பிக்கும் அளவுக்குக் கடவுள் அநியாயமானவரா, கொடியவரா ?இந்தத் தீண்டாமை ஹிந்து மதத்திற்கு ஒரு பெரிய மாசு; தீண்டாமை வாழ்ந்தால் அது ஹிந்து மதத்தின் வீழ்ச்சி என்று சொல்லநான் தயங்க மாட்டேன். கடவுளைப்பற்றி மனித பாஷையில்தான் பேச வேண்டியதிருக்கிறது. அந்தப் பாஷையிலே சொல்வதென்ருல், தீண்டாமையை நாம் நம்மிடையே இவ்வளவு காலம் வைத்திருந்ததற்கு, கடவுள் நம்மிடம் பொறுமையாகவே இருந்துவந்திருக்கிருர். கடவுளின் பொறுமைக்கும் ஒரு எல்லையுண்டு என்பதை நான் தயங்காமல் சொல்லுகிறேன். ஹிந்து இந்தியாவில் மனிதனுக்கு மனிதன் செய்து வருகிற இந்தக் கொடுமையைக் கண்டு கடவுளே தமது பொறுமையை ...வார்.

நம்மைவிடச் சிலர் தாழ்ந்தவர்களென்று நாம் கருதுவது நம்மிடையே தீமை அதிகமாயிருக்கிறதென்பதைக் காட்டுகிறது. இந்தத் தீமையை நாம் ஒழிக்காவிட்டால், அது நம்மை ஒழித்துவிடும். பிராயச்சித்தம் செய்வதற்குக்கூட ஒரு ஹிந்துவை அது விட்டுவைக்காது; இவ்விதம் விதி நம்மைத் தாக்கிஞல், அது நமக்குத் தண்டனையாகவே இருக்கும் என நான் கருதுகிறேன். இந்த எச்சரிக்கையைச் சொல்லவே இந்தியாவின் ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிக்கு நான் சென்று கொண்டிருக்கிறேன். ஆகையால் ஹரிஜனங்கள் யாவரையும் உங்கள் சொந்த சகோதர சகோதரிகளாக நீங்கள் பாவித்தால், ஒரு பெரிய புண்ணியம் செய்தவர்களாவீர்கள்.

**மைசூரில் பார்த்ததற்கு நேர் விரோதமாக இருந்த சில ஹரிஜனக் குடியிருப்புகளைப் பார்வையிட்ட பிறகு, காந்திஜி இன்னொரு கூட்டத்தில் பேசிஞர். அப்போது அவர் சொன்னதாவது :**

பிறர் நம்மை எவ்வண்ணம் நடத்த வேண்டுமென்று விரும்புகிருேமோ, அவ்வண்ணமே நாமும் பிறரை நடத்த

வேண்டுமென்கிற கொள்கையில் எனக்கு அதிக நம்பிக்கை உண்டு. இன்று காலையில் நான் பார்த்துவிட்டு வந்த பொந்துகள் மனிதர்கள் வசிக்கத்தகுந்த இடங்கள் அல்லவே அல்ல. மனிதனின் வாழ்க்கை நிலை கீழ்நோக்கிச் செல்வதற்கும் ஒரு எல்லை உண்டு. இந்த எல்லைக்கும் கீழே இறங்கிவிட்டால், மனித சமுதாயத்திற்கே அவமானமும் தீங்கும் ஏற்படும். இந்தக் குறைந்த பட்ச வாழ்க்கை வசதிகள்கூட நான் பார்த்த பொந்துகளில் இல்லை; பல அம்சங்களில் அழகு வாய்ந்திருக்கும் இந்த இடத்தில் முதல் சந்தர்ப்பம் வாய்த்த உடனே இந்தக் குறையை நீங்கள் நீக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். துர்பாக்கியசாலிகளான இந்தச் சகோதர சகோதரிகளுக்கு இப்போதிருப்பதைவிட நல்ல வீடுகளைக் கட்டிக் கொடுக்க ஏற்கனவே ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன என்று அறிகிறேன். ஆனால் இந்த மாதிரியான உதவி செய்வதில் காலம்தான் முக்கியமான விஷயம் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்கள். உங்கள் ஏற்பாடுகள் தயாராகி முடியும்போது ரொம்பக் காலந்தாழ்ந்து போய்விட்டது என்று சொல்லுகிற நிலை ஏற்படாமல்

# பெண்களுக்கு ஒளிவு மறைவில்லாத வார்த்தை

**"உயர்ந்தவன் அல்லது தாழ்ந்தவன் என்ற பட்டயத்தோடு கடவுள் மனிதனைப் படைக்கவில்லை. பிறப்பைக் கொண்டு ஒரு பெண்ணையோ, ஆணையோ, தாழ்ந்தவர் தீண்டத்தகாதவர் என்று சொல்லிச் சிறுமைப்படுத்துகிற எந்த சாஸ்திரமும் நமது நம்பிக்கையைப் பெற முடியாது. கடவுளையும், கடவுளுக்கு நிகரான உண்மையையும் மறுப்பதாகும் அது."**

ஹரிஜனச் சுற்றுப் பிரயாணத்தில் காந்திஜி கடைசியாகப் பேசியது காசியில் ஒரு பெண்கள் கூட்டத்திலாகும். அப்போது தீண்டாமை என்ற பிரசினையைப்பற்றித் தாம் என்ன எண்ணுகிறார் என்பதை அவர் சுருக்கமாகச் சொன்னார். அது பின்வருமாறு:

*உணவு, பானம் அவைகளில் கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவதும், உயர்வு, தாழ்வு என்ற எண்ணத்தைப் பின்பற்றுவதுமே மதம் என்று இன்று நாம் எண்ணிக்கொண்டிருக்கிறோம். இது மிகவும் துக்ககரமான விஷயமாகும். இதைவிட மோசமான அறியாமை வேறு இருக்க முடியாது. பிறப்பும், சம்பிரதாய அனுஷ்டானமும் ஒருவரின் உயர்வையோ தாழ்வையோ நிர்ணயித்துவிட முடியாது. ஒழுக்கமே அதை நிர்ணயிக்க வேண்டும். உயர்ந்தவன் அல்லது தாழ்ந்தவன் என்ற பட்டயத்தோடு கடவுள் மனிதனைப்படைக்கவில்லை. பிறப்பைக் கொண்டு ஒரு பெண்ணையோ ஆணையோ தாழ்ந்தவர், தீண்டத்தகாதவர் என்று சொல்லிச் சிறுமைப்படுத்துகிற எந்த சாஸ்திரமும் நமது நம்பிக்கையைப் பெறமுடியாது. கடவுளையும் கடவுளுக்கு நிகரான உண்மையையும் மறுப்பதாகும் அது. உண்மை, நன்மை, நியாயம் ஆகியவைகளின் உறைவிடம் என்று நாம் கடவுளை அழைக்கிறோம். அப்படிப்பட்ட கடவுள் நமது ஜனங்களில் ஐந்தில் ஒரு பகுதியினரை தீண்டத்தகாதவர்கள் என்று கருதுகிற மதத்தையோ, பழக்கத்தையோ ஏற்படுத்தியிருக்க முடியாது. ஆதலால் தீங்கு பயக்கும் இந்தக் கொடிய எண்ணத்தை நீங்கள் ஒழிக்க வேண்டுமென்பது எனது விருப்பம். பரிசுத்தமில்லாத வேலையால் ஏற்படும்*

தீண்டாமை என்பது இருக்கிறது; இருக்கத்தான் வேண்டும். நம் ஒவ்வொருவருக்குமே அது பொருந்தும்; ஆனால் புழுதியிலிருந்தும் நாற்றத்திலிருந்தும் நம்மை நாம் சுத்தம் செய்து கொண்ட அந்தக் கணமே, தீண்டத்தகாதவர் என்ற நிலையிலிருந்து நாம் விலகிவிடுகிறோம். வேலையோ, நடத்தையோ சாஸ்வதமாய் யாரையும், ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி, தீண்டத்தகாதவராகச் செய்ய முடியாது.

நாம் யாவரும் பாபிகளே. செய்யும் பாபத்தின் ...யாசம். கடவுளிடத்தில் சரண்புகுகிறவர்கள், அவர் பெயரையே தனக்குப் பற்றுக்கோடாகக் கொள்பவர்கள், யாராயினும் சரி, அவர்கள் பாபத்திலிருந்து விடுதலை பெறுவார்களென்று ஆன்ம போதனையில் சிறந்து விளங்கும் கீதை, பாகவதம், துளசி ராமாயணம் முதலிய புத்தகங்கள் உறுதி கூறுகின்றன. இது மனித சமுதாயம் முழுவதற்குமே உண்மையாக இருக்கிறது.

...ப பிரசினை விஷயத்தில் இன்னொரு சுலபமான சோதனையையும் நீங்கள் செய்து பார்க்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். உயிர் வர்க்கங்கள் ஒவ்வொன்றுக்குமிடையே, மனிதனாயினும் சரி கீழான விலங்காயினும் சரி, வேறுபாடுகள் உண்டு என்பதைக் காட்ட, சில குறியீடுகள் இருக்கத்தான் செய்கின்றன. அந்தக் குறியீடுகள் மூலம் மிருகத்தினின்று மனிதனையும், பசுவினின்று நாயையும் நாம் வேறுபடுத்திக் கண்டுகொள்ள முடிகிறது. தீண்டத்தகாதவர்கள்தான் என்பதை வேறுபடுத்திக் காட்ட ஏதாவது அடையாளங்கள் காணப்படுகின்றனவா? நமக்கு எவ்வளவு மனிதப் பண்பு இருக்கிறதோ, அவ்வளவு மனிதப் பண்பு அவர்களுக்கும் இருக்கிறது. மனிதனைவிடத் தாழ்ந்து மிருகங்களுக்குக் ..., தீண்டத்தகாதவர் என்ற குறி இருப்பதாக நாம் கருதுவ... அப்படியானால், இந்தக் கொடிய அநியாயம் ஏன் வந்தது? இது மதமல்ல; மதத்திற்கே விரோதமான, மிகவும் வெறுக்கத்தக்க கேவலமான காரியம். இந்தப் பாபம் உங்களிடையே இன்னும் இருக்குமானால், இதை நீங்கள் ஒழித்துவிட வேண்டும்.

பல நூற்றாண்டுகளாகச் செய்துவரும் இப்பாபத்திற்கு ஒரேயொரு பரிகாரம்தான் இருக்கிறது. ஹரிஜனங்களின் குடியிருப்புகளுக்குச் சென்று, அவர்கள் குழந்தைகளை உங்கள் குழந்தைகளைப் போலக் கட்டியணைத்து, அவர்களோடு

நட்புப் பாராட்டுவதுதான் அந்தப் பரிகாரம். அவர்களுக்கு உண்ணப் போதிய உணவு கிடைக்கிறதா, குடிக்கச் சுத்தமான தண்ணீர் கிடைக்கிறதா, ஏதோ உரிமை கொண்டவர்கள் போல நீங்கள் அனுபவிக்கும் சுத்தமான காற்றும் வெளிச்சமும் அவர்களுக்குக் கிடைக்கின்றனவா என்பவைகளை யெல்லாம் நீங்கள் கவனிக்க வேண்டும். இன்னொரு வழி. நூல் நூற்கிற தியாகத்தை நீங்கள் ஒவ்வொருவரும் ஆரம்பித்து, கீழே அமுங்கிப் போய்க் கிடக்கும் மக்களினத்தைச் சேர்ந்த கோடிக்கணக்கான தீண்டத்தகாதாருக்கு ஆதாரமான கதரையே கட்டுவ தென்று சபதம் செய்து கொள்வதாகும். நூற்பதன் மூலம் செய்கிற தியாகம் அவர்களும் நம்மைச் சேர்ந்தவர்கள் தான் என்று எண்ணுவதற்குச் சிறிதளவு உதவியாயிருக்கும். நீங்கள் வாங்குகிற கதர்த் துணி ஒவ்வொரு கஜத்தின் மூலமும் ஹரிஜனங்கள் கைக்கும் ஏழைகள் கைக்கும் சில காசுகள் போய்ச் சேருகின்றன. கடைசியாகச் செய்ய வேண்டிய காரியம் என்னவென்றால், ஹரிஜனங்களின் நிலையை அபிவிருத்தி செய்வதற்கென்றே ஏற்பட்ட ஹரிஜன நிதிக்கு உங்களாலே முடிந்தவரையில் பண உதவி செய்வதாகும்.

# பட்தாவைக் கிழித்தெறியுங்கள்

**"கற்பு என்பது திடீரென்று செயற்கையில் தோன்றிவிடக் கூடியதல்ல; புறக்கட்டுப்பாடுகளினாலும் ஏற்படக் கூடியதல்ல. பட்தா முறையை அனுஷ்டித்துக் கற்பைப் பாதுகாக்க முடியாது. அந்த உணர்வு உள்ளுணர்ச்சியிலிருந்தே தோன்ற வேண்டும். எதிர் பாராத விபத்துக்களையும் எதிர்த்து நிற்கும் ஆற்றல் அதற்கு இருக்க வேண்டும். அப்போதுதான் அதற்குச் சிறப்பு உண்டு."**

வங்காளம், பீகார், ஐக்கிய மாகாணம் ஆகியவற்றில், மற்ற மகாணங்களைவிடக் கடுமையாகப் பட்தா முறையை அனுஷ்டிக்கிறார்கள். இதை நான் அறிவேன். தர்பங்கா எனுமிடத்தில் நள்ளிரவில் ஒரு கூட்டத்தில் பேச நேர்ந்தது. சந்தடி, கூச்சல், சமாளிக்க முடியாத கும்பல் முதலியன இன்றி, மிக மிக அமைதியாக இருந்தது சூழ்நிலை; எனக்கு முன்புறத்தில் ஆடவர்கள் உட்கார்ந்து இருந்தார்கள். பின்புறத்தில், திரைக்குப் பின்னால் பெண்கள் இருந்தார்கள். அவர்கள் இருந்ததை நான் அறியேன். பெண்களும் கூட்டத்திற்கு வந்திருக்கிறார்கள் என்று சொன்ன பிறகுதான் அவர்கள் இருந்ததை நான் கவனித்தேன். அன்று நடந்தது, அனைத்தைக் குழந்தைகள் விடுதி யொன்றின் கால்கோள் விழாவாகும். பெண்களுக்கும் இரண்டொரு வார்த்தைகள் சொல்லும்படி என்னைக் கேட்டுக்கொண்டார்கள். பெண்கள் திரைமறைவில் இருந்தபடியால், அவர்களின் எண்ணிக்கை எவ்வளவென்று எனக்குத் தெரியாது. அந்தத் திசையைப் பார்க்க எனக்கு வருத்தமாகவும் அவமானமாகவும் இருந்தது. இந்தக் கொடிய காட்டுமிராண்டித்தனமான பழக்கம் புகுத்தப்பட்ட போது அது எப்படிப் பயன்பட்டிருந்தாலும் சரி, இப்போது அதனால் யாதொரு பயனுமில்லை. தேசத்திற்கு அதனால் அளவற்ற தீங்குதான் உண்டாகிறது. உளுத்துப்போன இந்தக் கொடிய பழக்கத்தை விடாப்பிடியாய்ப் பற்றிக்கொண்டு, ஆடவர்கள் இந்தியப் பெண்களுக்குக் கொடுமை இழைப்பதைப் பற்றி நான் சிந்திக்கலானேன். சென்ற நூறு ஆண்டுகளாக நாம் கற்ற கல்வி நம்மிடையே ஒருவித உணர்ச்சியையும் உண்டாக்கவில்லை. ஏனெனில், கல்வி கற்ற குடும்பங்களில் கூட பட்தாமுறை இன்னும் அப்படியே இருந்து வருவதைப் பார்க்கிறோம். கல்வி கற்ற ஆண்கள் இந்தப் பட்தா முறையில் நம்பிக்கை கொண்டிருப்பதால் இது இருந்து வருகிறதென்று

சொல்வதற்கில்லை. கொடுமையான இந்த முறையைத் தைரியமாக எதிர்த்து ஒரு மூச்சில் அதை அடியோடு ஒழிக்க ஆடவர்கள் முன்வராமையே காரணமாகும். ஆயிரக்கணக்கான பெண்கள் கூடியுள்ள பல கூட்டங்களில் நான் பேசியிருக்கிறேன். இந்தக் கூட்டங்களிலெல்லாம் இரைச்சலும் கூப்பாடும் அதிகமாக இருக்கும். இதன் காரணமாக, பலன் கிட்டும் முறையில் பெண்களிடையே பேசுவது சாத்தியமில்லாது போய்விடுகிறது. சிறையிலும் கூட்டிலும் அடைந்து கிடப்பது போன்று, வீடுகளிலும் சிறு சிறு கூடங்களிலும் நீண்டகாலமாக அடைபட்டுக் கிடக்கிற பெண்களிடம் இதைத் தவிர வேறு என்னதான் நாம் எதிர்பார்க்க முடியும்? ஏதாவது ஒரு நாள், திடீரென்று ஒரு பெரிய அறையில் கொண்டு போய் நிறுத்தி, கூட்டங் கூட்டி, பிரசங்கத்தைக் கேட்கும்படி சொன்னால் அவர்களுக்கு இன்னது செய்வதென்றே புரிவதில்லை. எதற்காகத் தாங்கள் அங்கு வந்திருக்கிறார்களென்பதும், பேசப் போவது யாரென்பதும் அவர்களுக்குத் தெரிவதில்லை. அமைதியாக இருக்கச் செய்து, பிரசங்கம் செய்ய ஆரம்பித்தால், அவர்களுக்கு உணர்ச்சி ஏற்படும் முறையில் பேசுவது மிகவும் சிரமமாயிருக்கிறது. சாதாரணமாக அன்றாடம் நடைபெறும் அனேக விஷயங்களைப்பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரியாது. சுதந்தரமாக வாழும்படி அவர்களை விட்டு வைக்கவில்லை நாம். நான் இப்படிச் சொல்வது சிறிது மிகைப்படுத்திச் சொல்வதாக இருக்கலாம். நான் பேச நேர்ந்த கூட்டங்களுக்கு வருகிற ஆயிரக்கணக்கான பெண்களையும் அவர்களிடம் காணப்படும் மிகவும் உயர்ந்த பண்பாட்டையும் நான் நன்கு அறிவேன். ஆண்களைப் போலவே உயர்ந்த அந்தஸ்தை அடையுந் தகுதி பெண்களுக்கு உண்டு என்பது எனக்குத் தெரியும். அதோடு வெளியே போக அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைப்பதில்லை என்றும் எனக்குத் தெரியும்; இது படித்த வகுப்பாருக்குச் சிறப்புத் தருவதன்று. ஏன் அவர்கள் அதிகமாக முன்னேறவில்லை என்பதுதான் இப்போதுள்ள பிரசினை. ஆண்களைப் போலவே பெண்களும் ஏன் சரியானபடி சுதந்தரத்தை அனுபவிக்கக் கூடாது? அவர்கள் ஏன் வெளியே சென்று நல்ல காற்றை அனுபவிக்கக் கூடாது?

கற்பு என்பது திடீரென்று செயற்கையில் தோன்றிவிடக் கூடியதல்ல; புறக்கட்டுப்பாடுகளினால் ஏற்படக்கூடியதல்ல. பட்தா முறையை அனுஷ்டித்துக் கற்பைப் பாதுகாக்க முடியாது. அது உள்ளுணர்ச்சியிலிருந்தே தோன்ற வேண்டும். எதிர்பாராத விபத்துக்களையும் எதிர்த்து நிற்கும் ஆற்றல்

அதற்கு இருக்க வேண்டும். அப்போதுதான் அதற்குச் சிறப்பு உண்டு. சீதையினுடைய கற்பைப் போல எதிரியை அறைகூவி எதிர்த்து நிற்கும் ஆற்றல் கற்புக்கு இருத்தல் வேண்டும். ஆண்களுடைய பார்வைக்குப் பயந்து ஒளிந்து கொள்கிற கற்பு ஒரு கற்பன்று. ஆடவர்களைப் பெண்கள் நம்ப வேண்டு மென்று வற்புறுத்துகிறோம்; அதே போல ஆடவர்களும் பெண்களை நம்ப வேண்டும்; நமது அங்கங்களில் ஒன்றை உணர்வற்று ஸ்தம்பித்துக் கிடக்கவிட்டு, நாம் வாழ்க்கை நடத்துவது நல்லதல்ல. சீதையின்றி ராமன் இல்லை; ராமனைப் போலவே சீதையும் சுதந்தரமாய் வாழ்க்கை நடத்தினாள். ஆனால் உரமான சுதந்தரத்துக்கு எடுத்துக்காட்டாக விளங்கி னாள், திரௌபதி. சீதை மென்மையே உருவெடுத்தவள்; ஒரு மிருதுவான மலர்; திரௌபதி அப்படியன்று. அவளை ஒரு பிர மாண்டமான ஆலமரத்திற்கு ஒப்பிட்டுச் சொல்லலாம். தன் னுடைய அதிகாரபூர்வமான கட்டளைக்கு, பலம் பொருந்திய பீமசேனனையும் அவள் இணங்கும்படி செய்துவிட்டாள். பீமனைக் கண்டாலே எல்லாருக்கும் பயந்தான். ஆனால், திரௌபதி இடத்திலே, பீமன் ஒரு சிறிய ஆட்டுக்குட்டி போல அடங்கி விடுவான். திரௌபதி, தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்குப் பாண்டவர்களில் எவரையும் நம்பியிருக்க வில்லை. இந்தியப் பெண்குலத்தை, சுதந்தரமாக வளர ஒட்டாது நாம் இன்று தடை செய்திருப்பதைக் காண்கிறோம். இதனால் சுதந்தர உணர்ச்சியுள்ள ஆண்மக்கள் பிறவாமலும் நாம் தடை செய்கிறோம். நமது பெண்குலத்திற்கும் தீண்டா தாருக்கும் நாம் இழைக்கும் கொடுமைகள் ஆயிர மடங்கு அதிக உக்கிரத்துடன் நம்மையே வந்து தாக்குகின்றன. நம்மிடம் காணப்படும் பலவீனம், சபல புத்தி, குறுகிய மனப்பாங்கு, திக்கற்ற நிலை யாவற்றிற்கும் ஓரளவு மேலே சொன்ன கொடுமைகள் காரணமெனலாம். ஆகையால், சரி யான முயற்சி செய்து, இந்தப் பட்டாவை நாம் கிழித்தெறி வோமாக.

# பட்தாவின் சாபம்

**"சுயராஜ்யத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்கும் பாதையை, அனேக சமூகக் கேடுகள் வந்து குறுக்கே நின்றுகொண்டு தடை செய்கின்றன. எவ்வளவு விரைவிலே இந்தக் கேடுகளைப்பற்றி உணர ஆரம்பிக்கிறோமோ, அவ்வளவு விரைவிலேயே நாம் முன்னேறுவதோடு நாம் விரும்பிய இலட்சியமும் விரைவிலே கைகூடிவிடும். சுயராஜ்யத்தை அடைந்த பின் சமூக சீர்த்திருத்தங்களைக் கவனிக்கலாம் என்று கடத்திக்கொண்டு போவது சரியன்று. அப்படிச் சொல்லுகிறவர்களுக்குச் சுயராஜ்ய மென்பதன் பொருளே தெரியவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்."**

பீஹாரில் மிகவும் செல்வாக்குள்ள அனேக ஆடவர்களும் பெண்டிரும் ஒன்றுசேர்ந்து, பட்தா முறையை அடியோடு ஒழித்துவிட எண்ணி, அதனுல் ஏற்படும் கேடுகளை விளக்கி, ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிருர்கள். இந்த வேண்டுகோள் இப்பொழுதுதான் வெளியாகியிருக்கிறது. இந்த வேண்டுகோளில் ஐம்பதுக்கு மேற்பட்ட பெண்மணிகள் கையெழுத்திட்டிருக்கிருர்கள். இதைத் தொடர்ந்து ஆர்வத்தோடு வேலை செய்தால், பீஹாரிலே பட்தாமுறை ஒரு பழங்கதையாகிவிடும். இந்த வேண்டுகோளில் கையெழுத்திட்டிருக்கிறவர்கள் ஆங்கில மோகம் பிடித்த பெண்கள் அல்லரென்றும், வைதிக மனப்பாங்குள்ள இந்தியப் பெண்களே யாவர் என்று நாம் தெரிந்துகொள்வது அவசியம். அந்த வேண்டுகோள் திட்டமாகச் சொல்வதாவது :

"சென்னை, மஹாராஷ்டிரம், கர்னுடகம் ஆகிய பிரதேசங்களில் வசிக்கும் சகோதரிகளைப் போலவே நமது மாகாணத்தில் இருக்கும் பெண்களாகிய நாங்களும் சுதந்தரமாக இருக்க விரும்புகிறேம். சுதந்திரமாக வெளியே போய்வரவும் சமுதாயத்தின் பல தரப்பட்ட அலுவல்களிலும் கலந்துகொண்டு வேலை செய்யவும் நாங்கள் ஆசைப்படுகிறேம். நாங்கள் விரும்புகிற சுதந்தரம் முக்கியமாக, இந்திய முறையை அனுசரித்ததாய் இருக்குமேயன்றி ஐரோப்பிய முறையை அனுசரித்ததாயிராது. கட்டாயப் பட்தா முறையிலிருந்து விடுபட்டு அடியோடு ஆங்கில முறையைப் பின்பற்றுவது தலைவலியை

விட்டுத் திருகு வலியைப் பிடித்த கதையாய்த்தான் முடியு மென்று நாங்கள் கருதினாலும், இந்தியர்களின் இலட்சியங் களுக் கேற்றவாறு நமது பெண்கள் அபிவிருத்தி அடைய வேண்டுமேயானால், பட்டாமுறையை போக்கியேயாக வேண் டும் என்பதை உணருகிறோம். நமது சமுதாய வாழ்வில் மேன் மையும் அழகும் பெருக வேண்டுமானால், அதனுடைய ஒழுக் கப் பண்பு உயர வேண்டுமேயானால், குடும்பத்தை நேர்மை யாகவும் திறம்படவும் நடத்துகிறவர்களாகப் பெண்கள் விளங்க வேண்டுமேயானால், கணவர்மார்களுக்கு உதவிபுரியும் தோழிகளாகவும் சமுதாயத்திற்குப் பயன்தரும் உறுப்பினர்க ளாகவும் அவர்கள் விளங்கவேண்டுமேயானால், நாம் இந்தப் பட்டாமுறையை ஒழித்தேயாக வேண்டும். பட்டா என்ற இந்தத் திரையைக் கிழித்தெறியாவிட்டால் நன்மை தரும் காரியங்களைப் பெண்கள் செய்யவே முடியா தென்பது எங்கள் துணிபு. நமது ஜனத்தொகையில் பாதியளவு எண்ணிக்கை யுள்ள பெண்கள், செயற்கை முறையில் சிறையில் அடைபட்டு கிடக்கிறார்கள். இதன் காரணமாக அவர்களுடைய சக்தி அவ்வளவும் அடைபட்டுக் கிடக்கிறது. அந்தச் சக்தியை விடுதலை செய்து, நல்லதொரு துறையில் செலுத்தினால், நமது மாகாணத்திற்கு அளவிட முடியாத நன்மை ஏற்படு மென்பது எங்கள் துணிபு."

பீகாரில் பட்டாமுறை என்னென்ன கேடுகள் விளைத் திருக்கிறது என்பதை நான் அறிவேன். இயக்கத்தை இப் போதாவது ஆரம்பித்தது நல்லதுதான்.

இந்த இயக்கம் தோன்றுவதற்கு ஆரம்ப காரணம் மிக வும் விசித்திரமானது. பட்டா என்ற கொடுமையிலிருந்து, தம் மனைவியை விடுவிக்க, பாபு ராமாநந்தன் மிஸ்ரா என்னும் ஒரு கதர்த் தொண்டர் விரும்பினார். சபர்மதி ஆசிரமத்திற்கு அவரது மனைவியை அனுப்ப, வீட்டில் உள்ளவர்கள் விரும்ப வில்லை. எனவே, ஆசிரமத்திலிருந்து இரு சிறு பெண்களை, தம் மனைவி இருக்கும் இடத்திற்கு மிஸ்ரா அழைத்துச் சென்றார். தம் மனைவிக்குத் தோழிகளாக இருக்கும் பொருட்டே இவ்விரு பெண்களையும் அழைத்துச் சென்றார். அவர்களில் மகன்லால் காந்தியின் புதல்வி ராதா பென் ஆசிரியராக இருந்து பாடம்சொல்ல வேண்டும். ராதா பென் னோடுகூட துர்கா தேவி என்ற பெண்ணும் போயிருந்தாள். இவள் காலஞ்சென்ற லால்பகதூர் கிரி அவர்களின் புதல்வி. பட்டாமுறையைக் கைவிட்டுவிடும்படி இந்த இரு பெண்களும் ஸ்ரீமதி மிஸ்ராவை தூண்டியதைக் கண்டு, பெண்ணின் பெற் றோர் இவர்கள் இருவரையும் வெறுக்கத் தலைப்பட்டார்கள்.

இந்தத் துன்பங்களை எல்லாம் அந்த இரு பெண்களும் வெற்றிகரமாகச் சமாளித்துவிட்டார்கள். இடையிடையே தன் மகளைப் பார்ப்பதற்காக, மகன்லால் காந்தி அங்குப் போய் வந்தார். போய்வரும் போதெல்லாம் முயற்சியில் தளராது இருக்கும்படி மகளுக்கு அவர் சொல்லி வருவார். இந்தச் சமயத்தில். ராதா பென் வேலைசெய்துகொண்டிருந்த அதே கிராமத்திலேயே நோய்வாய்ப்பட்டு, மகன்லால் காந்தி, பாட்னுவில் இறந்துபோனார். எனவே இதை ஒரு சாக்காகக் கொண்டு, பீகார் நண்பர்கள் பட்தாமுறையை எதிர்க்கத் தலைபட்டார்கள். ராதா பென் தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட பெண்ணோடு ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தார். ஆசிரமத்திற்கு அவள் வந்ததனால் ஒருவித பரபரப்பு ஏற்பட்டது; ஏற்கனவே இந்த இயக்கத்தில் ஈடுபடத் தயாராய் இருந்த அவளுடைய கணவனும் மிக ஆர்வத்தோடு இந்தப் போராட்டத்தில் கலந்துகொண்டார். எனவே தனிப்பட்டவர்களின் தூண்டுதலே இந்த இயக்கத்திற்கு ஒரு சுறுசுறுப்பை உண்டாக்கிற்று எனலாம். இதைத் தலைமை தாங்கி நடத்தியவரோ கைதேர்ந்த போர்வீரன் பாபு பிரிஷ் கிஷோர் பிரசாத். இவர் பல போராட்டங்களை நடத்தியவர்; எல்லா விஷயங்களிலும் அனுபவம்படைத்த ஒரு போர்வீரர். அவர் தலைமை தாங்கி நடத்திய இயக்கங்கள், வெற்றி பெருமல் மாண்டுபோனதாக எனக்கு நினைவே

வருகிற சூலை மாதம் 8உ யன்று பட்தாவை எதிர்த்து இயக்கம் நடத்தப்பெறும் என்று வேண்டுகோளில் நிர்ணயித்து இருக்கிறார்கள். இந்த முறையிலுள்ள கொடிய தடையின் காரணமாக, பீஹார் மனித சமுதாயத்தில் பாதி அளவு எண்ணிக்கையுள்ள மக்கள், சமூகத் தொண்டு செய்ய முடியாமற் போகிறது. இந்தப் பழக்கம், சுத்தமான காற்று, வெளிச்சம் முதலியனகூடக் கிடைக்காமல் தடை செய்கிறது. சுயராஜ்யத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்கும் பாதையை அனேக சமூகக் கேடுகள் குறுக்கே நின்று தடை செய்கின்றன. எவ்வளவு விரைவிலே இந்தக் கேடுகளைப்பற்றி உணர ஆரம்பிக்கிறோமோ, அவ்வளவு விரைவிலே நாம் முன்னேறுவதோடு, நாம் விரும்பிய இலட்சியமும் விரைவிலே கைகூடிவிடும். சுயராஜ்யத்தை அடைந்தபின் சமூக சீர்திருத்தங்களைக் கவனிக்கலாமென்று கடத்திக் கொண்டு போவது சரியன்று. அப்படிச் சொல்லுகிறவர்களுக்குச் சுயராஜ்யமென்பதன் பொருளே தெரியவில்லை என்றுதான் சொல்ல

வேண்டும். நமது சேம்பாதியான பெண்களை இப்படிச் சீர்கெட்ட நிலையில் வைத்திருந்தால், மற்ற நாட்டினரோடு நாகரிகமான முறையில் நம்மால் போட்டிபோட முடியாது; நம்மை நாமே பாதுகாத்துகொள்வதற்கும் தகுதி யிராது.

ஆகையால். பீஹார் மாகாணத் தலைவர்கள் பட்தா முறையை எதிர்த்து ஒழிப்பதற்கு ஆர்வத்தோடு முனைந்திருப் பதைக் கண்டு, அவர்களை நான் வாழ்த்துகிறேன். இந்த இயக்கத்தின் வெற்றி சிறப்பாக இதில் ஈடுபட்டுள்ள தொண் டர்களின் தூய தன்மையைப் பொறுத்திருக்கிறது. எல்லாச் சீர்திருத்தங்களுக்குமே இந்த உண்மை பொருந்தும்; வேண்டு கோளில் கையெழுத்துப் போட்டிருக்கிற பெண்மணிகளின் பொறுப்பு பிரமாதமானது. பட்தா முறையைக் கைவிட்ட பிறகும், இந்தியப் பெண்குலத்திற்குரிய அடக்கத்தோடு அவர்கள் விளங்க வேண்டும். இதன் காரணமாக வரும் தொல்லைகளைத் தைரியத்தோடும் தளராத உறுதியோடும் அவர்கள் சமாளிக்க வேண்டும். இப்படி நடந்துகொள்வார் களேயானல் அவர்களுடைய முயற்சி கூடிய விரைவிலே வெற்றிதரும். பட்தாவை எதிர்த்து நடத்துகிற இந்த இயக்கம் சரியான துறையில் செல்லுமேயானல், பீஹாரிலுள்ள ஆண், பெண்கள் அனைவருக்கும் சரியான கல்வி புகட்டிய பலனேற் படும்.

# பீகாரில் பட்தா முறை

**"நல்ல முறையில் நிர்வகித்து, தொடர்ந்த உற்சாகத்தோடு இந்த இயக்கத்தை நடத்தி வந்தால், பட்தா முறை ஒரு பழங்காலத்துக் கதையாகப் போய்விடும்."**

பட்தா முறையை எதிர்த்து, பீகாரில் பல முக்கியமான இடங்களில் ஜுலை 8ட யன்று, கூட்டங் கூடி ஊர்வலங்கள் நடத்தினார்கள். ஏற்பாடு செய்தோர் எதிர்பார்த்ததைவிட மிகவும் வெற்றிகரமாக இந்த ஊர்வலங்கள் நடைபெற்றன என்று ஒரு பீகார் நண்பர் கடிதம் மூலம் தெரிவித்திருக்கிறார். பாட்னா 'செர்ச்லைட்' என்னும் பத்திரிகைச் செய்தி பின்வருமாறு ஆரம்பிக்கிறது.

"சென்ற ஞாயிற்றுக்கிழமை பாட்னாவிலிருக்கும் ராதிகா சின்ஹா கட்டிடத்தில் ஆண்களும் பெண்களுமாக ஒன்று சேர்ந்தது, ஜுலை மீ 8ட யன்று ஒரு கூட்டம் நடத்தினார்கள். இந்தக் கூட்டம் ஒரு கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. கனத்த மழை பெய்தது; அதிர்ஷ்டவசமாக, கூட்டம் ஆரம்பிக்கும் தருவாயில் மழை நின்றுவிட்டது. கூட்டம் எதிர்பார்த்ததைவிட அதிகமாய் இருந்தது. ராதிகா கட்டிடத்தில் உள்ள விசாலமான மண்டபத்தில், பாதி அளவு பெண்கள் நிறைந்திருந்தார்கள். இங்கு கூடியிருந்த பெண்களில் முக்கால் வாசிப் பேர், கூட்டம் கூடுவதற்கு ஒரு நாள் முன்பு, ஏன் ஒரு மணி முன்புகூட, பட்தா முறையை அனுஷ்டித்துக்கொண்டிருந்தவர்கள் தான்."

கூட்டத்தில் நிறைவேற்றியுள்ள தீர்மானத்தின் மொழி பெயர்ப்பு வருமாறு:

"பாட்னாவைச் சேர்ந்த ஆடவரும் பெண்டிருமாகிய நாங்கள் இங்குக் கூடி, கேடு தரும் கொடிய பட்தா முறையை ஒழிந்து விட வேண்டு மென்று தீர்மானம் செய்திருக்கிறோம். பட்தா முறை தேசத்திற்கு அளவிட முடியாத தீமை செய்திருக்கிறது; இப்போதும் செய்து வருகிறது. விசேஷமாகப் பெண்களுக்குத் தான் அதனால் அதிகமான தீமை ஏற்படுகிறது. எனவே இந்த மாகாணத்தில் இருக்கும் இதர பெண்களுக்கு, அதாவது பட்தா முறையை ஒழிக்கத் தயங்குகிற பெண்களுக்கு, நாங்கள் ஒரு விண்ணப்பம் செய்துகொள்கிறோம். அவர்களால் இந்த முறையை எவ்வளவு விரைவாக ஒழிக்க முடியுமோ, அவ்வளவு விரைவாக ஒழித்துவிட்டுச் சுகாதாரம், கல்வி, ஆகிய இரு துறைகளிலுமே முன்னேறும்படி அவர்களை வேண்டிக்கொள்கிறோம்."

பட்தா முறையை எதிர்த்துப் பிரசாரம் செய்வதற்காகவும் பீகார் மாகாணத்தில் பெண் கல்வியைப் பரப்புவதற்காகவும் கூட்டத்தில் தாற்காலிகமாக ஒரு கமிட்டியையும் நிறுவி

யிருக்கிறார்கள். கிராமந்தோறும் பட்டணந்தோறும் யாதர் சங்கங்களை அமைக்கும்படி ஆலோசனை கூறி மூன்றாவதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறார்கள். பலபல இடங்களில் பெண்களுக்கென ஆசிரமங்கள் ஏற்படுத்தி, அங்குக் குறிப்பிட்ட காலம்வரை பெண்கள் தங்கியிருக்க ஏற்பாடுகள் செய்து, நல்ல மனைவியாக, மதிக்கத் தகுந்த தாயாக, தேசத்திற்குப் பயன்தரும் முறையில் ஊழியம் செய்பவர்களாக, ஆகும்படி பயிற்சி கொடுக்க வேண்டுமென்று நாலாவது தீர்மானம் சொல்லுகிறது. இந்தக் காரியத்திற்காக அந்த இடத்திலேயே ரூபாய் ஐயாயிரம் வரை சேர்ந்ததென்றும், இருபத்தைந்து ரூபாய் முதல் இருநூற்றைம்பது ரூபாய் வரையில் நன்கொடை கொடுத்தவர்களில் பல பெண்களும் இருந்தார்கள் என்றும் நான் அறிகிறேன். பீகாரில் இன்னும் வேறு பல இடங்களிலும் இதே மாதிரியான கூட்டங்கள் நடைபெற்றதாக அந்தப் பத்திரிகை அறிவிக்கிறது. நல்ல முறையில் நிர்வகித்து, தொடர்ந்த உற்சாகத்தோடு இந்த இயக்கத்தை நடத்தி வந்தால் பட்தா முறை ஒரு பழங்கதையாகப் போய் விடும். இந்த இயக்கத்தை மேலைநாட்டு மோகங்கொண்டவர்கள் நடத்தவில்லை என்பதை நாம் குறிப்பாகக் கவனிக்க வேண்டும். இதை நடத்த வேண்டுமென்பவர்கள் பழமை மோகம் கொண்டவர்களே ஆவர். அவர்கள், தாங்களாகவே முயன்று, ஹிந்து சமூகத்தில் வந்து நுழைந்துகொண்ட கேடுகளை எல்லாம் சுதேச மனப்பாங்கோடு தங்கள் நாட்டிற்கே உரிய முறையில் அகற்ற முற்படுகிறார்கள். பாபு பிரிஜ் கிஷோர் பிரசாதும், பாபு ராஜேந்திர பிரசாதும், மிகவும் தொலையிலுள்ள லண்டனிலிருந்துகொண்டு, இந்த இயக்கத்தைக் கூர்ந்து கவனித்து வருவதோடு, இதற்கு ஆதரவும் தருகிறார்கள். இவர்கள் இருவரும் மேலைநாட்டு மோகங் கொண்ட இந்திய இனத்தைச் சேர்ந்தவர்கள் அல்லர்; ஆசாரத்தைக் கடைப்பிடித்து வரும் ஹிந்துக்கள் ஆவர். இந்தியப் பண்பாட்டிலும் சம்பிரதாயங்களிலும் பற்றுக் கொண்டவர்கள்; மேலைநாட்டு நாகரிகத்தை இவர்கள் கண் மூடித்தனமாகப் பின்பற்ற மாட்டார்கள். அப்படி இருந்தும், அதில் காணப்படும் நல்ல அம்சங்களை தன் மயமாக்குவதற்கு அவர்கள் தயங்குவதேயில்லை. எனவே, இந்தியப் பண்பாட்டின் சிறப்புக்கள் எல்லாம் சிதைந்துவிடுமோ, இந்தியப் பெண்களிடம் சிறப்பாகக் காணப்படும் கண்ணியத்தையும் அடக்கத்தையும் அது போக்கிவிடுமோ என்ற பயமே ஒருவருக்கும் வேண்டியதில்லை.

# பர்மியப் பெண்களுக்கு

**"பர்மிய மாதர்கள் அழகாக இருக்கிறார்கள்; ஆனால், சுருட்டு சிகரெட்டுகள் குடிப்பதன் மூலம் தங்கள் அழகை பாழ்படுத்திக்கொள்கிறார்கள். இதைக் காணும்போது இந்தியாவிலிருந்து வருகிற எங்களுக்கு வருத்தமும் ஆச்சரியமும் ஒருங்கே உண்டாகின்றன. உலகம் முழுதுமே பரவியிருக்கிற இந்தத் தீய பழக்கத்தைப்பற்றிப் பேசுவது சிரமமான காரிய மென்பதை நான் அறிவேன்."**

நீங்கள் அனுபவிக்கிற அளவு சுதந்திரம் உலகில் வேறு எந்தப் பெண்களுமே அனுபவிக்கவில்லை. முயற்சியும் திறனும் உங்களிடம் அதிகமிருக்கிறது; நிர்வாக ஆற்றலும் அபரிதமாக இருக்கிறது. அன்னிய நாட்டுச் சாமான்களின்மீது கொண்டுள்ள மோகத்தை விட்டுவிட்டு, வாழ்க்கை முறையைத் திருத்தி யமைத்து, நான் சொல்லும் எளிமையை மேற்கொள்வீர்களேயானால், வாழ்க்கையையே புரட்சிகரமான முறையில் மாற்றியவர்கள் ஆவீர்கள்.

பீடி சிகரெட்டு குடிக்கும் பொல்லாத பழக்கத்தைப் பற்றிப் பேச எனக்கு அவ்வளவு தைரியமில்லை. இந்தப் பழக்கத்திற்கு ஆளாகாத ஆணோ பெண்ணோ பர்மா முழுதுமே இல்லை என்று தெரிகிறது. பர்மிய மாதர்கள் அழகாக இருக்கிறார்கள். ஆனால் சுருட்டு, சிகரெட்டுகள் குடிப்பதன் மூலம் தங்கள் அழகை அவர்கள் பாழ்படுத்திக்கொள்கிறார்கள். இதைக் காணும்போது இந்தியாவிலிருந்து வருகிற எங்களுக்கு வருத்தமும் ஆச்சரியமும் ஒருங்கே உண்டாகின்றன. உலகம் முழுதுமே பரவிப் போயிருக்கிற இந்தத் தீய பழக்கத்தைப்பற்றிப் பேசுவது சிரமான காரியம் என்பதை நான் அறிவேன். டால்ஸ்டாய் என்பவரைப்பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருக்கலாம். அவர் பீடி சிகரெட்டு குடிக்கும் பழக்கமுடையவர். தம் சொந்த அனுபவத்திலிருந்து, புகையிலை அறிவை மங்கடித்துவிடுகிறது என்று டால்ஸ்டாய் அபிப்பிராயப்படுகிறார். மற்றப் புலன்களுக்கு நேரும் தீங்குகள் ஒரு புறமிருக்கட்டும். கொடிய குற்றங்களுக்குக் காரணம் பீடி சிகரெட்டு குடிப்பதுதான் என்று டால்ஸ்டாய் எண்ணுகிறார். கள் குடித்த பின் கொலை செய்யவில்லை, சுருட்டுக் குடித்ததும் கொலை செய்துவிட்டான் என்பதாக, ஒரு அழகான கதை எழுதியிருக்கிறார். சுருட்டுக் குடிக்கும் பழக்கம் அதிகரித்துக் கொண்டு வருவது உண்மைதான். மிக மிகச் சிறந்த உலக அறிஞர்கள்கூட அதை ஆதரிப்பதும் உண்மைதான். இருந்தாலும் அதை எதிர்க்கிறவர்களும் இருக்கிறார்கள். மேலை நாட்டு அறிஞர்களில் சிறந்தவர்களும் ஒழுக்கசீலர்களுமான சிலர் சுருட்டு சிகரெட்டு குடிக்கும் பழக்கத்தை எதிர்க்கிறார்கள்.

# கேள்வியும் பதிலும்

## ஆணும் பெண்ணும்

**கேள்வி :** வேறுபாடின்றி ஆண் சத்தியாக்கிரகிகளும் பெண் சத்தியாக்கிரகிகளும் ஒன்று சேர்ந்து சேவையில் ஈடுபடுவதைத் தாங்கள் அங்கீகரிக்கிறீர்களா? அல்லது தங்கள் தங்கள் துறைகளை, தெளிவான முறையில் வரைப்படுத்திக்கொண்டு, தனித் தனியே சேவையில் ஈடுபடுவது நல்லதா? இவற்றில் எந்த முறையைத் தாங்கள் அங்கீகரிக்கிறீர்கள் என்பதை நான் அறிய விரும்புகிறேன். ஆணும் பெண்ணும் ஒன்றுசேர்ந்து சேவையில் ஈடுபடுவதனால், கட்டுப்பாடு இன்மையும் ஒழுங்கீனங்களும் ஏற்பட்டுவிடுகின்றன என்று நான் அனுபவத்தில் கண்டிருக்கிறேன். தாங்கள் நான் சொல்வதைச் சரி என்று ஒப்புக்கொண்டால் மறைமுகமான இந்தத் தீமையைப் போக்குவதற்கு எந்த விதமான விதிகளைப் பின்பற்ற வேண்டுமென்று தாங்கள் ஆலோசனை கூறுகிறீர்கள் ?

**பதில் :** தனித் தனியாக இருப்பதுதான் நல்லது. பெண்களிடையே செய்ய வேண்டிய சேவை, போதுமான அளவுக்கு மேல் பெண்களுக்கு இருக்கிறது. நமது பெண்மக்கள் சமுதாயத்தை, பயங்கரமான முறையில் நாம் ஒதுக்கி வைத்திருக்கிறோம். அவர்களிடையே தொண்டு செய்வதற்கு நேர்மையும் கண்ணியமும் மிகுந்த அறிவுள்ள சேவிகைகள் நூற்றுக்கணக்கானவர்கள் தேவை. கொள்கை அளவிலுங்கூட ஆண் பெண் இரு பாலாரின் தொண்டு தனித் தனியே இருக்க வேண்டுமென்பது என் நம்பிக்கை. அதற்காகக் கடுமையான விதிமுறைகளை நான் ஏற்படுத்த மாட்டேன். இரு பாலாரிடையும் நல்ல எண்ணம் இருக்க வேண்டியது அவசியம். அதற்காக இருவருக்குமிடையில் தடங்கல்களை உண்டாகக் கூடாது. பரஸ்பரம் இருவரும் இயற்கையாகவும் யாதொரு வற்புறுத்தலுமின்றியும் நடந்துகொள்ள வேண்டும்.

**கேள்வி :** பலாத்காரம் செய்யாமை என்பது பலமுடையவர்களுக்குப் பணிந்து போகிற காரியம்தானே?

**பதில் :** சாத்வீக எதிர்ப்பைப் பலவீனர்களின் ஆயுதமென்று குறிப்பிடுகிறார்கள். ஆனால் நான் முற்றிலும் புதிதாகப் பெயர் கொடுத்திருக்கும் எதிர்ப்பு முறை வலியோரிலும் வலியோரின் ஆயுதமாகும். என்னுடைய கருத்து என்னவென்பதைத் தெளிவுபடுத்துவதற்கு நான் புதியதொரு வார்த்தையையே சிருஷ்டிக்க வேண்டியிருந்தது. அதில் காணப்படுகிற ஒப்பற்ற அழகு என்னவென்றால், அது பலம் மிஞ்சியவர்களின் ஆயுதமானாலும், பலவீனர்களும், வயதான

வர்களும். சிறு குழந்தைகளுங்கூட இந்த ஆயுதத்தைப் பிர யோகிக்கலாம். இதற்கு வேண்டுவது உறுதியான இதயந் தான். சத்தியாக்கிரகத்தில் தானே துன்பத்தை அனுப விப்பதன் மூலமே எதிர்ப்பு நடத்தப்படுகிறதாகையால் இந்த ஆயுதம் விசேஷமாகப் பெண்களுக்கு ஏற்றதென்று சொல்லி விடலாம் இந்தியப் பெண்களுக்கு, தங்கள் சகோதரர்களான ஆண்களைவிட, துன்பத்தைச் சகிக்கும் ஆற்றல் அதிக மிருப்பதை, பல விடங்களில் சென்ற ஆண்டு நாம் கண்டோம். ஆண் பெண் இரு பாலாருமே இயக்கத்தில் மிக மிகச் சிறப் பான முறையில் கலந்துகொண்டார்கள். துன்பத்தைத் தானே அனுபவிப்பது என்ற பழக்கம் காட்டுத் தீ, போல் பரவவே, அவர்கள் பிரமாதமான தியாகம் செய்யலானார்கள். ஐரோப்பாவிலுள்ள பெண்களும் குழந்தைகளும், மனித சமு தாயத்தினிடம் பரிவுகொண்டு, ஆண்களோடு திடமென்று போராட முயன்றார்களேயானால், ராணுவ மனப்பாங்கே இல்லாதபடி ஒரு நொடியில் அவர்களால் செய்துவிட முடியும். ஆண்களைப் போலவே, பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் மற்றவர்களுக்கும் ஆத்மசக்தி உள்ளே பதுங்கிக்கிடக்கிறது. இதுதான் அடிப்படையான உண்மை. எல்லாம் எல்லையற்ற சத்தியத்தின் சக்தியை வெளிப்படுத்துவதில்தானிருக்கிறது.

### பெண்களின் பொருளாதார சுதந்திரம்

**கேள்வி :** பெண்களுக்குப் பொருளாதார சுதந்திரம் இருக்குமே யானால், அவர்களின் ஒழுக்கம் கெட்டுவிடு மென்றும், குடும்ப வாழ்க்கையே சிதைந்துபோகும் என்றும் சொல்லி, சிலர் கலி யாணமான பெண்களுக்குச் சொத்துரிமை கூடாது என்று மறுக்கிறார்கள்; சட்டத்தில் ஒரு வித மாறுதலும் கூடாது என் கிறார்கள். இதைப்பற்றித் தாங்கள் கொண்டுள்ள அபிப் பிராயம் என்ன ?

**பதில் :** பதிலுக்கு நானும் ஒரு கேள்வி திருப்பிக் கேட் கிறேன். ஆண்களுக்குள்ள சொத்துரிமையாலும் சுதந்திரத் தாலும் அவர்களின் ஒழுக்கநடை கெட்டுப் போகவில்லையா ? ஆம் கெட்டுப் போய்த்தா னிருக்கிறது என்று நீங்கள் பதில் சொன்னால், பெண்களுக்கும் அதே நிலை ஏற்படட்டுமே, ஆண்களுக்கு இருப்பதைப் போலவே பெண்களுக்கும் பொரு ளாதார உரிமை இருக்குமானால், அவர்கள் ஒழுக்கத்துக்கோ தீச்செயல்களுக்கோ அது பொறுப்பாகாது. ஆண் விஷயத் திலோ பெண் விஷயத்திலோ அவர்களது திக்கற்ற நிலையைப் பொறுத்திருக்கும் ஒழுக்கம் ஒன்றுக்கும் உதவாது. நமது இதய பரிசுத்திலேதான், ஒழுக்கம் வேரூன்றிக் கிடக்கிறது.

### சமூகத்தில் பெண்களின் நிலை

**கேள்வி :** இந்தியப் பெண்குலம் அரசியல், சமூகம் ஆகிய துறைகளில் விழிப்படைந்தமையால், சமூகக் கடமை, குடும்பக் கடமை இரண்டுக்குமிடையே ஒரு போராட்டம் ஏற்பட்டது. பொதுக் காரியங்களில் பெண்கள் ஈடுபடுவதனுல், குடும்பம், குழந்தைகள் இரண்டையுமே அவர்கள் அலட்சியமே செய்துவிடக் கூடும். இந்த இரண்டுங் கெட்ட நிலையை எப்படிப் போக்கலாம் ?

**பதில் :** குடும்ப வேலைகளைக் கவனிப்பதனுல் பெண்களின் நேரம் அதிகமாகச் செலவழிவதில்லை. எஜமானுன கணவனுடைய இச்சையைத் திருப்திபடுத்துவதிலும் தன்னை ஆடம்பரமான முறையில் அழகுபடுத்திக்கொண்டு பெருமை பாராட்டுவதிலுமே காலமும் நேரமும் பெண்களுக்கு வீணுகிறது. பெண்கள் குடும்ப வேலைகளுக்கு அடிமைகளாய்க் கிடப்பது காட்டுமிராண்டித்தனமாகும். சமையல் அறைக்கே பெண்கள் அடிமையாய்க் கிடப்பது,காட்டுமிராண்டித்தனத்தின் சின்னம் தான். இந்த அடிமைப் பைசாசத்தினிடமிருந்து பெண்கள் விரைவில் விடுதலை பெறவேண்டும். பெண்களின் காலம் முழுவதும் குடும்ப வேலைகளிலேயே தொலைந்துவிடக் கூடாது.

**கேள்வி :** தேர்தல்கள் நடக்கும்போது காங்கிரஸ்காரர்கள் எங்கள் உதவியை நாடுகிறுர்கள், பொதுச் சேவையில் ஈடுபடும் பொருட்டு மனைவி மக்களை, எங்களுடன் அனுப்பும்படி கேட்டால், இல்லாத சாக்குபோக்கெல்லாம் சொல்லித்தட்டிக் கழித்துவிடுகிறுர்கள். அவர்களுடைய மனைவி மக்களை, வீடு என்ற சிறைச்சாலைக் குள்ளேயே அடைத்துவைக்க விரும்புகிறுர்கள். இதைப் போக்குவதற்கு வழி என்ன ?

**பதில் :** இந்த விதமான உளுத்துப்போன அசட்டு ஆசாமிகளின் பெயரைத் தெரிவியுங்கள். 'ஹரிஜன்' பத்திரிகையில் அவற்றை நான் வெளியிடுகிறேன்.

### ஒரு விதவையின் சங்கடம்

**கேள்வி :** நான் ஒரு வங்காளப் பிராமண விதவை, கைம்மை அடைந்த காலத்திலிருந்து—சென்று இருபத்து நான்கு ஆண்டுகளாக—உணவு உட்கொள்வதில், சில கட்டுப்பாடுகளை அனுஷ்டித்து வருகிறேன். எனது குடும்பத்திலேயே, தனியாக ஒரு அறையில், சாமான் சட்டிகளை வைத்துக்கொண்டு, உணவு தயாரித்துக்கொள்கிறேன். தங்களுடைய இலட்சியங்களான சத்தியத்திலும் அஹிம்சையிலும் எனக்கு நம்பிக்கை உண்டு. 1930ம் ஆண்டிலிருந்து தொடர்ந்து கதர் கட்டிக் கொண்டு வருகிறேன். இடைவிடாது நூலும் நூற்று வருகிறேன். டாக்காவிலுள்ள் ஒரு ஹரிஜன கிராமத்தில், ஹரிஜனங்களுக்கென, மாதர் சங்கத்தார், ஒரு பள்ளிக்கூடம்

நிறுவியிருக்கிறார்கள். நான் அங்குச் சென்று, ஹரிஜனங்களோடு கலந்து பழகுவதுண்டு. முஸ்லிம் சகோதரிகளோடு நான் கலந்து பழகுகிறேன். அவர்களிடம் நல்லெண்ணத்தைத் தவிர எனக்கு வேறு எதுவுமே இல்லை, இவ்வளவு இருந்தும், ஹரிஜனங்களோடே அல்லது பிராமணரல்லாத பிற ஜாதியினரோடோ உடனிருந்து சாப்பிட எனக்கு விருப்பமில்லை. என்னைப்போன்ற வைதிக மனப்பாங்குள்ள விதவைகள் நோக்கத்திலும் செய்கையிலும் சத்தியாக்கிரகிகளாகப் பதிவு செய்துகொள்ளலாமா?

**பதில்:** காங்கிரஸ் அமைப்பு முறைப்படி, சத்தியாக்கிரகியாகப் பதிவு செய்துகொள்ள உங்களுக்கு பூரண உரிமையுண்டு; அந்த உரிமையை வற்புறுத்தவும் அதிகாரமுண்டு. என்னைக் கேட்டால், பதிவுசெய்துகொள்ள நான் உற்சாகமூட்ட மாட்டேன். விதவைகளுக்கென ஏற்பட்டுள்ள விதிமுறைகளையும் பழக்க வழக்கங்களையும் வங்காளப் பெண்கள் வழுவாது கடைபிடிப்பவர்கள் என்று எனக்குத் தெரியும். தேசத்திற்காகத் தங்களையே அர்ப்பணம் செய்ய விரும்புகிற விதவைகள் யாருடனும் உணவு உட்கொள்ளதற்குத் தயங்குதல் கூடாது; யாருடனேனும் இருந்து உணவு உட்கொள்வதனால், ஆன்மீக வளர்ச்சி தடைப்பட்டுவிடும் என்பதை நான் நம்புவதில்லை. மனப்பாங்கைக் கொண்டே நாம் எதையும் முடிவுகட்ட வேண்டும். தொண்டு செய்யும் மனப்பாங்கோடு ஒரு விதவை செயல்முறையில் ஈடுபடுவாளேயானால் அதனால் நன்மை உண்டு. ஒரு விதவை தான் அனுஷ்டிக்க வேண்டிய விதிகளை உணவு சம்பந்தமாக எவ்வளவுதான் கவனத்தோடு அனுஷ்டித்தபோதிலும், இதயம் பரிசுத்தமாய் இராவிட்டால், அவளை உண்மையான விதவை என்று சொல்ல முடியாது. சமூக விதிகளை வெளிப்போக்காக அனுஷ்டிப்பதனால், அயோக்கியர்கள் மலிய இடமுண்டாகும் என்பதை நீங்கள் அறிவீர்கள்; நானும் அதை அறிந்திருக்கிறேன். எனவே சமபந்தி போஜனம் போன்ற காரியங்களுக்குள்ள தடைகள் தேச முன்னேற்றத்தையும் ஆன்மீக முன்னேற்றத்தையும் தடைப்படுத்துகின்றன என்று கொண்டு அவைகளை உதறித்தள்ளும்படியும் இதயத்தைப் பண்படுத்தி வளர்த்துக்கொள்ளும்படியும் உங்களுக்கு நான் ஆலோசனை கூறுகிறேன். சத்தியாக்கிரகப் போர்க்களத்தில், தாமே திணிப்பட்டுகொள்பவர்களை நான் சேர்த்துக்கொள்ள மாட்டேன். பகுத்தறிவைப் பயன்படுத்தி, அறிவுக்கும் உணர்ச்சிக்கும் பொருத்தமானதொரு வாழ்க்கை முறையை மேற்கொண்டுள்ளவர்களையே விரும்புகிறேன்.